بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# மறை வழங்கும் மாமருந்து

''அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமா கிய இறைவனின் திருப்பெயர் கொண்டு ஆரம்பிக்கிறேன்.''

## இறைஞ்சுவது எய்தப் பெற

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் கூறியிருக்கி றார்கள்: ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்ற சொற் றொடரை ஆரம்பமாகக் கொண்ட எந்தப் பிரார்த்தனையும் நிராகரிக்கப்படுவதில்லை - அது ஏற்றுக் கொள்ளப்படும்.''

## தேவைகள் நிறைவேற

பெரியார் ஒருவர் சொல்கிறார்: ''ஒருவர் பன்னிரண்டாயி ரம் தடவை இதை ஓதினால் ஒவ்வோர் ஆயிரத்துக்குப் பிறகும் இரண்டு ''ரகஅத்'' பிரத்தியேகமாகத் தொழுது ''ஸலவாத்'' ஓதிப் பிரார்த்தனை செய்தால் அவரது தேவைகளை இறை வன் நிறைவேற்றிக் கொடுப்பான்.''

## மதிப்பு உயர

''இதனை 625 தடவை எழுதி, அதனை ஒருவன் தன்னு டன் வைத்துக் கொண்டால் மற்றவர்களின் உள்ளங்களில் அவனுக்கு மதிப்பு ஏற்படும். எவராலும் அவனுக்கு தீங்கி ழைக்க முடியாது'' என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார் கள்.

## தலைவலி நீங்க

ரோமாபுரியின் அரசரான ஸீஸர், தமக்கு நீங்காத தலை வலி ஏற்பட்டிருப்பது குறித்து உமர் (ரலி) அவர்களிடம்

முறையிட்டார். அவர்கள் தொப்பி ஒன்றைத் தயாரித்து அவருக்கு அனுப்பினார்கள். அதனை அவர் தம் தலையில் அணியும் போதெல்லாம் தலைவலி நீங்கிப் போய்விடும். இது குறித்து அவருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. அந்தத் தொப்பியைப் பிரித்துப் பார்த்தார். மேற்குறிப்பிட்ட சொற்றொடர் மட்டுமே அதில் காணப்பட்டது.

காலித் பின் வலீத் (ரலி) அவர்கள் பகைவரின் கோட்டையை முற்றுகையிட்டபோது பகைவர்கள் கேட்டார்கள். ''காலிதே! இஸ்லாமிய மார்க்கம் உண்மையானது என்று நீங்கள் தவறாக எண்ணுகிறீர்கள். அற்புதங்களை நிகழ்த்திக் காட்டுங்கள்! நாங்களும் இஸ்லாத்தைத் தழுவுகிறோம்.''

''ஏதேனும் நஞ்சுப் பொருளை எனக்குக் கொண்டு வந்து கொடுங்கள்!'' என்றார்கள் காலித் பின் வலீத். அந்தப் பகைவர்கள் நஞ்சு கலந்த பானத்தைக் கொண்டு வந்தார்கள். காலித், ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்'' என்று ஓதி அதனைக் குடித்தார்கள். அவர்களுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லை. இதனைக் கண்டு வியப்புற்ற பகைவர்கள் அனைவரும் இஸ்லாத்தை உண்மையான மார்க்கம் என்று உணர்ந்து அதனைத் தழுவினார்கள்.

## காய்ச்சல் நீங்க

சட்ட நிபுணர் முஹம்மதுல் மாஸினி அவர்களுக்குக் காய்ச்சல் ஏற்பட்டிருந்தது. அவர்களின் குரு நோயாளியைப் பார்க்க வந்தார்கள். முன்னவரின் நோயைப் போக்க நினைத்து 'தாவீஜ்' ஒன்று எழுதிக் கொடுத்து, ''பிரித்துப் பார்க்காமல் அணிந்து கொள்ளும்!'' என்று குரு வலியுல் கபீர் கூறினார்கள். நோயுற்றிருந்த மாஸினி அந்த தாவீஸை அணிந்ததும் காய்ச்சல் நின்றுவிட்டது. மாஸினி அதனைப் பிரித்துப் பார்த்தபோது ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்'' என்ற சொற்றொடரைத் தவிர்த்து வேறு எதுவும் காணப்படவில்லை. காய்ச்சல் மீண்டும் வந்துவிட்டது. இந்தச் செய்தியை அவர்கள் தமது குருவிடம் தெரிவித்தபோது ''அந்த தாவீஸை நீர் பிரித்துப் [illegible]

''ஆம்!'' என்றார்கள் மாஸினி.

குரு அவர்கள் இரண்டாவது தாவீஜ் ஒன்று எழுதி தம் கைகளாலேயே அதனை மாஸினிக்கு அணிவித்து அதைத் திறக்காதிருக்குமாறு கூறினார்கள். உடனே காய்ச்சல் நின்று விட்டது. சில நாட்களுக்குப் பிறகு மாஸினி இதையும் பிரித்துப் பார்த்தார்கள். இதிலும் அதே சொற்றொடர்தான் எழுதப்பட்டிருந்தது. காய்ச்சல் மீண்டும் வந்துவிட்டது. தம் குருவிடம் சென்று மாஸினி விஷயத்தைத் தெரிவித்து தாம் செய்த தவறுக்கு இறைவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். மூன்றாம் தடவையாக தாவீஜ் எழுதி அணிவிக்கப் பட்டதும் காய்ச்சல் நின்றுவிட்டது. ஓராண்டுக்குப் பிறகு அதனைத் திறந்து பார்த்தபோது அதில் அதே சொற்றொடர் தான் எழுதப்பட்டிருந்தது.

ஹாபிஸ் அபுல் ஹாதம் ராஸி சொல்கிறார்:

''நான் அபுல் ஜமான் ஹகம் அவர்களின் பள்ளிவாசலுக்குப் போனேன். அப்போது எனக்குக் காய்ச்சல் கண்டிருந்தது. அபுல் ஜமான் அவர்கள் தம் இருப்பிடத்திலிருந்து எழுந்து வந்தார்கள். அவர்கள் என்னைப் பற்றி மக்களிடம் விசாரித்திருக்கிறார்கள். எனக்குக் காய்ச்சல் ஏற்பட்டிருக்கிறது என்று அவர்கள் கூறியிருக்கிறார்கள். என்னிடம் வந்த அபுல் ஜமான் அவர்கள் என்னைப் பற்றி விசாரித்தபோது எனக்குக் காய்ச்சல் கண்டிருக்கிற செய்தியைத் தெரிவித்தேன். ''காய்ச்சலைப் போக்குவதற்கான அச்சரம் உமக்குத் தெரியாதா?'' என்று கேட்டபோது, 'என்ன அது?' என்று நான் கேட்டேன். ஒரு காகிதத் துண்டில் ஏதோ ஓர் அச்சரம் எழுதி என்னிடம் கொடுத்தார்கள். அதை என் தலையணைக்கு அடியில் வைத்துக் கொண்டேன். அவர்கள் சென்றபிறகு அதனைப் பிரித்துப் பார்த்தேன். மேற்குறிப்பிட்ட சொற்றொடர்தான் அதில் காணப்பட்டது. எனக்கு ஏற்பட்டிருந்த காய்ச்சல் விரைவிலேயே குணமாகி விட்டது. பிறகு அபுல் ஜமான் என்னிடம் வந்து என் நிலை குறித்துக் கேட்டார்கள். நான் சுகமடைந்து விட்டதாக பதிலளித்தேன்.

அவர்கள், ''அதைப் பத்திரப்படுத்தி வைத்து, மற்றவர்களுக்குப் பயன்படச் செய்யும்'' என்று கூறிச் சென்றார்கள்.

## பகைவனை வெல்ல

தகாலா எனும் ஊரைச் சேர்ந்த அபூ யாகூப் யூசுப் என்பவரின் கூற்று:

இப்ராஹீம் பின் மூஸா பெரிதும் சிறப்புடையவர். அவரின் பிரார்த்தனைகள் இறைவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அதற்கு மாறாக, ஈஸா பின் தாவூத் என்பவர் ''அவ்லியா எனப்படும் இறையன்பர்களின் அற்புதங்களை மறுக்கக் கூடியவர். முன்னவர் பின்னவரைச் சபித்ததால் ஈஸாவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. அவர் தம் அறிவையும் இழக்கலானார். இந்நிலை அவரின் இறுதிக் காலம் வரை நீடித்தது.

அந்த ஊரில் கொடுமை மிக்க மந்திரவாதி ஒருவன் இருந்தான். அவனது கொடுஞ் செயலைக் கண்டு அஞ்சிய மக்கள் அவனைப் பற்றி இப்ராஹீமிடம் எடுத்துச் சொல்லி முறையிட்டார்கள். மக்கள் அனைவரையும் கடற்கரையில் கூடுமாறு இப்ராஹீம் சொன்னார்கள். 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்று ஆயிரம் தடவையும், 'லா இலாஹ இல்லல்லாஹு' என்று ஆயிரம் தடவையும், ஓதினார்கள். அத்துடன் பெருமானார் (ஸல்) அவர்களுக்காக ஸலவாத்து ஆயிரம் தடவையும் ஓதினார்கள். அந்த மந்திரவாதியை ஆயிரம் தடவை சபித்தார்கள். மக்களின் பிரார்த்தனையை இறைவன் ஏற்றுக் கொண்டதாகக் கூறிய இப்ராஹீம் அவர்கள், அந்த மந்திரவாதிக்கு என்ன தீங்கு ஏற்பட்டிருக்கிறது என்று பார்த்து வரச் சொன்னார்கள். உடனே சிலர் புறப்பட்டுச் சென்றார்கள். அந்த மந்திரவாதி தலை குப்புறக் கிடந்ததைக் கண்டார்கள். இந்த நிலை அவனுக்கு மரணம் வரை நீடித்தது.

## துன்பம் நீங்க

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் லாஹௌல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்.

*(... வலிமையும் உயர்வுமுள்ள இறைவனின் உதவி யின்றி எந்த நன்மையையும் செய்ய முடியாது; எந்தத் தீமையையும் தவிர்க்க முடியாது.)*

*''இதனை ஒருவன் ஓதிவந்தால், அவனை விட்டும் 70 இன்னல்களை இறைவன் நீக்குவான். அவற்றில் முக்கியமா னவை 'துக்கம், விசனம், விபத்து முதலியவை', இவ்வாறு பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.*

## எண்ணங்கள் நிறைவேற

*பிஸ்மில்லாஹ்வில் அடங்கியுள்ள எழுத்துக்களின் எண் ணிக்கையின்படி அதாவது 786 தடவை. ஒருவன் இதனை ஏழு நாட்கள் ஓதினால் அவனுடைய எண்ணங்கள் அத்தனை யும் நிறைவேறி விடும். அவனுக்கு வரும் தீங்குகள் விலகிப் போகும்.*

## அகால மரணம் ஏற்படாதிருக்க

*ஒருவன் தூங்குமுன் 21 முறை பிஸ்மில்லாஹ்... ஓதி னால் ஷைத்தான், திருடு, அகால மரணம் முதலிய அனைத்தி லிருந்தும் அவனை இறைவன் பாதுகாத்துக் கொள்வான். துன்பங்களையும் அவனை விட்டு நீக்குவான்.*

## அநியாயக்காரர்களை வெல்ல

*அநியாயக்காரனுக்கெதிரில் இதை 50 தடவை ஓதினால் அநியாயக்காரனுக்கு அவமானமும் ஓதுகிறவர் பற்றிய அச்ச மும் ஏற்படும். அவனுடைய தீங்குகளிலிருந்து ஓதுகிறவருக் குப் பாதுகாப்புக் கிடைக்கும்.*

## செல்வனாக

*சூரியன் உதயமாகும்போது அதற்கு எதிரில் நின்று ஒருவன் பிஸ்மில்லாஹ்... 300 தடவை, பெருமானார் மீது 'சலவாத்' 300 தடவை ஓதினால் தனக்கே தெரியாத விதத்தில் அவனுக்கு வருமானம் ஏற்படும். ஒரு வருடத்திற்குள் அவன் பணக்காரனாகி விடுவான்.*

## மந்தபுத்தி நீங்க

பிஸ்மில்லாஹ்வை 786 முறை ஓதித் தண்ணீரில் ஊதிக் கொடுத்தால், குடித்தவன் அன்பு செலுத்துவான். மந்த புத்தி யுள்ளவனுக்கு இவ்வாறு ஏழு நாட்கள் தொடர்ந்து கொடுத் தால் அவனது மந்தபுத்தி நீங்கிப் போய்விடும். தான் கேட் டதை எல்லாம் அவன் மனத்தில் பதித்துக் கொண்டு விடு வான்.

## மழை பெய்ய

இதை 61 தடவை ஓதி, குறிப்பிட்ட இடத்தில் மழை பெய்ய வேண்டும் என்று எண்ணினால், அந்த இடத்தில் இறைவன் மழையைப் பெய்ய வைப்பான்.

## பிரசவ வேதனை நீங்க

ஒரு தட்டையில் இதை 40 முறை எழுதி 'ஸம் ஸம்' தண்ணீரிலோ மதுரமான மற்றும் கிணற்றுத் தண்ணீரினாலோ கழுவி, நோயாளிக்குக் குடிக்கக் கொடுத்தால் அவனுக்கு இறைவன் ஆரோக்கியத்தைக் கொடுப்பான். பிரசவ வேதனை கொண்டவர்கள்... அதனைப் பருகினால் துன்ப மின்றி குழந்தை பிறக்கும்.

## வியாபாரம் சிறக்க

இதை 35 தடவை ஒரு காகிதத்தில் எழுதி ஒரு வாசலில் தொங்கவிட்டால், அந்த வீட்டில் ஷைத்தான், ஜின் முதலி யவை எதுவும் நுழையாது. அந்த வீட்டிற்கு 'பரக்கத்' அதிகமா கும். அந்தக் காகிதத்தை ஒரு கடையில் ஒட்டி வைத்தால் அந்தக் கடையில் வியாபாரம் சிறக்கும். கண்ணேறு உண்டா காமல் இறைவன் பாதுகாத்துக் கொள்வான்.

## ஆயுள் முழுதும் தீங்கு அணுகாதிருக்க

முஹர்ரம் மாதம் முதல் நாளன்று இதை 130 முறை எழுதி அணிந்து கொண்டால் அவனுக்கோ அவனது குடும்பத் துக்கோ ஆயுள்வரை தீங்கு ஏற்படாது.

## கருத்தரிக்க

பிறக்கும் குழந்தைகள் எல்லாம் இறந்து கொண்டிருந் தால் இதை ஒரு காகிதத்தில் 110 தடவை எழுதித் தாய்க்கு அணிவிக்க வேண்டும். அப்புறம் பிறக்கிற குழந்தை உயிர் வாழும். குழந்தை பெறாத மலட்டுப் பெண் மாதவிடாய் நின்று மூன்று நாட்களுக்குப் பிறகு இதை அணிந்து கொண்டு கணவனுடன் சேர்ந்தால், இறையருளால் அவளுக்குக் கருத்த ரிக்கும். 65 நாட்களுக்கு முன்னால் அந்தக் காகிதத்தை அகற்றிவிடக் கூடாது. அவள் நல்ல குழந்தையை பெற்றெடுப் பாள். பிரசவத்தின்போது அவளுக்குச் சிரமம் ஏற்படாது.

## வயல் செழிக்க

இதை 110 முறை எழுதி வயலில் பயிர்களுக்கு நடுவில் புதைத்து விட்டால் அந்த வயல் செழித்துக் கொழிக்கும்.

## மீன் அதிகம் கிடைக்க

எழுத்தாணியால் இதைக் காரீயத் தகட்டில் ஒரு தடவை எழுதி வலையில் இணைத்து விட்டால் மீன்கள் அதிகமாகக் கிடைக்கும்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் சொன்னார்கள்: ''ஒவ் வொன்றுக்கும் அடிப்படை ஒன்று உண்டு. திருக்குர்ஆனின் அடிப்படை சூரத்துல் பாத்திஹா. சூரத்துல் பாத்திஹாவின் அடிப்படை பிஸ்மில்லாஹ். நோயால் துன்பப்படுகிறவர்கள் இந்த அடிப்படையைப் பற்றிக் கொண்டால் இறைவன் அந்த நோயைக் குணப்படுத்துவான்.''

## உயிரும் உடைமைகளும் காக்கப் பெற

மூஸா (அலை) அவர்கள் பிர்அவ்னை அழித்தொழிக்கு மாறு இறைவனிடம் இறைஞ்சிய பொழுது, ''மூஸா! அவன் ஈமான் கொள்ளாததைப் பற்றிச் சினந்து நீர் இவ்வாறு வேண்டுகிறீர். நீர் அவனின் உள்ளத்தைப் பார்க்கிறீர். நான் அவனின் இல்லத்தைப் பார்க்கிறேன். அதன் முகப்பில்

'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்று என் திருப்பெயர்களைப் பொறித்திருப்பதைக் காணுந்தோறும் என் கருணை உள்ளம் என் கரங்களைத் தடுத்து நிறுத்துகின்றது என்று பதிலிறுத்தான் இறைவன்.

## வருமானம் பெருக

எந்தத் தேவையானாலும், குறிப்பாக வருமானத்தை எதிர்பார்த்து ஒருவன் இதை அதிகமாக ஓதிவந்தால் அவனுக்கே தெரியாத வகையில் இறைவன் வருமானத்தைக் கொடுப்பான். அவனைப் பற்றிய கம்பீர எண்ணத்தை மற்றவர்களின் மனத்தில் தோற்றுவிப்பான். இதனால் அவனுக்கு மக்களிடத்தில் நல்ல மதிப்பு ஏற்படும்.

ஞாயிற்றுக்கிழமை சூரியன் உதயமாகும்போது ஒருவன் 'கிப்லா'வை முன்னோக்கி ரசூல்மார்களின் எண்ணிக்கைப் படி இதனை 313 முறை ஓதி, பெருமானார் மீது 100 முறை சலவாத்தும் ஓதினால் அவனுக்கே தெரியாத வழியிலிருந்து இறைவன் வருமானத்தைக் கொடுப்பான்.

முக்கியத் தேவைகள் நிறைவேறுவதற்காகவோ இறைவழியில் செலவு செய்வதற்கு வருமானத்தைத் தேடியோ, தொழில் வளர்ச்சியை நாடியோ ஒருவன் 786 முறை இதனை ஓதினால் அவன் எண்ணம் நிறைவேறும். இவற்றை நோன்பு பிடித்து, தனிமையில் ஏழு நாட்கள் தொடர்ந்து ஓதுவது சிறந்ததாகும்.

## மயக்கம் நீங்க

இதை 14 தடவை ஓதி பைத்தியக்காரன் அல்லது மயக்கமுற்றவன் காதில் ஊதினால் அவனுக்குத் தெளிவு பிறந்துவிடும்.

## சூனியம் விலக

இதை தினம் 100 தடவை வீதம் ஏழு நாட்களுக்குத் தொடர்ந்து ஓதி ஊதினால், ஏவலால் துன்பப்படுகிற

வனுக்குக் குணம் ஏற்படும். அவனுக்கு ஏற்பட்ட துன்பம் அகன்று விடும்.

## தலைமைத் தனம் பெற

'சுப்ஹு' தொழுகைக்குப் பிறகு ஒருவன் தினம் 2500 தடவை வீதம் 40 நாட்கள் ஓதினால் அவனுடைய இதயத்தை இறைவன் திறந்து வைத்துவிடுவான். யாருக்கும் தெரியாத விவரங்களையெல்லாம் அவனுக்கு கற்றுக் கொடுப்பதோடு தன்னைப்பற்றிய ஞானத்தையும் அவனுக்குக் கொடுப்பான். ஒருவன் இந்த எண்ணிக்கைப்படி தினமும் ஓதி வந்தால் அவனுக்கு மற்ற மனிதர்கள் அனைவரையும் இறைவன் கட்டுப்படுத்திக் கொடுப்பான்.

## விடுதலை பெற; எண்ணம் நிறைவேற

ஒவ்வொரு நாளும் இதனை 1000 முறை ஒருவன் ஓதி வந்தால் அவனுடைய விருப்பங்கள் அத்தனையும் ஈருலகத்திலும் நிறைவேற்றிக் கொடுக்கப்படும், சிறையிலிருப்பவன் ஓதினால் விடுதலை கிடைக்கும். துன்ப வசப்பட்டவன் ஓதினால் அந்தத் துன்பத்திலிருந்து விடுதலை கிடைக்கும்.

## தீய கனவு காணாதிருக்க

தூக்கத்தில் பயங்கரக் கனவு காணும் குழந்தைகளுக்கு இதை ஒரு காகிதத்தில் 21 தடவை எழுதிக் கட்ட வேண்டும். குழந்தைகளுக்கு பயம் ஏற்படாது. குழந்தைகளுக்குக் கட்டப் பட்டால் அவர்கள் ஆபத்திலிருந்து பாதுகாக்கப்படுவர்.

## செடிகள் செழிக்க

வெள்ளைக் காகிதத்தில் 101 தடவை எழுதித் தோட்டத்தில் புதைத்தால் செடிகள் அழகாகவும் ஆபத்தில்லாமலும் செழித்து வளரும்.

## சுகமும் பாதுகாப்பும் பெற

ஒருவன் வெள்ளைக் காகிதத்தில் இதனை 1000 தடவை எழுதி அணிந்து கொண்டால், அவனின் விரோதிகள்

அவனுக்குப் பயப்படுவார்கள். அவன் மக்களின் அன்புக்கும், மதிப்புக்கும், மரியாதைக்கும் உரியவனாகி விடுவான். நன்மையின் வாயிலையே அவனுக்கு இறைவன் திறந்து வைத்து விடுவான். அவன் எப்போதும் சுகத்திலும் பாதுகாப்பிலும் இருப்பான்.

## தலைவலி நீங்க

தலைவலியுள்ளவன் இதை ஒரு காகிதத்தில் 21 தடவை எழுதி அணிந்து கொள்ள வேண்டும். அவனுக்கு இறைவன் அந்த நோயிலிருந்து விடுதலை அளிப்பான்.

## கடலில் இறைகாவல் பெற

''என்னுடைய உம்மத்துகள் கடலில் பிரயாணம் செய்தால் அவர்களுக்குக் காவலாகிறது:

பிஸ்மில்லாஹில் மலிகிர் ரஹ்மான். வமா கதருல்லாஹ ஹக்க கத்ரிஹி வல்அர்ளு ஜமீஅன் கப்ளத்துஹூ யவ்மல் கியாமத்தி வஸ்ஸமாவாத்து மத்விய்யாத்துன் பியமீனிஹி ஸுப் ஹானஹூ வத்தஆலா அம்மாயஷ்ரிகூன் பிஸ்மில் லாஹி மஜ்ரேஹா வ முர்ஸாஹா இன்னரப்பீ ல கபூருர்ரஹீம்.

என்ற துஆவை ஓதிக் கொள்வதாகும்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றனர்.

## வெளியே புறப்படுங்கால் வானவர்களின் காவல் பெற

''பிஸ்மில்லாஹி தவக்கல்த்து அலல்லாஹி லாஹௌல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்''

வெளியே புறப்படுகிற ஒருவன் இதை ஓதிக் கொண்டு புறப்படின் அவனுக்கு வானவர்கள் நேர்வழி காட்டிச் செல்வர். தன் சூழ்ச்சி அவனிடம் பலியாதென ஷைத்தான் திரும்பி விடுவான்.

## நோயாளனுடன் உணவருந்த அஞ்சின்

'பிஸ்மில்லாஹி ஃதிகத்தன் பில்லாஹி வதவக்குலன் அலல்லாஹி' என்று ஓதிக்கொண்டு உண்டால் யாதொரு

துன்பமும் ஏற்படாது. தொழு நோயாளனுடன் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உணவுண்டபொழுது இதனையே ஓதிக் கொண்டு உண்டனர்.

## கண் நோய் நீங்க

பிஸ்மில்லாஹி ஃதிகத்தன் பில்லாஹி வதவக்குலன் அலல்லாஹி என்று ஓதி விரலில் ஊதிக் கண்களில் தடவி வர வேண்டும்.

## நஞ்சும் தீமை செய்யாதிருக்க

''உம்முடைய மார்க்கம் மேலானது எனில் நான் தரும் நஞ்சினை உண்ணுக!'' என்று எதிரித் தலைவன் கூற அந்நஞ் சினை வாங்கி காலித் (ரலி) அவர்கள், ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்'' என்று கூறி உண்ண அந்நஞ்சு அவர்க ளுக்கு யாதொரு தீங்கும் செய்யவில்லை என்று ஒரு வரலாறு உள்ளதை ஏற்கனவே எழுதியுள்ளோம் நாம். ஆனால் மற் றொரு வரலாறோ அவர்கள் பிஸ்மியோடு 'பிஸ்மில்லாஹி வபில்லாஹி பிஸ்மில்லாஹி ரப்பில் அர்லி வஸ்ஸமாயி பிஸ்மில்லாஹில்லதீ லாயளுர்ரு மஅஸ்மிஹி ஷைஉன் ஃபில் அர்லிவலாஃபிஸ்ஸமாயி வஹுவஸ் ஸமீஉல் அலீம்' என்று ஓதி அருந்தினர் என்று கூறுகிறது.

அத்தகு 'தக்வா' நம்மிடம் இல்லாத போதினும் இதனை விஷக்கடிகளுக்கு ஓதிப் பார்க்கப் பயன்படுத்தலாம்.

## பொருள்களில் விருத்தி காண

ஒருவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தாம் எவ்வளவு பாடுபட்டும் தம் பொருளில் விருத்தி காண வில்லை என்று கூறியபொழுது பிஸ்மியோடு துவங்கும் பின்வரும் துஆவை ஓதி வருமாறு கூறினர் அண்ணல். அவ்விதமே ஓதிவர விரைவில் அவர் செல்வரானார்.

பிஸ்மில்லாஹி அலா நஃப்ஸீ வஅலா அஹ்லீ வ மாலீ அல்லாஹும் மர்ளினீ பிமா களைத்த வ ஆஃபினீ பிமா

*அப்கைத்த ஹத்தா லாஉஹிப்ப தஃஜீல மா அக்கர்த்த வலா தஃகீர மா அஜ்ஜல்த்த.*

## நாள் முழுதும் துன்பம் நேராமலிருக்க

ஹஜ்ஜாஜ் இப்னு யூசுப், அனஸ் (ரலி) அவர்களின் கழுத்தில் கயிற்றைக் கட்டி, ''நான் உன்னை கொல்லப்போகி றேன்'' என்று கூறியபோது, ''நான் இதனை முன்பே அறிந்தி ருப்பின் அல்லாஹ்வையன்றி உன்னையல்லவோ வணங்கி இருப்பேன்'' என்றனர் அனஸ். 'ஏன்?' என்று ஹஜ்ஜாஜ் வினவியபொழுது, ''எனக்கு அண்ணல் நபி (ஸல்) ஒரு துஆவைக் கற்றுத் தந்து, அதைத் தினமும் காலையில் ஓதுபவருக்கு எவராலும் எத்தீங்கும் ஏற்படாது என்று கூறி உள்ளனர். அதனை நான் வழக்கமாக ஓதி வருகிறேன். அதனை இன்று காலையிலும் ஓதினேன்'' என்றனர் அனஸ். ஹஜ்ஜாஜ் அவர்களை விட்டு விட்டார். பின்னர் காரணம் வினவப்பட்டபொழுது அவரின் இரு தோள்களிலும் இரண்டு புலிகள் வாயைத் திறந்த வண்ணம் நின்று கொண்டிருப்ப தைத் தாம் கண்டு அஞ்சி விட்டதாகக் கூறினர் ஹஜ்ஜாஜ்.

ஹஜ்ஜாஜ் தமக்கு அதனைக் கற்றுத் தருமாறு வேண்டி யும் கற்றுக் கொடாத அனஸ் (ரலி) பின்னர் தம் இறப்புப் படுக்கையில் அதனைத் தம் ஊழியருக்குக் கற்றுக் கொடுத்த னர்.

*பிஸ்மில்லாஹி கைரில் அஸ்மாயி பிஸ்மில்லாஹில்லதீ லாயளுர்ரு மஅஸ்மிஹி ஷைஉன் ஃபில் அர்லி வலா ஃபிஸ்ஸ மாயி வஹுவஸ் ஸமீஉல் அலீம்.*

# 2. ஸூரா பாத்திஹா

திருக்குர்ஆனின் தாய் ஸூரா பாத்திஹா என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவுளமாயினர்.

அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி)
ஆதாரம்: புகாரி

அபூ ஸஈத் சொல்கிறார்கள்:

பள்ளியில் நான் தொழுது கொண்டிருந்தேன். பெருமானார் (ஸல்) என்னைக் கூப்பிட்டார்கள். தொழுகையை முடிக்கும் வரை நான் பதில் சொல்லவில்லை. தொழுது முடிந்ததும் அவர்களிடம் சென்றேன். ''நீர் என்னிடம் ஏன் வரவில்லை?'' என்று பெருமானார் (ஸல்) என்னிடம் கேட்டார்கள்.

''நான் தொழுது கொண்டிருந்ததால் என்னால் வர முடியவில்லை'' என்று பதில் சொன்னேன்.

''அல்லாஹ்வும் அவனது திருத்தூதரும் உங்களை அழைத்தால் நீங்கள் பதிலளியுங்கள் என்று இறைவன் சொல்லவில்லையா?'' எனக் கேட்டுவிட்டு பிறகு ''திருக்குர்ஆனின் ஸூராக்களிலே மிக மகத்துவமிக்க ஸூரா ஒன்றை இந்தப் பள்ளியிலிருந்து வெளியேறுவதற்கு முன்னால் உங்களுக்குக் கற்றுத்தரப் போகிறேன்'' என்று சொல்லி என்னுடைய கையைப் பிடித்தார்கள். பள்ளி வாயிலிலிருந்து புறப்படும் நேரத்தில் அவர்கள் கூறியவற்றை நான் நினைவுறுத்தினேன்.

''அல்ஹம்து லில்லாஹி என்று ஆரம்பமாகிற ஸூராபாத்திஹாதான் திருக்குர்ஆனின் ஸூராக்களிலேயே மிக மகத்துவம் பொருந்தியது;'' என்று பெருமானார் (ஸல்) கூறினார்கள்.

அப்துல்லாஹ் பின் ஜாபிர் (ரலி) சொல்கிறார்கள்:

திருக்குர்ஆனின் ஸூராக்களிலெல்லாம் பெரிதும் நலம் பொருந்தியது அல்ஹம்து ஸூராவாகும். ''திருக்குர்ஆனில் மிகவும் மேன்மை பொருந்திய ஸூரா அது'' என்று பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.

உபை இப்னு கஅப் சொன்னார்கள். ''பெருமானார் சூரா பாத்திஹாவை ஓதினார்கள். அப்புறம் இறைவன் இப்படி சொன்னதாகக் கூறினார்கள். ''ஆதமுடைய மகனே! உனக்கு நான் ஏழு திருவசனங்களைக் கொடுத்திருக்கிறேன். அவற்றில் மூன்று எனக்கும் மற்ற மூன்று உனக்கும் சொந்தமானவை. அவற்றில் ஒன்று எனக்கும் உனக்கும் பொதுவானது.

எனக்குச் சொந்தமானவை:

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ ۝١

الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝٢ مٰلِكِ يَوْمِ

الدِّيْنِ ۝٣

அகிலமனைத்தையும் படைத்த அல்லாஹ்வுக்கு புகழனைத்தும் உரித்தானது. அவன் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன்... தீர்ப்பு நாளின் அதிபதி.

اِيَّاكَ نَعْبُدُ وَاِيَّاكَ نَسْتَعِيْنُ ۝٤

உன்னையே வணங்குகிறோம் - உன்னிடம் உதவி கோருகிறோம்.

வணக்கம் உன்னிடமிருந்து உருவாகவேண்டும். உனக்குத் தேவையான உதவி என்னிடம் இருந்து கிடைக்க வேண்டும்.

உனக்கு மட்டும் சொந்தமானவை.

اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَ ۙ﴿٥﴾
صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ ۙ۬
غَيْرِ الْمَغْضُوْبِ عَلَيْهِمْ
وَلَا الضَّآلِّيْنَ ﴿٧﴾

எங்களுக்கு, நேரான வழியைக் காட்டுவாயாக. உனது அருளுக்குரியவர்களின் வழி, உனது சினத்துக்கு ஆளானவர்களின் வழியுமல்ல; தீயவர்களின் வழியுமல்ல!''

''இந்த சூரா, திருக்குர்ஆனின் ஆரம்பத்தில் இடம் பெற்றிருப்பதால் இதற்கு ''சூரா பாத்திஹா'' எனப் பெயரிடப்பட்டிருக்கிறது'' என்று பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.

''உம்முல்குர்ஆன்'' என்றும் அழைக்கப்படுகிற இந்த சூரா எல்லா நோய்களுக்கும் மருந்தாக அமைந்திருக்கிறது.

✳

# 3. நற்பயன்கள்

## காலரா நீங்க

*செய்கு தமீமியின் சீடர்களில் ஒருவர் இப்படிக் கூறுகிறார்:*

''ஒரு சமயம் முல்தான் எனும் நகரத்தில் கடுமையான காலரா ஏற்பட்டிருந்தது. சூரா பாத்திஹாவை பிஸ்மில்லாஹ்வோடு ஓதி நோயாளி மீது ஊதுமாறு செய்கு தமீமியவர்கள் தமது சீடர்களுக்குக் கூறினார்கள். அவர்கள் சொன்னபடியே நாங்கள் செய்தோம். இறையருளால் குணத்தையும் நற்பயனையும் கண்டோம்.''

## நோய்கள் அகல

இந்த சூராவை பிஸ்மியுடன் 14 முறை ஓதி நோயாளி மீது ஊதினால், அவனது நோயை இறைவன் நீக்கிவிடுவான். இது பரிசோதனை செய்யப்பட்ட ஒன்று. இதனை எழுதி தாயத்துக் கட்டி நோயாளியின் கழுத்தில் தொங்கவிட்டால் நோய் அகலும்.

## அந்தஸ்து உயர

காலைத் தொழுகையில் 'சுன்னத்'துக்கும் 'பர்லு'க்குமிடையில் ஒருவன் இதனை பிஸ்மியுடன் 14 முறை ஓதிவந்தால், அவன் விரும்பும் அந்தஸ்தை அடைவான். அவன் ஏழையாக இருந்தால் அவனை இறைவன் செல்வனாக்கி விடுவான். கடன் பட்டிருந்தால், அவனது கடன்கள் நிறைவேற்றப்படும். நோயுற்றிருந்தால், அவனது நோய் குணமாக்கப்படும். அவன் பலவீனமாக இருந்தால், வலிமை பெறுவான். தாழ்ந்த நிலையில் இருந்தால், மேன்மை அடைவான். சிறப்புப் பெறுவான். அவனது பகைவர் அவனைக் கண்டு நடுங்குவார்கள். நண்பர்கள் முன்னைவிட அதிகமாக நேசிப்பார்கள். இப்படி ஓதுகிறவர்கள் இறைவனின் பாதுகாப்பில் இருப்பார்கள். தன்னுடைய பதவியிலிருந்து நீக்கப்பட்ட ஒருவன் அந்தப் பதவியை மீண்டும் அடைய விரும்பினால்

மேலே குறிப்பிட்டபடி 40 நாட்கள் வரைத் தொடர்ந்து ஓதி வரவேண்டும். இறைவன் அந்தப் பதவியையோ அதை விடச் சிறந்த பதவியையோ அவனுக்கு கொடுப்பான்.

## நல்ல குழந்தை பெற

குழந்தையற்ற ஒருவன் இந்த முறைப்படி ஓதினால் நல்ல குழந்தை ஒன்றை இறைவன் கொடுத்தருள்வான்.

## கண்வலி நீங்க

வேதனை, வியாதி கண்வலி முதலியவற்றையும் 41 முறை ஓதிக் குணப்படுத்தலாம். கண் நோயுள்ளோர் வைகறையின் சுன்னத் தொழுகைக்கும் ஃபர்ள் தொழுகைக்கும் இடையே இதனை 41 முறை ஓதிக் கண்களில் தடவிக் கொள்ள வேண்டும்.

## ஈருலகப் பேறு பெற

பர்ள் தொழுகைக்குப் பிறகு 7 தடவை வீதம் ஒருவன் ஓதி வந்தால், அவனுக்கு இறைவன் நன்மைக்கான வழிகளை காண்பிப்பான்; ஈருலகக் காரியங்களையும் சிறப்பாக நிறை வேற்றி வைப்பான்.

## காயம் ஆற

ஏழு முறை ஓதி பஞ்சின் மீது ஊதி, அதைக் காயத்தில் வைத்துக் கட்டினால் காயம் ஆறிப்போய்விடும்.

## பல்வேறு பாக்கியம் பெற

'பர்ள்' தொழுகைக்குப் பிறகு இதனை 20 தடவைகள் ஓதி வந்தால் வருமானம் பெருகும், அவன் சூழ்நிலை தெளியும்; அவன் உள்ளம் பிரகாசமடையும், அவனுக்கு ஏற்படும் சிரமங்கள் இலகுவாகும்; துன்பம் இன்பமாக மாறும்; தீங்குகள் நீங்கும். அவன் விரும்புகிற மதிப்பையும் உயர்வையும் அடைவான். அவனுக்கு முன்னால் நன்மையின் வாசலையே இறைவன் திறந்து வைத்துவிடுவான். அவனுக்குச் செல்வாக்கும், கால ஓட்டத்தில் தோன்றுகிற ஆபத்துகளிலிருந்து பாதுகாப்பும் கிடைக்கும். வறுமையும்

பசித் தொல்லையும் நீங்கும். அவன் மீது எல்லோருக்கும் அன்பு ஏற்படும். அவன் இறைவனிடம் கேட்கும் பிரார்த்த னைகள் அங்கீகரிக்கப்படும்.

ஐங்காலத் தொழுகையின் போது ஒவ்வொரு நாளும் ஓதி வருகிறவர்களுக்கு இந்தப் பயன்கள் அத்தனையும் கிடைக்கும்.

'கஸீனதுல் அஸ்ரார்' என்ற நூலின் ஆசிரியரான முஹம் மது ஹக்கி நாஸிலீ அவர்கள் கூறுகிறார்கள்; ''எனது ஞானாசி ரியர்கள் அளித்த அனுமதியின்படி யார் அதனை ஓதினாலும் அவர்களின் வெற்றிக்கு நான் உத்தரவாதமளிக்கிறேன்.''

## விருப்பங்கள் வெற்றிபெற

'பர்ளான தொழுகைக்குப் பிறகு 100 முறை வீதம் ஒருவன் இதனை ஓதி வந்தால் அவன் ஆசைகள் விரைவில் நிறைவேறும். காலைத் தொழுகைக்குப் பிறகு 125 தடவை வீதம் ஓதிவந்தால் விருப்பங்கள் சந்தேகமின்றி நிறைவேறும்.

## தீமை அகல

ஆரிபீன் எனப்படும் மெய்ஞ்ஞான அறிஞர்கள் இவ் வாறு சொல்கிறார்கள்: சூரா பாத்திஹாவில் பகிரங்கமான ஆயிரம் செய்திகள் இருக்கின்றன; மர்மமான ஆயிரம் செய்தி கள் இருக்கின்றன. எனவே அதை ஒருவன் தினசரி ஓதி வந்தால் சோம்பேறித்தனம், கோழைத்தனம் முதலியவற்றிலி ருந்து அவனுக்கு விடுதலை கிடைக்கும். அவன் உள்ளத்தை இறைவன் ஒளிமயமாக்கி விடுவான். தூய்மைப்படுத்தி விடு வான். தீய எண்ணங்களிலிருந்து பாதுகாப்பு அளிப்பான்; தன்னைப் பற்றிய ஞானத்தைக் கொடுப்பான். அதை ஓதுகிற வன் முற்றிலும் நேர்மையாக நடந்து கொள்வான்.''

ஹாதிமீ என்பார் மரணப் படுக்கையில் கூறினார். ''சூபி கள் இதைப் படுத்துக் கொண்டும், நின்று கொண்டும், பிரயாணம் செய்து கொண்டும் ஓதி வருவார்கள்.''

## நோய்கள் அணுகாதிருக்க

பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்: ''ஒருவன் தூங்கச் செல்லும்போது சூரா பாத்திஹாவை ஒருமுறையும், சூரா இக்லாஸை மூன்று முறையும் ஓதினால், ஓதிவந்தால், மரணம் ஒன்றைத் தவிர்த்து மற்றெல்லா நோய்களிலிருந்தும் அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.''

நபித் தோழர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: ''ஒரு சமயம் ஹஸன் அவர்கள் நோயுற்றிருந்தார்கள். இதனால் பெருமானாருக்கு மனவேதனை ஏற்பட்டது. ஒரு பாத்திரத்தில் தண்ணீர் வைத்து 'ஃபா' எனும் எழுத்தில்லாத சூராவை 40 முறை ஓதித் தண்ணீரில் ஊதி, அந்தத் தண்ணீரில் கைகால்கள், முகம், தலை, முன் புறம், பின்புறம் அனைத்தையும் கழுவினால் வியாதி நீங்கிப் போகும் என்று பெருமானாருக்கு இறைவன் கூறினான்.''

## துன்பம் அகல

துன்பத்தில் சிக்கித் தவிப்பவர்களை பெருமானார் (ஸல்) அவர்கள் காணின் இதனை அதிகமாக ஓதி வருமாறு கூறுவார்கள்.

## முதுகு வலி, இடுப்பு வலி நீங்க

இப்னு ஷஅபி அவர்களுக்கு முதுகுவலியும், இடுப்பு வலியும் ஏற்பட்டபோது சூரா பாத்திஹாவை ஓதுமாறு கூறப்பட்டது. அப்படியே அவர்கள் ஓதி வந்ததோடு அதை எழுதிக்கரைத்துக் குடித்தார்கள். இதனால் அவர்களுக்கு குணமேற்பட்டது.

செய்கு இப்னு அரபி அவர்கள் இப்படிக் கூறியிருக்கிறார்கள்.

## தேவை நிறைவேற

ஒரு மனிதனுக்கு ஏதேனும் தேவை ஏற்பட்டால் மஹ்ரிப் தொழுகைக்குப் பிறகு 10 முறை சூரா பாத்தி

ஹாவை ஓத வேண்டும். அப்புறம் தன் தேவையை எடுத்துக் கூறி பின்வருமாறு இறைவனிடம் முறையிட வேண்டும்.

إِلٰهِيْ عِلْمُكَ كَافٍ عَنِ السُّؤَالِ إِكْفِنِيْ بِحَقِّ الْفَاتِحَةِ سُؤَالًا وَكَرَمُكَ كَافٍ عَنِ الْمَقَالِ أَكْرِمْنِيْ بِحَقِّ الْفَاتِحَةِ مَقَالًا وَحَصِّلْ مَا فِيْ ضَمِيْرِيْ .

*(எனது நாயனே! முறையீட்டுக்கு அப்பால் உன் அறிவே போதுமானது. சூரா பாத்திஹாவை வைத்து நான் கேட்கிற முறையீட்டையே போதுமானதாக்கி வைப்பா யாக! பேச்சுக்கு அப்பாற்பட்டது உன் கண்ணியம், சூரா பாத்திஹாவை வைத்து நான் பேசுகிற பேச்சையே போதுமானதாக்கி வைப்பாயாக! என் மனத்திலுள்ள தேவையை முடித்து வைப்பாயாக!)*

## நினைவாற்றல் பெற

பெருமானார் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். சூரா பாத்திஹா மூமின்களின் எண்ணங்களை நிறைவேற்ற வல்ல தாகும். ஒருவன் அதை தினம் 70 தடவைகள் வீதம் ஏழு நாட்கள் ஓதித் தண்ணீரில் ஊதிக் குடித்தால் அவனுக்கு இறைவன் அறிவையும், தெளிவையும் கொடுத்தருள்வான். அவன் உள்ளத்தைக் கெட்ட எண்ணங்களிலிருந்து தூய்மை யாக்குவான். அவனைக் கூரிய புத்தியுள்ளவனாக்குவான். அவன் கேட்டவற்றை மறுக்கவே மாட்டான்.

## நோய் நீங்க

காலைத் தொழுகையின் பர்ளுக்கும், சுன்னத்துக்குமிடை யில் 41 முறை ஓதி நோய் உள்ளவர்கள் மீது ஊதினால் நோய் குணமாகி விடும்.

## பல்வலி நீங்க

*பல்வலியுள்ளவர்களுக்கு மேற்கண்ட எண்ணிக்கைபடி ஓதி ஊதவும்*

## பிரயாணத்தில் பாதுகாப்புப் பெற

*பிரயாணத்திற்குப் புறப்படுகிறவருக்குப் பின்னால் நின்று 41 முறை ஓதினால், அந்த பிரயாணிக்கு இறைவன் பாதுகாப்பு அளிப்பான். அவன் செல்ல வேண்டிய இடத்துக்கு நலத்துடன் கொண்டு போய்ச் சேர்ப்பான்.*

## வேதனை அகல

*உடலில் எங்கேனும் வலி ஏற்பட்டால் அந்த இடத்தில் கையை வைத்துக் கொண்டு சூரா பாத்திஹாவை ஏழு தடவையும் அடுத்துவரும் 'துஆ'வை ஏழு முறையும் ஓதினால் இறைவன் அருளால் குணம் ஏற்படும் என்று பெரியோர்கள் சொல்லி இருக்கிறார்கள்.*

اَللّٰهُمَّ اَذْهِبْ عَنِّيْ سُوْءَ مَا اَجِدُ فَحْشَهُ
بِدَعْوَةِ نَبِيِّكَ مُحَمَّدِنِ الْمُبَارَكِ الْمَكِيْنِ
الْاَمِيْنِ عِنْدَكَ

*(இறைவனே! உன்னிடம் புனிதத்தோடு இருக்கிற பெருமானாரை முன் வைத்து நான் கேட்பதால் எனக்கு ஏற்பட்டிருக்கும் கெடுதியையும், தீங்கையும் நீக்குவாயாக!)*

## வருமானம் பெருக

*வருமானம் பெருக வேண்டும். எல்லாவிதமான நன்மைகளும் கிடைக்க வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் அடியில் காணப்படுகிற முறைப்படி சூரா பாத்திஹாவை ஓதுங்கள்.*

ஏதேனும் ஒரு மாதத்தில் முதல் ஞாயிற்றுக்கிழமையன்று சூரா பாத்திஹாவை 'பிஸ்மி'யுடன் 70 முறை ஓதுங்கள். அடுத்த நாளான திங்கட்கிழமையன்று 60 முறை ஓதுங்கள். இதுபோலவே செவ்வாயன்று 50 முறையும், புதனன்று 40 முறையும், வியாழனன்று 30 முறையும், வெள்ளியன்று 20 முறையும், சனியன்று பத்து முறையும் ஓதுங்கள். இப்படி ஒவ்வொரு மாதமும் முதல் ஞாயிற்றுக்கிழமையிலிருந்து சனிக்கிழமை வரை ஓத வேண்டும்.

இப்படி ஓதி வருகிறவர்கள் பெரும் பேற்றினை அடைவார்கள்.

காலைத் தொழுகைக்கு முன்னால் சஹ்ருடைய நேரத்தில் இந்த சூராவை 41 தடவை ஓதி வந்தால் வருமானம் பெருகும். இப்படி ஓதி வருகிறவரின் காரியங்கள் எல்லாம் இலகுவாக முடியும்.

## நன்மை அணுக, தீமை அகல

சூரா பாத்திஹாவை அதில் அடங்கியுள்ள எழுத்துக்களின் எண்ணிக்கைபடி 115 முறை ஓதினால் அல்லது திருத்தூதர்களின் எண்ணிக்கைப்படி 313 முறை ஓதினால் அல்லது மொத்தமாக 1000 தடவை ஓதினால் எல்லாவிதமான நன்மைகளும் கிடைக்கும்; எல்லாவிதமான தீங்குகளும் நீங்கும். இப்படி மூன்று நாட்களோ, ஏழு நாட்களோ ஓத வேண்டும். ஓதும் போது 'கிப்லா'வை எதிர்நோக்கி இருப்பதோடு 'உலூ' வுடனும் இருக்க வேண்டும். இடையில் உலகத்துப் பேச்சுப் பேசக்கூடாது.

## பசி, தாகம் ஏற்படாதிருக்க

இந்த சூராவைக் காலையில் ஓதிக் கையில் ஊதி, அந்தக் கையினால் முகத்தையும் வயிற்றையும் தடவிக் கொண்டால் அன்று முழுவதும் பசியும் தாகமும் ஏற்படாது. பசியோடும் தாகத்தோடும் வாட வேண்டிய நிலைமை ஏற்படாது.

## பிறர் மனதைக் கவர

மற்றவர்களின் உள்ளங்களைக் கவர அல்லது தீமையை தவிர்த்து நன்மையை அடைய எண்ணினால் அடுத்துவரும் காரியத்தைச் செய்யுங்கள்!

கீழ்கண்ட முறைப்படி காலைத் தொழுகைக்குப் பிறகு அல்லது பொழுது சாய்ந்து இருள் சூழ்ந்த பிறகு ஓதி வர வேண்டும்.

ஞாயிற்றுக்கிழமை (அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆல மீன்) என்று 616 முறை ஓத வேண்டும்.

திங்கட்கிழமை (அர்ரஹ்மானிர் ரஹீம்...) என்று 619 முறை ஓத வேண்டும்.

செவ்வாய்க் கிழமை (மாலிகியௌமித்தீன்) 242 முறை.

புதன்கிழமை: (இய்யாக நஃபுது வஇய்யாக நஸ்தயீன்.) 856 முறை.

வியாழக்கிழமை (இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம்) 1073 முறை.

வெள்ளிக்கிழமை (ஸிராத்தல்லதீன அன் அம்த அலை ஹிம் 1837 முறை)

சனிக்கிழமை (கய்ரில்மக்லூபி அலைஹிம் வலள்ளால் லீன்) 4233 முறை.

இது மகத்தான ஆற்றல் படைத்தது. இதற்குப் பெரிதும் முக்கியத்துவம் உண்டு.

## நோய் அகல

அறிஞர் ஒருவர் கூறுகிறார்:

சூரா பாத்திஹாவைச் சுத்தமான ஒரு பாத்திரத்தில் ஒவ்வொரு எழுத்தாக எழுதி, அதைத் தண்ணீரால் அழித்து அந்தத் தண்ணீரை நோயாளி குடித்தால் அவனது நோய் அகன்று போய்விடும். அந்தத் தண்ணீரை அவன் உடல்

'ம் தடவுவதாலும் நோய்கண்ட பகுதியில் மட்டும் ...று தடவை தடவுவதாலும் குணம் ஏற்படும். அத்துடன் இந்த 'துஆ'வையும் ஓத வேண்டும்:

اَللّٰهُمَّ اشْفِ فَاَنْتَ الشَّافِيْ اَللّٰهُمَّ اكْفِ فَاَنْتَ الْكَافِيْ اَللّٰهُمَّ عَافِ فَاَنْتَ الْعَافِيْ

*(இறைவனே! நோய் தீர்ப்பாயாக. நீ நோய் தீர்ப்பவன். இறைவனே! போதுமாக்குவாயாக. நீ போதுமானவன். இறைவனே! ஆரோக்கியப் படுத்து வாயாக. நீ ஆரோக்கியம் தருபவன்.)*

## பயம் நீங்கப் பெற

சூரா பாத்திஹாவை எழுதிக் கரைத்து, கழுவிய தண்ணீரினால் முகத்தைக் கழுவினால் குணமேற்படும். அச்சம், குழப்பம், சந்தேகம், துடிப்பு முதலிய மனநோய் படைத்தவர்கள் இந்தத் தண்ணீரைக் குடித்து ஆரோக்கியமடையலாம்.

## மந்த புத்தி நீங்க

குங்குமப்பூவும் கஸ்தூரியும் கலந்து சூரா பாத்திஹாவை எழுதித் தண்ணீரால் அழித்து அதை மந்த புத்தியுள்ளவன் குடிக்க வேண்டும். இப்படி ஏழு நாட்கள் செய்ய வேண்டும். எதையும் பாடம் செய்ய முடியாத நிலையிலிருந்த அவனது மந்தபுத்தி மாறுதல் அடைந்து விடும்.

இந்த சூராவை ஒரு பாத்திரத்தில் எழுதி பன்னீரினால் கரைத்துக் காதுக்குள் ஊற்ற வேண்டும்.

''குல்லு தாயின் லஹு தவாவுன்'' நோய்கள் அத்தனைக்கும் மருந்துண்டு எனும் நூலில் இப்னு கையிம் இப்படிக் குறிப்பிடுகிறார்: ''சூரா பாத்திஹாவை வைத்துக் கொண்டு நான் சிறப்பாக வைத்தியம் செய்தேன், வியக்கத் தக்க பயனையும் கண்டேன். நான் மக்காவில் சிறிது காலம் தங்கியிருந்தேன். அப்போது எனக்கு ஏற்பட்ட நோய்களை, வைத்தியரின் உதவியைப் பெற்று நீக்க வாய்ப்பில்லை. எனவே எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். ''மனமே! விட்டுவிடு. சூரா பாத்திஹாவினால் பரிகாரம் தேடிக் கொள்ளப் போகிறேன்!'' அப்படியே செய்தேன்! வியக்கத்தக்க பயனைக் கண்டேன். கொடிய நோயினால் துன்பப்படுகிறவர்களுக்கு அதை நான் சொல்லிக் காட்டினேன். அவர்களில் பலர் இந்த சூராவினாலே விரைவாகப் பயனடைந்தனர்.

## தேவைகள் நிறைவேற

சூரா பாத்திஹாவை பிஸ்மியுடன் நள்ளிரவில் ஆரம்பித்து (வஇய்யாக்க நஸ்தயீன்) எனும் வசனத்தோடு நிறுத்திக் கொண்டு இந்தத் துஆவை ஓதவேண்டும்.

اَللّٰهُمَّ اجْمَعْ بَيْنِيْ وَبَيْنَ حَاجَتِيْ كَمَا جَمَعْتَ
بَيْنَ اَسْمَائِكَ وَصِفَاتِكَ يَاذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ

*(இறைவனே! என்னையும் என் தேவையையும் இணைத்து வைப்பாயாக - உன் பெயர்களையும் குணங்களையும் இணைத்து வைத்ததுபோல், வலிமைக்கும் கண்ணியத்துக்கும் உரியவனே!)*

(இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம்) எனும் வசனத்தை ஓதி, அடுத்து வருகிற துஆவை அத்துடன் இணைத்துக் கொள்ள வேண்டும்.

اَللّٰهُمَّ سَخِّرْلِيْ مَطْلُوْبِيْ بِحَقِّ سِرِّ الْفَاتِحَةِ وَ
بِحَقِّ عِزَّتِكَ وَعَظَمَتِكَ وَبِحَقِّ جَلَالِكَ وَ
جَمَالِكَ وَبِحَقِّ اَهْلِ السَّمٰوَاتِ وَالْاَرْضِ وَبِحَقِّ
جَمِيْعِ الْاَنْبِيَاءِ وَالْمُرْسَلِيْنَ صَلَوَاتُ اللّٰهِ تَعَالٰى
عَلَيْهِمْ اَجْمَعِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

*(இறைவனே! பாத்திஹாவின்) அந்தரங்கத்துக்குரிய தகுதியினாலும், உன் வலிமை கண்ணியத்தின் தகுதியினாலும், உன் அழகு - கம்பீரத்தின் - தகுதியினாலும், விண்ணகம், மண்ணகத்திலுள்ளவர்களின் தகுதியினாலும் என் குறிக்கோளை எனக்கு வசப்படுத்திக் கொடுப்பாயாக! அகிலம் முழுவதையும் வளர்க்கிற இறைவனுக்கே புகழனைத்தும் உரித்தானது.)*

*இந்த துஆவை ஒவ்வொரு வசனத்துக்குப் பிறகும் ஓதி, சூரா பாத்திஹாவை முடிக்க வேண்டும்.*

*யாருக்கு நீங்கள் பயப்படுகிறீர்களோ அவர்களுக்கு எதிரில் செல்லும்போது இந்த சூராவை ஓதிக் கொள்ளுங்கள்! அவர்களால் உங்களுக்கு எந்தத் தீங்கும் செய்ய முடியாது.*

## அநியாயக்காரன் முன் செல்ல

*அநியாயக்காரனிடம் செல்லும்போது இந்த சூராவை 29 முறை ஓதிக்கொள்ள வேண்டும்.*

## ஜின் மனிதர்களால் தீங்கு ஏற்படாதிருக்க

*வெள்ளிக்கிழமையன்று இதனை 141 முறை எழுதி அணிந்து கொண்டால், ஜின்களின் தீங்குகளிலிருந்தும் மனிதர்களின் தீங்குகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.*

## இறைஞ்சுதல் ஏற்றுக்கொள்ளப்பட

பெருமானார் சொன்னதாக அன்னை ஆயிஷா (ரலி) கூறுகிறார்கள்:

''ஒரு மனிதன் சூரா பாத்திஹாவை நான்கு முறை ஓதி, ஐந்தாம் முறையாக ஓத ஆரம்பித்ததும், வானவர் ஒருவர் குரல் கொடுத்து, ''இறைவன் உன்னை எதிர்நோக்கிக் கொண்டிருக் கிறான். உன் பிரார்த்தனையை அவனிடம் கேட்டு நிறைவேற் றிக் கொள்'' என்று கூறுவார்.''

## வறுமை நீங்க - வளம் கொழிக்க

பிறிதோரிடத்தில் பெருமானார் கூறியுள்ளார்கள்:

''ஒருவன் தன் வீட்டிற்கு வந்ததும் சூரா பாத்திஹாவை யும், 'குல்ஹுவல்லாஹு' சூராவையும் ஓதினால், இறைவன் அவனுடைய வறுமையை நீக்குவான். அவன் வீட்டில் செழு மையை ஏற்படுத்துவான்.''

## பாவமன்னிப்புப் பெற

சூரா பாத்திஹா, ஆயத்துல் குர்ஸி, சூரா 'ஹஷ்ரி'ன் இறுதியில் 'ஹுவல்லாஹுல்லதீ லாஇலாஹ இல்லாஹுவ ஆலிமுல் கய்பி' என்று துவங்கி முடிவு வரையுள்ள பகுதி, திருக்குர்ஆனில் கடைசி மூன்று சூராக்கள் இவற்றை ஒருவன் படுக்கைக்கு செல்லும் போது ஓதினால் அவன் செய்த பாவங்களை இறைவன் மன்னித்தருள்வான்.

## நோய்கள் அனைத்தும் நீங்க

சூராபாத்திஹா, ஆயத்துல் குர்ஸி, திருக்குர்ஆனின் இறுதியில் இடம் பெற்றிருக்கிற மூன்று சூராக்கள் இவை ஒவ்வொன்றையும் 70 முறை ஓதி, மழைத் தண்ணீரில் ஊதி அதனை ஏழு நாட்கள் வரை தொடர்ந்து குடித்தால், உடலி லுள்ள நோய்கள் அத்தனையும் நீங்கிப் போய்விடும். சதை, எலும்பு, நரம்பு முதலிய அனைத்தையும் விட்டும் நோய் நீங்கிப் போகும். இவ்வாறு வானவர் ஜிப்ரயீல் அறிவித்ததா கப் பெருமானார் கூறினார்கள்.

## தீங்குகளிலிருந்தும் காவல் பெற

*அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களின் மகள் அஸ்மா கூறுகிறார்:*

ஜும்ஆத் தொழுகையில், இமாம் 'சலாம்' கொடுத்துத் தொழுகையை முடித்ததும், ஒருவன் சூரா பாத்திஹா, திருக் குர்ஆனில் இறுதி சூராக்கள் மூன்று ஆகிய ஒவ்வொன்றையும் 7 முறை ஓதினால், அவனுடைய இம்மையையும், மறுமை யையும், அவனது குடும்பத்தாரையும் எல்லாவிதமான தீங்கு களிலிருந்தும் இறைவன் காப்பாற்றுவான்.

## கண்ணொளி மீளப்பெற

*பெருமானார் (ஸல்) சொன்னார்கள்: பலவீனமான பார் வையுள்ளவர்கள் முதற் பிறையை, அல்லது இரண்டாம் பிறையைப் பார்த்து தம் வலக்கரத்தால் கண்களிரண்டையும் தடவிக் கொண்டு சூரா பாத்திஹாவைப் பத்துத் தடவை பிஸ்மியுடன் ஓதி ஒவ்வொரு தடவையிலும் 'ஆமீன்' கூறி, பிறகு குல்ஹுவல்லாஹு சூராவை மும்முறை ஓத வேண் டும். பிறகு,* شِفَاءً مِّنْ كُلِّ دَاءٍ بِرَحْمَتِكَ

يَاأَرْحَمَ الرَّاحِمِيْنَ ○

*(அன்பாளரிலெல்லாம் அன்பாளனே! உன் அன்பி னால் எல்லா நோய்களும் குணமாகிவிடும்) என்று ஏழு தடவை ஓதி 'யாரப்பீ! எனது நாயனே!'' என்று 5 முறை ஓத வேண்டும்.*

## வருமானம் பெருக

*இரவின் இறுதிப் பகுதியில் இந்த சூராவை 41 முறை ஓதினால் வருமானம் பெருகும்.*

## பாம்பு, தேள் கடி விஷத்தை இறக்க

*பாம்பு, தேள் முதலியவற்றில் யாதேனும் கடித்து விட்டால், சூரா பாத்திஹாவை ஓதி ஊதிக் கொண்டிருக்க வேண்டும். ஏறிய விஷத்தை இறைவன் இறக்கி விடுவான்.*

தேள் கடித்தால், உப்புக்கரைத்த தண்ணீரில் சூரா பாத்திஹாவை ஏழுமுறை ஓதியூதி அதனைக் குடித்தால் குணமாகி விடும்.

அபீ ஷஹீத் சொல்கிறார்கள்:

நபித் தோழர்களில் சிலர் ஒரு சமயம் பயணம் புறப்பட்டார்கள்.

அவர்கள் அரபியப் பயணக்குழு ஒன்றோடு சேர்ந்து தங்கிக் கொண்டார்கள். அவர்கள் விருந்து கொடுக்க மறுத்து விட்டார்கள். அவர்களின் தலைவனை விஷ ஜந்து ஒன்று தீண்டி விட்டது. விஷமிறக்கும் முயற்சி பயனற்றுப் போனதும் கூட்டத்தில் ஒருவன், ''ஓர் கூட்டத்தார் நம்மிடம் வந்திருக்கிறார்களே அவர்களுக்கு ஏதேனும் பரிகாரம் தெரிந்திருக்கக்கூடும்!'' என்று சொன்னான். தலைவன் அனுமதி கொடுத்ததும் சிலர் தோழர்களிடம் வந்தார்கள்.

''எங்கள் தலைவரை விஷஜந்து கடித்துவிட்டது. விஷமிறக்கும் பரிகாரம் உங்களிடம் இருக்கிறதா?'' என்று வினவினார்கள்.

நபித் தோழர்களில் ஒருவர் சொன்னார்: ''ஆம் எம்மிடம் பரிகாரம் உண்டு. ஓதிப்பார்ப்பதன் மூலம் எங்களால் குணப்படுத்த முடியும். என்றாலும் உங்களிடமிருந்து நாங்கள் விருந்து பெற விரும்பினோம். நீங்கள் மறுத்து விட்டீர்கள். எனவே நாங்கள் செய்யும் பரிகாரத்துக்கு நீங்கள் ஏதேனும் ஊதியம் தரவேண்டும்!''

விஷமிறக்கியதும் ஆடு ஒன்று கொடுத்து விடுவதாக ஏற்றுக் கொண்டார்கள்.

மேற்குறிப்பிட் நபித்தோழர், அக்குழுத் தலைவனை அணுகி கடிப்பட்ட இடத்தில் துப்பி சூரா பாத்திஹாவை ஓதி ஊதினார். கட்டுண்டவன்போல் படுத்துக்கிடந்த தலைவன் அவிழ்த்து விடப்பட்டவன்போல் குணம் பெற்று எழுந்து உட்கார்ந்தான்.

பிரச்சினை பெருமானாரிடம் கொண்டு வரப்பட்டது. பெருமானாரின் தீர்ப்புப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது இதர நபித்தோழர்களின் கருத்து. அவர்கள் கூறிய விவரங்களைக் கேட்ட பெருமானார் ''சூரா பாத்திஹாவை ஓதினால் விஷமிறங்கும் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? - நீங்கள் செய்தது சரி. ஆட்டினை அறுத்துப் பங்கிட்டு எனக்கும் ஒரு பங்கு கொடுங்கள்'' என்று கூறினார்கள்.

## பைத்தியம் நீங்க

*ஹாரிஜா என்பார் தமது சிறிய தகப்பனார் சொன்னதாகக் கூறுகிறார்:*

நான் பெருமானாரிடம் சென்று இஸ்லாத்தைத் தழுவினேன். ஊருக்குத் திரும்பி வரும்போது ஓர் கூட்டத்தை நான் கண்டேன். அவர்களிடையே விலங்கிடப்பட்ட பைத்தியக்காரன் ஒருவன் இருந்தான். அவன் உறவினர் என்னிடம் வந்து, ''நாங்கள் உங்கள் தோழர்கள். பெருமானார் கொண்டு வந்திருக்கிற நலன்களைப் பற்றி நாங்கள் கேள்விப்பட்டிருக்கிறோம். இந்த பைத்தியத்தைத் தெளிய வைப்பதற்கான பரிகாரம் ஏதேனும் உங்களிடம் இருக்கிறதா'' என்று கேட்டார்கள்.

அப்போது நான் சூரா பாத்திஹாவைக் கொண்டு ஓதிப் பார்த்தேன். அந்தப் பைத்தியக்காரர் குணமடைந்து விட்டார். அவரது உறவினர் எனக்கு நூறு ஆடுகளை அன்பளிப்பாகக் கொடுத்தார்.

''இதைத் தவிர்த்து ஏதேனும் ஓதினீரா?'' என்று கேட்டார்கள்.

''வேறொன்றும் ஓதவில்லை!'' என்று பதிலளித்தேன்.

''தப்பான மந்திரத்தை வைத்துச் சாப்பிடுவதை நான் தடுத்திருக்கிறேன்; இதை நீர் ஏற்றுக்கொள்ளும், இனிமையான மந்திரத்தினால் கிடைத்த வருமானம் இது. இதைச் சாப்பிடுவதற்குத் தடையில்லை!'' என்று பெருமானார் கூறினார்கள்.

## சிறையிலிருந்து விடுதலை பெற

கைதி ஒருவன் சூரா பாத்திஹாவை 11 தடவை ஓதி ஒவ்வொரு பத்துத் தடவைக்கும் தன் வாயில் ஊறிய உமிழ் நீரைத் தன்னைப் பிணைத்திருந்த விலங்கில் துப்ப விலங்கு தெறித்து விட்டதென்றும் அவன் இலகுவாகச் சிறையிலி ருந்து வெளியேறி விட்டான் என்றும் ஒரு வரலாறு உள்ளது.

## துன்பம் அகல

எவரும் துன்புற்றுக் கொண்டிருப்பதை பெருமானார் (ஸல்) அவர்கள் காணின் சூரா பாத்திஹாவை ஓதி வருமாறு கூறுவார்கள்.

## வீடு, தோட்டம் செழிக்க

பனூ ஹாஷிம்களில் ஒருவர் சூரா பாத்திஹாவின் 'பாலி கியெளமித்தீன்' வரை ஏழு தடவை எழுதி அதனைத் தண்ணீ ரில் கழுவி மரங்களில் தெளித்துவிட்டார். முன்னர் பட்டுப் போய் ஓராண்டு வரை காய்க்காதிருந்த மரங்கள் தளிர்த்துக் காய்க்கத் துவங்கின.

## பல்வலி, காதுவலி ஏற்படாதிருக்க

ஒருவன் சூரா பாத்திஹாவின் முதல் திருவசனமாகிய 'அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்' என்பதோடு 'அலாகுல்லி ஹாலின் மாக்கான' என்பதையும் சேர்த்து தும்மல் போட்டபின் கூறின் அவனுக்கு பல் வலி, காது வலி ஒரு போதும் வராது என அலீ (ரலி) கூறியதாக அபூஷைமா கூறுகிறார். இதனை அலீ (ரலி) பெருமானார் (ஸல்) அவர்களிடமிருந்து அறிந்து தெரிவித்திருக்கக் கூடும் என ஷெளக்கானி கூறுகின்றார்.

## பல்வலி, காக்கா வலிப்பு, தலைவலி

ஆகியவற்றிற்கும் சூரா ஃபாத்திஹாவை ஓதி ஊதினால் அவை நீங்கும்.

## ஈமான் உறுதிபெற, ஈமான் ஸலாமத்தோடு இறப்பெய்த

ஒருவன் மஃரிபு சுன்னத் தொழுகையில் முதல் ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுடன் சூரா ஃபலக்கையும் இரண்டாவது ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுடன் சூரா நாஸையும் வழக்கமாக ஓதித்தொழுது வந்தால் அவனுடைய ஈமான் உறுதி பெறுவதோடு அவன் ஈமான் ஸலாமத்தோடு இறப்பெய்துவான்.

## இருதய வலி நீங்க

ஒருவன் சூரா ஃபாத்திஹாவை ஒரு தட்டைப் பீங்கானில் எழுதிக் கரைத்துக் குடித்துவரின் இறையருளால் இருதய வலி நீங்கி நலன் பெறுவான்.

## தடுமன் நீங்க

சூரா ஃபாத்திஹாவை மூன்று தடவை ஓதி ஊத வேண்டும்.

## ஆஸ்துமா நீங்கப் பெற

சூரா ஃபாத்திஹாவை ஒரு தட்டைப் பீங்கானில் குங்குமத்தால் எழுதித் தண்ணீரில் கரைத்து ஏழு நாட்கள் தொடர்ச்சியாக அருந்தின் இறையருளால் நலன் ஏற்படும்.

## மூல நோய் அகல

மூல நோயால் துன்புறும் ஒருவர் ஒவ்வொரு நாளும் மஃரிப் தொழுகைக்குப் பின் இரண்டு ரக்அத் நஃபில் தொழுகை தொழ வேண்டும். முதலாவது ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா இன்ஷிராஹ்வையும் இரண்டாவது ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் 'அஸ்தஃபிருல்லாஹமின்குல்லி தம்பின் சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி ரப்பீ'' என்று எழுபது தடவை ஓதி இஸ்திஃபார் செய்துவர வேண்டும். இன்ஷா அல்லாஹ், விரைவில் மூலநோய் குணமாகும்.

## அநீதியிலிருந்து காவல்பெற, தீமை அணுகாமல் இருக்க

ஒருவன் சுப்ஹு டைய சுன்னத் தொழுகையில் முதலாவது ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா இன்ஷிராஹ்வையும், இரண்டாவது ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப்பின் சூரா ஃபீலையும் ஓதித்தொழுதால் அநீதிக்காரனின் அநீதியை விட்டும் அவன் காவல் பெறுவான். அவனுக்கு அன்று எவராலும் யாதொரு தீவினையும் ஏற்படாது இறைவன் காத்தருள்வான்.

## இறைஞ்சுதல் ஏற்றுக்கொள்ளப்பட

தமக்குப் பின்னரும் தொழுகையை கிள்ரு (அலை) அவர்கள் கற்றுத் தந்ததாக இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஒருவன் இரண்டு ரக்அத்துக்கள் நஃபில் தொழுகை தொழ வேண்டும். அதில் முதலாவது ரகஅத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா காஃபிரூன் பத்து தடவையும் இரண்டாவது ரக்அத்தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா இக்லாஸ் பத்து தடவையும் ஓதித் தொழுது முடித்து, பின்னர் 'சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்' என்று பத்துத் தடவையும் 'ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்தன் வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினா அதாபன்னார்' என்று பத்துத் தடவையும் ஓதிப் பின்னர், தன் விருப்பத்தை இறைவனிடம் எடுத்துரைத்து இறைஞ்சின் இன்ஷா அல்லாஹ் அது நிறைவேற்றியருளப்படும்.

## அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் தரிசிக்க

வெள்ளிக்கிழமை இரவு இரண்டு ரக்அத் 'நஃபில்' தொழுகை தொழ வேண்டும். ஒவ்வொரு ரகஅத்திலும் சூராபாத்திஹாவுக்குப் பின் ஆயத்துல் குர்ஸி ஒரு தடவையும் சூரா இக்லாஸ் பதினைந்து தடவையும் ஓதி முடித்து 'துஆ' இறைஞ்சிய பின் எவருடனும் உரையாடாது படுத்துறங்கி

விடின் நிச்சயமாக அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் தரிசிக்கலாம். ஒரே இரவில் அத்தரிசனம் கிடைக்கா விடினும் மனம் தளர்ந்து விடாது, தொடர்ந்து இவ்வாறு முயற்சி செய்யின் நிச்சயமாக அவர்களைக் கனவில் தரிசிக்கும் பேறு கிடைக்கும். இவ்வாறு காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

''என்னைக் கனவில் கண்டவர்கள் என்னை நேரில் கண்டவர்கள் போலாவார். ஷைத்தான் என் உருவில் வர இயலாது. என்னைக் கனவில் கண்டவர் கவனம் புகுவார்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியுள்ளது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

## மழையைத் தடுக்க

ஒருவனுக்கு மழை தேவையில்லாமல் இருந்தால் துப்புரவான ஏழு கற்களை எடுத்து கையில் வைத்துக் கொண்டு அவற்றின் மீது சூரா ஃபாத்திஹாவை ஓதி ஊதி அவற்றை மழைத்தண்ணீர் படாத ஓர் ஒதுக்குப்புறத்தில் போட்டு விடின் அவன் பற்றிய வரையில் மழை தடுக்கப்படும்.

## மழை வர

மழை வேண்டுமாயின் அந்தக் கற்களை ஓடுகிற தண்ணீரில் போட்டுவிட வேண்டும்.

## உறங்கும்போது சிறுநீர் பெய்து விடுவது அகல

சிறிதளவு எள்ளின் மீது சூரா ஃபாத்திஹாவை இருபத்தியொரு தடவை ஓதி ஊதி பதினொரு தடவை உண்டு வர வேண்டும்.

## அலுவல்கள் அனைத்தும் சிரமமின்றி முடிய

ஒருவன் சூரா ஃபாத்திஹா ஒரு தடவை, சூரா இன்ஷிராஹ் மூன்று தடவை, சூரா கத்ர் பதினொரு தடவை வழக்கமாக ஓதி வந்தால் அவனுடைய அலுவல்கள் அனைத்தையும் அல்லாஹ் சிரமமின்றி எளிதாக முடித்து வைப்பான்.

## மாதம் முழுவதும் இறைகாவலைப் பெற

ஒருவன் மாதத்தின் தலைப் பிறையைக் கண்டதும் தக்பீர் கூறி சூரா பாத்திஹாவை முப்பது தடவை ஓதின் அவன் அம்மாதம் முழுவதும் இறை காவலைப் பெற்றிருப் பான்.

## மூல நோய் அகல (மற்றொரு முறை)

வைகறைத் தொழுகை சுன்னத்தின்போது முதல் ரக்அத் தில் சூரா ஃபாத்திஹாவுக்குப்பின் சூரா லுஹா, சூரா இன்ஷி ராஹ், சூரா ஃபீல் ஆகியவற்றையும்; இரண்டாவது ரக்அத் தில் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா குரைஷ், சூரா காஃபிரூன், சூரா இக்லாஸ் ஆகியவற்றையும் வழக்கமாக ஓதித் தொழுது வரவேண்டும்.

## ஆண்மை பெற

ஆண்மை குறைவாக உள்ளவர்கள் வைகறைத் தொழு கைக்குப்பின் 'இய்யாக்க நஃபுது வஇய்யாக்க நஸ்தயீன்' என்று முந்நூறு தடவை ஓத வேண்டும். இவ்வாறு மூன்று சில்லா அதாவது 120 நாள் தொடர்ந்து ஓதிவர நலன் ஏற்படும்.

## மக்களைக் கவர

சூரா ஃபாத்திஹாவை 21 தடவை ஓதி சுர்மாவில் ஊதி அந்த சுர்மாவைக் கண் இமைகளில் தடவிக் கொண்டு எவரையும் காணச் செல்லின் அவர் வசியமாவார்.

# 4. சூரா பகரா

## ஷைத்தானை விட்டும் காவல் பெற

பெருமானார் கூறினார்கள்:

''வீடுகளைப் புதை குழிகளாக்காதீர்கள். 'சூராபகரா' ஓதப்படுகிற வீட்டில் 'ஷைத்தான்' பிரவேசிக்க மாட்டான்!''

இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் சொல்கிறார்கள்:

நபித் தோழர்களில் ஒருவர், ஷைத்தானைச் சந்தித்தார். அவனுடன் மல்யுத்தம் செய்து அவனை கீழே தள்ளிவிட்டார். தன்னை விட்டுவிடுமாறு வேண்டிக் கொண்ட 'ஷைத்தான் அப்படி விட்டுவிட்டால், தன்னை வீட்டுக்குள் பிரவேசிக்க முடியாமல் தடுக்கிற மந்திரத்தைக் கற்றுக் கொடுப்பதாகக் கூறினான். அந்த நபித் தோழர், அவனை விட்டு விட்டார். ஆனால் ஷைத்தான் அந்த மந்திரத்தைக் கற்றுத் தர மறுத்து விட்டான். நபித் தோழர் அவனை மீண்டும் கீழே தள்ளினார். அவன் வாக்குக் கொடுத்தான். எழுந்து நின்றதும் கற்றுத்தர மறுத்தான். எனவே மூன்றாம் தடவையாக அவனை பிடித்துக் கீழே தள்ளிய நபித் தோழர், அவனுடைய விரலைக் கடித்துக் கொண்டு, தமக்கு அந்த மந்திரத்தைக் கற்றுக் கொடுக்கும் வரை அவனை விடப்போவதில்லை என்று கூறினார்.

''சூரா பகராதான் அந்த மந்திரம்!'' என்று ஷைத்தான் சொன்னான். அவன் மீண்டும் கூறினான்: ''இந்த சூராவிலிருந்து ஒரு வசனம் ஒரு வீட்டில் ஓதப்பட்டால் எப்படிப்பட்ட ஷைத்தானானாலும் கழுதையைப் போல் அலறியபடி அந்த வீட்டைவிட்டு வெளியேறிவிடுவான். அந்த வீட்டுக்குள் ஷைத்தான் நுழைய முடியாது.''

இந்தச் செய்திகளை எல்லாம் விளக்கிய இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களிடம், அந்த நபித்தோழர் யார்?'' என்று கேட்டபோது கிடைத்த விடை இதுதான்; ''உமர் பின் கத்தாப்!''

சூரா பகராவை ஓதுங்கள். அதை ஓதிவருவது மிகப் புனிதமான ஒன்று. அதை விடுவது பெருத்த இழப்பாகும். அதை ஓதுவதற்குத் தேவையான சக்தியை வீணர்களால் அடைய முடியாது!'' என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்

உஸைத் பின் ஹுலைர் இரவு நேரத்தில் சூரா பகராவை ஓதிக் கொண்டிருந்தார். கட்டி வைக்கப்பட்டிருந்த அவரது குதிரை அவர் ஓதுவதைக் கேட்டுக்குதிக்க ஆரம்பித்து விட்டது. காரணம் தெரிந்து கொள்ளும் எண்ணத்துடன் ஓதுவதை அவர் நிறுத்தினார். குதிரையின் குதிப்பும் நின்று விட்டது. மீண்டும் அவர் ஓதத் தொடங்கியதும் அது மீண்டும் குதிக்க ஆரம்பித்தது. ஓதுவதை அவர் இரண்டாம் முறையாக நிறுத்திய போது குதிரையும் தன் குதிப்பை இரண்டாம் முறையாக நிறுத்திக் கொண்டது. அவர் மூன்றாம் தடவையாக ஓதிய போது குதிரையும் மூன்றாம் தடவையாக குதித்தது. எனவே அவர் ஓதுவதை நிறுத்திக் கொண்டார். குதிரைக்குப் பக்கத்திலிருந்த தமது குமாரரான யஹ்யாவுக்குக் குதிரையினால் ஏதேனும் தீங்கு ஏற்படலாம் என்று அஞ்சி அவரை விலகிப் போகச் சொன்னார். வானத்தை நோக்கி அவர் அண்ணாந்து பார்த்தபோது நிழல் தரக்கூடிய மேகக் கூட்டம் ஒன்று தெரிந்தது. அந்தக் கார்முகில் கூட்டத்தில் ஒளி ரேகைகள் காணப்பட்டன.

பொழுது விடிந்ததும் இந்தச் செய்தியை அவர் பெருமானாரிடம் தெரிவித்தார்.

''இப்னு ஹுலைர்! ஓதும், ஓதும்!'' என்று பெருமானார் பணித்தார்கள்.

உஸைத் தம் மகனாருக்குக் குதிரையினால் ஆபத்து ஏற்படலாம் என்றெண்ணி அவரை அப்புறப்படுத்திய செய்தியையும் தெரிவித்தார். மேகக் கூட்டத்திடையே தெரிந்த ஒளி ரேகைகளையும் விவரித்தார்.

''அது என்னவென்று உமக்குத் தெரியுமா?'' எனப் பெருமானார் கேட்டபோது, ''தெரியவில்லை!'' என்று பதிலளித்தார் உஸைத்.

பெருமானார் கூறினார்கள்:

''அந்த ஒளி ரேகைகள், வானவர்கள், நீர் ஓதிக் கொண்டிருந்ததைக் கேட்க வந்தவர்கள். நீர் காலைவரை ஓதியிருந்தால் மற்ற மனிதர்களின் கண்களுக்குப் புலப்படும்படி அவர்களும் காலைவரை இருந்திருப்பார்கள்.''

அடுத்துவரும் செய்தியை நபித்தோழர் அபூஹுரைரா கூறுகிறார்.

பெருமானார் மரணிக்கும் தருவாயில் நபித் தோழர்கள் ஒவ்வொருவரையும் அழைத்து திருக்குர்ஆனில் அவருக்குத் தெரிந்த ஒரு 'சூரா'வை ஓதுமாறு கூறினார்கள்.

அப்போது குறைந்த வயதுடைய நபித் தோழர் ஒருவரிடம், ''ஓதுவதற்கு என்ன ''சூரா'' இருக்கிறது உம்மிடம்!'' என்று பெருமானார் கேட்டார்கள்.

அந்த நபித் தோழர் தம்மிடம் பல சூராக்களோடு சூராபகராவும் இருப்பதாகக் கூறினார்.

''சூரா பகரா இருக்கிறதா உம்மிடம்?'' என்று பெருமானார் வினவியபோது அந்த நபித்தோழர், ''இருக்கிறது!'' என்று பதிலளித்தார்.

பெருமானார் கூறினார்கள்: ''அப்படியானால் நீர் தாம் இந்தக் கூட்டத்துக்கு தலைவர்!''

ஒருவன் சூரா பகராவைப் பக்தியோடு ஏழுமுறை ஓதினால் ஷைத்தான், ஜின், பிசாக, துன்பங்கள், ஆபத்துகள் அத்தனையும் அவனை விட்டு விலகிப் போய்விடும்; இதனை எழுதித் தாயத்து செய்து ஜின் பேய் பிடித்தவர்களுக்கு அணிவித்தால் அவை அகன்றுவிடும்.

## பிரக்ஞை வர

பிரக்ஞையற்றுக் கிடப்பவர்களுக்கு இதனை ஓதி ஊதினால் குணமேற்படும்.

## நாட்டம் நிறைவேற

சுப்ஹின் சுன்னத் தொழுகைக்கும் பர்ளுத் தொழுகைக்கும் இடையே இதனை மூன்று நாட்களுக்குத் தொடர்ந்து ஓத வேண்டும் என பரீதுத்தீன் கஞ்செஷகர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## தொழுநோய், வெண்குஷ்டம் அகல

இதனை எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொளின் தொழுநோய், வெண்குஷ்டம் ஆகியவை நீங்கும்.

## கல்வியில் தேர்ச்சி பெற

சூரா பகராவில் முதல் ஐந்து வசனங்கள் ('முப்லிஹூன்' வரை) வியாழனிரவு குங்குமப் பூ, கஸ்தூரியினால் எழுதி நல்ல தண்ணீரினால் கரைத்துக் குடித்துவிட்டு நோன்பு வைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு மூன்று அல்லது ஐந்து நாட்கள் தொடர்ந்து செய்தால் பெரும் பேறு கிடைக்கும்.

இந்த வழியில் கிடைக்கும் நன்மைகள்: நினைவாற்றல் அதிகரிக்கும்; ஆன்மீக சக்தி வளரும்; கல்வியில் தேர்ச்சி ஏற்படும்; அறிவினாலேயே பல்வேறு உதவிகள் கிடைக்கும்!

## பெண்களுக்கு அதிகமான உதிரப்போக்கு நிற்க

''ஸும்மும் புக்முன் உம்யுன் ஃபஹும் லாயர்ஜி ஊன்' (2:18) என்பதை எழுதித் தாயத்துச் செய்து வயிற்றில் கட்ட வேண்டும்.

## உறங்கும்போது உண்மையை சொல்ல வைக்க

يٰبَنِيْٓ اِسْرَآءِيْلَ اذْكُرُوْا نِعْمَتِيَ الَّتِيْٓ
اَنْعَمْتُ عَلَيْكُمْ وَاَوْفُوْا بِعَهْدِيْٓ اُوْفِ
بِعَهْدِكُمْ وَاِيَّايَ فَارْهَبُوْنِ ۝ وَاٰمِنُوْا بِمَآ
اَنْزَلْتُ مُصَدِّقًا لِّمَا مَعَكُمْ وَلَا تَكُوْنُوْٓا
اَوَّلَ كَافِرٍۢ بِهٖ ۖ وَلَا تَشْتَرُوْا بِاٰيٰتِيْ ثَمَنًا
قَلِيْلًا وَّاِيَّايَ فَاتَّقُوْنِ ۝ وَلَا تَلْبِسُوا الْحَقَّ
بِالْبَاطِلِ وَتَكْتُمُوا الْحَقَّ وَاَنْتُمْ تَعْلَمُوْنَ ۝

''இஸ்ராயீலின் வழித்தோன்றல்களே! உங்களுக்கு நான் அளித்திருந்த என்னுடைய கொடையை நினைத்துப் பாருங் கள், நீங்கள் எனக்களித்த வாக்கை நிறைவேற்றுங்கள். நானும் உங்களுக்களித்த வாக்கை நிறைவேற்றுவேன். எனக்கே (பயந்து) நடுங்குவீர்களாக!

''நான் இறக்கிய (இவ்வேதத்)தை நீங்கள் விசுவாசியுங் கள். இது உங்களிடமுள்ள (தௌராத் என்னும் வேதத்)தையும் உண்மையாக்கி வைக்கிறது. இதை நிராகரிப்பவரில் நீங்கள் முதன்மையானவராகிவிட வேண்டாம். நீங்கள் எனக்கே அஞ்சுங்கள்.

''நீங்கள் மெய்யை அறிந்து கொண்டே அதனை மறைத் துப் பொய்யை மெய்யெனப் புரட்டிவிட வேண்டாம்.''

*(20:40-42)*

எவரேனும் ஒரு செயலைச் செய்துவிட்டு அதனை மறைத்தாராயின் திங்கட்கிழமை இரவு ஐந்தாம் ஜாமத்தில் இதனை பருவமெய்தா பிள்ளையின் துணியில் எழுதி உறங்கு பவரின் நெஞ்சில் வைத்தால் அவர் தாம் செய்ததை அறிவித்து விடுவார்.

**நீரடைப்பு நோய் அகல**

وَاِذِ اسْتَسْقٰى مُوْسٰى لِقَوْمِهٖ فَقُلْنَا اضْرِبْ بِّعَصَاكَ
الْحَجَرَ ۗ فَانْفَجَرَتْ مِنْهُ اثْنَتَا عَشْرَةَ عَيْنًا ۗ قَدْ عَلِمَ
كُلُّ اُنَاسٍ مَّشْرَبَهُمْ ۗ كُلُوْا وَاشْرَبُوْا مِنْ رِّزْقِ
اللّٰهِ وَلَا تَعْثَوْا فِى الْاَرْضِ مُفْسِدِيْنَ ۝

பொருள்: ''மூஸா தம் இனத்தாருக்குத் தண்ணீர் தேடியபொழுது (நாம் அவரை நோக்கி) நீர் உம் தடியால் இக்கல்லை அடியும்!'' எனக் கூறினோம். (அவ்

விதம் அவர் செய்ததும்) அதிலிருந்து பன்னிரண்டு ஊற்றுக்கள் உதித்தோடின.'' (2:60)

மேற்கண்ட திருவசனத்தை ஒரு பீங்கானில் எழுதி அழித்துக் குடிப்பின் நீரடைப்பு நோய் நீங்கும்.

## நல்ல பொருள்களாக வாங்க

''இன்னல் பகர தஷாபஹ அலைனாவ இன்னா இன்ஷா அல்லாஹு லமுஹ்த்ததூன்.''

பொருள்: ''மாட்டுக்கு மாடு எங்களுக்குக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. இறைவன் நாடினால் நாங்கள் நேர்மை அடைந்து விடுவோம்.''

மிருகங்களையோ பழைய சாமான்களையோ வாங்கும் போதும், தணிக்கை செய்து பேரம் பேசும்போதும் இந்த வசனத்தை ஓதிக் கொள்ள வேண்டும். அதற்கு முன்னால் அடுத்துவரும் துஆவை ஓதிக் கொள்ள வேண்டும்.

يَامُخَيِّرُ يَامُخْتَارُ يَامَنِ الْخَيْرُ مِنْهُ يَامَنِ الْخَيْرُ
بِيَدِهٖ يَادَلِيْلَ الْخَيْرِ يَامُرْشِدُ يَاهَادِيْ

பொருள்: ''நல்லதைக் கொடுப்பவனே! தேர்ந்தெடுப்பவனே! உன்னிடமிருந்தே நன்மை வருகிறது. உன் கையில் தான் நன்மை இருக்கிறது. வெற்றி தருபவனே! வழிகாட்டுபவனே.''

## அதிகாரியின் அன்பைப் பெற

அதிகாரத்திலிருப்பவர்கள் மக்கள் மீது அன்பு செலுத்த வேண்டுமானால் அதற்குரிய பரிகாரம் இதோ இருக்கிறது. சூரா பகராவில் 'தும்ம கசத் குலூபுகும்' என்பதிலிருந்து ''அம்மா தஃமலூன்'' என்பதுவரை உள்ள 74-ஆவது வசனத்தை ஒரு காகிதத்தில் எழுதி அதனடியில் அதிகாரியின் பெயரையும் அவரது அன்னையாரின்

பெயரையும் எழுதி, அந்தக் காகிதத்தை அந்த ஊரிலுள்ள உயர்ந்த கட்டிடத்திலோ மலைமீதுள்ள வீட்டிலோ கட்டித் தொங்கவிட வேண்டும். அதிகாரியின் குணம் மாறுதலடைந்து விடும்.

## ஆடு, மாடுகள் அதிகம் பால் கறக்க

இதே வசனத்தை மற்றொரு நன்மைக்குப் பயன்படுத்தலாம்: ஆடு, மாடுகள் குறைவாகப் பால் கொடுத்தால் இந்த வசனத்தை எழுதி அதைத் தண்ணீரில் கழுவிக் குடிக்கச் செய்ய வேண்டும். அல்லது தஃவீஸ் செய்து கட்ட வேண்டும்.

## தாய்ப்பால் சுரக்க

ஒரு பெண்ணுக்குப் பால் சுரக்க இதனை ஒரு வெங்கலத் தட்டில் எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்.

## கிணற்றில் அதிகமாக தண்ணீர் சுரக்க

இதனை ஒரு புது ஓட்டில் எழுதிக் கிணற்றில் போட வேண்டும்.

## தூக்கத்திலிருந்து குறித்த நேரத்தில் விழித்தெழ

وَإِذْ جَعَلْنَا الْبَيْتَ مَثَابَةً لِّلنَّاسِ وَأَمْنًا ط
وَاتَّخِذُوا مِن مَّقَامِ إِبْرَاهِيمَ مُصَلًّى ط وَعَهِدْنَا إِلَىٰ
إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ أَن طَهِّرَا بَيْتِيَ لِلطَّائِفِينَ
وَالْعَاكِفِينَ وَالرُّكَّعِ السُّجُودِ ○

ஒருவன் குறித்த நேரத்தில் தூக்கத்திலிருந்து எழுந்துவிட எண்ணினால், சூரா பகராவில் 'வஇத் ஜஅல்னல் பைத்த' என்று துவங்கும் இந்த 126-ஆவது வசனத்தை ஓதிக்கொண்டு படுக்க வேண்டும்.

## பழம் இனிப்பாய் இருக்க

فَذَبَحُوهَا وَمَا كَادُوا يَفْعَلُونَ ○

*பொருள்: ''எனவே அதனை அவர்கள் அறுத்தார்கள். இதைச் செய்ய அவர்கள் தயாராயில்லை.''*

இந்த வசனத்தை ஓதி யூதி எந்தப் பழத்தை அறுத்தாலும் அதில் இனிப்புத் தோன்றிவிடும்.

## அதிகாரியின் அன்பைப் பெற

فَسَيَكْفِيكَهُمُ اللّٰهُ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ ○

*பொருள்: ''அவர்களின் தீங்கிலிருந்து இறைவன் உம்மைப் பாதுகாத்துக் கொள்வான். அவன் கேட்கிறவன். அறிகிறவன்.'' (2:137)*

மேற்குறிப்பிட்ட வசனத்தை எழுதிக் கையில் கட்டிக் கொண்டால் அதிகாரிகளின் அன்பு கிடைக்கும்; அவர்களால் எந்தத் துன்பமும் இழைக்க முடியாது.

## முகவாதம் அகல

*''(நபியே) உம்முடைய முகம் அடிக்கடி வானத்தை நோக்குவதை நாம் காண்கிறோம். எனவே நீர் மஸ்ஜிதுல் ஹராமின் பக்கமே (தொழுகையில்) உம்முடைய முகத்தை திருப்புவீராக. (விசுவாசிகளே) நீங்களும் எங்கிருந்த போதிலும் (தொழுகையில்) அதன் பக்கமே உங்களுடைய முகங்களைத் திருப்புவீர்களாக.'' (12:144)*

மேற்குறிப்பிட்ட பொருளுக்குரிய அடுத்த பக்கத்திலுள்ள திருவசனங்களை ஒரு சுத்தமான செம்புப் பாத்திரத்தில் எழுதி அதனை அழித்த தண்ணீரால் முகவாதத்தையுடையவன் முகத்தைக் கழுவுவதோடு அந்தத் தண்ணீரில் சிறிதளவு வைத்து அதில் மூன்று மணி நேரம் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். இவ்

வாறு மூன்று நாட்கள் தொடர்ந்து செய்யின் இறையருளால் முகவாதம் நீங்கும்.

இதனை எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொண்டாலும் முகவாதம் நீங்கும்.

இதனை 101 தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அத்தண்ணீரை அருந்தியவரின் முகவாதம் நீங்கும்.

قَدْ نَرٰى تَقَلُّبَ وَجْهِكَ فِى السَّمَآءِ ۚ فَلَنُوَلِّيَنَّكَ قِبْلَةً تَرْضٰهَا ۚ فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَرَامِ ۚ وَحَيْثُ مَا كُنْتُمْ فَوَلُّوْا وُجُوْهَكُمْ شَطْرَهٗ ۚ وَاِنَّ الَّذِيْنَ اُوْتُوا الْكِتٰبَ لَيَعْلَمُوْنَ اَنَّهُ الْحَقُّ مِنْ رَّبِّهِمْ ۚ وَمَا اللّٰهُ بِغَافِلٍ عَمَّا يَعْمَلُوْنَ ○

## கணவன் மனைவி மீது அன்பு செலுத்த

கணவன் மனைவிமீது கோபமுற்றிருந்தால், ''வ மினன் னாஸிமன் யத்தகிது மின் தூனில்லாஹி அன்தாதன் யுஹிப்பூன ஹு¬ம் கஹு¬ப்பில்லாஹி, வல்லதீன ஆமனூ அஷத்து ஹு¬ப்பன் லில்லாஹி வலவ் யறல்லதீன ளலமூ இத்யறவ்னல் அதாப அன்னல் குவ்வத்த லில்லாஹி ஜமீஅன் வஅன்னல் லாஹ ஷதீதுல் அதாப்'' (2:165) என்ற வசனத்தை இனிப்புப் பண்டத்தில் ஓதி ஊதி உண்ணக் கொடுக்க வேண்டும்.

## வெட்டுக்கிளியின் தீங்கிலிருந்து மனிதர்களை காக்க

''வ இதா தவல்லா ஸஆஃபில் அர்லி லியுஃப்ஸித ஃபீஹா வயுஹ்லிகல் ஹர்த வந்நஸ்ல், வல்லாஹு¬ லாயுஹிப்புல் ஃபஸாத்.''

பொருள்: ''அவன் (உங்களிடமிருந்து) விலகினாலோ பூமியில் விஷமம் செய்து உங்கள் விவசாயத்தையும் கால்நடைகளையும் அழித்துவிட முயற்சி செய்கிறான். விஷமத்தை அல்லாஹ் உவப்பதில்லை.''

இந்த திருவசனத்தை நான்கு காகிதத் துண்டுகளில் எழுதி வயலின் நான்கு பக்கங்களிலும் தொங்க விட்டு விடில் வெட்டுக் கிளியால் யாதொரு தீங்கும் நிகழாது.

## கவலை, நோய், பேய் அனைத்தும் அகல

அல்லாமா இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்களுக்குத் துன்பம் துயரம் ஏற்படும் பொழுது திருக்குர்ஆனில் 'ஸகீனா' (சாந்தி) என்று சொல் வரும் ஆறு திருவசனங்களை நாற்பது நாட்கள் தொடர்ந்து ஓதிவருவர். அவை இறைவனருளால் நீங்கிவிடும்.

அவற்றைத் தொடர்ந்து நூறு தடவை ஓதினாலும் நற்பலன் ஏற்படும்.

அவர்களின் மாணவர் ஹாபிஸ் இப்னு கையிம் (ரஹ்) அவர்களுக்கு ஷைத்தானால் நோய் ஏற்பட்டபொழுது தம்மைச் சூழ இருந்தவர்களை இந்த ஆறு திருவசனங்களை ஓதுமாறு கூற அது அடுத்த நொடியில் மறைந்துவிட்டது. அவற்றை ஓதுவதற்கு முன்பும் பின்பும் தஸ்பீஹூம் ஸலவாத்தும் ஓதிக்கொள்ள வேண்டும்.

அந்தத் திருவசனங்கள் வருமாறு:-

1. வ கால லஹூம் நபிய்யுஹூம் இன்ன ஆயத்த முல்க்கிஹி ஐயஃத்தியக்குமுத் தாபூத்து ஃபீஹி ஸகீனா... லஆயத்தன்லகும் இன்குன்தும் முஃமினீன் (2:248)

2. ஃதும்ம அன்ஸலல்லாஹூ ஸகீனத்தஹூ அலாரசூலிஹி வ அலல் முஃமினீன்... வஃதாலிக ஜஸாவுல் காஃபிரீன். (9:26)

3. இத்யகூலு லிஸாஹிபிஹி லா தஹ்ஸன் இன்னல்லாஹ மஅனா ஃபஅன்ஸலல்லாஹூ ஸகீனத்தஹூ... வல்லாஹூ அஸீஸூன் ஹகீம். (9:40)

*4. ஹுவல்லதீ அன்ஸலஸ் ஸகீனத்த ஃபீ குலூபில் முஃமினீன... வகானல்லாஹு அலீமன் ஹகீமா. (48:4)*

*5. லகத் ரலியல்லாஹு அனில் முஃமினீன இது யுபாயி யூனக தஹ்த்தஷ் ஷஜரத்தி ஃப அலிம மாஃபீ குலூபிஹிம் ஃபஅன்ஸலஸ் ஸகீனத்த அலைஹிம் வ அஃதாபஹும் ஃபத் ஹன்கரீபா (48:18)*

*6. இத் ஜஅலல்லதீன கஃபரூ, ஃபீ குலூபிஹிமுல்ஹமிய் யத்த ஹமிய்யத்தல் ஜாஹிலிய்யத்தி ஃப அன்ஸலல் லாஹு ஸகீனத்தஹு அலா ரசூலிஹி வஅலல் முஃமினீன வஅல்ஸம ஹும் கலிமத்தத் தக்வா வகானூ அஹக்கபிஹா வ அஹ் லஹா வ கானல்லாஹு பிகுல்லி ஷைஇன் அலீமா. (48:26)*

## ஆயத்துல் குர்ஸி

*பிரசித்திமிக்க இந்த இறைவசனம் சூரா பகராவில் 255 ஆவது வசனமாகும்.*

اَللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَۚ اَلْحَيُّ الْقَيُّوْمُ ۚ لَا تَاْخُذُهٗ
سِنَةٌ وَّلَا نَوْمٌ ۗ لَهٗ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ ۗ
مَنْ ذَا الَّذِيْ يَشْفَعُ عِنْدَهٗٓ اِلَّا بِاِذْنِهٖ ۗ يَعْلَمُ
مَا بَيْنَ اَيْدِيْهِمْ وَمَا خَلْفَهُمْ ۚ وَلَا يُحِيْطُوْنَ
بِشَيْءٍ مِّنْ عِلْمِهٖٓ اِلَّا بِمَا شَآءَ ۚ وَسِعَ
كُرْسِيُّهُ السَّمٰوٰتِ وَالْاَرْضَ ۚ وَلَا يَئُوْدُهٗ
حِفْظُهُمَا ۚ وَهُوَ الْعَلِيُّ الْعَظِيْمُ ○

''(அல்லாஹ் - அவனையன்றி வேறு நாயன் இல்லை. அவன் நித்திய ஜீவன்; நிலையானவன். அவனை உறக்கமும் நித்திரையும் பீடிக்கா: வானங்கள் பூமியிலுள்ளவை அனைத்தும் அவனுடையதே. அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் (எவருக்காகிலும்) எவர்தான் பரிந்து பேசக்கூடும்? அவர்களுக்கு எதிரிலிருப்பவற்றையும் புறம்பாக இருப்பவற்றையும் அவன் நன்கறிபவன். அவனுடைய விருப்பமின்றி, அவனுக்கு தெரிந்தவற்றிலிருந்து யாதொன்றும் (மற்றெவரும்) அறிந்து கொள்ள இயலாது. அவனுடைய அரசாட்சி வானங்கள் பூமியைவிட விஸ்தீரணமாயிருக்கின்றது. அவ்விரண்டையும் காத்து இரட்சிப்பது அவனுக்குச் சிரமமன்று. மேலும் அவன் மிகவும் உயர்ந்தவன்; மகத்தானவன்.)''

பெருமானார் சொன்னதாக உபை பின் கஅப் விளக்குகிறார்:

''இப்னு முன்திர்! இறைவன் அருளிய வசனங்களில் மிகவும் முக்கியத்துவம் பொருந்தியது எது என்று உமக்குத் தெரியுமா?''

''இறைவனுக்கும் இறை தூதருக்கும்தான் தெரியும்!'' என்றார் இப்னு கஅப்.

அதே கேள்வியைப் பெருமானார் இரண்டாம் தடவையாகக் கேட்டபோது அல்லாஹு லாஇலாஹ இல்லாஹுவல் ஹையுல் கையூம் (அல்லாஹ் - அவனைத் தவிர்த்துவேறு இறைவனுமில்லை. நித்திய ஜீவியன்) என்று கஅப் பதிலிறுத்தார்.

பெருமானார் அவரது நெஞ்சில் தட்டி ''உமது கல்வி வளர்ச்சியுறட்டும்!'' என்றார்கள்.

ரமளான் மாதத்தில் வருகிற 'ஸகாத்' பொருள்களை எல்லாம் பாதுகாப்பதற்கு நபித்தோழர் அபூஹுரைராவை நியமித்தார்கள் பெருமானார்.

ஒரு நாளிரவு யாரோ ஒருவன் அந்தப் பொருள்களைத் திருடக் கண்ட அபூஹுரைரா அவனைப் பிடித்து பெருமானா ரிடம் இழுத்துச் செல்ல முற்பட்டபோது அவன் பணிந்து முறையிட்டான். பிள்ளை குட்டிகளுள்ள தான் ஏழை என்று கூறிக்கெஞ்சினான். இரக்க வசப்பட்ட அபூஹுரைரா அவனை விட்டு விட்டார்.

காலையில் பெருமானார் வந்தார்கள்.

அபூஹுரைராவைப் பார்த்து, ''இன்றிரவு நீர் கைது செய்தீரே, அவனை என்ன செய்தீர்?'' என்று கேட்டார்கள்.

''யா ரசூலல்லாஹ்! தன் தேவைகளையும் தன் குழந்தைக ளையும் காட்டி முறையிட்டான், அதனால் அவனை விட்டு விட்டேன்'' என்றார் நபித் தோழர்.

பெருமானார் சொன்னார்கள். ''அவன் ஒரு பொய்யன். அவன் உம்மிடம் அப்படிப் பொய் சொல்லியிருக்கின்றான். அவன் மீண்டும் உம்மிடம் வருவான்!''

மறுநாளிரவு நபித்தோழர் ஒளிந்து கொண்டு அவனின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். அவன் வந்தான். நபித்தோழரிடம் அகப்பட்டான்; அப்புறம் வழக்கப்படி முறையிட்டான். அபூஹுரைரா அவனை விட்டு விட்டார். காலையில் பெருமானார் வினவ அபூஹுரைரா வழக்கப்படி பதிலளிக்க, பெருமானார், ''அவன் மீண்டும் வருவான்!'' என்றார்கள்.

மூன்றாம் இரவு அவன் வந்ததும், 'அபூஹுரைரா அவ னைப் பிடித்துக் கொண்டார்கள்.... அன்று எப்படியும் அவ னைப் பெருமானாரிடம் இழுத்துச் செல்லப் போவதாகக் கூறினார்கள்.

''என்னை விட்டுவிட்டால், சிறந்த சொற்றொடர்கள் சிலவற்றை உங்களுக்கு நான் கற்றுத் தருவேன். அதனால் உங்களுக்கு பெரும் நன்மை ஏற்படும்!'' என்று கூறியவன் தன்னை விடுவித்துக் கொண்டு இப்படிச் சொன்னான். ''நீங் கள் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்ஸீயை முழுமையாக ஓதிக் கொள்ளுங்கள். ஆபத்துகளிலிருந்து உங் களை இறைவன் காப்பாற்றுவதோடு, ஷைத்தான்களிடமிருந் தும் உங்களுக்குப் பாதுகாப்பளிப்பான்!''

காலையில் இந்த விவரங்களை எல்லாம் அபூஹுரைரா பெருமானாரிடம் கூறினார்.

''அவன் மிகவும் பொய்யன் என்றாலும் அவன் இன்றிரவு உம்மிடத்தில் உண்மையைச் சொல்லியிருக்கிறான், கடந்த மூன்று இரவுகளும் உம்மிடம் வந்தது யார் என்று உமக்குத் தெரியுமா?'' என்று பெருமானார் கேட்டார்கள்.

தமக்குத் தெரியவில்லை என்று நபித்தோழர் பதிலளித்தார்.

பெருமானார் கூறினார்கள்: ''அவன் ஷைத்தான்!''

நபித்தோழர் அபூ அய்யூப் அன்ஸாரி தம்முடைய அறையில் பேரீச்சம் கனிகளைச் சேமித்து வைத்திருந்தார், அடிக்கடி பிசாசுகள் வந்து அவற்றை அபகரித்துக் கொண்டிருந்தன, எனவே அவர் பெருமானாரிடம் முறையிட்டார்.

''நீர் போய், அந்த பிசாசைக் கண்டால், இறை திருநாமம் கொண்டு, இறை தூதருக்குப் பதில் கொடு என்று சொல்லிவிடும்,'' என்று பெருமானார் குறிப்பிட்டார்கள்.

அந்த பிசாசைப் பிடித்துக் கொண்ட நபித்தோழர் பெருமானார் குறிப்பிட்டபடியே சொன்னார்.

இனிமேல் தான் வரப்போவதில்லை என்று அந்தப் பிசாக ஆணையிட்டு, தன்னை விட்டுவிடுமாறு வேண்டிக் கொள்ளவே நபித்தோழர் அதனை விட்டு விட்டார்.

காலையில் விவரத்தைப் பெருமானாரிடம் கூறியபோது ''அவன் பொய்யன், மீண்டும் வருவான்'' என்று பதிலிறுத்தார்கள். அவர்கள் சொன்னது போலவே அடுத்த நாளும் நடந்தது. மூன்றாம் நாளும் நடந்தது. மூன்றாம் நாள் பிசாசைப் பிடித்துக் கொண்ட அபூ அய்யூப் அன்ஸாரி, அதனைப் பெருமானாரிடம் இழுத்துச் செல்லப் போவதாகக் கூறினார்.

''என்னை விட்டு விடுங்கள் நான் ஓர் இறை வசனத்தை கற்றுத் தருகிறேன், அதை ஓதினால் எந்தப்

*பிசாசும் அணுகாது'' என்று கூறிய பிசாசு, ஆயத்துல் குர்ஸியைக் கற்றுக் கொடுத்தது.*

*விவரத்தைப் பெருமானாரிடம் கூறியபோது, ''அவன் பொய்யனென்றாலும் இன்றிரவு உம்மிடம் உண்மை பேசியிருக்கிறான்'' என்று கூறினார்கள்.*

*பெருமானார் மக்காவை விட்டு மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற பிறகு ஆயத்துல் குர்ஸி அருளப்பட்டது. அதனைக் கண்ணியப்படுத்துவதற்கென்று இதனுடன் 4000 வானவர்கள் இறங்கினார்கள். ஸைது பின் தாபித்தை அழைத்து அந்த வசனத்தை எழுதிக் கொள்ளுமாறு பணித்தார்கள் பெருமானார்.*

## ஷைத்தானை ஓட்ட

*பெருமானார் சொன்னதாக அறிஞர் அலீ (ரலி) குறிப்பிடுகிறார்கள்.*

*''இந்த வசனம் ஒரு வீட்டில் ஓதப்பட்டால் முப்பது நாட்களுக்கு அந்த வீட்டை ஷைத்தான் வெறுத்து விடுவான். சூனியக்கார ஆண்களும், பெண்களும் 40 நாட்களுக்கு அந்த வீட்டில் நுழைய மாட்டார்கள். அலீ! இந்த ஆயத்தை உமது குடும்பத்தாருக்கும் பிள்ளைகளுக்கும் அண்டை வீட்டாருக்கும் கற்றுக் கொடும்.*

## பதவியும் கண்ணியமும் பெற

*ஒருவன் இந்த ஆயத்தை 17 அல்லது 50 அல்லது 170 முறை ஓதினால் அல்லது 313 முறை ஓதினால் அவனுக்குப் பெரும் பதவி கிடைக்கும். இறைவனிடம் அவன் கேட்கும் பிரார்த்தனைகள் அத்தனையும் நிறைவேறும். மக்களின் அன்புக்கும் கண்ணியத்துக்கும் அவன் உரியவனாகி விடுவான். உலகிலுள்ளவர்கள் அனைவரும் அவனுக்கு பணிந்து நடப்பார்கள். சொல்லாலோ செயலாலோ அவனுக்கு யாரும் தீங்கிழைக்க முடியாது.*

ஒருவன் தினசரி ஆயத்துல் குர்ஸியை ஓதிக்கொண்டிருந் தால் அவன் மற்ற மனிதர்களிடையே மேன்மை அடைவான்.

பெரிய மனிதர் ஒருவர் இவ்வாறு சொல்லியிருக்கிறார்: இறைவனிடத்திலும், மனிதர்களிடத்திலும் ஒருவன் மேன்மை அடைய விரும்பினால், அவன் தினசரி ஆயத்துல் குர்ஸியை 50 அல்லது 170 தடவை ஓதி வரவேண்டும்.

## இம்மை மறுமைப் பேறு பெற

ஒருவன் ஆயத்துல் குர்ஸியைத் தினம் ஓதி வந்தால் இம்மையிலும் மறுமையிலும் எல்லாவிதமான நன்மைகளும் கிடைக்கும்; அவன் காரியங்கள் அத்தனையும் வெற்றியடை யும்.

## வருமானம் பெருக

ஒருவன் ஆயத்துல் குர்ஸியைத் தினசரி 50 முறை அல்லது 170 முறை ஓதி வந்தால் அவனுடைய வருமானம் அபரிமித மாகப் பெருகிவிடும்.

## வளம் செழிக்க

அன்னை ஆயிஷா (ரலி) கூறுகிறார்; ஒருவர் பெருமானா ரிடம் வந்தார். தம் வீட்டில் 'பரக்கத்' செழிப்பில்லை என்று முறையிட்டார்.

''ஆயத்துல் குர்ஸி தெரியாதா, உமக்கு?'' என்று பெருமா னார் கேட்டார்கள். ''ஆயத்துல் குர்ஸியை எதன் மீது ஓதினா லும் அதற்கு இறைவன் பரக்கத்தை ஏற்படுத்தி விடுவான்!''

பெரியவர் ஒருவர் கூறுகிறார்:

''உணவு, கோதுமை, அரிசி, நெல் முதலியவற்றின் மீது ஆயத்துல் குர்ஸியை ஓதினால் அவற்றில் பரக்கத் ஏற்படும். இப்படி ஓதுவதானால் திருத்தூதர்களின் எண்ணிக்கைப்படி 313 தடவை ஓதவேண்டும்.

## துன்பம் நீங்க

*பெருமானார் கூறுகிறார்கள்:*

*''துன்பமான நேரத்தில் ஒருவன் ஆயத்துல் குர்ஸியை ஓதினால் அவனுக்கு இறைவன் துன்பத்திலிருந்து விடுதலை கொடுப்பான்.*

## இறைவனின் உதவி பெற

*பிரயாணி ஒருவரை ஓநாய் ஒன்று தாக்கிற்று. அவர் ஆயத்துல் குர்ஸியை ஓதினார், ஓநாய் வெருண்டோடிற்று. ஆயத்துல் குர்ஸியோடு சூரா பகராவின் இறுதிப் பகுதியாகிய 'ரப்பனா லாத்து ஆகி துனா' முதல் 'கௌமில் காஃபிரீன்' வரையுள்ள வசனங்களையும் சேர்த்து ஓதினால் இறைவன் உதவி கிடைக்கும் என்று ஹதீஸில் காணப்படுகிறது.*

## வானவரின் பாதுகாவல் பெற

*இதனை ஒருவன் வழக்கமாக ஓதிவரின் அவனைப் பாதுகாக்கும் பொறுப்பை இறைவன் ஒரு வானவரிடம் ஒப்படைக்கிறான்.*

## தேவைகள் நிறைவேற

*சையிது அஹ்மது பூனி சொல்கிறார்கள், ''ஒருவன் ஆயத்துல் குர்ஸியை அதன் எழுத்துக்களின் எண்ணிக்கைப் படி 170 முறை ஓதினால், அவனுடைய காரியங்கள் அத்த னைக்கும் இறைவன் உதவி செய்வான்; அவனுடைய தேவை கள் அனைத்தையும் இறைவன் முடித்துக் கொடுப்பான்; துக்கத்தையும் துயரத்தையும் நீக்குவான்; அதிக வருமானத் தைக் கொடுப்பான்.''*

## ஜின்களிலிருந்து பாதுகாப்பு பெற

*ஸைது பின் தாபித் குறித்து இவ்வாறு கூறப்பட்டிருக் கிறது. ஒருநாள் அவர் தமது தோட்டத்திற்குச் சென்றி ருந்தார். அங்கு திடீரென்று சத்தம் கேட்டது. 'இது*

என்ன?' என்று அவர் கேட்டபோது ஒரு ஜின், ''எங்களுக்கு பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. உங்கள் தோட்டத்துக் கனிகளிலிருந்து எங்களுக்கு தேவையானதை எடுத்துக் கொள்ள விரும்புகிறோம். உங்களுக்குச் சம்மதம்தானே?' என்று கேட்டது.

''ஆம், சம்மதம்தான்!'' என்று பதிலளித்தார் ஸைது. 'உங்களிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கான 'ஆயத்து' எது என்று கூறுங்கள்!'

ஜின் பதிலளித்தது, ''எங்களிடமிருந்து ஒருவனை பாதுகாக்கக் கூடியது ஆயத்துல் குர்ஸி.''

## சரீர இச்சை நீங்க

ஒருவன் சரீர இச்சையுள்ளவனாகவும் பாவம் செய்கிறவனாகவும் எல்லோராலும் வெறுக்கப்பட்டவனாகவும் பேராசை கொண்டவனாகவும் இருந்தால் அவன் இந்த ஆயத்தை 17 அல்லது 170 முறை ஓதி வரவேண்டும். அவனுடைய கோளாறுகள் எல்லாம் நீங்கிப்போய்விடும். அவன் நல்ல நிலையை அடைவான்.

இப்னு கஅபின் வீட்டில் தானியக் கதிர் ஒன்று இருந்தது. அதை தினந்தோறும் கண்காணித்து வருவது அவர் வழக்கம்: ஒருநாள் தானியம் சிறிது குறைந்திருந்தது. இரவு நேரத்தில் அதனைக் காவல் காத்துக் கொண்டிருந்தபோது இளைஞனைப் போன்ற மிருகம் ஒன்றைக் கண்டார். அதற்கு அவர் 'சலாம்' சொன்னபோது, அது அவருக்குப் பதிலளித்தது.

''நீ ஜின்னா மனிதனா!'' என்று அவர் கேட்டார்.

''ஜின்!'' என்றது அது. அதன் கையைக் காட்டுமாறு அவர் கேட்டுக் கொண்டபோது அது கையை விரித்துக் காட்டிற்று. அதில் நாயின் முன்னங்கால்களைப் போல் ரோமம் அடர்ந்து காணப்பட்டது.

''ஜின்னின் அமைப்பு இதுதானா?'' என்று இப்னு கஅப் கேட்டார்.

''அவர்களிலேயே மிகவும் சக்தி படைத்தவன் நான்'' என்று பதில் வந்தது.

''நீ ஏன் இந்த காரியத்தைச் செய்கிறாய்?'' என்று இப்னு கஅப் கேட்டார். இப்னு கஅப் தர்ம எண்ணம் படைத்தவர் என்று தான் அறிந்திருந்ததால் அவரிடமிருந்தே தனக்குத் தேவையானதை எடுத்துக் கொள்ள நினைத்ததாக அது சொன்னது.

''உங்களிடமிருந்து எங்களை பாதுகாக்கக் கூடியது எது?' என்று இப்னு கஅப் கேட்டார்கள்.

ஜின் கூறிற்று, ''அது ஆயத்துல் குர்ஸி. ஒருவன் அதைக் காலையில் ஓதினால் மாலைவரை காக்கப்படுவான்!''

இந்த விவரத்தை இப்னு கஅப் பெருமானாரிடம் கூறிய போது அவர்கள் சொன்னார்கள்: ''அது உண்மையை உமக்கு தெரிவித்திருக்கிறது.''

மரத்தடிக்கு வந்த ஒருவர், அந்த மரம் அசைவதைக் கண்டு, ''யாரது?'' என்று கேட்டார். பதில் வரவில்லை. அவர் ஆயத்துல் குர்ஸியை ஓதினார். அப்பொழுது அந்த ஈச்சமரத்தி லிருந்து ஷைத்தான் ஒன்று கீழே இறங்கிற்று.

அவர் ''எங்களிடம் நோயாளி ஒருவன் இருக்கிறான். அவனுக்கு எதை வைத்துப் பரிகாரம் செய்யலாம்?'' என்று கேட்டார்.

ஷைத்தான் கூறிற்று: ''எதை வைத்து என்னைக் கீழே இறக்கினீரோ அதை வைத்தே பரிகாரம் செய்யலாம்!''

## இறைகாவல் பெற

பெருமானார் சொன்னதாக அலீ (ரலி) அவர்கள் கூறுகி றார்கள்:

''ஒருவன் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்ஸியை ஓதினால் அவனது வீட்டையும் அக்கம் பக்கத்து

வீடுகளையும் இறைவன் பாதுகாத்துக் கொள்வான்!'' என்று அண்ணல் நபி (ஸல்) கூறியதாக அலீ (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர்.

நபித் தோழர் இப்னு மஸ்ஊத் (ரலி) சொன்னார்கள்:

ஒருவர் பெருமானாரிடம் வந்து ''யா ரஸூலல்லாஹ், எனக்குப் பயன் ஏற்படத்தக்க துஆ ஒன்றைக் கற்றுத் தாருங்கள்'' என்று வேண்டிக் கொண்டார்.

''ஆயத்துல் குர்ஸியை ஓதும், உம்மையும் உமது சந்ததிகளையும் உமது வீட்டையும் அண்டை வீடுகளையும் இறைவன் பாதுகாத்துக் கொள்வான்'' என்று பெருமானார் பதிலளித்தார்கள்.

நபித்தோழர் அனஸ் (ரலி) கூறுகிறார்; ''ஒருவன் பர்ளான தொழுகைக்குப் பின்னால் ஆயத்துல் குர்ஸியை ஓதினால் அடுத்த தொழுகை வரை அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்!''

நபித்தோழர் அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் தம் வீட்டுக்குள் நுழைந்ததும் ஆயத்துல் குர்ஸியை ஓதி நான்கு மூலைகளிலும் ஊதி இறைவனிடம் பாதுகாப்புத் தேடுவாராம்.

## எண்ணம் நிறைவேற

சையிது அஹ்மது பூனி சொல்கிறார்கள்: 'தன் வீட்டிலிருந்து புறப்படும்போது ஒருவன் ஆயத்துல் குர்ஸியை ஓதினால் அவன் எண்ணம் நிறைவேறும்; வெற்றியுடன் அவன் இல்லம் திரும்புவான். அவன் செய்த பாவங்கள் மன்னிக்கப் படும். ஷைத்தான் அவனை விட்டு விலகிப் போகும். அவனுக்கு இறைவன் பாதுகாப்பை ஏற்படுத்துவான். எந்தத் தீங்கும், எந்த நோயும் அவனை அணுகாது.

## வறுமை நீங்க

பெருமானார் கூறியிருக்கிறார்கள்:

''தன் வீட்டுக்குத் திரும்பி வரும்போது ஒருவன் ஆயத்துல் குர்ஸியை ஓதினால், அவனுடைய வறுமை நீங்கும்.''

''உங்கள் ஆத்மாக்களை, ஆயத்துல் குர்ஸி ஓதுவதன் மூலம் பாதுகாத்துக் கொள்ளுங்கள். பெருமானார் ஆயத்துல் குர்ஸியை ஏழு முறை ஓதியூதித் தம்மைப் பாதுகாத்துக் கொண்டதாக ஹதீஸில் காணப்படுகிறது'' என்று ஒரு பெரியார் சொல்லியிருக்கிறார்.

## உடலைக் கட்ட

ஆயத்துல் குர்ஸியினால் தன்னை பாதுகாத்துக் கொள்ள நினைப்பவன் நான்கு திசைகளையும் விண்ணையும், மண்ணையும் தன் நெஞ்சையும் நோக்கி ஏழு முறை ஓதி ஊதி தன் மூச்சை வயிற்றுக்குள் இழுக்க வேண்டும். அவ்விதம் செய்தால், ஷைத்தானோ ஜின்னோ அவனுக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது.

## இறைகாவல் பெற

வர்த்தகர் ஒருவர் வியாபாரம் செய்யும் நோக்கத்துடன் சரக்குகளை வாங்கிக் கொண்டு எகிப்துக்குப் புறப்பட்டார். அவரது பொருளைக் கவரும் எண்ணத்துடன் ஒரு கொள்ளைக் கூட்டம் அவரைத் தொடர்ந்தது, ஒரு காட்டில் தங்கிய வர்த்தகர் தம்மை பாதுகாத்துக் கொள்வதற்காக ஆயத்துல் குர்ஸியை ஆறு தடவை ஓதி விட்டு ஏழாம் தடவையாக ஓதிக்கொண்டிருந்தார். ஆயத்துல் குர்ஸியை அவர் மேலும் ஓதிக்கொண்டிருந்தார்.

திருடர்கள் அவரை நோக்கி நெருங்கினர். அப்போது தமக்கும் அந்த வர்த்தகருக்கும் இடையில் உறுதி வாய்ந்த அரண் ஒன்று இருப்பதை அவர்கள் கண்டார்கள். அன்றிரவு அவ்வியாபாரியைக் கொள்ளையிடாமல் விட்டு விட்டார்கள். மறுநாள் அந்த இடத்தை விட்டுப் புறப்பட்ட வியாபாரி அடுத்த இரவு வேறோரிடத்தில் தங்கினார். திருடர்களும் அந்த இடத்துக்குத் தொடர்ந்து வந்திருந்தார்கள். வியாபாரியைச் சுற்றிலும் அரண் இருப்பதை அவர்கள் கண்டார்கள். எனவே திருடர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

மறுநாள் பிரயாணத்தைத் தொடர்ந்த வியாபாரி அடுத்த இரவு வேறோரிடத்தில் தங்கினார். திருடர்கள் இன்னும் தொடர்ந்து கொண்டிருந்தார்கள். இப்பொழுதும் அந்த வியாபாரியைச் சுற்றி அரண் இருப்பதை அவர்கள் கண்டார்கள். அரணைக் கண்டு அதிசயித்த திருடர்கள் அந்த வர்த்தகரிடமே நேராகச் சென்றார்கள்; தாம் கண்ட அதிசய அரணைப் பற்றியும் அதனால் தம்மால் திருட முடியவில்லை என்றும் கூறி, அந்த அரண் எப்படி ஏற்பட்டது என்று கேட்டார்கள்.

தாம் ஆயத்துல் குர்ஸியை ஓதிப் பாதுகாப்புத் தேடிக் கொண்டதாக அந்த வர்த்தகர் கூறினார்.

## ஆபத்திலிருந்து நீங்க

விரோதிகளுக்கும் கொள்ளை நோய்க்கும் அஞ்சியவர்கள் ஆபத்து ஏற்படும் என்று தோன்றுகிற திசையைப் பார்த்து ஆயத்துல் குர்ஸியை ஓத வேண்டும். ஆபத்துகளிலிருந்து அவர்களுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.

## நோய் நீங்கப் பெற

நபித் தோழர் சல்மான் பார்ஸீ (ரலி) கூறுகிறார், பெருமானார் கூறியதாக:

''நோயால் பீடிக்கப்பட்ட அந்திம காலத்தில் ஒருவன் ஆயத்துல் குர்ஸியை ஓதினால், துன்பம் நீங்கிய நிலையில் மரணமடைவான்.''

## செல்வாக்குப் பெற

செய்கு முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

''இரவிலும் பகலிலும் ஆயத்துல் குர்ஸியை ஒருவன் 1000 முறை ஓதினால், இப்படி 40 நாட்களுக்குத் தொடர்ந்து ஓதினால் நிச்சயமாக அவனுக்கு அரூபமான 'ரூஹானி'கள் தோற்றமளிக்கும். இதனால் அவன் எண்ணம் நிறைவேறுவதோடு அவனுக்குச் செல்வாக்கும் சிறப்பும் ஏற்படும்.''

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பெற

*ஆயத்துல் குர்ஸியை 50 அல்லது 170 முறை ஓதி இறைவனிடம் பிரார்த்தனை செய்தால், அந்தப் பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்படும்.*

*நபித்தோழர் மஆத் பின் ஜபல் (ரலி) கூறுகிறார்:*

''ஸகாத், தர்மம் ஆகிய வழிகளில் வந்த பேரீச்சைக் கனிகளைப் பெருமானார் என்னிடம் ஒப்படைத்திருந்தார்கள். அவற்றை ஓரிடத்தில் வைத்திருந்தேன். என்றாலும் கனிகள் ஒவ்வொரு நாளும் குறைந்து வருவதைக் கண்டேன்.''

இதனைப் பெருமானாரிடம் தெரிவித்தேன். இது ஷைத் தானின் வேலை என்றும் மறைந்திருந்து கண்காணிக்கும் படியும் பெருமானார் கூறினார்கள்.

''அதன்படியே நான் கண்காணித்தேன். இரவில் சிறிது நேரம் சென்ற பிறகு யானையைப் போன்றதோர் உருவம் தோன்றிற்று. அது வாசலை நோக்கிச் சென்றதும் வேறொரு தோற்றத்தை எடுத்துக் கொண்டு வாயில் வழியே உள்ளே நுழைந்தது. பேரீச்சைக் கனிகளைச் சாப்பிட ஆரம்பித்தது'' இப்னு ஜபல் வேஷ்டியைக் கட்டிக்கொண்டு,

*அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு*

*வ அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹி*

*(வணக்கத்துக்குரிய நாயன் அல்லாஹ்வைத் தவிர்த்து யாருமில்லை என்று சான்று கூறுகிறேன். முஹம்மது (ஸல்) அவர்கள் இறைவனின் திருத்தூதர் என்று சான்று கூறுகிறேன்).*

— என்று ஓதினார்: ''இறைவனின் பகைவனே!'' என்று சொல்லிக் கொண்டு பாய்ந்து போய் அதனைப் பிடித்தார்; அதனைப் பெருமானாரிடம் கொண்டுபோய் அவமானப்படுத்தப் போவதாகக் கூறினார். அது மீண்டும் வரப்போவதில்லை என்று ஆணையிட்டுக் கூறவே இப்னு ஜபல் அதனை விட்டு விட்டார்.

காலையில் பெருமானார் வந்தபோது இப்னு ஜபலிடம் ''உமது கைதி என்னவானான்?'' என்று கேட்டார்கள். விவரம் முழுவதையும் இப்னு ஜபல் கூறினார்.

''அவன் மீண்டும் வருவான்!'' எனப் பெருமானார் கூறினார்கள்; அப்போது அவனைப் பிடிக்கும்படியும் சொன்னார்கள்.

இரண்டாம் இரவு முன்போலவே எல்லாம் நடந்தது.

மூன்றாம் நாள் அவனைப் பிடித்துக் கொண்ட இப்னு ஜபல், கடந்த இரண்டு நாட்களும் அவன் தன் வாக்கை நிறைவேற்றாததால், இம்முறை பெருமானாரிடம் இழுத்துச் செல்லப்போவதாகக் கூறினார்.

அரூபமான ஷைத்தான் சொன்னான்: ''நான் பிள்ளை குட்டிகள் உள்ளவன்; நஸீபையிலிருந்து வந்து மதீனாவில் குடியேறியவன். பெருமானாரிடம் நான் சென்றபோது இரண்டு வசனங்கள் தோன்றின. அந்த வசனங்களை எந்த வீட்டில் ஓதினாலும் அந்த வீட்டில் ஷைத்தான் நுழையமாட்டான். என்னை விட்டுவிடு, அந்த வசனங்களை கற்றுத் தருகிறேன்.''

இப்னு ஜபல் சம்மதித்தார்.

ஷைத்தான் சொன்னான்:

''அந்த இரண்டு வசனங்களில் ஒன்று ஆயத்துல் குர்ஸி. மற்றொன்று சூரா பகராவின் இறுதியில் 'ஆமனர் ரசூலு' என்று துவங்குகிற வசனம்.''

பொழுது விடிந்ததும் பெருமானாரிடம் வந்து இப்னு ஜபல் எல்லாவற்றையும் கூறினார்.

''அவன் பொய்யனென்றாலும், உண்மையான வசனங்களைக் கூறியிருக்கிறான்'' என்று பெருமானார் கூறினார்கள். அவற்றை இப்னு ஜபல் ஓதி வந்தார். அதன் பிறகு பேரீச்சைக் கனியில் எவ்வித குறைவையும் அவர் காணவில்லை.

ஒருவர் பாழடைந்த வீடு ஒன்றில் தங்கினார். இரவில் கதவு திறக்கும் சப்தமும் கலகலவென்று சிரிக்கும் சப்தமும் கேட்டன. அவர் உற்று நோக்கியபோது கொடூரமான பிசாசு ஒன்றைக் கண்டார். அது அவரைத் தாக்க முயன்றது. அதைக் கண்டு அவர் பயந்தார். அவர் மனத்தில் ஆயத்துல் குர்ஸியை ஓத வேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. தம் எண்ணப்ப டியே அவர் ஓதினார். அவர் ஓதியதையே அந்தப் பிசாசும் திருப்பி ஓதிற்று என்றாலும் ஆயத்துல் குர்ஸியில் 'வலா யஊதுஹு ஹிப்ளுஹுமா...'' என்ற பகுதியை ஓதியபோது, அந்தப் பகுதியை மட்டும் அது ஓதவில்லை. அதனை அவர் மீண்டும் ஓத ஆரம்பித்தார். அவர் பார்வையிலிருந்து அந்தப் பிசாசு மறைந்து விட்டது. அன்றிரவு முழுவதும் அந்தப் பிசாசை அவர் காணவில்லை.

காலையில் எழுந்தபோது தம் வீட்டின் ஒரு மூலையில் சாம்பல் கிடப்பதைக் கண்டு வியப்படைந்த அவர், தம் சகோதரரிடம் விவரத்தைக் கூறினார். அவர், அது 'ஜிப்ரீத்' எனும் பெயருள்ள பலம் பொருந்தியப் பிசாசு என்றும், ஓதப்பட்ட இறைவசனம் அதனை எரித்துச் சாம்பலாக்கி விட்டது என்றும் கூறினார்.

அந்த 'ஆயத்தின்' ஆற்றலை அறிந்த முன்னவர் அதனைத் தினமும் ஓதி வந்தார். அதன் சிறப்பையும் அடைந்தார்.

## நாட்டங்கள் நிறைவேற

ஒருவன் இதனை ஒவ்வொரு நாளும் ஐம்பது தடவை வழக்கமாக ஓதிவரின் அவன் தன் நாட்டங்கள் அனைத்தை யும் நிச்சயமாக எய்தப் பெறுவான். இது சோதிக்கப்பட்டதா கும்.

## கப்பல் கவிழாதிருக்க

'சாலிஹீன்'களில் ஒருவர் கப்பலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். கொடுமையான சூறாவளி கிளம்பி கப்பலை அலைக்கழித்தது. அதிலிருந்து தப்புவது கடினமாகி விட்டது.

ஆயத்துல் குர்ஸியை ஒரு காகிதத்தில் எழுதி, அவர் அதனைக் காற்று வீசும் திசையை நோக்கி கட்டி தம் கரங்களிரண்டையும் உயர்த்தி இறைவனிடம் பிரார்த்தனை செய்தார்; ஆண்டவனே! மகத்துவம் பொருந்திய ஆயத்துல் குர்ஸியை முன் வைத்து உன்னிடம் உதவி கேட்கிறேன். அதன் புனிதத் தன்மையினால் எங்களை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று உன்னிடம் இறைஞ்சுகிறேன். நீ மர்மங்களை நன்கு அறிந்தவன்; துன்பங்களைப் போக்குபவன். உன்னுடைய கண்ணியத்துக்குரிய பெருமானாரின் சிறப்பை முன் வைத்து உன்னிடம் உதவி கேட்கிறேன்!''

பிரார்த்தனை முடிந்ததும் காற்றும் நிதானமடைந்தது, கப்பலில் இருந்தவர்கள் மகிழ்ச்சியுடனும் பாதுகாப்புடனும் பிரயாணத்தைத் தொடர்ந்தார்கள்.

## ஷைத்தான் சாம்பலாக

பனீ கஅப் சந்ததியைச் சேர்ந்த ஞானகுரு ஒருவர் பேரீச்சைக் கனிகளை விற்பனை செய்வதற்காக பஸ்ராவிற்குச் சென்றார். அங்கு தங்குவதற்கு இடம் கிடைக்கவில்லை. சிலந்தி வலைகள் நிறைந்த வீடு ஒன்றைப் பார்த்து அதைப் பற்றி மக்களிடம் அவர் விசாரித்த போது, அந்த வீட்டில் பிசாசு குடியிருக்கிறது என்ற செய்தி கிடைத்தது. வீட்டின் உரிமையாளரிடம் சென்ற ஞானகுரு அந்த வீட்டை தமக்கு வாடகைக்குத் தருமாறு கேட்டார்.

''அதில் பலம் பொருந்திய பிசாசு ஒன்று இருக்கிறது. அந்த வீட்டில் தங்குபவர்களை எல்லாம் அது கொன்று போட்டுவிடும். அதிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்!'' என்றார் உரிமையாளர்.

''எனக்கு அதை அடக்கத் தெரியும். இறைவனருளால் அதிலிருந்து என்னை நான் தற்காத்துக் கொள்வேன்'' என்று கூறிய ஞானகுரு உரிமையாளரின் ஒப்புதலைப் பெற்றார். அன்றிரவு அவர் அந்த வீட்டில் தங்கினார். அப்போது கரிய உருவம் ஒன்று அவரை நெருங்கிற்று.

அதன் கண்கள் நெருப்புத் துண்டுகளைப்போல் பளபளத் தன. அது நெருங்கி வந்தபோது அவர் ஆயத்துல் குர்ஸியை ஓதினார். அவர் ஓதிய ஒவ்வொரு வார்த்தையையும் அது திருப்பி ஓதிற்று. ஆயத்துல் குர்ஸியின் கடைசிப் பகுதியை அவர் ஓதியபோது அந்தப் பிசாசினால் அதைத் திருப்பி ஓத முடியவில்லை. அந்த இருண்ட பிசாசு அவர் பார்வையை விட்டு மறைந்தது.

காலையில் எழுந்தபோது, பிசாசு நின்ற இடத்தில் சாம்பல் கிடப்பதை அவர் கண்டார். அப்போது அசரீரி குரல் ஒலித்தது. ''மிகப் பலம் பொருந்திய பிசாசு ஒன்றை நீர் எரித்துச் சாம்பலாக்கிவிட்டீர்!''

''எதனால் அது எரிக்கப்பட்டது?'' என்று அவர் வினவி னார்.

''வலா யஊதுஹுமா'' என்று ஆரம்பிக்கிற கடைசிப் பகுதியினால் அது எரிக்கப்பட்டுவிட்டது!'' என்று பதில் வந்தது.

## பகைவர்களிடமிருந்து பாதுகாப்பு பெற

யமன் வட்டாரத்தைச் சேர்ந்த அபூ அப்துல்லாஹ் நிரம்ப வும் கற்றறிந்தவர். ஒருநாள் அவரைப் பகைவர்கள் வாளினால் வெட்டினார்கள். அதனால் அவருக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படவில்லை. பிறகு வெட்டியவர்களே காரணத்தைக் கேட் டபோது அவர் பதிலளித்தார்.

''ஆயத்துல் குர்ஸியின் இறுதிப் பகுதியையும் பாதுகாப் புக்கான இதர இறை வசனங்களையும் ஓதிக் கொண்டிருந்த தால் எனக்குக் காயம் ஏற்படவில்லை.''

மேலும் அவர் பிரயாணத்தில் மெலிந்துபோன ஓர் ஆட்டுடன் ஓநாய் ஒன்று விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார். அவர் அருகில் சென்றபோது அதன் கழுத்தில் காகிதம் ஒன்று கட்டப்பட்டிருப்பது தெரிந்தது. அதைப் பார்த்தபோது மேற்குறிப்பிட்ட இறைவசனம் காணப்பட்டது.

## எண்ணங்கள் நிறைவேற

செய்கு பூனி (ரஹ்) கூறுகிறார்கள்: ''ஒருவன் ஆயத்துல் குர்ஸியை 60 முறை ஓதி மழைத் தண்ணீரில் ஊதிக் குடித்தால் அவனுக்குப் புத்தி சாதுரியமும் தெளிவும் ஏற்படும். ஒருவன் அதனைத் தினமும் 50 தடவை ஓதினால் அவன் எண்ணங்கள் அத்தனையும் நிறைவேறும். இது பரிசோதனை செய்யப் பட்ட ஒன்று.''

## பொருள்களுக்குச் சேதம் ஏற்படாமலிருக்க

'லதாயிபுல் பரீதா' எனும் நூலின் ஆசிரியர் கூறுகிறார்: ''ஒருவன் ஆயத்துல் குர்ஸியை 18 முறை ஓதி வந்தால் அவன் இதயத்தை இறைவன் 'ஈமானி'ன் ஒளியோடு உயிர் வாழ வைப்பான்; 'ஹிக்மத்' எனப்படும் நுண்ணறிவைக் கொடுத்து அவன் தகுதியையும் செல்வத்தையும் அதிகப்படுத்துவான்; அவனைப் பார்க்கிறவர் அனைவரும் அவனுக்குப் பயந்து நடுங்குமாறு செய்வான். பொருளில் ஆயத்துல் குர்ஸி எழுதப் பட்டால் எல்லாவிதமான சேதங்களிலிருந்தும் அதற்குப் பாது காப்பு வழங்கப்படும்.''

## நலமே வீடு திரும்ப

வீட்டிலிருந்து வெளியில் செல்லும்போது ஒருவன் ஆயத்துல் குர்ஸியை 17-தரம் ஓதிக் கொண்டால் அவன் உயிரோடு வீடு திரும்பும்வரை இறைவனின் பாதுகாப்பில் இருப்பான்.

## வானவர்களின் இறைஞ்சுதலைப் பெற

ஒருவன் வீட்டை விட்டுப் புறப்படும்முன் இதனை ஓதிக்கொண்டு சென்றால் அவனுக்காக ஓராயிரம் வானவர்கள் சூழ்ந்து நின்று அவனுடைய பாவங்களைப் பொறுத்தருளு மாறு இறைஞ்சுவார்கள்.

## வறுமை நீங்க

வீட்டிலிருந்து வெளியே புறப்படுமுன் இதனை ஒருவன் ஓதிக் கொண்டு சென்றால் அவனுடைய

இல்லத்தை இறைவன் வறுமை, ஏழ்மை ஆகியவற்றை விட்டும் காத்தருள்வான் என காஜா குத்புத்தீன் பக்தியார் காக்கி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## ஆபத்து ஏற்படாமலிருக்க

ஒருவன் வெளியே புறப்படும் பொழுது இதனை ஓதிக் கொண்டு செல்லின் விபத்திற்காளாகாது நலமே வீடு திரும்புவான்.

## ஓராயிரம் ஆண்டு வணக்கத்தின் பலனைப் பெற

இதனை எழுபதாயிரம் வானவர்களுடன் ஜிப்ரீல், அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்த பொழுது, இதன் மாண்பினைப் பற்றி எடுத்துரைக்குங்கால் இதனை ஒரு தடவை ஓதியவர் ஓராயிரம் ஆண்டு செய்த வணக்கத்தின் பலனைப் பெறுவார் என்று கூறினார்.

## பயங்கர கனவு காணாதிருக்க

இரவில் இதனை ஓதிக் கொண்டு படுத்துறங்கினால் பயங்கரக் கனவு தோற்றமளிக்கா.

## வேதனை, நோய் நீங்க

இதனை ஓதினால், வேதனை, நோய் ஆகியவை இறைவனருளால் நீங்கும்.

## நோயாளர்கள் நோய் நீங்கப் பெற

மருத்துவமனையிலுள்ள அறைகளில் இதை ஓதி ஊதின் அவ்வறைகளில் உள்ள அனைவரும் இறைவனருளால் நலம் பெறுவர்.

## கோபம் விரோத மனப்பான்மையுள்ள அதிகாரியிடம் செல்லும்போது

இதனை அதிகமாக ஓதிக் கொண்டு சென்றால் அவர் சாந்த சொரூபியாக ஆகி தம் தேவையை நலமே நிறைவேற்றித் தருவார்.

## பகைவர்கள் அஞ்ச, நண்பர்கள் விரும்ப

பர்ளான தொழுகைக்குப் பின்னால் ஒருவன் ஆயத்துல் குர்ஸியை 17 தரம் தினந்தோறும் ஓதினால், இம்மையிலும் மறுமையிலும் அவன் விரும்பப் பட்டவனாவான். அவன் சொல்லுக்கும் செயலுக்கும் மதிப்பு ஏற்படும். பகைவர்கள் அவனுக்கு பயப்படுவார்கள். நண்பர்கள் அவன் நட்பைப் பெரிதும் விரும்புவார்கள். அவன் இறைவனின் பாதுகாப்பில் இருப்பான்.

## தீமைகள் அனைத்திலிருந்தும் காக்கப் பெற

பர்ளான தொழுகைக்குப் பின்னாலும், காலையிலும் மாலையிலும் வெளியிலிருந்து வீட்டுக்குத் திரும்பி வரும் போதும், படுக்கைக்குச் செல்லும்போதும், கடைவீதிக்குச் செல்லும் போதும், பிரயாணம் செய்யும்போதும், ஆயத்துல் குர்ஸியை ஒருவன் ஓதினால் ஷைத்தான், மனிதன், அரசன், மிருகம் முதலிய வழிகளில் விளையக்கூடிய தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். திருட்டு, தண்ணீரில் மூழ்குவது, தீப்பற்றி எரிவது முதலான வழிகளில் தோன்றுகிற ஆபத்திலிருந்து அவன் குடும்பத்தாருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்கப்படும். அவனுக்கு ஏற்படுகிற எல்லா நோய்களும் குணமாகிவிடும்.

## எண்ணங்கள் நிறைவேற

ஹாஜி இப்ராஹீம் அபந்தி தம் மாணாக்கர் ஒருவருடன் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது மழையோடு காற்றும் கடுமையாக வீச ஆரம்பித்தது. எனவே அவர்களால் நடக்க முடியவில்லை; அத்துடன் தாம் செல்ல வேண்டிய பாதையையும் இழந்து விட்டார்கள்.

இப்ராஹீம் அபந்தி தம் மாணாக்கரைப் பார்த்து ஆயத்துல் குர்ஸியை ஓதுமாறு கூறினார். மேலும் ''அப்படி ஓதும்போது ஒவ்வொரு முறையும் 'வலா

யஊதுஹு ஹிப்லு ஹுமா வஹுவல் அலிய்யுல் அலீம்' என்ற இறுதிப் பகுதியை மட்டும் 70 முறை ஓத வேண்டும். இந்த முறைப்படி ஆயத்துல் குர்ஸியைத் திரும்பத் திரும்ப ஓதும்'' என்று கூறினார்.

மாணாக்கர் இவ்வாறு ஓதிக் கொண்டிருக்கும் போதே பொழுது புலர்ந்து விட்டது. மழை பெய்து கொண்டுதானிருந் தது. ஆனால் அந்த இருவர் மீதும் ஒரே ஒரு துளிகூடப் படவில்லை. அவர்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள். கொட் டும் மழையில் சிறிதும் நனையாமல் அவர்கள் சென்று கொண்டிருப்பதைக் கண்டு மக்கள் வியந்தனர்.

அந்த ஞானகுரு மக்களுக்கு விரிவாக எடுத்துக்கூறினார். எண்ணங்கள் நிறைவேற வேண்டுமானால் இப்படித் தினந் தோறும் ஓதிவர வேண்டும் என்றும் கூறினார்.

## இறைஞ்சுதல் நிறைவேற

வெள்ளிக்கிழமையன்று 'அஸர்' தொழுகைக்குப் பிறகு தனித்த இடத்தில் ஒருவன் ஆயத்துல் குர்ஸியை 17 தடவை ஓதினால், அவன் உள்ளத்தில் புதிய எண்ணங்கள் உதயமா கும். இறைவனிடம் அவன் கேட்கும் பிரார்த்தனைகள் நிறை வேற்றிக் கொடுக்கப்படும். 70 தடவை ஓத வேண்டுமென்றும் கூறப்படுகிறது. இதனை அவ்வேளையில் 313 தடவை ஓதின் எதிர்பாராத பரக்கத்தை எய்தப் பெறுவான்.

## நன்மை பெற

வெள்ளியன்று 'அஸர்' தொழுகையிலிருந்து 'மஃறிப்' தொழுகைவரை ஒருவன் ஆயத்துல் குர்ஸியை ஓதிக் கொண் டிருந்தால் அவனுக்கு இறைவன் சிறந்த நன்மைகளைக் கொடுத்து மர்மங்களை வெளிப்படுத்துவான்.

## தானியங்களுக்குப் பாதுகாப்புப் பெற

களிமண்ணில் செய்த ஓட்டின்மீது ஆயத்துல் குர்ஸியை எழுதி, தானியம் கொண்ட பாத்திரத்தில் அதை வைத்தால் புழு, பூச்சி முதலியவற்றிலிருந்து அந்தத் தானியத்துக்குப் பாதுகாப்புக் கிடைக்கும். அத்துடன் அதில் வளர்ச்சி ஏற்படும்.

## வருமானம் பெருக

வீட்டு வாசல், தோட்டத்து முகப்பு, கடைவாயில் ஆகிய வற்றில் ஆயத்துல் குர்ஸியை எழுதி வைத்தால் சிறந்த நன்மைகள் ஏற்படுவதோடு வருமானமும் பெருகும். அந்த இடத்துக்குத் திருடன் வரமாட்டான்.

## நோய் நீங்க

''என் குமாரனின் வயிற்றில் பித்தம் இருக்கிறது. அதற்கு ஏதேனும் மருத்துவம் கூறுங்கள்'' என்று ஒருவர் கேட்ட போது,

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இப்படிப் பதிலளித்தார் கள்: ''கஸ்தூரியையும் குங்குமப்பூவையும் கலந்து ஆயத்துல் குர்ஸியை எழுதிக் கரைத்துக் குடிக்கக் கொடுங்கள்! இறைவ னருளால் குணமாகிவிடும்!''

நெஞ்சுவலி, வயிற்றுவலி போன்றவற்றிற்கு ஆயத்துல் குர்ஸியைச் சுத்தமான பாத்திரத்தில் மும்முறை எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும். குடிக்கும்போது இன்ன வியா திக்காக என்று எண்ணிக் கொள்ள வேண்டும். இந்த முறையி னால் உடலிலுள்ள எல்லா நோய்களையும் நீக்கிக் கொள்ள லாம்.

எந்த நோயும் தன்னிடம் இருக்கக்கூடாது என்று ஒருவன் எண்ணினால், ஒரு தட்டையில் குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீரி னால் ஆயத்துல் குர்ஸியை எழுதி, 'சூரா ஹஷ்ரின்' இறுதி யான நான்கு இறைவசனங்களை அடுத்து எழுதி, அதனடியில் சூரா ரஅதின் 31-ஆவது வசனத்தை முழுமையாக எழுத வேண்டும். அப்புறம் ஆயத்துல் குர்ஸியை 7 தரம் ஓத வேண்டும். வாசனைப் புகை போட்டு, காலையும் மாலையும் கழுவிக் குடிக்க வேண்டும். இவ்வாறு மூன்று நாட்கள் சாப்பிட வேண்டும். எல்லா நோய்களும் குணமாகிவிடும்.

## உறங்குங்கால் ஸ்கலிதம் ஏற்படாதிருக்க

உறங்குமுன் இதனை ஓதி நெஞ்சில் ஊதிக் கொண்டு படுத்தால் ஷைத்தான் ஊசாட்டத்தால் இந்திரிய ஸ்கலிதம் ஏற்படாது.

## மயக்கம் தெளிய

மயக்கமுற்றுக் கிடப்பவரின் தலையில் 11 தரம் இந்த ஆயத்தை ஓதினால் மயக்கம் தெளிந்துவிடும்.

## பேய் அகல

பேய் பிடித்தவர்களுக்குப் பரிகாரம்: காதில் 7 முறை பாங்கு சொல்லி சூரா பாத்திஹாவையும் திருக்குர்ஆனின் இறுதி சூராக்கள் இரண்டையும் ஆயத்துல் குர்ஸியையும் சூரா வஸ்ஸாப்பாத்தையும் சூரா ஹஷ்ரின் கடைசி நான்கு வசனங்களையும் சூரா தாரிக்கையும் ஓத வேண்டும். ஷைத்தான் கரிந்து போய்விடும்.

## சுவனம் புக

பெருமானார் சொன்னதாக இப்னு அப்பாஸ் (ரலி) கூறுகிறார்கள்:

பர்ளான ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னாலும் ஒருவன் ஆயத்துல் குர்ஸியை ஓதி வந்தால், அவன் இறை நன்றியுள்ள இதயத்தையும் உயர்ந்த நம்பிக்கையையும் பெறுவான். அத்துடன் இறைவன் பக்கம் திரும்பியவர்களில் ஒருவனாகிவிடுவான். அவனுக்கும் சொர்க்க வாழ்வுக்குமிடையில் மரணம்தான் இருக்கும். அவன் மரணமடைந்தால் சொர்க்கத்தில் புகுவான். அவன் இறக்கும் தருவாயில் இறைவனே அவனுடைய உயிரை வெளிப்படுத்துவதற்கு முன் வருவான் என்றும் அதனுடைய சிறப்பு அர்ஷைவிட மேலானதென்றும் அண்ணல் நபி (ஸல்) கூறியதாக மௌலானா ரூமி குறிப்பிடுகின்றனர்.

## தீமை அழிக்கப்பெற

''ஒருவன் இதனை ஓதி வருவானாயின் இறைவன் ஒரு வானவரை அனுப்புவான். அவர் அக்கணத்திலிருந்து மறு நாள் வரை அவனின் நன்மைகளைக் குறித்துக் கொள்வதுடன் அவனின் தீமைகளையும் அழித்து விடுவார்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

## ஆண் குழந்தை பிறக்க

ஒரு கர்ப்பிணியைக் கிப்லாவை முன்னோக்கி வைத்து அவள் மீது ஆயத்துல் குர்ஸியையும், ''அல்லாஹும்ம கத் ஸம்மைத்துஹு முஹம்மதா' என்பதையும் ஓதி ஊதினால் இன்ஷா அல்லாஹ், அவளுக்கு ஆண் குழந்தை பிறக்கும்.

## ஆஸ்துமா நீங்க

ஆயத்துல் குர்ஸியை 'காலிதூன்' வரை எழுதித் தாயத்துச் செய்து அணிந்து கொளின் ஆஸ்துமா நோய் நீங்கும்.

## கடன் நீங்க

ஒருவன் அடியில் காணும் முறைப்படி பர்ளான தொழு கைக்கு பின்னால் ஓதி வந்தால் கடன்களிலிருந்து அவனுக்கு விடுதலை கிடைக்கும்.

اَللّٰهُمَّ اُقَدِّمُ اِلَيْكَ بَيْنَ ذٰلِكَ كُلِّهٖ ○

(அல்லாஹும்ம உகத்திமு இலைக்க பைனஃதாலிக்க குல்லிஹி) என்ற சொற்றொடரோடு ஆயத்துல் குர்ஸியை இணைத்து முழுமையாக ஓத வேண்டும். அத்துடன் சூரா அஃராபில் 54, 55, 56-ஆவது வசனங்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு இணைத்து ஓதினால் கடன்களிலிருந்து பாது காப்புக் கிடைக்கும்.

## கடன் நீங்க மற்றொரு முறை

இரவில் உளூவுடன் படுக்கையில் படுத்து 170 தடவை ஆயத்துல் குர்ஸியை ஓத வேண்டும். ஓதுவதற்கு முன்பும் பின்பும் 11 தடவை ஸலவாத்தை ஓதிக் கொள்ள வேண்டும். இவ்வாறு நாற்பது நாட்கள் தொடர்ந்து ஓதி வர வேண்டும்.

## தீமைகளை விட்டும் பாதுகாவல் பெற

அடுத்து வருகிற முறைப்படி ஒருவன் ஓதி வந்தால் அன்று முழுவதும் ஷைத்தான், மனிதன், சூனியம், மிருகம், திருடன், மன்னன் ஆகிய வழிகளில் தோன்றுகிற எல்லாவித மான தீங்குகளிலிருந்தும் பாதுகாக்கப்படுவான்.

இந்த முறைப்படி பகலில் ஓதும் பயன்கள் இவை. இப்படி ஒருவன் இரவில் ஓதினால், அந்த வாரம் முழுவதும் அவன் பாதுகாக்கப்படுவான்.

ஓத வேண்டிய முறை இதோ இருக்கிறது.

ஆயத்துல் குர்ஸி, 'சூரா அஃராபி'ல் *54, 55, 56* ஆவது வசனங்கள், 'சூரா ஸாப்பாத்'தில் முந்திய பதினொரு வசனங் கள், 'சூரா ரஹ்மானி'ல் *31, 32, 33, 34, 35* ஆகிய வசனங்கள் மீண்டும் ஆயத்துல் குர்ஸி இவற்றோடு அடுத்து இடம் பெறும் வசனங்களையும் இணைத்துக் கொள்ள வேண்டும்.

لَآ اِكْرَاهَ فِى الدِّيْنِ قَدْ تَّبَيَّنَ الرُّشْدُ مِنَ الْغَيِّ
فَمَنْ يَّكْفُرْ بِالطَّاغُوْتِ وَيُؤْمِنْۢ بِاللّٰهِ فَقَدِ
اسْتَمْسَكَ بِالْعُرْوَةِ الْوُثْقٰى لَا انْفِصَامَ لَهَا وَاللّٰهُ
سَمِيْعٌ عَلِيْمٌ ○ اَللّٰهُ وَلِيُّ الَّذِيْنَ اٰمَنُوْا يُخْرِجُهُمْ
مِّنَ الظُّلُمٰتِ اِلَى النُّوْرِ ۟ وَالَّذِيْنَ كَفَرُوْٓا اَوْلِيٰٓـُٔهُمُ
الطَّاغُوْتُ يُخْرِجُوْنَهُمْ مِّنَ النُّوْرِ اِلَى الظُّلُمٰتِ
اُولٰٓئِكَ اَصْحٰبُ النَّارِ هُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○ ع

''மார்க்கத்தில் நிர்ப்பந்தமே இல்லை'' ஏனென்றால் வழி கேட்டிலிருந்து (விலகி) நேர்வழியடைவது எவ்வாறென்று தெளிவாகிவிட்டது. எனவே எவன் ஷைத்தானை நிராகரித்து விட்டு அல்லாஹ்வை விசுவாசிக்கின்றானோ அவன் நிச்சய மாக அறுபடாத வலுவான கயிற்றைப் பிடித்துக் கொண்டான். அல்லாஹ் செவியுறுவோனும் அறிவோனுமாக இருக்கின் றான்.

''(அன்றி) அல்லாஹ்வே, விசுவாசிகளின் பாதுகாவலன். அவன், அவர்களை, இருள்களிலிருந்து வெளியேற்றி ஒளி யின் பால் செலுத்துகிறான். ஆனால் நிராகரிப்பவர்களுக்கோ அவர்களின் பாதுகாவலர்கள் ஷைத்தான்கள்தான். அவைகள் அவர்களை ஒளியிலிருந்து நீக்கி இருள்களின்பால் செலுத்து கின்றன. அன்றி, அவர்கள் நரகவாசிகள். மேலும் அவர்கள் அதில் எந்நாளும் தங்கிவிடுகிறார்கள். (2:256,257)

## வருமானம் பெருக

ஒருவன் ஆயத்துல் குர்ஸியையும் (திருக்குர்ஆன் 2:255) அதையடுத்துள்ள இரண்டு வசனங்களையும் (மேற்குறிப்பிட் டவை) ஒவ்வொரு நாளும் தொழுகைக்குப் பிறகு ஓதிவந் தால், ஷைத்தானின் ஊசாட்டங்களிலிருந்தும் தரக்குறைவான செயல்களிலிருந்தும் அவனுக்குப் பாதுகாப்பு வழங்கப்படும். அவனுடைய வறுமையை நீக்குவதோடு அவனுக்கே தெரி யாத விதத்தில் அவன் வருமானம் பெருகிவிடும்.

## கோபம் தணிய

கோபம் ஏற்பட்டால் ஆயத்துல் குர்ஸியை ஓதி இடப்பு றம் துப்ப வேண்டும் கோபம் தணிந்துவிடுவதோடு ஷைத்தா னும் விலகிப் போகும்.

## இம்மை மறுமைப் பேறு பெற:

اَللّٰهُمَّ اجْعَلْ لِّيْ بُرْهَانًا يُّوْرِثُنِيْ اَمَانًا وَّاَنْسِنِيْ
بِكَ عَنْ كُلِّ مَطْلُوْبٍ وَّاَصْحِبْنِيْ بِعَوْنِ عِنَايَتِكَ
فِيْ نَيْلِ كُلِّ مَرْغُوْبٍ يَا قَادِرُ يَا جَلِيْلُ يَا قَاهِرُ
يَا عَظِيْمُ يَا نَاصِرُ كَتَبَ اللّٰهُ لَاَغْلِبَنَّ اَنَا
وَرُسُلِيْ اِنَّ اللّٰهَ قَوِيٌّ عَزِيْزٌ ○

*(இறைவனே! எனக்குப் பாதுகாப்பைக் கொடுக்கக் கூடிய ஆதாரத்தை ஏற்படுத்துவாயாக! குறிக்கோள்கள் அனைத்தையும் விட்டு உன்னிடம் எனக்கு அன்பை ஏற்படுத்துவாயாக! விருப்பமான அனைத்தையும் அடைவதற்கு உன் சலுகையை எனக்குக் கொடுப்பாயாக! சக்திமிக்கவனே, வலிமை மிக்கவனே, மகத்தானவனே! உதவியாளனே, நானும் எனது தூதர்களும் மிகைக்க வேண்டும் என்று இறைவன் எழுதிவிட்டான். நிச்சயமாக இறைவன் வலிமையும் கண்ணியமுமுள்ளவன்.)*

*செய்கு அஹ்மது பூனி (ரஹ்) சொல்கிறார்கள்:*

ஒருவன் இம்மையிலும் மறுமையிலும் நன்மை அடைய விரும்பினால், நள்ளிரவில் எழுந்து 'உளூ' செய்து நான்கு 'ரகஅத்' தொழ வேண்டும்; ஒவ்வொரு ரகஅத்திலும் சூரா பாத்திஹாவுக்குப் பிறகு ஆயத்துல் குர்ஸியை 10 தரம் ஓத வேண்டும். தொழுகை முடிந்த பின்னர் விண்ணை நோக்கித் தலையையும் கைகளையும் உயர்த்தி முன் கண்ட 'துஆ'வை ஓத வேண்டும்.

## எண்ணங்கள் நிறைவேற

பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்:

''ஆயத்துல் குர்ஸியையோ வேறு இறை வசனத்தையோ சூரா பாத்திஹா, சூரா இக்லாஸையோ வேறு சூராக்களில் ஒன்றையோ ஒருவன் 313 தரம் ஓதினால் அவன் பெரும்பேறு பெறுவான். எண்ணங்களை நிறைவேற்றிக் கொள்வதற்கு இது சிறந்த வழியாகும்!''

ஒருவன் ஆயத்துல் குர்ஸியை 50 அல்லது 170 அல்லது 313 தரம் ஓதி, மேற்கண்ட துஆவையும் ஓதினால் அவன் நாட்டம் நிறைவேற்றப்படும்.

## துன்பம், நோய், ஷைத்தான் ஆகியவற்றிலிருந்து காவல் பெற

'ஆயத்துல் ஹிஃப்ல்' (பாதுகாக்கும் வசனங்கள்) என்று கூறப்படும் ஐந்து வசனங்களை எழுதிக் கரைத்து குடிக்கவோ அணிந்து கொள்ளவோ செய்ய வேண்டும். அவை 2:255, 12:64, 13:11, 15:17, 37:7 ஆகும். இவை அனைத்திலும் ஹிஃப்ல் என்ற சொல் இடம் பெறுவதைக் காண்க.

## காணாமற்போன பொருள் கிடைக்க

இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்.

ஏதேனும் பொருள் ஒன்று காணாமற் போய்விடின் அச்செய்தியைக் கேள்விப்பட்டவுடன் இதனை ஓதிக் கொண்டே தேடினால் அது கிடைத்துவிடும்.

## கீழே விழுந்த சாமான் உடையாதிருக்க

ஏதேனும் ஒரு பொருள் கீழே விழுந்தால் உடனே இதனை ஓதின் அது உடையாமல் காக்கப் பெறும்.

## தீமை நன்மையாக மாற

உம்மு ஸலமா (ரலி) அவர்களின் முந்திய கணவர் அபூஸலமா இறந்தபொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவருக்கு ஆறுதல் கூறி, 'இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன். அல்லாஹும்ம அஜிர்னீ ஃபீ முஸீபத்தி வ அஹ்லிஃப் அலைய கைரன் மின்ஹா' என்று ஓதிக் கொண்டிருக்குமாறு கூறினர். அதன் காரணமாக

அபூஸலமாவை விட மேலான கணவரான அண்ணல் நபி (ஸல்) அவர்களை அல்லாஹ் அவர்களுக்குக் கொடுத்தான்.

## சூரா பகராவின் கடைசி வசனங்கள் பற்றி

இவை திருக்குர்ஆனில் சூரா பகராவின் இறுதியில் இடம் பெற்றிருக்கின்றன. *(2:284, 285, 286)*

لِلّٰهِ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ ؕ وَاِنْ تُبْدُوْا مَا
فِىْٓ اَنْفُسِكُمْ اَوْ تُخْفُوْهُ يُحَاسِبْكُمْ بِهِ اللّٰهُ ؕ
فَيَغْفِرُ لِمَنْ يَّشَآءُ وَيُعَذِّبُ مَنْ يَّشَآءُ ؕ وَاللّٰهُ عَلٰى
كُلِّ شَىْءٍ قَدِيْرٌ ○ اٰمَنَ الرَّسُوْلُ بِمَآ اُنْزِلَ اِلَيْهِ
مِنْ رَّبِّهٖ وَالْمُؤْمِنُوْنَ ؕ كُلٌّ اٰمَنَ بِاللّٰهِ وَمَلٰٓئِكَتِهٖ
وَكُتُبِهٖ وَرُسُلِهٖ لَا نُفَرِّقُ بَيْنَ اَحَدٍ مِّنْ رُّسُلِهٖ
وَقَالُوْا سَمِعْنَا وَاَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَاِلَيْكَ
الْمَصِيْرُ ○ لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا اِلَّا وُسْعَهَا لَهَا مَا
كَسَبَتْ وَعَلَيْهَا مَا اكْتَسَبَتْ رَبَّنَا لَا
تُؤَاخِذْنَآ اِنْ نَّسِيْنَآ اَوْ اَخْطَاْنَا رَبَّنَا وَلَا تَحْمِلْ
عَلَيْنَآ اِصْرًا كَمَا حَمَلْتَهٗ عَلَى الَّذِيْنَ مِنْ

قَبْلِنَا رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهٖ وَاعْفُ
عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا أَنْتَ مَوْلٰنَا فَانْصُرْنَا
عَلَى الْقَوْمِ الْكٰفِرِيْنَ ○

வானங்கள் பூமியிலும் உள்ளவை (அனைத்தும்) அல்லாஹ்வுக்குரியனவே! உங்களின் உள்ளத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும் அல்லது மறைத்துக் கொண்டாலும் அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களைக் கேள்வி கேட்பான். அவன் விரும்பியவர்களை மன்னிப்பான். விரும்பியவர்களை வேதனை செய்வான். அன்றி, அல்லாஹ் யாவற்றின் மீதும் ஆற்றலுடையோன்!

(மனிதர்களே) நம்முடைய தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்ற (வேதத்)தை மெய்யாகவே விசுவாசிக்கின்றனர். (இவ்வாறே மற்ற) விசுவாசிகளும் விசுவாசிக்கின்றனர். இவர்கள், அனைவரும் அல்லாஹ்வையும் அவனுடைய மலக்குகளையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் விசுவாசிக்கின்றனர். தவிர ''அவனுடைய தூதர்களில் எவரையும் (தூதர் அல்லவென்று) நாங்கள் பிரித்து நிராகரித்து விடமாட்டோம்'' என்றும் (''இறைவனே! உன் வேத வசனங்களை) நாங்கள் செவியுற்றோம், (உன் கட்டளைக்கு) நாங்கள் வழிபட்டோம்'' எங்கள் இறைவனே நாங்கள் உனது மன்னிப்பைக் கோருகிறோம். உன்னிடமேதான் (நாங்கள்) சேர வேண்டியிருக்கின்றது'' என்றும் கூறுகிறார்கள். அல்லாஹ் யாதொரு ஆத்மாவையும் அதன் சக்திக்குமேல் நிர்ப்பந்திப்பதில்லை. அவை தேடிக்கொண்ட நன்மை அவைகளுக்கே; அவை தேடிக் கொண்ட தீமை அவைகளுக்கே (கேடு விளைவிக்கும்.)

எங்கள் இறைவனே! நாங்கள் (எங்கள் கடமைகளைச் செய்ய) மறந்து விட்டாலும் அல்லது அதிகத் தவறிழைத்து விட்டாலும் அதைப்பற்றி நீ எங்களை(க்குற்றம்) பிடிக்காதே, எங்கள் இறைவனே! எங்கள் மீது (கடினமாக கட்டளைகளை

விதித்து) பளுவான சுமையைச் சுமத்தி விடாதே, எங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது (கடினமான கட்டளைகளை நீ) சுமத்தியவாறு சுமத்தாதே. எங்கள் இறைவனே! நாங்கள் தாங்க முடியாத துன்பங்களை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்கள் குற்றங்களை மன்னிப்பாயாக! எங்களைப் பொறுப்பா யாக! எங்கள் மீது கருணை புரிவாயாக! நீ தான் எங்கள் இரட்சகன். ஆகவே (உன்னை) நிராகரிக்கும் மனிதர்கள்மீது (வெற்றிபெற) நீ எங்களுக்கு உதவி புரிவாயாக!''

(2:284, 285, 286)

இவற்றைப் பற்றிப் பெருமானார் இவ்வாறு குறிப்பிட்டி ருக்கிறார்கள்.

''இறைவன் சூரா பகராவை இரண்டு வசனங்களால் முடித்திருக்கிறான். தன் கஜானாவிலிருந்து அவற்றை எனக் குக் கொடுத்திருக்கிறான். அவற்றை நீங்கள் ஓதுவதோடு உங்கள் மனைவி, மக்களுக்கும் கற்றுக் கொடுங்கள். பிரார்த்த னையும், அருளும் அவற்றில் அமைந்திருக்கின்றன.''

''திருக்குர்ஆனின் வசனங்களில் மகத்துவம் பொருந்தி யது எது?'' என்று ரபி பின் அப்துல்லாஹ் கேட்டபோது பெருமானார் பதிலளித்தார்கள்: ''ஆயத்துல் குர்ஸி!''

''தங்களுக்கும் தங்களை பின்பற்றுகிறவர்களுக்கும் தாங் கள் சிபாரிசு செய்யும் வசனம் எது?'' என்று வினவப்பட்ட போது, ''சூரா பகராவின் இறுதி வசனங்கள் இறையருட் புதையலாகும். இம்மை மறுமையின் நன்மைகளை எல்லாம் அவை தம்முள் அடக்கிக் கொண்டிருக்கின்றன!'' என்று பெருமானார் கூறினார்கள்.

## ஷைத்தானிலிருந்து காவல் பெற

மேற்குறிப்பிட்ட வசனங்களை தொடர்ந்து மூன்று நாட் கள் ஒரு வீட்டில் ஓதினால், அந்த வீட்டில் ஷைத்தான் நுழையாது.

## துன்பம் அணுகாதிருக்க

பெருமானார் கூறியதாக நபித் தோழர் கத்தாதா (ரலி) குறிப்பிடுகிறார்:

''துன்பம் குறுக்கிட்ட வேளையில் ஒருவன் ஆயத்துல் குர்ஸியையும் சூரா பகராவில் இறுதியான இரண்டு வசனங்களையும் ஓதினால், அவனை இறைவன் காப்பாற்றுவான்.''

## இருதய படபடப்பு அகல

ஆயத்துல் குர்ஸியையும், சூரா பகராவின் இறுதி இரண்டு ஆயத்துக்களையும் எழுதி தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

## பகைமை அகல

ஹகீம் சொல்கிறார்: ''சூரா பகராவின் கடைசி வசனங்களை ஒருவன் இரவிலும், பகலிலும் ஓதினால், அவனுக்கு இறையருளால் அதிகமான நினைவாற்றலும் விரிவான இதயமும் கிடைக்கும். அவன் கடன்கள் தீர்ந்துபோகும். கவலை நீங்கும். கொடுமைக்காரர்களின் தீங்குகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைப்பதோடு பகைமை அகலும். அவனுக்கு ஆழ்ந்த உறுதி ஏற்படும். அவன் நாட்டங்கள் நிறைவேறும்!''

## ஆஸ்துமா அகல

'ஆமனர் ரசூலு... காஃபிரீன்' (2: 285, 286) என்ற ஆயத்துக்களை எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொள்ள வேண்டும்.

## இரவில் உறங்கும் முன் ஓத

ஆயத்துல் குர்ஸியும் சூரா பகராவின் கடைசி ஆயத்துகளும் அர்ஷின் கீழுள்ள புதையலென்று அண்ணல் நபி (ஸல்) கூறியுள்ளனர். அவற்றை ஓதாது இரவில் உறங்கச் செல்பவர் அறிவுடையவராகார் என்று அலீ (ரலி) கூறினர்.

# 5. சூரா ஆல இம்ரான்

பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''ஒளிமிக்க சூராக்களான பகராவையும், ஆல இம்ரானையும் ஓதி வாருங்கள். அவற்றை ஓதினவர்களுக்கு அவை மறுமையில் நிழல் கொடுத்துச் சிபாரிசு செய்யும்.''

## கடன் நீங்க

தமக்கு இருக்கும் கடன் தொல்லைகளைத் தீர்த்துக் கொள்ள நினைக்கிறவர்கள் சூரா ஆல இம்ரானைத் தினம் 13-தரம் ஓதி வர வேண்டும்.

## கவலை நீங்க

இதனை வழக்கமாக ஓதி வருபவர் கவலை நீங்கி மன அமைதியுடன் இருப்பர்.

## எதிர்பாராவண்ணம் இரணம் கிடைக்க

ஒருவன் இதனை ஏழு தடவை ஓதின் அறியாத வண்ணம் அவனுக்கு இறைவன் இரணம் அளிப்பான். செல்வம் கிடைக்கும்.

## குழந்தைகளைப் பாதுகாக்க

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝ الٓمّٓ ۝ اَللّٰهُ
لَآ اِلٰهَ اِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّوْمُ ۝ نَزَّلَ عَلَيْكَ الْكِتٰبَ
بِالْحَقِّ مُصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيْهِ وَاَنْزَلَ التَّوْرٰىةَ
وَالْاِنْجِيْلَ مِنْ قَبْلُ هُدًى لِّلنَّاسِ وَاَنْزَلَ الْفُرْقَانَ

பொருள்: அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஓதுகிறேன். அலிஃப், லாம், மீம்.

அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை. அவன் நித்திய ஜீவன்! என்றும் நிலையானவன்.

(நபியே! முற்றிலும்) உண்மையைக் கொண்டுள்ள இவ்வேதத்தை உம்மீது அவன்தான் இறக்கி வைத்தான். (இது) அதற்கு முன்னுள்ள வேதங்கள் யாவற்றையும் உறுதிப்படுத்துகிறது. இதற்கு முன்னரும் மனிதர்களுக்கு நேரான வழிகாட்டியாக இருந்த தௌ

ராத்தையும் இஞ்சீலையும் அவனே அருட் செய்தான். அன்றி நன்மை தீமைகளை பிரித்தறிவிக்கக் கூடிய மற்றவைகளை யும் அருள்புரிந்திருக்கிறான்.

பேய், பிசாசு, ஜின், ஷைத்தான் முதலியவற்றினால் விளையும் தீமைகளுக்கும் மேற்குறிப்பிட்ட திருவசனங்களை வைத்து பரிகாரம் தேடலாம். குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீர் ஆகியவற்றைக் கலந்து வசனங்களை ஒரு காகிதத்தில் எழுத வேண்டும். சூரியோதயத்துக்கு முன்னால் வெட்டப்பட்ட சிறியதொரு மூங்கிற் குழாயில் அதனைத் திணித்து மெழுகி னால் வாயை மூடிவிட வேண்டும். சிறு குழந்தைகளுக்கு இந்தக் குழாயைக் கட்டினால் குணம் ஏற்படும். அந்தக் குழந்தைகளுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.

குழந்தைகள் சிணுங்கிச் சிணுங்கி அழவும் பால்குடிக் காது முரண்டு செய்யவும், செய்யின்,

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ۝
شَهِدَ اللّٰهُ اَنَّهٗ لَآ اِلٰهَ اِلَّا هُوَۙ وَالْمَلٰٓئِكَةُ
وَاُولُوا الْعِلْمِ قَآئِمًاۢ بِالْقِسْطِؕ لَآ اِلٰهَ اِلَّا هُوَ
الْعَزِيْزُ الْحَكِيْمُ ۝
اِنَّ الدِّيْنَ عِنْدَ اللّٰهِ الْاِسْلَامُ قف

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், ஷஹிதல்லாஹு அன்னஹு லாஇலாஹ இல்லாஹுவ வல் மலா யிக்கத்து வஉலுல்இல்மி காயிமன்பில்கிஸ்தி லாஇலாஹ இல்லாஹு வல் அஸீஸுல் ஹகீம், இன்னத்தீன இன்தல்லாஹில் இஸ் லாம்.

நீதிமானாகிய அல்லாஹ் சாட்சி கூறுகின்றான். நிச்சய மாக அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை. அவ்

*வாறே வானவர்களும் அறிஞர்களும் அவனைத் தவிர நாயன் இல்லை (என்றும், அவன் அனைவரையும்) மிகைத்தோன், ஞானமுடையோன் (என்றும் சாட்சி கூறுகின்றனர்.) நிச்சயமாக அல்லாஹ்விடம் அங்கீகரிக்கப்பட்ட மார்க்கம் இஸ்லாம்தான். (3:18, 19)*

என்ற ஆயத்தை எழுதித் தஃவீஸ் செய்து குழந்தைகளின் கழுத்தில் தொங்கவிடின் நலன் ஏற்படும்.

## ஈமானோடு இறப்பெய்த, நரக நெருப்பிலிருந்து காக்கப் பெற

رَبَّنَا لَا تُزِغْ قُلُوبَنَا بَعْدَ إِذْ هَدَيْتَنَا وَهَبْ
لَنَا مِنْ لَّدُنْكَ رَحْمَةً إِنَّكَ أَنْتَ الْوَهَّابُ ۝

*(எங்கள் இறைவனே! எங்களுக்கு நீ வழி காட்டிய பிறகு எங்கள் உள்ளங்களில் கறைபடியும்படி செய்யாதே! உன்னிடமிருந்து எங்களுக்கு கருணையைக் கொடுப்பாயாக! நிச்சயமாக நீதான் பெருங்கொடையாளன்)*

இந்த வசனத்தை ஒருவன் எல்லாத் தொழுகைகளுக்குப் பிறகும் ஓதிக் கொண்டிருந்தால், அவன் ஈமானோடு மரணமடைவான்.

## வயிற்றுவலி, இருதய படபடப்பு நீங்க

இந்த ஆயத்தை 21 தடவை தண்ணீரில் ஓதி ஊதி வைகறைத் தொழுகைக்குப்பின் அருந்த வேண்டும்.

## வருமானம் பெருக

கீழே குறிப்பிட்ட வசனங்களை ஒருவன் பர்ளான, நபிலான தொழுகைக்குப் பின்னாலும் தூங்கச் செல்லும் போதும் அதிகமாக ஓதிவந்தால், அவனுடைய செல்வ நிலை

விரிவடையும். அவன் செய்யும் காரியங்களில் வளர்ச்சி ஏற்படும். அவனுடைய வறுமை அடியோடு நீங்கிவிடும்.

قُلِ اللّٰهُمَّ مٰلِكَ الْمُلْكِ تُؤْتِی الْمُلْكَ مَنْ تَشَآءُ وَتَنْزِعُ الْمُلْكَ مِمَّنْ تَشَآءُ وَتُعِزُّ مَنْ تَشَآءُ وَتُذِلُّ مَنْ تَشَآءُ بِيَدِكَ الْخَيْرُ اِنَّكَ عَلٰى كُلِّ شَیْءٍ قَدِيْرٌ ○ تُوْلِجُ الَّيْلَ فِی النَّهَارِ وَتُوْلِجُ النَّهَارَ فِی الَّيْلِ وَتُخْرِجُ الْحَیَّ مِنَ الْمَيِّتِ وَتُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَیِّ وَتَرْزُقُ مَنْ تَشَآءُ بِغَيْرِ حِسَابٍ ○

(நபியே)! நீர் கூறுவீராக ''எங்கள் அல்லாஹ்வே! எல்லா நாடுகளுக்கும் அதிபனே!! நீ விரும்பியவர்களுக்கு ஆட்சியை நல்குகிறாய். நீ விரும்பியவர்களிடமிருந்து ஆட்சியை நீக்கி விடுகிறாய். நீ விரும்பியவர்களை கண்ணியப்படுத்துகிறாய். நீ விரும்பியவர்களை இழிவுபடுத்துகிறாய். நன்மைகள் அனைத்தும் உன் கையில் இருக்கின்றன. நிச்சயமாக நீ அனைத்தின்மீதும் பேராற்றலுள்ளவன்.

நீதான் இரவைப் பகலில் நுழைய வைக்கிறாய். நீதான் பகலை இரவில் நுழைய வைக்கிறாய். இறந்ததிலிருந்து ஜீவனுள்ளதை வெளியாக்குபவனும் நீயே, ஜீவனுள்ளதிலிருந்து இறந்ததை வெளியாக்குபவனும் நீயே, நீ விரும்பியவர்களுக்கு கணக்கின்றியே அளிக்கிறாய்.'' *(3:26, 27)*

## கடன் நீங்க

கடன் தொல்லை நீங்க வேண்டுமானால், மேலே குறிப் பிட்ட வசனங்களைக் காலையிலும் மாலையிலும் ஏழு தரம் ஓதி வரவேண்டும்.

## குழந்தை பெற

குழந்தைப் பேறு இல்லாதவர்கள் அடுத்து வரும் திருவச னத்தை அதிகமாக ஓத வேண்டும்.

رَبِّ هَبْ لِيْ مِنْ لَّدُنْكَ ذُرِّيَّةً طَيِّبَةً ۚ
اِنَّكَ سَمِيْعُ الدُّعَآءِ ○

*(எனது நாயனே! உன்னிடமிருந்து எனக்கு நல்ல சந்ததி யைக் கொடுப்பாயாக! நீ பிரார்த்தனையைக் கேட்பவன்.)*

## பிரசவ வேதனை நீங்க, தாய்ப்பால் சுரக்க

பிரசவத்தின்போது சிரமம் ஏற்பட்டால் சூரா ஆல இம்ரானிலுள்ள கீழ்க்கண்ட 34, 35, 36 ஆகிய வசனங்களைக் குங்குமப்பூ, பன்னீரினால் மான் தோலில் எழுதி இடுப்பின் வலப்பக்கத்தில் கட்ட வேண்டும். இந்த வசனங்களைக் குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீரில் எழுதிச் செம்பு அல்லது இரும்புக் குழாயில் அடைத்து குழந்தையின் கழுத்தில் அணி வித்தால் அழுகை, பயம், கெட்ட கனவு முதலிய அனைத்தும் நீங்கிப் போகும். தாய் கொடுக்கிற சிறிதளவு பாலினாலேயே அது வளரும். தாய்க்குப் பால் குறைந்தால் சுரக்க ஆரம் பிக்கும்.

ذُرِّيَّةً ۢ بَعْضُهَا مِنْ ۢ بَعْضٍ وَاللّٰهُ سَمِيْعٌ
عَلِيْمٌ ۝ اِذْ قَالَتِ امْرَاَتُ عِمْرٰنَ رَبِّ اِنِّيْ
نَذَرْتُ لَكَ مَا فِيْ بَطْنِيْ مُحَرَّرًا فَتَقَبَّلْ مِنِّيْ
اِنَّكَ اَنْتَ السَّمِيْعُ الْعَلِيْمُ ۝ فَلَمَّا وَضَعَتْهَا
قَالَتْ رَبِّ اِنِّيْ وَضَعْتُهَآ اُنْثٰى ؕ وَاللّٰهُ اَعْلَمُ
بِمَا وَضَعَتْ وَلَيْسَ الذَّكَرُ كَالْاُنْثٰى ۚ وَاِنِّيْ
سَمَّيْتُهَا مَرْيَمَ وَاِنِّيْٓ اُعِيْذُهَا بِكَ وَ
ذُرِّيَّتَهَا مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ ۝

பொருள்: அவர்களில் ஒருவர் மற்றவருடைய சந்ததி தான். அல்லாஹ் (யாவற்றையும்) செவியுறுவோனும், அறிவோனுமாக இருக்கிறான். இம்ரானுடைய மனைவி (கர்ப்பமான பொழுது ஆண் குழந்தை பெற விரும்பி இறைவனை நோக்கி) ''என் இறைவனே! நிச்சயமாக நான் என் கர்ப்பத்திலுள்ளதை உனக்கு முற்றிலும் அர்ப்பணஞ் செய்துவிட நேர்ச்சை செய்து கொண்டேன். ஆதலால் (அதனை) என்னிடமிருந்து நீ அங்கீகரித்துக் கொள்வாயாக! நிச்சயமாக நீ பிரார்த்தனைகளைச் செவியுறுவோனும், (மனத்திலுள்ளவற்றை) நன்கறிவோனுமாயிருக்கிறாய்'' என்று (பிரார்த்தித்துக்) கூறியபின், அவள் (தன் விருப்பத்திற்கு மாறாக) ஒரு 'பெண்ணை பெற்றபோது (அதனைக் கேவலமாக மதித்து) என் இறைவனே! நான் பெண்ணையே பெற்றேன்' என்று கூறினாள். ஆயினும் (அவள் விரும்பிய) ஆண் இந்தப்

பெண்ணைப் போன்றல்ல என்பதை அல்லாஹ்தான் நன்கறி வான். *(8:34, 35, 36)*

## வெண் குஷ்டம் நீங்க

வெண்குஷ்ட நோயாளி ஒருவர் கனவில் முஅம்மர் (ரலி) அவர்களைச் சந்தித்துத் தம் அவல நிலையைக் கூற அவர்கள் 3:49 ஆவது திருவசனத்தை ஓதி அவர் வாயில் உமிழ நலன் ஏற்பட்டது என்று கூறப்படுகிறது.

قُلْ إِنَّ الْفَضْلَ بِيَدِ اللَّهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ ۗ
وَاللَّهُ وَاسِعٌ عَلِيمٌ ۝ يَخْتَصُّ بِرَحْمَتِهِ
مَنْ يَشَاءُ ۗ وَاللَّهُ ذُو الْفَضْلِ الْعَظِيمِ ۝

பொருள்: (நபியே) நீர் கூறும், பெரும் பாக்கியம் நிச்சயமாக அல்லாஹ்வின் கையில்தான் இருக்கின்றது. அதனை அவன் தான் விரும்பியவர்களுக்கே கொடுக்கின் றான். அல்லாஹ் மிக விசாலமானவனும் நன்கறிந்தவனுமாக இருக்கின்றான்.

அல்லாஹ்,. தான் விரும்பியவர்களைத் தன் அருளுக்குச் சொந்தமாக்கிக் கொள்கிறான். அவன் மகத்தான கொடையா ளியாகவும் இருக்கின்றான்... *(3:73, 74)*

மேலே குறிப்பிட்ட வசனத்தை வியாழக்கிழமையன்று பெரியார் ஒருவரின் சட்டைத் துணியில் எழுதிக் கடையில் மாட்டி வைத்தால் வியாபாரம் பெருகும். அதை வீட்டில் மாட்டினால் அதிக நன்மையுண்டாகும். வருமானம் அதிகமா கும். வேலையில்லாமல் கஷ்டப்படும் ஒருவன் இந்த வச னத்தை எழுதி வைத்துக் கொண்டால், விரைவிலேயே வேலை கிடைக்கும்.

## நெஞ்சுவலி நீங்க

நெஞ்சு வலியுள்ளவர்கள் அடுத்து வரும் வசனத்தைச் சுத்தமான மண் பாத்திரத்தில் எழுதி மழைத் தண்ணீரினால் கரைத்துக் குடிக்க வேண்டும்.

أَفَغَيْرَ دِيْنِ اللّٰهِ يَبْغُوْنَ وَلَهٗٓ اَسْلَمَ مَنْ فِى السَّمٰوٰتِ
وَالْاَرْضِ طَوْعًا وَّكَرْهًا وَّاِلَيْهِ يُرْجَعُوْنَ ۝
قُلْ اٰمَنَّا بِاللّٰهِ وَمَآ اُنْزِلَ عَلَيْنَا وَمَآ اُنْزِلَ
عَلٰٓى اِبْرٰهِيْمَ وَاِسْمٰعِيْلَ وَاِسْحٰقَ وَيَعْقُوْبَ
وَالْاَسْبَاطِ وَمَآ اُوْتِيَ مُوْسٰى وَعِيْسٰى وَالنَّبِيُّوْنَ
مِنْ رَّبِّهِمْ لَا نُفَرِّقُ بَيْنَ اَحَدٍ مِّنْهُمْ وَنَحْنُ لَهٗ
مُسْلِمُوْنَ ۝ وَمَنْ يَّبْتَغِ غَيْرَ الْاِسْلَامِ دِيْنًا
فَلَنْ يُّقْبَلَ مِنْهُ وَهُوَ فِى الْاٰخِرَةِ مِنَ الْخٰسِرِيْنَ ۝

பொருள்: இதற்குப் பின்னரும் எவரேனும் புறக்கணித்தால், நிச்சயமாக அவர்கள் பாவிகள்தாம்.

அல்லாஹ்வுடைய மார்க்கத்தையன்றி (வேறு மார்க்கத்தை)யா இவர்கள் விரும்புகிறார்கள்? வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாவுமே (அவை) விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அவனுக்குக் கீழ்படிந்தே நடக்கின்றன. அன்றி அவை யாவும் அவனளவிலேயே திரும்பக் கொண்டு வரப்படும்.

(நபியே!) நீர் கூறும்:- ''அல்லாஹ்வையும், நம் மீது அருளப்பட்டதையும், இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யாகூப் ஆகியவர்கள்மீதும், அவர்கள் சந்ததிகள் மீதும் அருளப்பட்டவைகளையும்; மூஸா, ஈஸா முதலிய

மற்ற நபிமார்களுக்கு அவர்கள் இறைவனால் அளிக்கப்பட்ட வைகளையும் நாம் விசுவாசிக்கிறோம். இவர்களில் ஒருவரை யும் ('நபியல்ல' வென்று) நாம் பிரித்துவிட மாட்டோம். அல்லாஹ் ஒருவனுக்கே நாங்கள் (முற்றிலும்) கீழ்ப்படிந்து நடப்போம்'' (என்றும் கூறுவீராக!) (3:83, 84)

## மிருகங்களை அடக்க

இதில் 'அஃபஃகய்ர தீனில்லாஹி' என்பதிலிருந்து 'வஇலைஹி யுர்ஜஊன்' வரை ஓதி மிருகங்களின் காதுகளில் ஊதின் அவை அடங்கிவிடும். இது அனுபவ பூர்வமானதா கும்.

## வயிற்றுவலி நீங்க

'அஃபஃகய்ர — யுர்ஜஊன் வரை எழுதிக் கழுவிக் குடிக்கவோ தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள் ளவோ வேண்டும்.

## அடங்காத குழந்தைகளை, ஊழியர்களை அடக்க

இந்த 3:83 ஆவது ஆயத்தை எழுதித் தஃவீஸ் செய்து அணிவிக்கவும். காதில் ஓதி ஊதவும் வேண்டும்.

## பகைவனின் தீங்கு அணுகாதிருக்க

பொருள்: உங்கள் இறைவனின் மன்னிப்புக்கும், சுவன பதிக்கும் விரைந்து கொள்ளுங்கள். அதன் விஸ்தீரணம், வானங்கள், பூமியின் விஸ்தீரணத்தைப் போன்றது. (அது) பயபக்தியுடையவர்களுக்காக(வே) சித்தப்படுத்தப்பட்டுள் ளது. அவர்கள் (எத்தகையோரென்றால்) செல்வ நிலைமையி லும், தரித்திர நிலைமையிலும் தானம் செய்து கொண்டே இருப்பார்கள்; கோபத்தை விழுங்கி விடுவார்கள். (அல்லாஹ் இத்தகைய) நல்லோரை நேசிக்கிறான். அன்றி அவர்கள் யாதொரு மானக்கேடான காரியத்தைச் செய்து விட்டாலும் அல்லது தங்களுக்குத் தாங்களே தீங்கிழைத்துக் கொண்டா லும், உடனே அல்லாஹ்வை நினைத்து, (அவனிடமே) தங்களுடைய பாவமன்னிப்பைத் தேடுவார்கள். (அல்லாஹ்

வும் அவர்களை மன்னித்துவிடுவான்.) அல்லாஹ்வை யன்றி, (இத்தகையோரின்) குற்றங்களை மன்னிப்பவன் யார்? அவர்கள் செய்த (தவறான) காரியத்தை (தவறென்று) அவர்கள் அறிந்து கொண்டால் அதில் நிலைத்திருக்கவும் மாட்டார்கள் (உடனே) அதிலிருந்து விலகி விடுவார்கள்.

(3:133, 134, 135)

وَسَارِعُوْٓا اِلٰى مَغْفِرَةٍ مِّنْ رَّبِّكُمْ وَجَنَّةٍ عَرْضُهَا السَّمٰوٰتُ وَالْاَرْضُۙ اُعِدَّتْ لِلْمُتَّقِيْنَۙ الَّذِيْنَ يُنْفِقُوْنَ فِى السَّرَّآءِ وَالضَّرَّآءِ وَالْكٰظِمِيْنَ الْغَيْظَ وَالْعَافِيْنَ عَنِ النَّاسِؕ وَاللّٰهُ يُحِبُّ الْمُحْسِنِيْنَۚ وَالَّذِيْنَ اِذَا فَعَلُوْا فَاحِشَةً اَوْ ظَلَمُوْٓا اَنْفُسَهُمْ ذَكَرُوا اللّٰهَ فَاسْتَغْفَرُوْا لِذُنُوْبِهِمْ ۗ وَمَنْ يَّغْفِرُ الذُّنُوْبَ اِلَّا اللّٰهُ ۗ وَلَمْ يُصِرُّوْا عَلٰى مَا فَعَلُوْا وَهُمْ يَعْلَمُوْنَ

சூரா ஆல இம்ரானின் மேற்கூறப்பட்ட 133, 134, 135 ஆகிய வசனங்களை ஒருவன் வெள்ளிக்கிழமை இரவு இஷாத் தொழுகைக்குப் பிறகு எழுதி அணிந்து கொண்டால் அநியாயக்கார அரசன், பகைவன், அட்டூழியம் செய்பவன் ஆகியவர்களால் எந்தத் தீங்கும் செய்ய முடியாது. மேற்குறிப்பிட்டவர்களின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். அவனுடைய மனத்தின் புரளியும் கோபமும் அடங்கிப் போகும்.

## மூக்கிலிருந்து இரத்தம் வடிவது நிற்க

وَمَا مُحَمَّدٌ إِلَّا رَسُولٌ قَدْ خَلَتْ مِنْ قَبْلِهِ
الرُّسُلُ أَفَإِنْ مَاتَ أَوْ قُتِلَ انْقَلَبْتُمْ

*'வமா முஹம்மதுன்... குதிலன் கலப்தும்' (3:144)* என்ற ஆயத்தை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தி வரவேண்டும்.

## வளவாழ்வு எய்தப் பெற

*ஃதும்ம அன்ஸல அலைக்கும் மிம்பஃதில் ஙம்மி... அலீமும் பிதாத்திஸ் ஸுதூர் (3:154)*

இந்தத் திருவசனத்தில் அரபி எழுத்துக்கள் அனைத்தும் உள்ளன என்றும் இதில் தான் இஸ்முல் அஃலம் உள்ளதென் றும் கூறப்படுகிறது.

வளவாழ்வு விரும்பும் ஒருவன் இதனை நாளொன்றுக்கு 28 தடவை வீதம் 29 நாட்களுக்கு ஓதி வர வேண்டும்.

## எதிரிகளை வெற்றி கொள்ள

இதனை பன்னிரண்டு தடவை ஓத வேண்டும்.

## பயம் நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும் என்று உலமாக்கள் கூறுகிறார்கள்.

## நீங்காத் தலைவலி நீங்க

இதனை நாளொன்றுக்குப் பத்துத் தடவைகள் வீதம் பத்து நாட்களுக்கு ஓதிவரின் தலைவலி நீங்கும்.

## நாட்டங்கள் நிறைவேற

இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் நாற்பது தடவை வழக்கமாக ஓதி வரவேண்டும்.

## காய்ச்சல் நீங்க

இதனை மூன்று நாட்கள் பீங்காளில் எழுதிக் கரைத்து குடிப்பின் காய்ச்சல் அகலும் .

## சண்டையில் அலுவலில் வெற்றி பெற

இதனைப் பதினைந்து அல்லது பதின்மூன்று தடவை ஓத வேண்டும்.

## இம்மையிலும் நல்வாழ்வு வாழ

ஒருவன் இதனை நாள்தோறும் ஐந்து தடவை ஓதிவரின் அவன் இம்மையில் நல்வாழ்வு, பெருவாழ்வு வாழ்வான்

## அதிகாரிகளிடம் அலுவல்கள் நிறைவேற

இரண்டு ரக்அத் நஃபில் தொழுது முஸல்லாவில் அமர்ந் தபடியே இதனை மூன்று தடவை ஓதிக் கைகளில் ஊதி முகத்தில் தடவிக் கொண்டு செல்ல வேண்டும்.

## பேய், பிசாசு அகல

இதனை பேய் பிடித்தவர்களின் இடது காதில் ஓதி ஊத வேண்டும்.

## தேள்கடி நீங்க

இதனை தேள் கடிக்கப் பெற்றவரின் வலது காதில் ஓதி ஊத வேண்டும்.

## இம்மை மறுமைப் பேறு எய்த

இதனை ஈதுல் பித்ர், ஈதுல் அல்ஹா ஆகிய இரு பெருநாட்களில் மூன்று தடவை ஓத வேண்டும்.

## ஆண்மை பெற

இதனை வெள்ளை மிளகிலோ அல்லது தேனிலோ ஓதி ஊதி அருந்தி வர வேண்டும்.

## தன் அலுவல் அனைத்திற்கும் இறைவன் பொறுப்பேற்க; இறைகாவல் பெற

கீழ்க்கண்ட வசனத்தை அடுத்துவரும் முறைப்படி ஓதினால் இறைவனின் பாதுகாப்புக் கிடைக்கும். அவன் செயல்கள் அனைத்திலும் இறையருள் இருக்கும். எல்லாவிதமான நோய்களிலிருந்தும் அவனுக்கு விதிவிலக்குக் கிடைக்கும்.

اَلَّذِيْنَ قَالَ لَهُمُ النَّاسُ اِنَّ النَّاسَ قَدْ جَمَعُوْا لَكُمْ فَاخْشَوْهُمْ فَزَادَهُمْ اِيْمَانًا ۖ وَّقَالُوْا حَسْبُنَا اللّٰهُ وَنِعْمَ الْوَكِيْلُ ○ فَانْقَلَبُوْا بِنِعْمَةٍ مِّنَ اللّٰهِ وَفَضْلٍ لَّمْ يَمْسَسْهُمْ سُوْٓءٌ ۙ وَّاتَّبَعُوْا رِضْوَانَ اللّٰهِ ؕ وَاللّٰهُ ذُوْ فَضْلٍ عَظِيْمٍ ○

பொருள்: அவர்கள் எத்தகையோரென்றால், காயமடைந்த பின்னரும் அல்லாஹ்வுடையவும் (அவனுடைய) தூதருடையவும் அழைப்புக்கு வழிப்பட்டு (யுத்தத்திற்குச்) சென்றனர். (அல்லாஹ்வுக்குப்) பயந்து நன்மை செய்த இத்தகையோருக்கும் மகத்தான (நற்)கூலியுண்டு.

அன்றி, ஒரு சிலர் அவர்களிடம் (வந்து) ''உங்களுக்கு விரோதமாக (யுத்தம் புரிய) சகல வகுப்பினரும் நிச்சயமாக ஒன்று சேர்ந்திருக்கின்றனர். (ஆதலால்) அவர்களுக்குப் பயந்து கொள்ளுங்கள். என்று கூறிய சமயத்தில் அவர்களுக்கு பயம் ஏற்படுவதற்குப் பதிலாக விசுவாசமே அதிகரித்தது. அன்றி, ''அல்லாஹ்வே எங்களுக்குப் போதுமானவன், அவன் சிறந்த பாதுகாவலனாகவும் இருக்கிறான்'' என்றும் கூறினார்கள். எனவே அவர்கள் அல்லாஹ்வின் அருட்கொ

டையையும் பாக்கியத்தையும் பெற்றுத் திரும்பி வந்தார்கள். அவர்களை எத்தகைய தீங்கும் அணுகவில்லை. (ஏனென்றால்) அவர்கள் அல்லாஹ்வின் விருப்பத்தையே பின்பற்றிச் சென்றார்கள். அல்லாஹ்வோ மகத்தான கொடையாளனாக உள்ளான். *(3:172, 173, 174)*

ஓதும்முறை: மேற்குறித்த வசனத்தை 420 தரம் ஓதி,

فَانْقَلَبُوْا بِنِعْمَةٍ مِّنَ اللّٰهِ وَفَضْلٍ لَّمْ يَمْسَسْهُمْ سُوْٓءٌ

எனும் சொற்றொடரை 7 தரம் ஓதி,

وَاللّٰهُ غَالِبٌ عَلٰٓى اَمْرِهٖ

என்று ஓதி முடிக்க வேண்டும்.

தன் காரியங்கள் அனைத்துக்கும் இறைவன் பொறுப் பேற்க வேண்டும்; அவனுடைய பாதுகாப்பும் உதவியும் கிடைக்க வேண்டும்; தன் மீது மற்ற எல்லோருக்கும் அன்பு ஏற்பட வேண்டும்; இறையருளால் தனக்குச் செல்வம் வர வேண்டும் என்று ஒருவன் எண்ணினால் அவன்,

حَسْبُنَا اللّٰهُ وَنِعْمَ الْوَكِيْلُ ○

(இறைவன் எங்களுக்குப் போதுமானவன். பொறுப் பேற்பவரில் அவன் நல்லவன்)

என்று தினம் 450 தரம் ஓத வேண்டும். இவ்வாறு இரவிலும் பகலிலும் ஓத வேண்டும். இதனை அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

## மதிப்பு எய்த

*இதனை 450 தடவையும்*

*அஸீஸு காஃபீ கவிய்யு லதீஃப்*

என்பதை 450 தடவையும் ஒருவன் ஓதினால் எல்லா விதமான ஆபத்துகளிலிருந்தும் அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும். விரோதிகளுக்குப் பாதகமாக அவனுக்கு உதவி கிடைக்கும். உலகம் அவனை நேசிக்கும்; இறைவனின் படைப்புகளில் அவன் மதிப்பு மிக்கவனாகி விடுவான், மேற்குறிப்பிட்டபடி தினமும் ஓதி வர வேண்டும்.

## சிறையிலிருந்து மீட்சி பெற

இந்த வசனத்தை ஒருவன் தொழுகைக்குப் பின்னால் 313 தரம் ஓதிவந்தால் சிறையிலிருந்தாலும் மீட்சி பெறுவான்; பகைவர்களின் தீங்குகளிலிருந்தும் பாதுகாப்புப் பெறுவான்; வறிய நிலையில் இருந்தால் செல்வனாவான்; கொடுமைக் காரர்கள் அவனுக்கு அடங்கி நடப்பார்கள்.

## உடைமைகள் பாதுகாப்புப் பெற

ஒருவன் இந்த வசனத்தை அதிகமாக ஓதி வந்தால், அவன் உள்ளம் விரிவடைவதோடு அவனுடைய உடைமை களுக்கும் எந்தத் தீங்கும் ஏற்படாது.

## பிரார்த்தனை நிறைவேற

அரசன் ஒருவன் இதனை ஓதி வந்தால் அவன் நாடு விரிவடையும். கடுஞ்சினம் கொண்டவன் ஓதினால் அமைதி ஏற்படும்; இதனை ஓதுகிறவரின் பிரார்த்தனைகள் இறைவ னால் ஏற்றுக் கொள்ளப்படும்.

## வருமானம் பெருக

மற்றப் படைப்புகளிலிருந்து ஏற்படும் தீங்குகளை விட் டுத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள ஒருவன் நினைத்தால் இந்த வசனத்தை அடியில் காணும் முறைப்படி ஓதி வர

வேண்டும். இதனால் வருமானம் பெருகுவதோடு மற்றவர்க ளின் உள்ளங்களில் அவன் மீது அன்பும் ஏற்படும்.

ஓதும் முறை: ஹஸ்புனல்லாஹு 450 தடவை ஓதி வசனத்தின் ஆரம்பமான ''அல்லதீன'' என்பதிலிருந்து 'வநிஃமல் வக்கீல்' வரை ஆறு தடவை ஓதி இதனை ஏழாம் தடவை ஓதுவதோடு வசனத்தின் இறுதி வரை சேர்த்து ஓதி முடிக்க வேண்டும். இந்த முறைப்படி தினசரி தொடர்ந்து ஓதி வந்தால் வியக்கத்தக்க பயன் ஏற்படும்.

## எதிரிகளை அடங்கச் செய்ய

'ஹஸ்பியல்லாஹு வநிஃமல் வகீல், நிஃமல் மவ்லா வநிஃமந்நஸீர்' என்று ஒவ்வொரு நாளும் 450 தடவை ஓதி வரவேண்டுமென்றும் ஓதும் முன்பும் பின்பும் 11 தடவைகள் ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டுமென்றும் குத்புத்தீன் பக்தியாரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## தீங்கு, அபாயம் ஆகியவற்றில் சிக்கிக் கொள்வோமோ என்கிற அச்சமிருந்தால்

''ஹஸ்புனல்லாஹு வநிஃமல் வக்கீல் அலல்லாஹி தவக்கல்னா' என்று திரும்பத் திரும்ப ஓத வேண்டும்.

## ஆபத்து அகல

தீங்குகளிலும் ஆபத்துகளிலும் சிக்கிக் கொண்டவன் 'ஹஸ்புனல்லாஹு...' எனும் வசனத்தை அதிகமாக ஓத வேண்டும்.

## இரணம் விரிவாக

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீமில் மலிகில் ஹக்கில் முபீன், நிஃமல் மௌலா வநிஃமந் நஸீர் என்பதையும் சூராவாகிஆவையும யாசீனையும் அதிகமாக ஓத வேண்டும் என்று இமாம் ஷாதலி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## மூக்கிலிருந்து இரத்தம் வருவது (பீநிசம்) நீங்கப் பெற

மேலே பொறிக்கப்பட்டுள்ள 'அல்லதீன காலல ஹு்ம்.... அளீம்' என்ற 3:172, 173, 174 வசனங்களை எழுதி இரு கண்களுக்கிடையில் கட்ட வேண்டும்.

## ஈமான் உறுதி பெற

சூரா ஆல இம்ரானில் 189, 90, 91, 92, 93 ஆகிய ஐந்து வசனங்கள்.

'இன்னபீ கல்கிஸ்ஸமாவாத்தி' என்று ஆரம்பிக்கிற இவற்றை ஒருவன் அதிகமாக ஓதி வந்தால் அவனுடைய 'ஈமான்' உறுதிப்படும். அவன் உள்ளம் தூய்மை அடையும். ஈருலகச் சிறுமைகளிலிருந்தும் அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.

## பிரார்த்தனை நிறைவேற

சூரா ஆல இம்ரானில் இறுதியான பதினொரு வசனங்கள் (3:189-99)

பெருமானார் (ஸல்) அவர்கள் இவற்றைத் 'தஹஜ்ஜுத், தொழுகைக்குப் பிறகு ஓதி வந்தார்கள். இதிலிருந்து இந்த வசனங்களின் சிறப்பை அறியலாம். இவற்றைத் 'தஹஜ்ஜுத்' தொழுகைக்குப் பிறகு ஓதிப் பிரார்த்தனை செய்தால் அந்தப் பிரார்த்தனையை இறைவன் நிறைவேற்றிக் கொடுப்பான்.

## உறங்கும்பொழுது பயங்கரக் கனவு ஏற்படாதிருக்க

உறங்கும் பொழுது பயங்கரக் கனவுகள் காண்போரின் கையில்,

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ○

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا اصْبِرُوا وَصَابِرُوا وَرَابِطُوا وَاتَّقُوا اللَّهَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ ○

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் யா அய்யுஹல்ல தீன ஆமனுஸ்பிரூ வஸாபிரூ வராபித்தூ வத்தக்குல்லாஹ லஅல் லக்கும் துஃப்லிஹூன் (3:200) என்ற ஆயத்தை ஒரு தாளில் எழுதித் தஃவீஸ் செய்து அணிவிக்க நலன் ஏற்படும்.

### காய்ச்சல் நீங்க

மேலே கூறப்பட்ட ஆயத்தை எழுதி அத்துடன் இன்னா ருடைய மகன் இன்னாரைப் பிடித்த காய்ச்சல் அகன்றுவிடுக! என்று எழுதி தஃவீஸ் செய்து காய்ச்சல்காரனின் கழுத்தில் அணிவிக்க வேண்டும். இன்னாருடைய மகன் என்ற இடத் தில் அவனின் தாயின் பெயர் எழுதப்பட வேண்டும்.

# சூரா அன்னிஸா

### பீதி விலக

திருக்குர்ஆனில் நான்காம் சூராவான 'நிஸா'வை குங்கு மப்பூ, கஸ்தூரி, பன்னீர் ஆகியவற்றில் எழுதிக் கரைத்துக் குடித்தால், மனத்தில் தோன்றுகிற திடீர் பீதி நீங்கிப் போய்வி டும்.

### மனைவி, கணவனுக்கு கட்டுப்பட

உணவிலோ, வாசனைத் திரவத்திலோ இதனைப் பத்து முறை ஓதி ஊத வேண்டும். கணவனுக்கு கட்டுப்படாத ஒருத்தி அந்த உணவைச் சாப்பிட்டால் அல்லது அந்த வாச னைப் பொருளை முகர்ந்தால், தன் கணவனுக்குக் கட்டுப் பட்டு விடுவாள்.

இதனை நாள்தோறும் ஏழு தடவை கணவனோ மனை வியோ ஓதின் ஒருவர் மற்றவர் மீது அன்பாக இருப்பர்.

## சூனியம் அகல

*சூனியம் செய்யப்பட்டவர்கள் மீது இந்த சூராவை ஓதி ஊதினால் குணம் ஏற்படும்.*

## ஆண்மை பெற

*இதன் முதலாவது ஆயத்தை வைகறைத் தொழுகைக்குப் பின் கோழி முட்டையில் ஓதி ஊதி 41 நாட்கள் தொடர்ச்சியாக உண்டு வரவேண்டும்.*

## ஆண்மை பெற (மற்றொரு முறை)

*ஆண்மை குறைவாக உள்ளவர்கள்,*

اَلرِّجَالُ قَوّٰمُوْنَ عَلَى النِّسَآءِ

*'அர்ரிஜாலு கவ்வாமூன அலந்நிஸாஉ' (4.34) என்று நூறு தடவை வீதம் 20 நாட்களுக்கு பேரீத்தம் பழம் போட்டு காய்ச்சப்பட்ட பாலில் ஓதி ஊதி அருந்தி வர வேண்டும். இதன் பொருள், ஆண்களைப் பெண்கள் மீது அல்லாஹ் மேன்மையாக்கி வைத்திருக்கிறான் என்பதாகும்.*

## வாக்குவாதத்தில் வெற்றி பெற

*''மனிதர்களே! உங்கள் இறைவனிடமிருந்து (போது மான) அத்தாட்சி நிச்சயமாக உங்களிடம் வந்து விட்டது. தெளிவான பிரகாசத்தையே நாம் உங்களுக்கு அருட்செய்து இருக்கின்றோம். ஆகவே, எவர்கள் அல்லாஹ்வை உண்மை யாகவே விசுவாசித்து, அவனது வழியினைப் பலமாகப் பற்றிப் பிடித்துக் கொள்கிறார்களோ, அவர்களை அவன், தன்னுடைய அன்பிலும், அருளிலும் செலுத்திவிடுகிறான். அன்றி, தன்னிடம் வருவதற்குரிய நேரான வழியிலும் அவர்க ளைச் செலுத்துகின்றான்'' என்ற பொருள் கொண்ட பின்வ ரும் 5:174, 175 ஆவது இறைவசனங்களை வாக்கு வாதத்தில் வெற்றியடைய நினைக்கின்றவர்கள் உபயோகித்துக் கொள்ள லாம்.*

يَآأَيُّهَا النَّاسُ قَدْ جَآءَكُمْ بُرْهَانٌ مِّنْ رَّبِّكُمْ
وَأَنْزَلْنَا إِلَيْكُمْ نُوْرًا مُّبِيْنًا ۝ فَأَمَّا الَّذِيْنَ
اٰمَنُوْا بِاللّٰهِ وَاعْتَصَمُوْا بِهٖ فَسَيُدْخِلُهُمْ فِيْ رَحْمَةٍ
مِّنْهُ وَفَضْلٍ وَّيَهْدِيْهِمْ إِلَيْهِ صِرَاطًا مُّسْتَقِيْمًا ۝

உபயோகிக்கும் முறை: ஞாயிற்றுக்கிழமையன்று நோன்பு பிடித்து, இந்த வசனத்தை குங்குப்பூ, பன்னீரினால் சுத்தமான ஒரு தோலில் எழுதி அதனைக் கட்டிக் கொண்டு வாக்குவாதத்தில் இறங்க வேண்டும்.

### வழக்குகளில் வெற்றி பெற

ஒருவன் வழக்கு ஒன்றில் வெற்றிபெற விரும்பின் ஞாயிறு அன்று நோன்பு நோற்று ஒரு தாளில் மேற்கண்ட திருவசனத்தை எழுதித் தன் சட்டைப் பையில் வைத்துக் கொள்ள வேண்டும்.

### வசீகரம் எய்தப் பெற

இந்த வசனத்தைக் குங்குமப்பூ, பன்னீரினால் எழுதித் தலைப் பாகையில் அணிந்து கொண்டால் அல்லது கரைத்துக் குடித்தால் மணமகனுக்கு வசிகரம் ஏற்படும்.

# சூரா மாயிதா

இது திருகுர்ஆனின் ஐந்தாம் சூராவாகும்.

### மழை பெய்ய, லாபம் பெருக, பஞ்சம் பாதிக்காதிருக்க

ஒருவர் பஞ்ச காலத்தில் இதனை ஓதினால் அவரைப் பஞ்சம் பாதிக்காது.

*இந்த சூராவை 14-தடவை ஓதினால் பஞ்சம் நீங்கும்; மழை பெய்யும்; பசியோடிருப்பவன் இதனை ஓதினால் உணவு கிடைக்கும். 'மகோதரம்' எனும் நோய் கண்டவனுக்கு இந்த சூராவை எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்ய வேண்டும். இதனை எழுதிக் கடைகளில் வைத்தால் விபத்துகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைப்பதோடு லாபமும் அதிகமாகக் கிடைக்கும்.*

### எக்காலமும் கண்ணேறு ஏற்படாமல் இருக்க எதிரிகள் தீமை செய்யாதிருக்க

وَاذْكُرُوْا نِعْمَةَ اللّٰهِ عَلَيْكُمْ وَمِيْثَاقَهُ
الَّذِىْ وَاثَقَكُمْ بِهٖۤ ۙ اِذْ قُلْتُمْ سَمِعْنَا وَاَطَعْنَا
وَاتَّقُوا اللّٰهَ ؕ اِنَّ اللّٰهَ عَلِيْمٌ ۢ بِذَاتِ الصُّدُوْرِ ○
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا كُوْنُوْا قَوّٰمِيْنَ لِلّٰهِ
شُهَدَآءَ بِالْقِسْطِ ۖ وَلَا يَجْرِمَنَّكُمْ شَنَاٰنُ
قَوْمٍ عَلٰۤى اَلَّا تَعْدِلُوْا ؕ اِعْدِلُوْا ۗ هُوَ اَقْرَبُ
لِلتَّقْوٰى ۖ وَاتَّقُوا اللّٰهَ ؕ اِنَّ اللّٰهَ خَبِيْرٌ ۢ بِمَا
تَعْمَلُوْنَ ○

*வெள்ளி இரவு இஷாத் தொழுதபின் வத்குரூ நிஃமத்தல்லாஹி... பிமா தஃமலூன் (5:7, 8) என்ற மேற்காணும் திருவசனங்களை எழுதித் தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ளும் ஒருவருக்கு ஒருபோதும்*

கண்ணேறினால் தீமை ஏற்படாது. எதிரிகளாலும் எவ்விதத் தீமையும் செய்ய இயலாது போய்விடும்.

### நலன்கள் பெற

وَلِلّٰهِ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَمَا بَيْنَهُمَا وَاِلَيْهِ الْمَصِيْرُ ○

என்ற வசனத்தோடு இந்த சூராவில் 20, 21-ஆவது வசனங்களையும் இணைத்து ஏழு நாட்களுக்குத் தனது வலக்கரத்தில் சூரியோதயத்துக்கு முன்னால் எழுதி, அதனை நக்கி உமிழ் நீரை விழுங்கிவிட வேண்டும். இப்படி ஒருவன் செய்தால், அவனுக்கு மன்னிப்பையும் ஆரோக்கியத்தையும் போதுமென்ற மனத்தையும் கனிந்த உள்ளத்தையும், சகிப்புத் தன்மையையும் எல்லா முஸ்லிம்கள் மீதும் இரக்கத்தையும் இறைவன் கொடுத்தருள்வான்.

## சூரா அன்ஆம்

### இறை மன்னிப்புப் பெற

''இடையில் எந்தப் பேச்சும் பேசாமல் இந்த சூராவை ஒருவன் ஓதி முடித்தால் இதற்கு முன்னால் அவன் செய்த பாவங்களை எல்லாம் இறைவன் மன்னித்துக் கொள்வான்'' என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள். அவனுக்காக எழுபதாயிரம் வானவர்கள் பாவமன்னிப்புக் கோருவார்கள் என்றும் கூறப்படுகிறது.

### தேவைகள் நிறைவேற

இதனை 41 தடவை ஓத வேண்டுமென யஹ்யா மனேரி (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்.

### எண்ணியதை எய்தப் பெற

ஒரு காரியத்தை எண்ணிக் கொண்டு அதன் பொருட்டு இதனை ஓதினால் அது இறையருளால் நிறைவேறும்.

## இறைகாவல் பெற

இந்த சூராவை நல்லெண்ணத்துடன் ஓதும் ஒருவன் அதனை ஓதி முடித்து, இரண்டு ரக்அத் தொழுது நோய்களிலிருந்தும் ஆபத்துகளிலிருந்தும் தான் பாதுகாக்கப் பட வேண்டும் என்று பிரார்த்தனை செய்தால், ஒரு மாதம் வரை அவனுக்கு இறைவன் பாதுகாப்பு கொடுப்பான்.

## ஆபத்து அணுகாதிருக்க

ஒருவன் இந்த சூராவை இரவில் ஓதினால், இடையூறுகளிலிருந்து அவன் காக்கப்படுவான்.

## நோய் அணுகாதிருக்க

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ
وَجَعَلَ الظُّلُمٰتِ وَالنُّوْرَ ۙ ثُمَّ الَّذِيْنَ
كَفَرُوْا بِرَبِّهِمْ يَعْدِلُوْنَ ○

*பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்குரியதே. அவனே வானங்களையும், பூமியையும் சிருஷ்டித்தவன்; இருள்களையும் பிரகாசத்தையும் உண்டாக்கியவனும் அவனே. இவ்வாறிருந்தும் நிராகரிப்போர் (அல்லாஹ்வாகிய) தங்கள் இறைவனுக்கு (பொய்யான தெய்வங்களை) சமமாக்குகின்றனர். (6:1)*

இந்த வசனத்தை காலையிலும் மாலையிலும் 71 தடவை ஓதிக் கையில் ஊதி முகத்திலும் சரீரத்திலும் தடவிக் கொண்டால் எல்லா விதமான நோய்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

குறிப்பிட்ட ஓர் எண்ணம் நிறைவேற வேண்டுமானால், இந்த சூராவை 44 தடவை ஓதவேண்டும். எண்ணம் நிறைவேறிவிடும்.

## விசாரணையின்றி சுவர்க்கம் புக

இந்த ஸூராவை ஒருவன் தினம் ஒரு தடவை ஓதி வந்தால் அவனுடைய புத்தியும் செல்வமும் பெருகும்; மனத்தின் தீய எண்ணங்கள் நீங்கும். ஏற்கனவே இருந்த இருள் நீங்கி அவன் உள்ளம் பிரகாசமடையும். இம்மை சம்பந்தப்பட்ட அவனு டைய காரியங்கள் அனைத்தும் இலகுவாக முடியும். குழப்பத் திலிருந்தும் ஆபத்துகளிலிருந்தும் அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும். மரணத்திற்குப் பிறகு விசாரணையின்றியே அவன் சொர்க்கத்துக்குச் செல்வான்.

## குழப்பம், தாகம் நீங்க

وَلَهُ مَا سَكَنَ فِي اللَّيْلِ وَالنَّهَارِ
وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ ۝

பொருள்: இரவிலும் பகலிலும் இருக்கிற அமைதி அவனுக்குரியது. அவன் கேட்கிறவன் அறிகிறவன். (6:13)

கோபம், குழப்பம், தாகம் முதலியவற்றிலிருந்து தற்காத் துக் கொள்வதற்கு மேற்குறிப்பிட்ட வசனத்தை ஓதலாம். இந்த உணர்வுகளில் ஒன்று ஏற்படும்போது நீங்கள் நின்று கொண்டிருந்தால் உட்கார்ந்து விடுங்கள்; உட்கார்ந்து கொண் டிருந்தால் எழுந்து நின்று கொள்ளுங்கள்; இந்த வசனத்தை அதிகமாக ஓதி வாருங்கள்.

## பல்வலி நீங்க

ஸூரா பாத்திஹாவை ஒரு தடவையும் இந்த வசனத்தை ஏழு தடவையும் ஓதி வலியுள்ள பல்லின் மீது ஊத வேண்டும்.

## கவலை, துன்பம், காய்ச்சல் நீங்க

وَإِنْ يَمْسَسْكَ اللّٰهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ
لَهٗٓ إِلَّا هُوَ ۖ وَإِنْ يَمْسَسْكَ بِخَيْرٍ فَهُوَ
عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ ○ وَهُوَ الْقَاهِرُ فَوْقَ
عِبَادِهٖ ۚ وَهُوَ الْحَكِيْمُ الْخَبِيْرُ ○

*(நபியே!) அல்லாஹ் உமக்கு யாதொரு தீங்கிழைத்தால், அதனை நீக்குவோர் அவனையன்றி வேறொருவருமில்லை. உமக்கு யாதொரு நன்மையை அவன் கொடுத்தாலும் அதை தடுத்துவிடக் கூடியவன் எவனுமில்லை. அவன் யாவற்றின் மீதும் மிக்க ஆற்றலுடையோன். அவனே தன் அடியார்களை அடக்கி ஆள்கிறான். அன்றி அவன் மிக்க ஞானமுடையவனாகவும் (யாவையும்) நன்கறிந்தோனாகவும் இருக்கிறான்.*

*(6:17, 18)*

ஸஹர் நேரத்தில் இந்த வசனத்தைக் காகிதத்தில் எழுதி அணிவித்தால், நிமோனியாவும் நெஞ்சுவலியும் நீங்கிப் போகும். அதிகமான மனவேதனையும் துன்பமும் கொண்டவன் தூங்கச் செல்லும்போது இதை 7 தடவை ஓதிக்கொள்ள வேண்டும். அவன் தூங்கி எழுந்ததும் எல்லாவிதமான துன்பங்களும் அவனை விட்டு நீங்கிப் போகும்.

## ஆண்மை பெற

إِنَّمَا يَسْتَجِيبُ الَّذِينَ يَسْمَعُونَ ۘ وَالْمَوْتَىٰ
يَبْعَثُهُمُ اللَّهُ ثُمَّ إِلَيْهِ يُرْجَعُونَ ○

*''எவர்கள் (உமக்குச்) செவி சாய்க்கக் கூடிய (உயிருள்ள) வர்களாயிருக்கின்றனரோ அவர்கள் தாம் (உம்மை) அங்கீகரிப்பவர்கள். எனவே இறந்தவர்களை அல்லாஹ் உயிர்ப்பிப்பான். பின்னர் அவனிடமே கொண்டு வரப்படுவார்கள்.''*
*(6:36)*

ஆண்மைக் கோளாறுக்கு: இந்தக் கோளாறு உள்ளவர்கள் மூன்று நாட்கள் நோன்பு பிடிக்க வேண்டும். சீனி போட்ட பசும்பாலில் நோன்பு திறக்க வேண்டும். நள்ளிரவில் எழுந்து குங்குமப்பூ, பன்னீரில் செம்புப் பேனாவைக் கொண்டு இதனை வலது உள்ளங்கையில் எழுதி நக்கிவிட வேண்டும். இவ்வாறு மூன்று நாட்கள் செய்ய வேண்டும். தன்னால் முடியாவிட்டால் இன்னொருவரின் உதவியால் எழுதிக் கொள்ளலாம்.

## ஆண்மை பெற (மற்றொரு முறை)

மேலே பொறிக்கப்பட்ட 6:36-ஆவது ஆயத்தை ஒவ்வொரு வேளைத் தொழுகைக்குப் பின்பும் பதினொரு தடவை ஓதி நெஞ்சில் ஊதிக் கொள்ள வேண்டும். இவ்வாறு தொடர்ந்து பதினொரு நாட்கள் செய்தபின் மூன்று தடவை ஓதி நெஞ்சில் ஊதிக் கொண்டு மருவ வேண்டும்.

## சந்தேகப் பிரச்சினையில் தெளிவு பெற

وَعِنْدَهٗ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَآ اِلَّا هُوَ ؕ وَيَعْلَمُ
مَا فِى الْبَرِّ وَالْبَحْرِ ؕ وَمَا تَسْقُطُ مِنْ وَّرَقَةٍ اِلَّا
يَعْلَمُهَا وَلَا حَبَّةٍ فِىْ ظُلُمٰتِ الْاَرْضِ وَلَا رَطْبٍ
وَّلَا يَابِسٍ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ ○ وَهُوَ الَّذِىْ
يَتَوَفّٰٮكُمْ بِالَّيْلِ وَيَعْلَمُ مَا جَرَحْتُمْ بِالنَّهَارِ
ثُمَّ يَبْعَثُكُمْ فِيْهِ لِيُقْضٰٓى اَجَلٌ مُّسَمًّى ۚ ثُمَّ
اِلَيْهِ مَرْجِعُكُمْ ثُمَّ يُنَبِّئُكُمْ بِمَا كُنْتُمْ تَعْمَلُوْنَ ○
وَهُوَ الْقَاهِرُ فَوْقَ عِبَادِهٖ وَيُرْسِلُ عَلَيْكُمْ حَفَظَةً ؕ
حَتّٰٓى اِذَا جَآءَ اَحَدَكُمُ الْمَوْتُ تَوَفَّتْهُ رُسُلُنَا وَهُمْ
لَا يُفَرِّطُوْنَ ○ ثُمَّ رُدُّوْٓا اِلَى اللّٰهِ مَوْلٰٮهُمُ الْحَقِّ ؕ
اَلَا لَهُ الْحُكْمُ وَهُوَ اَسْرَعُ الْحٰسِبِيْنَ ○

*இந்த சூராவில் மேலே குறிப்பிட்டுள்ள 59, 60, 61, 62 ஆகிய வசனங்களைக் கித்தானில் எழுதித் தலையணைக்கடியில் வைத்துக் கொண்டு தூங்கினால் சந்தேகத்துக்கும் குழப்பத்துக்கும் மூலமான பிரச்சினைகளில் தெளிவு ஏற்பட்டுவிடும்.*

## எண்ணியதை எய்தப் பெற

மேற்கூறப்பட்ட வசனங்களில் 59-வது திருவசனம் ஆயத்துல் ஃபத்ஹ் என்று கூறப்படுகிறது. இதனை ஓதி வருபவர் எண்ணியதை எய்தப் பெறுவர். இதனைச் சிலர் நற்பலன் கருதி ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பிறகும் நாற்பது தடவை ஓதுகின்றனர்.

## ஆறு, கடல் கொந்தளிப்பு நீங்க

ஆற்றிலோ கடலிலோ கொந்தளிப்பு ஏற்பட்ட வேளையில் இந்த சூராவில் 63, 64 ஆகிய இரண்டு வசனங்களையும் காகிதத்தில் எழுதி ஆற்றில் அல்லது கடலில் போட்டுவிட வேண்டும். கொந்தளிப்பு அடங்கிப் போய்விடும்.

## சரியான வழியைக் காண

ஒருவன் தன் காரியங்களைச் செய்து முடிப்பதற்கு சரியான வழியையும் சரியான சிந்தனையையும் எதிர்பார்த்தால் அவன் இந்த சூராவில் 76, 77, 78, 79, 80 ஆகிய வசனங்களை உபயோகித்துக் கொள்ளலாம். இவற்றை வெள்ளைத் தட்டையில் குங்குமப்பூ, பன்னீர் கொண்டு எழுதி சுத்தமான ஆற்றுத் தண்ணீரினால் கரைத்து குடித்துவிட வேண்டும்.

## காற்று தணிய, அநியாயக்காரன் காணாதிருக்க

لَا تُدْرِكُهُ الْأَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْأَبْصَارَ
وَهُوَ اللَّطِيفُ الْخَبِيرُ ○

எவருடைய பார்வையும் அவனை அடையாது. அவனோ யாவற்றையும் பார்க்கின்றான். அவன் (எவரின் பார்வைக்கும்) அகப்படாத, நுட்பமும், தெளிவும் ஆனவன். யாவையும் அறிந்தவன். *(6:108)*

- இந்த வசனத்தை அதிகமாக ஓதினால் காற்றின் வேகம் தணியும். இப்படி ஓதுகிறவன் அநியாயக்காரர்களின் பார்வையிலிருந்து மறைக்கப்படுவான். அநியாயக்காரர்களின் முன்னால் சென்றால்கூட அவர்களின் பார்வைக்குத் தென்பட மாட்டான்.

## இருவரிடையே நேசம் ஏற்பட

وَهُوَ الَّذِىٓ اَنْشَاَكُمْ مِّنْ نَّفْسٍ وَّاحِدَةٍ
فَمُسْتَقَرٌّ وَّمُسْتَوْدَعٌ ؕ قَدْ فَصَّلْنَا الْاٰيٰتِ
لِقَوْمٍ يَّفْقَهُوْنَ ○

மேலே பொறிக்கப்பட்ட 6:98 ஆவது ஆயத்தை எழுதி நீ நேசம் கொள்ள விரும்புபவனுடைய பெயரையும் அவனுடைய தாய் பெயரையும் எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொண்டால் அதனை நீ அணிந்திருக்கும் காலமெல்லாம் அவன் உன்னைப் பிரிய ஆற்றல் பெற மாட்டான்.

இந்த ஆயத்தின் பொருள்: (மனிதர்களே) உங்கள் அனைவரையும் ஒரே ஆத்மாவிலிருந்து உற்பத்தி செய்து, பின்னர் (உங்கள் தகப்பனிடம்) தரித்திருக்கச் செய்து (உங்கள் தாயின் கர்ப்பத்தில்) ஒப்படைப்பவனும் அவனே! சிந்தித்து உணரக் கூடிய மக்களுக்கு (நம்முடைய) வசனங்களை நிச்சயமாக விவரித்தோம்.

## தேவை நிறைவேற

وَاِذَا جَآءَتْهُمْ اٰيَةٌ قَالُوْا لَنْ نُّؤْمِنَ حَتّٰى
نُؤْتٰى مِثْلَ مَآ اُوْتِيَ رُسُلُ اللّٰهِ ؔؕ اَللّٰهُ
اَعْلَمُ حَيْثُ يَجْعَلُ رِسَالَتَهٗ ؕ

மேற்குறிப்பிட்ட வசனம் பிரார்த்தனையை நிறைவேற்றிக் கொள்வதற்காகப் பிரத்தியேகமாக ஓதப்படுகிறது. இந்த சூராவை ஆரம்பத்திலிருந்து ஓதி, இந்த வசனத்தை வந்தடைந்து 'ருசுலுல்லாஹி' எனும் இந்த வார்த்தையோடு நிறுத்திக் கொண்டு பிரார்த்தனை செய்ய வேண்டும். பிரார்த்தனை முடிந்ததும் இந்த 'துஆ'வை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ مَنْ ذَا الَّذِيْ يَدْعُوْكَ فَلَمْ تُجِبْهُ
وَمَنْ ذَا الَّذِيْ سَأَلَكَ فَلَمْ تُعْطِهٖ وَمَنْ
ذَا الَّذِيْ اسْتَجَارَكَ فَلَمْ تُجِرْهُ وَمَنْ ذَا الَّذِيْ
تَوَكَّلَ عَلَيْكَ فَلَمْ تَكْفِهٖ وَاغَوْثَاهُ بِكَ اَسْتَغِيْثُ
اَللّٰهُمَّ اَغِثْنِيْ يَامُغِيْثُ وَاشْفِنِيْ شِفَاءً عَاجِلًا
وَفَرِّجْ قَلْبِيْ فَرَجًا قَرِيْبًا بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرّٰحِمِيْنَ

இதனை ஓதியபின் தன் பிரார்த்தனைகளை மீண்டும் கேட்டுக் கொள்ள வேண்டும். பின்னர் விட்ட இடத்திலிருந்து, 'அல்லாஹு அஃலமு' என்பதிலிருந்து சூராவைத் தொடர்ந்து ஓதி முடிக்க வேண்டும். சூராவை முடித்ததும், அடுத்துவரும் துஆவை ஓத வேண்டும்.

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ وَصَلَّى اللّٰهُ عَلٰى سَيِّدِنَا
مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمَ اَجْمَعِيْنَ اَللّٰهُمَّ
يَاسَرِيْعَ الْحِسَابِ يَاشَدِيْدَ الْعِقَابِ يَاغَفُوْرُ
يَارَحِيْمُ يَافَالِقَ الْاِصْبَاحِ يَامُفَتِّحَ الْاَبْوَابِ
يَامُسَبِّبَ الْاَسْبَابِ يَاغَافِرَ الْخَطَايَا يَاسَاتِرَ
الْعَوْرَاتِ يَامَانِعَ الْبَلِيَّاتِ يَامُقِيْلَ الْعَثَرَاتِ
يَامُحْيِيَ الْاَمْوَاتِ اِقْضِ حَاجَتِيْ

இந்தக் கட்டத்தில் தனக்கு தேவையானதைக் கேட்க வேண்டும், அப்புறம்,

يَاۤاِلٰهَ الْاَوَّلِيْنَ وَالْاٰخِرِيْنَ وَصَلَّى اللّٰهُ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ اَجْمَعِيْنَ ٥

என்று ஓதி முடிக்க வேண்டும்.

**வயிற்று வலி விலக**

قُلْ اِنَّنِيْ هَدٰىنِيْ رَبِّيْۤ اِلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ ۚ

'குல் இன்னனனீ ஹதானீ ரப்பீ இலா ஸிராத்திம் முஸ்தகீம் *(6:161)* என்ற ஆயத்தை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தவோ தஃவீஸ் செய்து அணிந்து கொள்ளவோ வேண்டும்.

பொருள்: நிச்சயமாக என் இறைவன் நேரான பாதையை எனக்கு அறிவித்து விட்டான்.

# சூரா அஃராஃப்

**மறுமையில் மேன்மை பெற**

இதனை வழக்கமாக ஓதி வருபவரின் கை மறுமையில் ஆதம் (அலை) அவர்களின் கையோடு இணைந்திருக்கும்.

**அரசர் அல்லது அதிகாரிகளிடம் செல்வோர்**

ஒருவர் இதனை மூன்று தடவை ஓதிச் செல்லின் அவர்களால் அவருக்கு யாதொரு தீமையும் ஏற்படாது; நலன் ஏற்படும்.

**நரகத்திலிருந்து பாதுகாவல் பெற**

இந்த சூராவைத் தினம் மும்முறை ஓதி வருபவன் நரகத் தண்டனையிலிருந்து பாதுகாக்கப்படுவான்.

## பக்கவாதம் ஏற்படாதிருக்க

إِنَّ رَبَّكُمُ اللّٰهُ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ
فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ يُغْشِى
الَّيْلَ النَّهَارَ يَطْلُبُهٗ حَثِيْثًا وَّالشَّمْسَ
وَالْقَمَرَ وَالنُّجُوْمَ مُسَخَّرٰتٍ بِاَمْرِهٖ اَلَا لَهُ
الْخَلْقُ وَالْاَمْرُ تَبٰرَكَ اللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ ○

*நிச்சயமாக உங்கள் இறைவனாகிய அல்லாஹ்தான் வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் சிருஷ்டித்து அர்ஷின் மீது தன் ஆட்சியை நிலை நாட்டினான். அவனே இரவால் பகலை மூடுகிறான்; (பகலால் இரவை மூடுகிறான். அது வெகு தீவிரமாகவே அதனைப் பின் தொடர்கிறது). அவனே சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும் படைத்தான். (இவையாவும்) அவனது கட்டளைக்கு உட்பட்டவைகளே, சிருஷ்டியும் (சிருஷ்டித்தலும்) அதன் ஆட்சியும் அவனுக்குடையதல்லவா? சர்வலோகங்களையும் சிருஷ்டித்துப் போஷித்துப் பரிபக்குவப்படுத்தும் அல்லாஹ் மிக்க பாக்கிய முடையவன்.*

இந்த சூராவில் மேற்கண்ட 54-வது வசனத்தை தூங்கும் முன் ஓதினால் ஷைத்தானின் தீங்குகளிலிருந்து பாதுகாப்பு கிடைக்கும். பக்கவாதம், முகவாதம் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்பு கிடைக்கும்.

## ஷைத்தான் விலக

இப்னு குதைபா கூறுகிறார்:

''ஒருவர் உறங்குவதற்காகத் தம் படுக்கை அருகில் சென்றபொழுது அவர் ஒரு பெரும் சப்தமிட்டுக் கீழே

விழுந்தார். அவர் நித்திரை செய்ய நாடினால் இவ்விதமே நிகழ்கிறதெனக் கூறப்பட்டது. அப்பொழுது நான் 7:54. ஆவது திருவசனத்தை ஓதி அவர் மீது ஊதினேன்; அவரைப் பிடித்த ஷைத்தான் நீங்கி விட்டது. அதன்பின் அவரளவில் மீளவே இல்லை.''

## தூக்கம் வராதிருக்க

இந்த சூராவின் 7:54, 55, 56 ஆகிய வசனங்களை ஓதிப் பிரார்த்தனை செய்து கொண்டால், தூக்கம் வராது.

## வருமானம் பெருக

اُدْعُوْا رَبَّكُمْ تَضَرُّعًا وَّخُفْيَةً اِنَّهٗ لَا يُحِبُّ
الْمُعْتَدِيْنَ۝ وَلَا تُفْسِدُوْا فِى الْاَرْضِ بَعْدَ
اِصْلَاحِهَا وَادْعُوْهُ خَوْفًا وَّطَمَعًا اِنَّ رَحْمَتَ
اللّٰهِ قَرِيْبٌ مِّنَ الْمُحْسِنِيْنَ۝

ஆகவே (விசுவாசிகளே!) நீங்கள் மிக்க தாழ்மையாகவும் அந்தரங்கமாகவும் (அத்தகைய) உங்கள் இறைவனிடமே உங்களுக்கு வேண்டியவைகளைக் கோரிப் பிரார்த்தியுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை நேசிப்பதில்லை. மனிதர்களே! சமாதானமும், அமைதியும் ஏற்பட்டு நாடு சீர்திருந்திய பின்னர் அதில் விஷமம் செய்து கொண்டலையா தீர்கள். (இறைவனுடைய தண்டனைக்கு) பயந்தும் அவனுடைய சன்மானத்தை இச்சித்தும் அவனிடம் பிரார்த்தனை செய்தும் கொண்டும் இருங்கள். நிச்சயமாக அல்லாஹ்வுடைய அருள் நன்றி செய்வோருக்கு மிக்க சமீபத்திலிருக்கிறது. (7:55, 56)

இந்த சூராவில் மேற்கண்ட 54, 55, 56 ஆகிய வசனங்களை குங்குமப்பூ, பன்னீர் கஸ்தூரி கொண்டெழுதி அணிந்து கொண்டால், மோசடி, திருஷ்டி, நெஞ்சுவலி, பகைவரின்

தீங்கு பாம்பின் தீங்கு ஆகியவற்றிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

**வருமானம் பெருக**

وَلَقَدْ مَكَّنّٰكُمْ فِى الْاَرْضِ وَجَعَلْنَا لَكُمْ
فِيْهَا مَعَايِشَ ؕ قَلِيْلًا مَّا تَشْكُرُوْنَ ۝

நிச்சயமாக, நாம் உங்களுக்குப் பூமியில் சகல வசதிகளை யும் அளித்து அதில் உங்களுக்கு ஜீவனோபாயத்தையும் ஏற்படுத்தினோம். (இவ்வாறிருந்தும்) நீங்கள் நன்றி செலுத்து வதோ வெகு சொற்பம்.

மேற்குறிப்பிட்ட வசனத்தை ஜுஃம்ஆ தொழுகைக்குப் பிறகு எழுதி வீட்டிலோ, கடையிலோ வைத்தால் வியாபார மும், வருமானமும் பெருகும்.

**ஒற்றுமை ஏற்பட**

وَنَزَعْنَا مَا فِيْ صُدُوْرِهِمْ مِّنْ غِلٍّ تَجْرِيْ مِنْ
تَحْتِهِمُ الْاَنْهٰرُ وَقَالُوا الْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ
هَدٰىنَا لِهٰذَا وَمَا كُنَّا لِنَهْتَدِيَ لَوْلَاۤ اَنْ
هَدٰىنَا اللّٰهُ لَقَدْ جَآءَتْ رُسُلُ رَبِّنَا بِالْحَقِّ
وَنُوْدُوْۤا اَنْ تِلْكُمُ الْجَنَّةُ اُوْرِثْتُمُوْهَا بِمَا
كُنْتُمْ تَعْمَلُوْنَ ۝

அன்றி, (இவ்வுலகில் ஒருவரைப் பற்றி மற்றொரு வருக்கிருந்த) குரோதத்தையும் அவர்களுடைய இரு

தயத்திலிருந்து நீக்கிவிடுவோம். (ஆகவே ஒருவருக்கொருவர் மிக்க நெருங்கிய தோழர்களாகி விடுவார்கள்.) அவர்(கள் பாதங்)களுக்கு அருகில் நீரருவிகள் சதா ஓடிக்கொண்டிருக் கும். அவர்கள், "இந்த (சுவனபதியை அடையக்கூடிய) நேரான வழியில் எங்களை செலுத்திய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் உரித்தாகும். இவ்வழியில் அல்லாஹ் எங்களை செலுத்தியிருக்காவிடில், நிச்சயமாக நாங்கள் (இதனை) அடைந்திருக்கவே மாட்டோம். எங்கள் இறைவ னின் தூதர்கள் (சந்தேகமற) சத்திய மார்க்கத்தையே (எங்களுக் குக்) கொண்டு வந்(து அறிவித்)தார்கள்" என்று கூறுவார்கள். அதற்குப் பிரதியாக "பூமியில் நீங்கள் செய்து கொண்டிருந்த (நன்மையான) காரியங்களின் காரணமாகவே இச்சுவனப தியை (நீங்கள்) சுவீகரித்துக் கொண்டீர்கள்" என்ற சப்தத்தை அவர்கள் கேட்பார்கள்.

கோபித்துக் கொண்டு பகையோடிருப்பவர்களுக்கு இந்த சூராவின் மேற்கண்ட 43-வது வசனத்தை ஹல்வாவில் ஓதி ஊதித் தின்னக் கொடுக்க வேண்டும். அவர்களிடையே ஒற்றுமை ஏற்பட்டுவிடும்.

## சிறுநீரக கோளாறு விலக

وَهُوَ الَّذِي يُرْسِلُ الرِّيحَ بُشْرًا بَيْنَ يَدَيْ رَحْمَتِهِ ۖ
حَتَّىٰ إِذَا أَقَلَّتْ سَحَابًا ثِقَالًا سُقْنَاهُ لِبَلَدٍ مَّيِّتٍ
فَأَنزَلْنَا بِهِ الْمَاءَ فَأَخْرَجْنَا بِهِ مِن كُلِّ الثَّمَرَاتِ ۚ
كَذَٰلِكَ نُخْرِجُ الْمَوْتَىٰ لَعَلَّكُمْ تَذَكَّرُونَ ○

மேற்கண்ட (7:57) ஆவது திருவசனத்தை 21 தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்திவர வேண்டும்.

## பாம்பு, தேள் வராதிருக்க

أَوَأَمِنَ أَهْلُ الْقُرَىٰ أَن يَأْتِيَهُم بَأْسُنَا ضُحًى وَهُمْ يَلْعَبُونَ ۝ أَفَأَمِنُوا مَكْرَ اللَّهِ ۚ فَلَا يَأْمَنُ مَكْرَ اللَّهِ إِلَّا الْقَوْمُ الْخَاسِرُونَ ۝

*அல்லது, இவ்வூரார் (கவலையற்று) பகலில் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது, நம்முடைய வேதனை அவர்களை வந்தடையாதென்று அவர்கள் அச்சமற்றிருக்கின்றனரா? அல்லாஹ்வின் பிடியிலிருந்து அவர்கள் அச்சமற்றிருக்கின்றனரா? (முற்றிலும்) நஷ்டமடையக் கூடிய ஜனங்களைத் தவிர, எவரும் அல்லாஹ்வின் பிடிக்கு அச்சமற்றிரார்.*

பாம்பு, தேள் முதலியவற்றிலிருந்து தற்காத்துக் கொள்வதற்கு இந்த ஸூராவில் மேற்கண்ட 98, 99 ஆகிய இருவசனங்களையும் முஹர்ரம் மாதம் முதல் தேதியன்று காகிதத்தில் எழுதி அதனைத் தண்ணீரில் கரைத்து வீடு முழுவதும் தெளிக்க வேண்டும்.

## சுவனம் புக

*வ லில்லாஹில் அஸ்மாவுல் ஹுஸ்னா*
*ஃபத்ஊஹு பிஹா*
- பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

''இறைவனுக்குத் தொண்ணூற்றொன்பது பெயர்கள் இருக்கின்றன. அவற்றை மனனம் செய்தவன் சொர்க்கத்தை அடைவான்.''

''இறைவன் ஒற்றையையே விரும்புகிறான்!''

**காது கேளாமை நீங்க**

وَإِذَا قُرِئَ الْقُرْآنُ فَاسْتَمِعُوا لَهُ وَأَنْصِتُوا
لَعَلَّكُمْ تُرْحَمُونَ ○

''வஇதா குரிஅல் குர்ஆனு ஃபஸ்தமிவூ லஹூ வ அன் ஸித்து லஅல்லக்கும் துர்ஹமூன்'' என்ற 7:204-ஆவது ஆயத்தை காதில் ஊதச் செய்ய வேண்டும்.

**குழப்பம் நீங்க, வஸ்வஸா நீங்க**
**தீய எண்ணங்கள் விலக**

குழப்பம் ஏற்பட்டுவிட்டால், அடியில் காணும் வசனத்தை ஓதும்படி அப்துல்லாஹ் யாபியீ (ரஹ்) கூறுகிறார்கள்:

هُوَ الْأَوَّلُ وَالْآخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ
بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ ۝ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ مُحَمَّدٌ رَّسُولُ اللّٰهِ

மேற்குறிப்பிட்ட வார்த்தைகள் காதில் விழுந்ததும் ஷைத்தான் விலகிப் போய்விடுவான்.

''லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பது 'திக்ர்'களில் உயர்ந்ததாகும். 'வஸ்வாஸ்' என்னும் குழப்பத்தைப் போக்கக் கூடிய பரிகாரங்களில் மிகப் பயனுள்ளதாகும்.

# சூரா அன்ஃபால்

**பெருமானாரின் பரிவுரைபெற**

பெருமானார் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியிருக்கிறார்கள்; சூரா அன்பாலையும் சூரா தௌபாவையும்

ஓதுகிறவனுக்கு நான் சிபாரிசு செய்வேன். 'நிபாக்' எனும் வஞ்சகம் இல்லாதவன் என்று சான்று கூறுவேன்; அவன் உலகில் வாழும் காலமெல்லாம் 'அர்ஷை'ச் சுமக்கும் வான வர்கள் அவனுக்காகப் பாவமன்னிப்புக் கோருவார்கள்.

## சிறையிலிருந்து வெளியேற

சிறைக்குள்ளிருப்பவன் இந்த ஸூராவை தினம் ஏழு தடவை ஓதினால் அல்லது அவனுக்காக அவனது உறவினரில் ஒருவர் இப்படி ஓதினால், அவனுக்கு விடுதலை கிடைக்கும்.

## கொடிய மனம் திருந்த

إِنَّمَا الْمُؤْمِنُونَ الَّذِينَ إِذَا ذُكِرَ اللَّهُ وَجِلَتْ
قُلُوبُهُمْ وَإِذَا تُلِيَتْ عَلَيْهِمْ آيَاتُهُ زَادَتْهُمْ
إِيمَانًا وَعَلَىٰ رَبِّهِمْ يَتَوَكَّلُونَ ۝

பொருள்: ''மெய்யான விசுவாசிகள் யாரென்றால் அல் லாஹ்வுடைய திருநாமம் (அவர்கள் முன்) கூறப்பெற்றால் அவர்களுடைய இருதயங்கள் பயந்து நடுங்கிவிடும். அல் லாஹ்வுடைய வசனங்கள் அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப் பெற்றால் அவர்களின் விசுவாசம் (பின்னும்) பின்னும் அதிகரிக்கும்; அவர்கள் தங்கள் இறைவனையே முற்றிலும் நம்பி இருப்பார்கள்.'' *(8:2)*

அறிவுரைகளைக் கேட்டு அதன்படி நடக்காதவன், நற்கா ரியம் செய்யும் எண்ணமில்லாதவன், கொடிய மனம் படைத் தவன். இவர்களைத் திருத்தும் வழி: உப்பு கலக்காமல் கோதுமையினால் செய்த ரொட்டியில் மேற்குறிப்பிட்ட வச னத்தை ஏழு தடவை எழுதி - மையில்லாமல் வெறும் பேனாவினால் எழுதி அதைக் கொண்டு இவர்கள் நோன்பு திறக்க வேண்டும். மனப்பண்பு மாறுதலடைந்துவிடும்.

### பகைவரை வெற்றி கொள்ள

*''வமா ஜஅலஹு ல்லாஹு இல்லா புஷ்ரா வலி தத்ம இன்ன பிஹி குலூபுகும் வமன்னஸ்ரு இல்லா மின் இந்தில் லாஹி இன்னல்லாஹ அஸீஸுன் ஹகீம்.''*

*''உங்கள் இருதயங்கள் திருப்தியடையும் பொருட்டு ஒரு நன்மாராயமாகவே இதனை அல்லாஹ் (உங்களுக்கு ஆக்கி) வைத்தால் அல்லாஹ்விடமிருந்தேயன்றி (உங்களுக்கு) இவ் வுதவி கிடைத்துவிடவில்லை. நிச்சயமாக அல்லாஹ் யாவற் றையும் மிகைத்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கி றான்.'' (8:10)*

*இந்த வசனத்தை ரமலான் மாதம் பிறை 26-இல் ஒரு காகிதத்தில் எழுதி, அதை வெள்ளி மோதிரத்தில் புதைத்து அணிந்து கொள்ள வேண்டும். ஒருவன் இப்படி அணிந்து கொண்டால் அவனுக்கு மகிழ்ச்சி ஏற்படுவதோடு, பகைவ ரையும் அவன் வெற்றி கொள்வான்.*

### கடினமான வேலை சுலபமாக ஆக

*கடினமான சுமை தூக்குகிறவர்கள், சிரமமான வேலைக ளைச் செய்கிறவர்கள் இந்த சூராவின் 66-வது வசனத்தை உபயோகித்துக் கொள்ளலாம். இந்த வசனத்தை வெள்ளிக்கி ழமை அஸர் தொழுகையிலிருந்து அடுத்த வெள்ளிக்கிழமை ஜும்ஆத் தொழுகைக்குப் பின்னாலும் வேலையில்லாத நேரத்திலும் இரவிலும் பகலிலும் அதிகமாக ஓதி வரவேண் டும். 'அல்ஆன' என்று ஆரம்பமாகும். இந்த வசனம் 'மஅஸ் ஸாபிரீன்' என்று முடிகிறது.*

## சூரா தௌபா

### அதிகாரிகளிடம் தேவை நிறைவேற

*திருக்குர்ஆனில் ஒன்பதாம் அத்தியாயமாக இடம் பெற்றிருக்கிற சூரா தௌபா (சூரா 'பராஅத்' என்றும்*

சொல்வதுண்டு)வை ஒருவன் ஓதிக்கொண்டு தன் தேவையை உத்தேசித்து அரசாங்க அதிகாரியிடம் சென்றால், அவன் தேவை இலகுவாக முடியும்.

## பொருள்கள் பாதுகாப்புப் பெற

இந்த ஸூராவை எழுதிச் சாமான்களில் வைத்தால் தண்ணீர், நெருப்பு, திருட்டு ஆகிய தீங்குகளிலிருந்து அவை பாதுகாக்கப்படும்.

## நெஞ்சு வலி நீங்க

'வயஷ்ஃபி சுதூர கௌமிம் மூஃமினீன்' என்ற ஆயத்தை 41 தடவை ஜம்ஜம் தண்ணீரில் ஓதி ஊதி அருந்த வேண்டும். ஆயத்தின் பொருள்: விசுவாசம் கொண்ட மக்களின் இதயங்களுக்கு திருப்தியும் அளிப்பான்.

## செல்வாக்கும் சிறப்பும் பெற

يُرِيْدُوْنَ اَنْ يُّطْفِـُٔوْا نُوْرَ اللّٰهِ بِاَفْوَاهِهِمْ
وَيَاْبَى اللّٰهُ اِلَّآ اَنْ يُّتِمَّ نُوْرَهٗ وَلَوْ كَرِهَ الْكٰفِرُوْنَ ○
هُوَ الَّذِيْٓ اَرْسَلَ رَسُوْلَهٗ بِالْهُدٰى وَدِيْنِ الْحَقِّ
لِيُظْهِرَهٗ عَلَى الدِّيْنِ كُلِّهٖ ۙ وَلَوْ كَرِهَ الْمُشْرِكُوْنَ ○

இவர்கள் தங்களின் வாய்களைக் கொண்டே (ஊதி) அல்லாஹ்வுடைய பிரகாசத்தை அழித்துவிட விரும்புகின்றனர். எனினும் இந்நிராகரிப்போர் வெறுத்த போதிலும் அல்லாஹ் தன்னுடைய பிரகாசத்தை பூர்த்தியாக்கி வைக்காமல் இருக்கப் போவதில்லை. அவன்தான் தன்னுடைய தூதரை நேரான வழியைக் கொண்டும், சத்திய மார்க்கத்தைக் கொண்டும் அனுப்பி வைத்தான். இணை வைத்து வணங்குவோர் (அதனை) வெறுத்த போதிலும்

(உலகிலுள்ள) எல்லா மார்க்கங்களையும் அந்த சத்திய மார்க்கம் வென்றுவிடும். (9:32, 33)

போகும் இடமெல்லாம் செல்வாக்கும் தன் வார்த்தைக்கு ஒப்புதலும் கிடைக்க வேண்டும் என்று ஒருவன் விரும்பினால் அதற்குரிய முறை இதோ இருக்கிறது.

இந்த சூராவில் மேற்கண்ட 32, 33 ஆகிய இரண்டு வசனங்களையும் குங்குமப்பூ, பன்னீர் கொண்டு புதிய பளிங்குத் தட்டில் எழுத வேண்டும். பிறகு அதற்கு அகிற்கட்டைப் புகை போட்டு சம்பங்கி - முல்லை எண்ணெய்யால் அழித்து அந்த எண்ணெய்யை பச்சை நிற சீசாவில் ஊற்றி வைத்துக் கொள்ள வேண்டும். தேவையை உத்தேசித்து யாரிடமாவது செல்ல நேர்ந்தால், அந்த எண்ணெய்யைத் தொட்டு தன் புருவங்கள் இரண்டிலும் தடவிக் கொண்டு செல்ல வேண்டும். மரியாதையும் ஒப்புதலும் கிடைக்கும்.

மேற்குறிப்பிட்ட பயனை அடைவதற்கு மற்றொரு வழி இந்த வசனங்கள் இரண்டையும் தோலில் எழுதி வாசனை புகைபோட்டு, வலக்கரத்தில் கட்டிக் கொள்ள வேண்டும்.

## தொழிலில் முன்னேற

إِنَّ اللّٰهَ اشْتَرٰى مِنَ الْمُؤْمِنِيْنَ أَنْفُسَهُمْ
وَأَمْوَالَهُمْ بِأَنَّ لَهُمُ الْجَنَّةَ يُقَاتِلُوْنَ فِيْ سَبِيْلِ
اللّٰهِ فَيَقْتُلُوْنَ وَيُقْتَلُوْنَ وَعْدًا عَلَيْهِ حَقًّا
فِي التَّوْرٰىةِ وَالْإِنْجِيْلِ وَالْقُرْاٰنِ وَمَنْ أَوْفٰى بِعَهْدِهٖ
مِنَ اللّٰهِ فَاسْتَبْشِرُوْا بِبَيْعِكُمُ الَّذِيْ
بَايَعْتُمْ بِهٖ وَذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ ○

அல்லாஹ், விசுவாசிகளுடைய உயிர்களையும் பொருள் களையும் நிச்சயமாக அவர்களுக்குச் சுவனபதி தருவதாகக் (கூறி) மெய்யாகவே விலைக்கு வாங்கிக் கொண்டான். அவர்கள் அல்லாஹ்வுடைய பாதையில் யுத்தம் புரிந்து அவர் களை (விரோதிகளை) வெட்டுவார்கள். (அல்லது) வெட்டப் பட்டு (இறந்து) விடுவார்கள். (இவ்விரு நிலைமைகளிலும் அவர்களுக்குச் சுவனபதி தருவதாக) தௌராத்திலும் இன்ஜீலி லும் குர்ஆனிலும் (அல்லாஹ்) வாக்களித்துத் தன்மீது கடமை யாக்கிக் கொண்டிருக்கிறான். அல்லாஹ்வை விட வாக்குறுதி யைப் பூரணமாக நிறைவேற்றுபவன் யார்? ஆகவே (விசுவா சிகளே!) நீங்கள் செய்த இவ்வர்த்தகத்தைப் பற்றி மகிழ்ச்சிய டையுங்கள்; நிச்சயமாக இது(வன்றோ) மகத்தான பெரும் பாக்கியம்! *(9:111)*

வியாபார அதிகரிப்புக்கு இந்த சூராவில் மேற்கண்ட 111-ஆவது வசனத்தை ஒரு காகிதத்தில் எழுதிச் சரக்குகளோடு வைத்துவிட வேண்டும்.

## இரணம் அதிகரிக்க

பிஸ்மியுடன் ஆயத்துல் குர்ஸியை ஹாலிதூன் வரை ஓதிப் பின்னர் பிஸ்மியுடன் சூரா ஃபலக்கையும் பிஸ்மியுடன் சூரா நாஸையும் ஓதி,

قُلْ لَّنْ يُّصِيْبَنَآ اِلَّا مَا كَتَبَ اللّٰهُ لَنَا ۚ هُوَ مَوْلٰىنَا ۚ وَعَلَى اللّٰهِ فَلْيَتَوَكَّلِ الْمُؤْمِنُوْنَ ۝

குல்லை யுஸீபனா இல்லா மாக(த்) தபல்லாஹு லனா ஹுவ மவ்லானா வ அலல்லாஹி ஃபல்ய(த்)த வக்கலில் முஃமினூன். *(9:51)*

என்பதையும் ஓதி வரவேண்டும்.

ஆயத்தின் பொருள்: அல்லாஹ் எங்களுக்கு விதித்ததைத் தவிர வேறொன்றும் நிச்சயமாக எங்களை அணு

காது அவன் எங்களுடைய இரட்சகன் என்று நீர் கூறுவீராக. விசுவாசிகள் அனைவரும் அல்லாஹ்வையே நம்பி இருக்கவும்.

**சுவர்க்கம் புக**

لَقَدْ جَآءَكُمْ رَسُولٌ مِّنْ أَنفُسِكُمْ عَزِيزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ حَرِيصٌ عَلَيْكُم بِالْمُؤْمِنِينَ رَءُوفٌ رَّحِيمٌ ۝ فَإِن تَوَلَّوْا فَقُلْ حَسْبِيَ اللَّهُ لَآ إِلَٰهَ إِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ ۝

*(விசுவாசிகளே! நம்முடைய) ஒரு தூதர் நிச்சயமாக உங்களிடம் வந்திருக்கின்றார். அவர் உங்களிலுள்ளவர் தாம். நீங்கள் துன்பத்திற்காளாகிவிட்டால் அது அவருக்கு மிக வருத்தமாகவே இருக்கும். அன்றி உங்களுடைய நன்மையையே பெரிதும் விரும்புகின்றவராகவும் விசுவாசி(களாகிய உங்)கள் மீது மிக்க அன்பும் கிருபையும் உடையவராகவும் இருக்கின்றார்: (நபியே இதற்குப்) பின்னரும் அவர்கள் (உம்மைப் பின்பற்றாது) விலகிக் கொண்டால் (அவர்களை) நோக்கி நீர் கூறும்: அல்லாஹ்வே எனக்குப் போதுமானவன். அவனைத் தவிர வேறு நாயன் இல்லை. அவன் மீது நான் தவக்குல் வைத்திருக்கிறேன்; இன்னும் அவன் மகத்தான அர்ஷுக்கு இரட்சகன். (9:128,129)*

ஒருநாள் இப்னு முஜாயித் (ரஹ்) அவர்கள் தம் மாணவர்களுடன் பள்ளியில் அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது அங்கு ஷிப்லி (ரஹ்) அவர்கள் வரவே அவர்கள் எழுந்து நின்றார்கள்.

அதுகண்ட மாணவர்களில் ஒருவர் அமைச்சர் அலீ இப்னு மூஸா வந்த பொழுதுகூட தாங்கள் எழுந்து நிற்கவில்லையே! தாங்கள் இப்பொழுது ஏன் எழுந்து நின்றீர்கள்? என்று வினவினார்.

அதற்கு இப்னு முஜாயித் (ரஹ்) அவர்கள், ''எம் பெருமானார் (ஸல்) அவர்களால் மதிக்கப்பெறும் ஒருவருக்கு நான் மரியாதை செய்ய வேண்டாமா? சில நாட்களுக்கு முன் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் என் கனவில் திருத்தோற்றம் வழங்கி, சுவனவாசிகளில் ஒருவர் நாளை உம்மிடம் வருகிறார்' என்று அமுதவாய் விண்டு மறைந்தனர்' என்று சொன்னார்கள்.

இதற்கு இரண்டு நாட்களுக்குப் பின் மீண்டும் எம்பெருமானார் (ஸல்) அவர்கள் என் கனவில் தோன்றி ''சுவனவாசிகளில் ஒருவரை நீர் கௌரவித்தீர். அதன் காரணமாக இறைவன் உம்மையும் சுவனவாசிகளில் ஒருவராக ஆக்கியுள்ளான்'' என்று கூறினர்.

அதுகேட்ட நான் ''அபூபக்கர் ஷிப்லி சுவனவாசிகளில் ஒருவராகக் காரணம் யாது?'' என்று வினவினேன். அதற்கு எம்பெருமானார் (ஸல்) அவர்கள், ''அவர் எண்பது ஆண்டுகளாக ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் திக்ரு, ஸலவாத் ஆகியவற்றை ஓதிய பின் ஸூரா தௌபாவின் 128, 129-ஆவது திருவசனங்களை ஓதி வருகிறார்'' என்று திருவாய் மலர்ந்தனர். அத்திருவசனங்களே மேலே பொறிக்கப்பட்ட,

'லகத் ஜாஅகும்... ரப்புல் அர்ஷில் அளீம் என்ற திருவசனங்களாகும்.

## திருமணம் நிகழ

ஒரு பெண் இதனை எழுதித் தாயத்தாக அணிந்து கொண்டால் விரைவில் அவளுக்குத் திருமணம் நிகழும்.

## இறைகாவலும் இரண அதிகரிப்பும் எய்தப் பெற

இதனை ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பின்பும் வழக்கமாக ஓதி வர வேண்டும் என்று ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## நலன்கள் அனைத்தும் பெற

இந்த வசனங்களை பர்ளான தொழுகைக்குப் பின்னால் தினசரி ஒருவன் ஓதி வந்தால்... அவன் பலவீன

னாக இருந்தால் பலசாலியாவான்; தாழ்ந்த நிலையில் இருந்தால் உயர்வடைவான்; தோல்வியுற்றவனாக இருந்தால் வெற்றியடைவான், வறுமையுற்றிருந்தால் செல்வமடைவான்; கடன்பட்டிருந்தால் அதிலிருந்து விடுதலை பெறுவான்; துக்கம் கொண்டிருந்தால் மகிழ்ச்சியடைவான். நன்மைக்கான வாசலையே அவனுக்கு முன்னால் இறைவன் திறந்து வைத்து விடுவான்.

## சிறையிலிருந்து வெளியேற

இவற்றைச் சிறையிலிருப்பவன் தினம் 41 தடவை ஓதினால் விடுதலை கிடைக்கும்.

## பெருமானாரைக் கனவில் தரிசிக்க

இவற்றை தினம் 41 தடவை ஓதி வருபவன் வியக்கத்தக்க பலன்களை அடைவான். இதன் மூலம் பெருமானாரையே கனவில் காணலாம்.

அடுத்து வரும் செய்திகளை நபித்தோழர் அபூதர்தா (ரலி) அவர்கள் வெளியிட்டதாகக் கூறப்படுகிறது.

## இம்மை மறுமைப் பேறு பெற

''இவ்விரு வசனங்களையும் தினம் 7 முறை ஒருவன் ஓதி வந்தால், அவனுடைய இம்மை மறுமைக் காரியங்கள் அனைத்தையும் இறைவன் நிறைவேற்றி வைப்பான். அவன் இடிபாட்டுக்குள்ளே நசுங்கியோ நெருப்பினால் கரிந்தோ தண்ணீருக்குள் மூழ்கியோ இறக்க மாட்டான்.''

## முறிந்த எலும்பு ஒழுங்குபட

அபூமஷ்ஹர் கூறியதாக லய்யித் பின் ஸஹத் தெரிவிக்கிறார்.

ஒருவருக்குத் தொடை எலும்பு முறிந்துவிட்டது. அவர் தூங்கும் போது யாரோ ஒருவர் கனவில் தோன்றினார்; ''முறிந்த இடத்தில் கையை வைத்து, 'பஇன் த வல்லவ்' எனும் வசனத்தை (9:29) இறுதிவரை ஓதுங்கள்'' என்றார்.

### அதிகாரிகளிடம் தேவை நிறைவேற

*இந்த 128, 129 ஆவது வசனங்களை எழுதி அணிந்து கொண்டு அதிகாரிகளிடம் சென்றால், நம் காரியத்தைச் சுலபமாக முடித்துக் கொள்ளலாம்.*

### நோயாளனுக்கு நிவாரணம் நல்க

*நோயாளனைச் சந்திக்குங்கால் அவனுக்கு நிவாரணம் கிடைக்க,*

*'அஸ் அலுல்லாஹல் அளீம், ரப்புல் அர்ஷில் அளீம் அன்யஷ்ஃபியக்க'*

*என்று ஏழு தடவை ஓதினால் இறப்பைத் தவிர உள்ள எந்த நோயாயிருந்தாலும் நிச்சயம் குணமாகும் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினர்.*

### மோசக்காரர்களிடமிருந்து பாதுகாப்புப் பெற

*128, 129 ஆவது வசனங்களை வெள்ளிக்கிழமை நள்ளிரவில் 30 தடவை ஓதி, ''இறைவனே! இன்னான் மகன் இன்னானின் உள்ளத்தை என் பக்கம் திருப்பி வைப்பாயாக! அவனை எனக்குப் பணிய வைப்பாயாக! நீ எனக்குப் போதுமானவன்'' என்று பிரார்த்தனை செய்தால், மோசக்காரனின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.*

### கால் விரல்களில் வலி, காயம்
### ஆகியவை நீங்கப் பெற

*'லகத்ஜா அகும்... ரவூஃபுர் ரஹிம்' (9:128) என்ற ஆயத்தை எழுதி தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.*

## சூரா யூனுஸ்

### திருடியவனைக் கண்டுபிடிக்க

*இந்த சூராவை 21 தடவை ஓதியவன் தன் பகைவரை வெற்றிக் கொள்வான். இதனை மான் தோலில் எழுதி அணிந்து கொண்டால் - ஜின், ஷைத்தான், துன்பங்கள்,*

நோய்களிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். இதனை செப்புத் தகட்டில் எழுதி, தேங்கிக் கிடக்கும் குளத்துத் தண்ணீரில் கரைத்து அந்தத் தண்ணீரைக் கலந்து மாவு பிசைந்து சந்தேகத் திற்குரியவர்களின் பெயர்களைச் சொல்லி மாவில் ஊதி, ரொட்டி தயாரிக்க வேண்டும். அந்த ரொட்டியில் ஒரு துண்டை நீங்கள் சந்தேகப்படும் ஆசாமிக்குச் சாப்பிடக் கொடுங்கள். அவன் திருடியிருந்தால், அவனால் அதைச் சாப்பிட முடியாது.

## இலகுவாக ஆன்மா பிரிய கப்ரின் வேதனை இலேசாக

இதனை வழக்கமாக ஓதி வருபவர்களுக்கு இலகுவாக ஆன்மா பிரியும். கப்ரின் வேதனையும் இலேசாகும்.

## பகைவரை வெல்ல

இதனை 21 தடவை ஓத வேண்டும்.

## துன்பம் நீங்க

இதனை 13 தடவை ஓதினால் துன்பம் நீங்கும்.

## நெஞ்சுவலி நீங்க

ஷிஃபாவுன் லிமா ஃபிஸ்ஸுதூர் (உங்களின் இருதயங்களிலுள்ள நோய்களுக்கு அது ஒரு சஞ்சீவியாகும். (10:57) என்ற ஆயத்தை ஏழு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தி வரவேண்டும்.

## தீய கனவு காணாதிருக்க

لَهُمُ الْبُشْرٰى فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَفِى الْاٰخِرَةِ ۚ
لَا تَبْدِيْلَ لِكَلِمٰتِ اللّٰهِ ۚ ذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ ۝

இவ்வுலக வாழ்விலும் மறுமையிலும் அவர்களுக்கு நன்மாராயம் உண்டு. அல்லாஹ்வுடைய வாக்குறுதியில் எவ்வித மாறுதலும் இருக்காது; இது மகத்தான பெரும் பாக்கியமாகும்.'' (10:64)

கெட்ட கனவு காண்கிறவர்கள் மேற்குறிப்பிட்ட வசனத்தை எழுதிக் கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும். அல்லது இதனைத் தூங்கும் போது ஓதிக் கொள்ள வேண்டும்.

## சூனியத்திலிருந்து நீங்க

فَلَمَّا جَاءَ السَّحَرَةُ قَالَ لَهُمْ مُوسَىٰ أَلْقُوا مَا أَنْتُمْ مُلْقُونَ ○ فَلَمَّا أَلْقَوْا قَالَ مُوسَىٰ مَا جِئْتُمْ بِهِ السِّحْرُ إِنَّ اللَّهَ سَيُبْطِلُهُ إِنَّ اللَّهَ لَا يُصْلِحُ عَمَلَ الْمُفْسِدِينَ ○ وَيُحِقُّ اللَّهُ الْحَقَّ بِكَلِمَاتِهِ وَلَوْ كَرِهَ الْمُجْرِمُونَ ○

''சூனியக்காரர்கள் வந்து சேரவே மூஸா, அவர்களை நோக்கி, ''நீங்கள் எறியக்கூடியதை எறியுங்கள்'' என்று கூறினார். அவர்கள் எறியவே மூஸா (அவர்களை நோக்கி) நீங்கள் செய்தவை யாவும் வெறும் சூனியம்தான். அதி சீக்கிரத்தில் நிச்சயமாக அல்லாஹ் இவைகளை அழித்து விடுவான்; நிச்சயமாக அல்லாஹ் விஷமம் செய்வோரின் செயலைச் சீர்படச் செய்வதில்லை. நிச்சயமாக அல்லாஹ் தன் அத்தாட்சிகளைக் கொண்டு சத்தியத்தை நிலைநாட்டியே தீருவான்; அதனைக் குற்றவாளிகள் வெறுத்தபோதிலும் சரியே என்று கூறினார். (10:80-82)

சூனியம் செய்யப்பட்டவர்களுக்கு மேற்குறிப்பிட்ட மூன்று வசனங்களை உபயோகிக்கலாம். இவற்றை எழுதிக் கழுத்தில் அணிவிக்க வேண்டும். அல்லது தட்டையில் எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்ய வேண்டும். சூனியம் எனும் 'ஸிஹ்ரி'லிருந்து விடுதலை கிடைக்கும்.

**தேள்கடி விஷம், மற்ற விஷங்கள் இறங்க**

*ஃபிர் அவ்ன் என்ற சொல்லிலுள்ள ஐந்து எழுத்துக்களை தலைகீழாக அதாவது நூன், வாவ். அய்ன், ரே, ஃபே என்று அரபியில் எழுதி அவ்வெழுத்துக்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கத்தியால் குத்திக் கொண்டிருந்தால் தேள் கடி விஷமும் மற்ற விஷங்களும் இறங்கும். இது கைகண்ட பலன் நல்க வல்லது.*

**வயிற்றுக் கடுப்பு அகல**

يٰٓاَيُّهَا النَّاسُ قَدْ جَآءَتْكُمْ مَّوْعِظَةٌ مِّنْ
رَّبِّكُمْ وَشِفَآءٌ لِّمَا فِى الصُّدُوْرِ ۙ وَهُدًى
وَّرَحْمَةٌ لِّلْمُؤْمِنِيْنَ ۝ قُلْ بِفَضْلِ اللّٰهِ
وَبِرَحْمَتِهٖ فَبِذٰلِكَ فَلْيَفْرَحُوْا ۗ هُوَ خَيْرٌ
مِّمَّا يَجْمَعُوْنَ ۝

*மேற்காணும் (10:57, 58) என்ற ஆயத்துக்களை எழுதித் தண்ணீரில் கரைத்து 21 நாட்கள் குடிக்க வேண்டும். மேலும் தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.*

**ஈரல் பற்றிய நோய் அகல**

اِنَّ رَبَّكُمُ اللّٰهُ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ
وَالْاَرْضَ فِىْ سِتَّةِ اَيَّامٍ ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ

*மேலேயுள்ள (10:3) ஆயத்தை எழுதி தஃவீஸ் செய்து வலிக்கும் இடத்தில் கட்ட வேண்டும்; மழைநீரில் ஓதி ஊதி ஏழு நாட்கள் அருந்தி வரவேண்டும்.*

# சூரா ஹூது

## எண்ணங்கள் நிறைவேற

*ஏதேனும் முக்கிய காரியம் நிறைவேற வேண்டுமென் றால் இந்த சூராவை 13 தடவை ஓதி இறைவனிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். இறைவன் அந்தக் காரி யத்தை முடித்துத் தருவான்.*

## போராட்டத்தில் வெற்றி பெற

*இதனை ஒருவன் மான் தோலில் எழுதித் தன்னிடம் வைத்துக் கொண்டால், போராட்டத்தின்போது சக்தியும் வெற்றியும் கிடைக்கும். அவனுக்கு எதிராக நூறுபேர் போரா டினாலும் அவனுக்கே வெற்றி கிடைக்கும். அவனைக் கண்ட வர்கள் பயப்படுவார்கள். அவனுக்கு முன்னால் யாராலும் விரோத வார்த்தைகளைப் பேசமுடியாது.*

## குழந்தைகள் படுக்கையில் சிறுநீர் பெய்யாதிருக்க

*'யா அர்ளுப் லஊ மாஅகி வயா ஸமாஉ அக்லியி வகீலல் மாவு வகுழியல் அம்ரு' (பூமியே) நீ உன் நீரை விழுங்கிவிடு, வானமே மழை பொழிவதை நிறுத்திவிடு' என்று கட்டளை பிறப்பிக்கப்படவே நீர் வற்றிவிட்டது. காரியம் முடிந்து விட்டது. (11:45) என்பதை ஒரு பீங்கானில் ஏழு தடவை எழுதிக் கழுவிக் குடிக்கவேண்டும்.*

## அறிவுத் தெளிவு பெற

*இந்த சூராவை குங்குமப்பூவால் எழுதி மூன்று நாள் காலையும் மாலையும் சாப்பிட்டால், உள்ளம் வலுவடையும் ஜின்னே எதிர்த்தாலும் அவனுக்குப் பயம் ஏற்படாது. அவன் இதயம் விரிவடைவதோடு, நினைவாற்றல், சிரமமான விஷ யங்களை உணரும் ஆற்றல், தெளிந்த ஞானம் எல்லாம் கிடைத்து விடும்.*

## கப்பல் பாதுகாப்புப் பெற

இந்த சூராவைத் தேக்கு பலகையில் செதுக்கி அந்தப் பலகையைக் கப்பலின் முன்புறமோ பின்புறமோ ஆணி வைத்து அறைந்து விட்டால் எல்லாவிதமான ஆபத்துகளிலிருந்தும் அந்தக் கப்பலுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.

## பகைவனின் பயம் நீங்க

إِنِّيْ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ رَبِّيْ وَرَبِّكُمْ
مَا مِنْ دَآبَّةٍ اِلَّا هُوَ اٰخِذٌ بِنَاصِيَتِهَا
اِنَّ رَبِّيْ عَلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ ○ فَاِنْ
تَوَلَّوْا فَقَدْ اَبْلَغْتُكُمْ مَّآ اُرْسِلْتُ بِهٖٓ
اِلَيْكُمْ وَيَسْتَخْلِفُ رَبِّيْ قَوْمًا غَيْرَكُمْ
وَلَا تَضُرُّوْنَهٗ شَيْــًٔا اِنَّ رَبِّيْ عَلٰى كُلِّ
شَيْءٍ حَفِيْظٌ ○

''நிச்சயமாக நான் என் அலுவல்கள் அனைத்தையும் என்னையும் உங்களையும் படைத்துப் பரிபாலிப்பவனாகிய அல்லாஹ்வினிடமே ஒப்படைத்து விட்டேன். ஒவ்வொரு ஜீவ ராசியின் முன் உச்சிக் குடுமியையும் அவனே பிடித்துக் கொண்டிருக்கிறான். நிச்சயமாக என் இறைவன் (நீதியின்) நேரான வழியில் இருக்கிறான். நீங்கள் (என்னைப்) புறக்கணிப்பீர்களாயின் (அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை, ஏனெனில்) நான் உங்களிடம் எதற்காக அனுப்பப்பட்டேனோ அதை நிச்சயமாக நான் உங்களுக்கு எடுத்துரைத்து விட்டேன்; (உங்களை அழித்து) உங்களை அல்லாத வேறு ஜனங்களை என் இறைவன் உங்கள் இடத்தில் வைத்து விடுவான். (இதற்காக) நீங்கள் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது. நிச்சயமாக என் இறைவன் அனைத்தையும் பாதுகாப்போனாக இருக்கிறான்.'' (ஆகவே அவன் என்னையும் ரட்சித்துக் கொள்வான்.) *(11:56, 57)*

*மிருகம், அநியாயக்காரன், பகைவன், அரசன் ஆகியவர்களுக்குப் பயப்படுகிறவன் மேற்குறிப்பிட்ட வசனங்களைத் தூங்கச் செல்லும்போதும் தூக்கத்திலிருந்து விழித்ததும், காலையும் மாலையும் அதிகமாக ஓதி வர வேண்டும்.*

## கப்பல் பிரயாணிகள் பாதுகாவல் பெற

*கப்பலில் பிரயாணம் செய்பவன் இவற்றை அதிகமாக ஓதிவந்தால் பாதுகாப்புக் கிடைக்கும். கடலின் அமளிகளிலிருந்து அவன் காக்கப்படுவான்.*

## அதிகாரிகள் தீங்கு செய்யாதிருக்க

*அதிகாரிகளிடம் செல்லும்போது இவற்றை ஓதிக்கொள்ளலாம். ஓதுகிறவனுக்கும் அவனது உடைமைகளுக்கும் பாதுகாப்புக் கிடைக்கும்.*

## குழந்தை காக்கப் பெற

*இவற்றை எழுதிக் குழந்தையின் கழுத்தில் அணிவித்தால் நோய்களிலிருந்து, துன்பங்களிலிருந்து குழந்தை காக்கப்படும்.*

## ஊழியன் கீழ்படிந்து நடக்க

*''இன்னீ தவக்கலத்து... ஸிராத்தல் முஸ்தகீம்'' என்பதை ஊழியனின் முன் தலைமுடியைப் பிடித்துக் கொண்டு மூன்று தடவை ஓதி ஊத வேண்டும்.*

## உள்ளம் விரிவடைய

فَاسْتَقِمْ كَمَآ اُمِرْتَ وَمَنْ تَابَ مَعَكَ وَلَا
تَطْغَوْا ۭ اِنَّهٗ بِمَا تَعْمَلُوْنَ بَصِيْرٌ ○

*''உமக்கேவப்பட்ட பிரகாரம் நீரும் உம்முடன் இருக்கும் இணை வைத்து வணங்குவதிலிருந்து விலகிய*

வரும் (நேரான வழியில்) உறுதியாக இருங்கள்; இதில் சிறிதும் தவறி விடாதீர்கள். நிச்சயமாக அவன் உங்கள் செயலை உற்று நோக்கியவனாக உள்ளான்.''

மேற்குறிப்பிட்ட வசனத்தை 'பர்ளான' எல்லாத் தொழுகைக்குப் பின்னாலும் 11 தடவை ஓதி வந்தால் உள்ளம் விரிவடையும்.

# சூரா யூசுப்

## வருமானம், கண்ணியம் பெருக

இந்த சூராவை எழுதிக் கரைத்துக் குடித்து இறைவனிடம் பிரார்த்தனை செய்தால் வருமானத்தில் பெருக்கமும் மனிதர்களிடத்தில் கண்ணியமும் ஏற்படும்.

## மனைவி நேசிக்க

ஒருவன் இதனை எழுதி 'தஃவீஜ் செய்து அணிந்து கொண்டால், அவன் மனைவி அவனைப் பெரிதும் நேசிப்பாள்.

## அரசனின் ஆதரவு பெற

இதனை 13 தடவை ஓதிக்கொண்டு அரசனிடம் சென்றால், அரசன் தயவு காட்டுவான், கேட்டதை எல்லாம் கொடுப்பான்.

## வீடு புனிதம் பெற

இதனை எழுதி வீட்டுச் சுவரில் ஒட்டினால் அந்த வீட்டிலுள்ள எல்லாருக்கும் பாதுகாப்பு கிடைக்கும்; மற்ற எல்லாருக்கும் அந்த வீடு புனிதமானதாக ஆகிவிடும்.

## அழகிய ஆண் குழந்தை பெற

எழுத்து அழிந்து போகாதபடி இதனை எழுதிக் கர்ப்பிணி அணிந்து கொண்டால், இறைவனின் நாட்டப்படி அழகான ஆண் குழந்தை பிறக்கும்.

## இழந்த வேலையை மீண்டும் பெற

வேலையிலிருந்து நீக்கப்பட்டவன் இந்த சூராவை அதிக மாக ஓத வேண்டும். மீண்டும் வேலை கிடைத்துவிடும்.

## சிறையிலிருந்து விடுதலை பெற

சிறைப்பட்ட ஒருவன் தூய உள்ளத்துடன் இந்த சூராவை ஓதின் அவன் சிறையிலிருந்து விடுதலை பெறுவான். இது சோதிக்கப்பட்டதாகும்.

## நட்பு ஏற்பட

يُوسُفُ أَعْرِضْ عَنْ هَٰذَا ۚ وَاسْتَغْفِرِي لِذَنْبِكِ ۖ
إِنَّكِ كُنْتِ مِنَ الْخَاطِئِينَ ○ وَقَالَ نِسْوَةٌ فِي
الْمَدِينَةِ امْرَأَتُ الْعَزِيزِ تُرَاوِدُ فَتَاهَا عَنْ نَفْسِهِ ۖ
قَدْ شَغَفَهَا حُبًّا ۖ إِنَّا لَنَرَاهَا فِي ضَلَالٍ مُبِينٍ ○

(யூசுபை நோக்கி) "யூசுபே! நீ இதனை இம்மட்டில் விட்டு விடு, நீ உன் பாவத்திற்கு மன்னிப்பைத் தேடிக்கொள். நிச்சயமாக பெண்ணே! நீ தான் குற்றம் செய்தவர்களில் விருத்தியாய் இருக்கிறாய் என்று கூறினார். (இவ்விஷயம் வெளியில் பரவவே) அப்பட்டணத்திலுள்ள பெண்கள் பல ரும் 'அஸீஸுடைய மனைவி தன்னிடமுள்ள ஒரு (அடிமை) வாலிபனைத் தனக்கு இணங்கும்படி வற்புறுத்துகிறாள். காதல் அவளை மயக்கி விட்டது. நிச்சயமாக அவள் மிகத் தவறான வழியில் இருப்பதை நாங்கள் காண்கிறோம்' என்று (இழிவாகப்) பேசலானார்கள். (12:29, 30) இந்த சூராவின் இந்த 29, 30 ஆகிய வசனங்களை ஓதி மிட்டாயில் ஊதிக் கொடுத்தால் நட்பு ஏற்படும்.

## எவரையும் பயணம் அனுப்பி வைக்க

فَاللّٰهُ خَيْرٌ حَافِظًا ۖ وَّهُوَ اَرْحَمُ الرّٰحِمِيْنَ ○

''இரட்சிப்பதில் அல்லாஹ் மிக்க மேலானவன்; அவனே அருள் புரிவோரில் எல்லாம் மிக்க அருளாளன்'' என்று கூறி விட்டார்.''

ஒருவரைப் பயணம் அனுப்பி வைக்கும்பொழுது இதனை ஓதின் அதனால் அவர் இறைகாவல் பெறுவதோடு எல்லோருக்கும் நலமும் மகிழ்ச்சியும் ஏற்படும்.

புன்யாமீனை யஃகூப் (அலை) மிஸ்ருக்கு அனுப்பும் பொழுது இதனையே ஓதி அனுப்பினர். அதன் காரணமாக புன்யாமீன் மிஸ்ரில் சிறப்புப் பெற்றதும் யஃகூப் (அலை) அவர்களும் யூசுஃப் (அலை) அவர்களும் சந்திக்க நேர்ந்து மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்ததும் வரலாறு தரும் உண்மையா கும்.

## துன்பம் அணுகாதிருக்க

துன்பங்களுக்கும் சோதனைகளுக்கும் பயந்தவன் மேற் குறிப்பிட்ட வசனத்தை அதிகமாக ஓதி வரவேண்டும்.

## தேவை நிறைவேற

وَلَمَّا دَخَلُوْا مِنْ حَيْثُ اَمَرَهُمْ اَبُوْهُمْ ۗ مَا كَانَ يُغْنِيْ عَنْهُمْ مِّنَ اللّٰهِ مِنْ شَيْءٍ اِلَّا حَاجَةً فِيْ نَفْسِ يَعْقُوْبَ قَضٰىهَا ۚ

''(எகிப்து சென்ற) அவர்கள் தங்களின் தந்தையின் கட்டளைப்படி வெவ்வேறு பாதைகள் வழியாக நுழைந்த தனால் யஃகூபினுடைய மனத்திலிருந்த ஓர் எண்ணத்தை அவர்கள் நிறைவேற்றியதைத் தவிர அல்லாஹ்வுடைய யாதொரு கற்பனையும் அவர்களை விட்டும் தடுக்கக் கூடிய

தாக இருக்கவில்லை, எனினும் நிச்சயமாக நாம் அவருக்கு (யூசுபைப் பற்றியும் புன்யாமீனைப் பற்றியும்) அறிவித்திருந்த தால் அவர் (அதனை) அறிந்தவராகவே இருந்தார். எனினும் மனிதர்களில் பெரும்பாலோர் (அதனை) அறியாதவர்களா கவே இருந்தனர்.''

தன் தேவையை முடித்துக் கொள்வதற்காக புறப்படுகிற வன் மேற்குறிப்பிட்ட வசனத்தை 7 தடவை ஓதிக் கொள்ள வேண்டும்.

## துன்ப வேளையில் இறைகாவல் பெற

'மஆஃதல்லாஹி இன்னஹு அஹ்ஸனுரப்பி மஃத்வா' சுலைகா யூசுபைக் கதவை தாளிட்டுக் கொண்டு வற்புறுத்திய பொழுது யூசுப் (அலை) அவர்கள் இதனை ஓதியதன் காரண மாக அவளின் கொடும் பிடியிலிருந்தும், தவறிப் படுகுழியில் விழுவதிலிருந்தும் இறைவனால் காப்பாற்றப்பட்டனர்.

**பகைவர் பயம் நீங்க**

فَلَمَّا دَخَلُوا عَلَىٰ يُوسُفَ آوَىٰ إِلَيْهِ أَبَوَيْهِ
وَقَالَ ادْخُلُوا مِصْرَ إِن شَاءَ اللَّهُ آمِنِينَ ۝ وَرَفَعَ
أَبَوَيْهِ عَلَى الْعَرْشِ وَخَرُّوا لَهُ سُجَّدًا ۖ وَقَالَ
يَا أَبَتِ هَٰذَا تَأْوِيلُ رُؤْيَايَ مِن قَبْلُ قَدْ جَعَلَهَا
رَبِّي حَقًّا ۖ وَقَدْ أَحْسَنَ بِي إِذْ أَخْرَجَنِي مِنَ
السِّجْنِ وَجَاءَ بِكُم مِّنَ الْبَدْوِ مِن بَعْدِ أَن
نَّزَغَ الشَّيْطَانُ بَيْنِي وَبَيْنَ إِخْوَتِي ۚ إِنَّ رَبِّي
لَطِيفٌ لِّمَا يَشَاءُ ۚ إِنَّهُ هُوَ الْعَلِيمُ الْحَكِيمُ ۝

நீண்டநாளாக குற்றமின்றிச் சிறையிலிருப்பவன்; பகை வருக்குப் பயந்து கொண்டிருப்பவன் - இவர்கள் இந்த சூராவின் மேற்கண்ட 99, 100 ஆகிய வசனங்களை எழுதி வலக்கரத்தில் அணிந்து கொள்வதோடு, அவற்றை அதிகமாக ஓதி வர வேண்டும்.

# சூரா ரஅத்

## உயிர் இலகுவாகப் பிரிய; குழந்தை அழாதிருக்க

இந்த சூராவை இறக்கும் நிலையிலுள்ள ஒருவரின் அருகில் இருந்து ஓதின் அவருடைய உயிர் எளிதாகப் பிரியும்.

அதிகமாக அழுகின்ற குழந்தையின் கழுத்தில் இதனை எழுதிக் கட்டினால் அல்லது ஓதி ஊதினால் அழுகை நின்று விடும்.

**பரக்கத் ஏற்பட**

الٓمّٓرٰ تِلْكَ اٰيٰتُ الْكِتٰبِ ؕ وَالَّذِیْٓ اُنْزِلَ
اِلَيْكَ مِنْ رَّبِّكَ الْحَقُّ وَلٰكِنَّ اَكْثَرَ النَّاسِ
لَا يُؤْمِنُوْنَ ○ اَللّٰهُ الَّذِیْ رَفَعَ السَّمٰوٰتِ بِغَيْرِ
عَمَدٍ تَرَوْنَهَا ثُمَّ اسْتَوٰى عَلَى الْعَرْشِ وَ سَخَّرَ
الشَّمْسَ وَالْقَمَرَ ؕ كُلٌّ يَّجْرِیْ لِاَجَلٍ مُّسَمًّى ؕ
يُدَبِّرُ الْاَمْرَ يُفَصِّلُ الْاٰيٰتِ لَعَلَّكُمْ بِلِقَآءِ
رَبِّكُمْ تُوْقِنُوْنَ ○ وَهُوَ الَّذِیْ مَدَّ الْاَرْضَ وَ
جَعَلَ فِيْهَا رَوَاسِیَ وَاَنْهٰرًا ؕ وَمِنْ كُلِّ
الثَّمَرٰتِ جَعَلَ فِيْهَا زَوْجَيْنِ اثْنَيْنِ
يُغْشِی الَّيْلَ النَّهَارَ ؕ اِنَّ فِیْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ
يَّتَفَكَّرُوْنَ ○

இந்த சூராவின் மேற்கண்ட முதல் மூன்று வசனங்களை ஸைத்தூன் மரம் அல்லது வேறு மரத்தின் நான்கு இலைகளில் எழுதி அவற்றை வீட்டிலோ, தோட்டத்திலோ, வயலிலோ, கடையிலோ, நான்கு மூலைகளில் புதைத்து விட்டால் நன்மை, 'பரக்கத்' வளர்ச்சி எல்லாம் ஏற்பட்டுவிடும்.

## பிசாசு நீங்க

இந்த சூராவை முழுமையாக எழுதி அணிவித்தாலும் 3 தடவை ஓதி ஊதினாலும், பிசாசு பிடித்தவனுக்குக் குண மேற்படும்.

## கர்ப்பம் பாதுகாப்புப் பெற

اَللّٰهُ يَعْلَمُ مَا تَحْمِلُ كُلُّ اُنْثٰى وَمَا تَغِيْضُ الْاَرْحَامُ
وَمَا تَزْدَادُ ۗ وَكُلُّ شَيْءٍ عِنْدَهٗ بِمِقْدَارٍ ○
فَاللّٰهُ خَيْرٌ حَافِظًا ۖ وَّهُوَ اَرْحَمُ الرّٰحِمِيْنَ ○

ஒவ்வொரு பெண்ணும் (கர்ப்பத்தில்) சுமந்து கொண்டிருப்ப(து ஆணா பெண்ணா என்ப)தையும் அல்லாஹ் நன்கறிகிறான். கர்ப்பப் பைகள் (கர்ப்பம் தரிக்கும் சமயம்) சுருங்குவதையும் பிரசவிக்கும் பொழுது அவை விரிவதையும் அவன் அறிகிறான். கர்ப்பங்களிலுள்ள ஒவ்வொன்றிற்கும் அக்கர்ப்பங்களில் தங்கியிருக்க வேண்டிய காலம் முதலியவை அவனிடம் குறிப்பிடப்பட்டே இருக்கிறது.

இரட்சிப்பதில் அல்லாஹ் மிக்க மேலானவன்; அவனே அருள் புரிவோரிலெல்லாம் மிக்க மேலானவன் *(12:64)*

மேற்குறிப்பிட்ட இரண்டு வசனங்களை எழுதித் தாவீஜ் செய்து கர்ப்பிணியின் வயிற்றில் படும்படி தொங்க விட்டால் எவ்விதச் சிதைவுமில்லாமல் கர்ப்பம் பாதுகாக்கப்படும்.

### இடியிலிருந்து பாதுகாப்புப் பெற

وَيُسَبِّحُ الرَّعْدُ بِحَمْدِهٖ وَالْمَلٰٓئِكَةُ مِنْ خِيْفَتِهٖ

இடிகளும் மற்ற மலக்குகளும் அவனுக்குப் பயந்து அவனை துதி செய்து புகழ்கின்றனர். *13:13*

மேற்குறிப்பிட்ட வசனத்தை இடியும் மின்னலும் ஏற்படும் நேரத்தில் ஓத வேண்டும். ஓதினால் பாதுகாப்புக் கிடைக்கும்.

### இருதய படபடப்பு நீங்க

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَتَطْمَئِنُّ قُلُوْبُهُمْ بِذِكْرِ اللّٰهِ ۗ اَلَا بِذِكْرِ اللّٰهِ تَطْمَئِنُّ الْقُلُوْبُ ۝

*மெய்யாகவே விசுவாசம் கொண்டிருப்பவர்கள் அவர்கள் தாம். (அவர்கள் முன்) அல்லாஹ்வின் திருப்பெயர் துதிக்கப்படின் அவர்களின் இதயங்கள் திருப்தியுற்று விடுகின்றன. ஏனெனில் அல்லாஹ்வின் திருப்பெயரைத் துதிப்பதினால் உண்மை விசுவாசிகளின் இதயங்கள் நிச்சயமாக திருப்தியுறும் என்பதை (நபியே நீர்!) அறிந்து கொள்ளும். (13:28)*

இருதயத் துடிப்புள்ளவர்கள் மேற்குறிப்பிட்ட வசனத்தை எழுதி தாவீஜாக்கி கழுத்தில் அணிந்து நெஞ்சின் மேல் படும்படி தொங்கவிட வேண்டும்.

# சூரா இப்ராஹீம்

*இந்த சூராவை ஓதி வருகிறவன் அதிகமான நற்கூலியை அடைவான்.*

### குழந்தை பயப்படாதிருக்க

*உளூ செய்து, வெள்ளைப் பட்டில் இந்த சூராவை எழுதி தாவீஜ் செய்து குழந்தையின் கையில் கட்டினால் அழுகை, பயம், திருஷ்டி அத்தனையும் நீங்கிப் போய்விடும்.*

## பகைவர்களின் தீமை அணுகாதிருக்க

*ஒருவன் இதனை 7 தடவை ஓதினால் பகைவரின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.*

## பிரயாணம் வெற்றி பெற

*பிரயாணிகள் இதை எழுதித் தாவீஜாக்கி கையில் கட்டிக் கொண்டால் சுகம், பாதுகாப்பு, செல்வம் ஆகியவற்றோடு அவர்கள் திரும்பி வருவார்கள்.*

## கண்ணேறு நோய் அகல

وَمَالَنَآ اَلَّا نَتَوَكَّلَ عَلَى اللّٰهِ وَقَدْ هَدٰ سَنَا
سُبُلَنَا ۚ وَلَنَصْبِرَنَّ عَلٰى مَآ اٰذَيْتُمُوْنَا ۚ وَعَلَى اللّٰهِ
فَلْيَتَوَكَّلِ الْمُتَوَكِّلُوْنَ ۝

*''நாங்கள் அல்லாஹ்வை நம்பாதிருக்க எங்களுக்கென்ன (தடை நேர்ந்தது?) நிச்சயமாக அவன்தான் எங்களுக்கு நேரான வழியை அறிவித்தான். (நிராகரிப்போரே!) நீங்கள் எங்களுக்கிழைக்கும் துன்பங்களைச் சகித்துக் கொண்டு உறுதியாக இருப்போம். எனவே, நம்புவோர் அனைவரும் அல்லாஹ்வையே நம்பவும்'' என்று கூறினார். (14:12)*

## விஷ ஜந்துக்கள் தீண்டாதிருக்க

*இந்த வசனத்தை எழுதி அணிந்து கொண்டால் கை கால்களிலுள்ள நோய், திருஷ்டி முதலியவை நீங்கிப் போய்விடும்.*

*இதனைக் காலையிலும் மாலையிலும் மூன்று தடவை ஓதி வரவேண்டும்.*

## ஜின் பார்வை நீங்க

*ஒரு பாத்திரத்தில் கிணற்றுத் தண்ணீரை நிரப்பி அதன் மீது இந்த வசனத்தை ஓதி ஊதி, அதனை இரவு நேரத்தில் நாற்சந்தியில் வைத்து அதனால் கழுவ வேண்டும். இவ்வாறு மூன்று இரவுகள் செய்தால், மனிதர்களின் பார்வையாலோ ஜின்களின் பார்வையாலோ சிரமப்படுகிறவர்கள் குணமடைவார்கள்.*

## கொசு கடிக்காமல் இருக்க

இந்த வசனத்தை ஏழு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி, அடுத்துவரும் வாக்கியங்களை 7 தடவை சொல்லி அந்தத் தண்ணீரைப் படுக்கையைச் சுற்றித் தெளித்துக் கொண்டால் கொசுக்களின் தொல்லை நீங்கிப் போய்விடும். 'கொசுக்களே! இறைவன்மீது உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் எங்களுக்குத் தொந்தரவு கொடுக்காதீர்கள்!'' என்று கூறி அத்தண்ணீரில் ஊத வேண்டும். இதனை ஓதுபவரைக் கடிக்கக் கூடாதென இறைவன் கொசுக்களிடம் உறுதிப்பாடு வாங்கியுள்ளதாக ஒரு ஞானி கூறுகிறார். தாங்கள் வரி வசூலிக்கச் சென்ற பகுதியில் தேள் போன்ற விஷ ஜந்துக்கள் இருப்பதாக கலீபா உமர் இப்னு அப்துல் அஜீசுக்கு அதிகாரிகள் மடல் தீட்டிய பொழுது இவ்வசனத்தையே காலையிலும் மாலையிலும் ஓதிவருமாறு அவர்கள் பதில் எழுதி அனுப்பினர்.

### பயிர்கள் பாதுகாப்புப் பெற

وَقَالَ الَّذِيْنَ كَفَرُوْا لِرُسُلِهِمْ لَنُخْرِجَنَّكُمْ
مِّنْ اَرْضِنَآ اَوْلَتَعُوْدُنَّ فِيْ مِلَّتِنَا ۗ فَاَوْحٰٓى اِلَيْهِمْ
رَبُّهُمْ لَنُهْلِكَنَّ الظّٰلِمِيْنَ ○ وَلَنُسْكِنَنَّكُمُ
الْاَرْضَ مِنْ بَعْدِهِمْ ۗ ذٰلِكَ لِمَنْ خَافَ مَقَامِيْ
وَخَافَ وَعِيْدِ ○ وَاسْتَفْتَحُوْا وَخَابَ كُلُّ
جَبَّارٍ عَنِيْدٍ ○ مِّنْ وَّرَآئِهٖ جَهَنَّمُ وَيُسْقٰى مِنْ
مَّآءٍ صَدِيْدٍ ○ يَّتَجَرَّعُهٗ وَلَا يَكَادُ يُسِيْغُهٗ
وَيَاْتِيْهِ الْمَوْتُ مِنْ كُلِّ مَكَانٍ وَّمَا هُوَ بِمَيِّتٍ ۗ
وَمِنْ وَّرَآئِهٖ عَذَابٌ غَلِيْظٌ ○

இந்த ஸூராவின் மேற்கூறப்பட்ட *13, 14, 15, 16, 17* ஆகிய வசனங்களை ஸைத்தூன் மரத்தைச் சேர்ந்த நான்கு மரத்துண்டு களில் எழுதி அவற்றை வயலில் நான்கு மூலைகளிலும் நட வேண்டும். இப்படி நடும்போது மேற்குறிப்பிட்ட வசனங் களை மும்முறை ஓதிக் கொள்ள வேண்டும். எலி, பூச்சி, வெட்டுக்கிளி ஆகியவற்றின் தீங்குகளிலிருந்து அந்த வயல் காக்கப்படும்.

## உன்னி முதலியவை நீங்க

وَمَثَلُ كَلِمَةٍ خَبِيثَةٍ كَشَجَرَةٍ خَبِيثَةِ ۨ اجْتُثَّتْ مِنْ فَوْقِ الْأَرْضِ مَا لَهَا مِنْ قَرَارٍ ○

(நிராகரிப்போரின்) தீய சொற்களுக்கு உதாரணம் பூமி யில் இருந்த வேர்கள் அறுபட்டு நிற்கும் (பட்டுப்போன) கெட்ட மரத்திற்கு ஒப்பாகும். அது நிலைத்து நிற்காது.

ஒரு நூல் எடுத்து அதில் இந்த திருவசனத்தை ஒரு தடவை ஓதி ஒரு முடிச்சு முடிந்து இவ்வாறு மூன்று தடவை ஓதி மூன்று முடிச்சு முடிந்து உடலில் அணிந்து கொள்ள விரைவில் உன்னி முதலியவை நீங்கி நலன் ஏற்படும்.

**செழிப்பு ஏற்பட**

اَللّٰهُ الَّذِيْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَاَنْزَلَ
مِنَ السَّمَآءِ مَآءً فَاَخْرَجَ بِهٖ مِنَ الثَّمَرٰتِ رِزْقًا
لَّكُمْ وَسَخَّرَ لَكُمُ الْفُلْكَ لِتَجْرِيَ فِي الْبَحْرِ بِاَمْرِهٖ
وَسَخَّرَ لَكُمُ الْاَنْهٰرَ ۝ وَسَخَّرَ لَكُمُ الشَّمْسَ وَالْقَمَرَ
دَآئِبَيْنِ ۚ وَسَخَّرَ لَكُمُ الَّيْلَ وَالنَّهَارَ ۝ وَاٰتٰكُمْ
مِّنْ كُلِّ مَا سَاَلْتُمُوْهُ ۚ وَاِنْ تَعُدُّوْا نِعْمَتَ اللّٰهِ
لَا تُحْصُوْهَا ۚ اِنَّ الْاِنْسَانَ لَظَلُوْمٌ كَفَّارٌ ۝

*அல்லாஹ்தான் வானங்களையும் பூமியையும் படைத்தவன் அவனே வானத்திலிருந்து மழை பெய்யச் செய்து அதைக் கொண்டு உங்களுக்கு ஆகாரமாக(ப் பற்பல) கனிவர்க்கங்களையும் வெளிப்படுத்துகின்றான். (நீங்கள்) யாத்திரை செய்யும் பொருட்டு தன் கட்டளையைக் கொண்டு, கப்பலை உங்களின் விருப்பப்படி கடலில் செல்ல வைக்கிறான். ஆறுகளையும் கால்வாய்களையும் உங்கள் விருப்பப்படி பாய வசதியளித்தான்.*

*(தவறாது) ஒழுங்காக நடைபெற்று வருமாறு சூரியனையும் சந்திரனையும் உங்களுக்குப் பயனளிக்கக்கூடிய விதத்தில் (படைத்து) அமைத்தான். (மாறி, மாறி) வரக்கூடிய இரவு பகலையும் உங்களுக்காக (அமைத்து அதில்) பயனடைய வகை செய்தான்.*

*(இவையன்றி) நீங்கள் கேட்டவைகளை எல்லாம் அவன் உங்களுக்கு அளித்தான். ஆகவே அல்லாஹ்வுடைய அருட்கொடைகளை நீங்கள் கணக்கிடும் பட்சத்தில் அதனை உங்க*

ளால் எண்ண முடியாது. (இவ்வாறிருந்தும்) நிச்சயமாக மனிதன் வரம்பு மீறுகிறவனாகவும் நன்றி கெட்டவனாகவும் இருக்கிறான். *(14:32, 33, 34)*

இந்த சூராவின் இந்த *32, 33, 34* ஆகிய மூன்று வசனங்களை ஒருவன் காலையும், மாலையும் தூங்கச் செல்லும்போதும் வெளியில் புறப்படும்போதும் வியாபாரம் செய்யும்போதும், தன் வீட்டுக்குள் நுழையும் போதும் ஓதி வந்தால் கடலில் ஏற்படும் தீங்குகளிலிருந்தும் அவன் காக்கப் படுவான். அவன் வீடு, பொருள், குழந்தைகள், விவசாயம், கால்நடை ஆகியவற்றில் செழிப்பு ஏற்படும்.

# சூரா ஹிஜ்ர்

## தாய்ப்பால் சுரக்க

இந்த சூராவை எழுதிக் கரைத்துக் குடிப்பதனால், தாய்க்கு பால் சுரக்கும்.

## 'பரக்கத்' ஏற்பட

இதனை எழுதி ஒருவன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டால், பரக்கத் ஏற்படும். பணத் தொடர்புகளில் அவனை யாரும் ஏமாற்ற முடியாது. அவனோடு பணத்தொடர்பு வைத்துக் கொள்வதை மற்றவர்கள் விரும்புவார்கள்.

ஒருவன் கொள்முதல் செய்யும்போது இந்த சூராவை ஓதிக்கொண்டால், நஷ்டத்திலிருந்து பாதுகாப்பு கிடைப்பதோடு 'பரக்கத்'தும் ஏற்படும்.

இதனை எழுதிச் சரக்குகளோடு கலந்து வைத்தால் 'பரக்கத்' ஏற்படும்.

இதனை ஒருவன் எழுதித் தன்னிடம் வைத்துக் கொண்டால் அவனுடைய கொடுக்கல் - வாங்கல் சிறப்பாக இருக்கும். அதனை மற்றவர்கள் விரும்புவார்கள். அவன் முயற்சியில் அதிக லாபம் கிடைக்கும்.

## பாதுகாப்புப் பெற

إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحَافِظُونَ ○

*நிச்சயமாக, நாம்தாம் இவ்வேதத்தை (உம்மீது) இறக்கி வைத்தோம். ஆகவே நாமே அதனை இரட்சித்துக் கொள் வோம்.*

*இந்த வசனத்தை வெள்ளித் தகட்டில் எழுதி, வெள்ளியிர வில் இந்த வசனத்தை 40 தடவை ஓதி ஊதி, அந்தத் தகட்டை மோதிரத்தில் திணித்து அணிந்து கொள்ள வேண்டும். அவ னும் மனைவி, மக்களும், உடைமைகளும் காக்கப்படும். எல்லோருக்கும் பாதுகாப்புக் கிடைக்கும்.*

## கண்ணியம் பெற

وَلَقَدْ جَعَلْنَا فِي السَّمَاءِ بُرُوجًا وَزَيَّنَّاهَا لِلنَّاظِرِينَ ○ وَحَفِظْنَاهَا مِنْ كُلِّ شَيْطَانٍ رَجِيمٍ ○

*''நிச்சயமாக நாம்தாம் வானத்தில் பெரிய நட்சத்திரங் களை அடைத்து பார்ப்போருக்கு அதனை அலங்காரமாகவும் ஆக்கி வைத்தோம். வெருட்டப்பட்ட யாதொரு ஷைத்தானும் அவற்றை நெருங்காது காத்துக் கொண்டோம்'' (15:16,17)*

*இந்த வசனங்களை மான் தோலில் எழுதி அணிந்து கொண்டால், மனிதர்களிடத்திலும் அதிகாரிகளிடத்திலும் கண்ணியம் கிடைக்கும். ஆண், பெண், குழந்தை யாராயினும் இந்தப் பயன் கிடைக்கும்.*

**பரக்கத் ஏற்பட**

وَالْاَرْضَ مَدَدْنٰهَا وَاَلْقَيْنَا فِيْهَا رَوَاسِيَ وَ
اَنْۢبَتْنَا فِيْهَا مِنْ كُلِّ شَيْءٍ مَّوْزُوْنٍ ○ وَجَعَلْنَا
لَكُمْ فِيْهَا مَعَايِشَ وَمَنْ لَّسْتُمْ لَهٗ بِرٰزِقِيْنَ ○

*நாம் பூமியை விரித்து அதில் அசையாத மலைகளை நாட்டினோம். ஒவ்வொரு புற்பூண்டையும் (அதற்குரிய) ஒழுங்கான முறையில் அதில் நாம் முளைப்பித்தோம். உங்களுக்கும் நீங்கள் உணவளித்து வளர்க்காததுமான உயிரினங்களுக்கும் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களையும் நாமே அதில் அமைத்தோம்.*

இந்த வசனங்களை மரப்பலகையில் எழுதி ஆணி வைத்துக் கடையில் அறைந்து விட்டால், தோட்டத்திலோ வயலிலோ புதைத்துவிட்டால், பரக்கத்தும், வளர்ச்சியும் ஏற்படும். ஒரு தாளில் எழுதிச் சரக்குகளின் மத்தியில் வைத்து விட்டால் பரக்கத் ஏற்படும்.

## சூரா நஹ்ல்

**பகைவரை அடக்க**

இந்த சூராவை எழுதி அணிந்து கொண்டால் பகைவர்கள் அடங்கி விடுவார்கள்.

ஒருவனோ பலர் கொண்ட குழுவோ இதனை ஒரே வேளையில் 130 தடவை ஓதி முடித்தால் பகைவர்கள் பணிந்து சிறுமை அடைவார்கள்.

**கண்ணியம் ஏற்பட**

இதனை வழக்கமாக ஓதிவர வேண்டும்.

*அன்றி அவர்களுடைய இருதயங்களிலும் (அவர்கள்) அதனை விளங்கிக் கொள்ள முடியாதவாறு திரையை அமைத்து அவர்களுடைய காதுகளை செவிடாக்கி விடுகிறோம். திருக் குர்ஆனில் உம் இறைவன் ஒருவனைப் பற்றியே நீர் கூறிக் கொண்டிருந்தால் அவர்கள் வெறுத்துத் தங்கள் முதுகுப் புறமே (திருப்பிச்) சென்று விடுகின்றனர்.'' (17:45, 46)*

ஷைத்தானின் காரணத்தால் நோய் பீடிக்கப்பட்டவர்க ளுக்கு இந்த சூராவில் மேற்கண்ட 45, 46 ஆகிய இரண்டு வசனங்களை ஓதி ஊத வேண்டும்.

நீல நிறக் கம்பளித் துண்டிலோ காகிதத்திலோ இவற்றை எழுதிக் கட்டினால் பிசாசு பிடித்தவர்களுக்குப் பயன் ஏற்ப டும்.

## பயந்த சுபாவம் நீங்க

எதைப் பற்றியும் வீணே பயந்து நடுங்குபவர் மீது இதனை ஓதி ஊதின் பயம் நீங்கப் பெறுவர்.

## பிரயாணத்தில் கண்ணியம் பெற

وَقُلْ رَّبِّ اَدْخِلْنِىْ مُدْخَلَ صِدْقٍ وَّاَخْرِجْنِىْ
مُخْرَجَ صِدْقٍ وَّاجْعَلْ لِّىْ مِنْ لَّدُنْكَ سُلْطَانًا
نَّصِيْرًا ۝

*''அன்றி, 'என் இறைவனே! என்னை நல்ல விதமாகவே நுழையவை. நல்லவிதமாகவே என்னை வெளிப்படுத்திவை. உன் பாலிருந்து ஒரு வெற்றியை நீ எனக்கு உதவியாக்கித் தந்தருள்'' என்று நீர் பிரார்த்திப்பீராக!'' (17:81)*

பிரயாணத்துக்குப் புறப்படும் நேரத்திலும் திரும்பி வரும் நேரத்திலும் இந்த வசனத்தை ஓதிக் கொண்டால், மதிப்பும், கண்ணியமும் கிடைக்கும்; பிரயாணத்தின் சிரமங் கள் மறையும்.

## பிறர் தீங்கு செய்யாதிருக்க

ஒரு மனிதன் தனக்குத் தீங்கு செய்வான் என்று தான் எண்ணிக் கொண்டிருக்கும் ஒருவனிடம் செல்லுங்கால் இதனை ஓதிக் கொண்டு செல்லின் அவனால் அம்மனித னுக்கு யாதொரு தீங்கும் நிகழாது.

## மயக்கம் திடுக்கம் நீங்க

وَنُنَزِّلُ مِنَ الْقُرْاٰنِ مَا هُوَ شِفَآءٌ وَّرَحْمَةٌ لِّلْمُؤْمِنِيْنَ

'விசுவாசம் கொண்டோருக்கு அருளாகவும் பரிகாரமாக வும் உள்ளவைகளையே திருக்குர்ஆனில் நாம் இறக்கியிருக்கி றோம். (47:82)

— ஒரு குழந்தையோடு வந்த பெண் ஒருத்தி, ''என் குழந்தைக்கு மயக்கம் ஏற்படுகிறது, அது நீங்கிப் போகும்படி பிரார்த்தனை செய்யுங்கள்!'' என்று பெருமானாரிடம் கேட் டுக் கொண்டாள். பெருமானார் இந்த வசனத்தை ஓதிக் குழந்தைக்கு ஊதினார்கள். குழந்தைக்குக் குணம் ஏற்பட்டது.

## திடுக்கம் நீங்க

ஒரு மனிதர் திடுக்கம் பிடித்தவராய் இருந்தார். அவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தமக்கு ஓதிப்பார்க் குமாறு கூற அவர்கள் இந்த ஆயத்தை ஓதி ஊத அவர் நலன் பெற்றார்.

## நோய் அனைத்தும் நீங்க

பக்தாதில் ஒருவர் எல்லா நோய்களுக்கும் ஓதிப் பார்த்துக் கொண்டிருந்தார். அது குறித்து அவரிடம் கேட்கப்பட்ட போது, ''எல்லா வியாதிகளுக்கும் ஓதுவது ஒன்றுதான். ''ஆரோக்கியத்தைக் கொடுப்பவன் இறைவன்'' என்று கூறி இந்த வசனத்தை ஓதினார்.

وَنُنَزِّلُ مِنَ الْقُرْاٰنِ مَا هُوَ شِفَآءٌ وَّرَحْمَةٌ لِّلْمُؤْمِنِيْنَ ۙ وَلَا يَزِيْدُ الظّٰلِمِيْنَ اِلَّا خَسَارًا ○

''விசுவாசங் கொண்டோருக்கு அருளாகவும் பரிகாரமாகவும் உள்ளவைகளையே இந்தத் திருக்குர்ஆனில் நாம் இறக்கியிருக்கிறோம். எனினும் அக்கிரமக்காரர்களுக்கோ (இது) நஷ்டத்தையேயன்றி அதிகரிப்பதில்லை.''

இதனை ஓதினால் அல்லது கரைத்துக் குடிக்கச் செய்தால் வியாதி நீங்கும்.

**மாதவிடாய் வர**

ஒவ்வொரு நாளும், வநுனஸ்ஸிலு மினல் குர்ஆனி மாஹுவ ஷிஃபாவுன் என்பதை 700 தடவை ஜம்ஜம் நீரில் ஓதி ஊதி அருந்துவதுடன் அதனைத் தாயத்துச் செய்து அணிந்து கொள்ள வேண்டும்.

**நோய் நீங்க**

وَبِالْحَقِّ اَنْزَلْنٰهُ وَبِالْحَقِّ نَزَلَ ۗ وَمَآ اَرْسَلْنٰكَ اِلَّا مُبَشِّرًا وَّنَذِيْرًا ○

''முற்றிலும் உண்மையைக் கொண்டே நாம் இவ்வேதத்தை இறக்கினோம். அதுவும் உண்மையைக் கொண்டே இறங்கியது. உம்மை நாம் நன்மாராயம் கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவுமேயன்றி அனுப்பவில்லை.'' *(17:108)*

இந்த வசனத்தை மும்முறை ஓதி, நோயுள்ள இடத்தில் கையை வைத்து ஊதினால் குணமேற்படும்.

## நோய் அகல

இறைநேசச் செல்வர் இப்னு ஸம்மாக் (ரஹ்) அவர்கள் ஒரு தடவை கடுமையான நோய்வாய்ப்பட்டார்கள். அவர்களுடைய நண்பர் அஹ்மது ஹவாரி பெரிதும் வற்புறுத்தி அவர்களின் சிறுநீரைப் பெற்று அதனை எடுத்துக் கொண்டு மருத்துவரிடம் சென்றார். வழியில் ஓர் அழகிய உடலினர் எதிர்பட்டு, 'அல்லாஹ்வுடைய நண்பருக்கு அவனுடைய விரோதியிடமிருந்தா நிவாரணம் தேடுகிறீர்? திரும்பிச் சென்று இப்னு ஸம்மாக்கிடம தம் உடலில் நோயுள்ள இடத்தில் தம் கையை வைத்து ''அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம். வபில் ஹக்கி அன்ஸல்னாஹு வபில் ஹக்கி நஸல் என்று ஓதி ஊதுமாறு கூறும். நலன் ஏற்படும்'' என்று சொல்லிச் சென்றார்.

அவ்விதமே நண்பர் வந்து கூற அவர்களும் செய்ய உடன்நலன் ஏற்பட்டது.

இதனை வைத்த கண் வாங்காது பார்த்துக் கொண்டிருந்த தம் நண்பரிடம், ''அவர் யார் என்று உமக்குத் தெரியுமா?'' என்று இப்னு ஸம்மாக் (ரஹ்) அவர்கள் வினவினர்.

''தெரியாது'' என்று பதில் கூறினார் நண்பர்.

''அவர் தாம் கிள்ரு (அலை)'' என்றார்கள் இப்னு ஸம்மாக் (ரஹ்) அவர்கள்.

## தலைவலி நீங்க

இதனை ஓதி ஊத வேண்டும்.

## உணவு செரிக்க

உண்ட உணவு செரியாது துன்புறுவோர் இதனை ஏழு தடவை ஓதி உப்பில் ஊதி அந்த உப்பைத் தின்றால் நலன் ஏற்படும்.

## எல்லா நோய்களும் அகல

ஷைகு அபுல் காஸிமில் குஷைரிய்யு (ரஹ்) அவர்களின் மகன் கடுமையான நோயால் துன்புற்ற பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள் ஷைகு அவர்களின் கனவில் தோன்றி, ''குர்ஆனிலுள்ள 'ஷிஃபா'வுடைய திருவசனங்களை மறந்து விட்டீரோ?'' என்று வினவ, அவர்கள் திடுக்குற்று விழித்தெழுந்து குர்ஆனில் அவ்விதம் திருவசனங்கள் ஆறு இருப்பதைக் கண்டுபிடித்து அவற்றை திரும்பத் திரும்ப ஓதவும் எழுதிக் கரைத்துக் குடிக்கவும் செய்ய நோய் நீங்கியது.

1. வயஷ்ஃபிஸுதூர கவ்மின் முஃமினீன் வயுத் ஹிபு கவ்ல குலூபிஹிம். *(9:14,15)*
2. யா அய்யுஹன்னாஸு கத்ஜா அக்கும் மௌ இலதுன்மின் ரப்பிகும் வஷிபாவுன் - வரஹ்மதுன்லில் முஃமினீன் *(10:57)*
3. யஹ்ருஜு மின் புதூனிஹா ஷராபுன்... ஷிஃபாவும் லிந்நாஸ் *(16:79)*
4. வநுனஸ்ஸிலு மினல் குர்ஆனி மாஹுவ ஷிஃபாவுன் வ ரஹ்மத்துன் லில் முஃமினீன் *(17:82)*
5. அல்லதீ ஹலகனீ ஃபஹுவ யஹ்தீனி - மரிழ்த்து ஃப ஹுவ யஷ்ஃபீன் *(26:78-80)*
6. குல்ஹுவ லில்லதீன ஆமனூ ஹுதன் வஷி ஃபாவுன் *(41:44)*

# சூரா கஹ்ப்

## உள்ளம் பிரகாசமடைய

ஒவ்வொரு வெள்ளியன்றும் இந்த சூராவை ஓதினால், உள்ளம் பிரகாசமடையும்.

## துன்பம் அகல

*தாங்கொணாத் துன்பத்தில் மாட்டிக் கொண்டவன் ஜும்ஆவுக்குப்பின் இதனை ஏழு தடவை ஓதிச் சப்தமிட்டு இறைவனிடம் 'துஆ' இறைஞ்சின் அவனின் துன்பம் அகலும்.*

## பெருவியாதி, குஷ்டம், அம்மை முதலிய கொடிய நோய்கள் அணுகாதிருக்க

*இதனை வழக்கமாக ஓதி வர வேண்டும்.*

## சூனியம் தாக்காமல் இருக்க

*ஒருவன் இந்த அத்தியாயத்தின் இறுதி பத்து வசனங்களை ஓதிவரின் சூனியத்தால் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது போய்விடும்.*

## இறை மன்னிப்புப் பெற

*இதனை வெள்ளி இரவில் ஓதி வருபவர்களுக்கு இறைவன் ஒரு ஒளியை நல்குவான், அவர்களின் பாவங்களை இறைவன் மன்னித்து விடுவான்.*

## இம்மையிலும் மறுமையிலும் வெற்றிபெற

*இதனை நாள்தோறும் ஓதி வருபவர்கள் இம்மையிலும் மறுமையிலும் வெற்றி எய்தப் பெறுவார்கள்.*

## எப்பொழுதும் மூக்கிலிருந்து சளி வந்து தும்மல் போட்டுக் கொண்டிருப்பது அகல

*'அல்ஹம்து லில்லாஹில்லதீ அன்ஸல அலா அப்திஹில் கிதாப வலம் யஜ்அல்லஹு இவஜா' (18:1) என்ற ஆயத்தைப் பதினொரு தடவை உணவில் ஊதி உண்டு வரவேண்டும்.*

## கடன் நீங்க; வருமானம் பெருக

கடன்களால் தொல்லைப்படுகிறவர்கள் இந்த சூராவை வெள்ளிக்கிழமையிலிருந்து அடுத்த வெள்ளிக்கிழமை வரை தினம் ஓதி வரவேண்டும். கடன் தொல்லை நீங்குவதோடு, கண்ணியமும், புத்திசாலித்தனமும் ஏற்படும். இவ்வாறு ஓதி வந்தால், வருமானமும் பெருகும்.

## கப்ரின் துன்பம் நீங்க

இதனை வெள்ளிதோறும் ஓதுகிறவனுக்குப் பிரகாசம் கொடுக்கப்படும். கல்லறையின் சிரமம், தஜ்ஜாலின் தொல்லை ஆகியவற்றிலிருந்து அவன் காக்கப்படுவான்.

## வறுமை, கடன் நீங்க

இதனை எழுதி ஒரு சீசாவுக்குள் அடைத்து அதனைத் தன்னிடம் வைத்துக் கொண்டால் வறுமையிலிருந்தும் கடன் களிலிருந்தும் விடுதலை கிடைக்கும். அவனுக்கோ குடும்பத் தாருக்கோ எவரும் தீங்கு செய்ய முடியாது. அந்தச் சீசாவைத் தானியக் களஞ்சியத்துக்குள் வைத்தால், எல்லாவிதமான விபத்துக்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும். இதனை எப்போதும் ஓதி வருபவன் தலைவலி, நெஞ்சுவலி முதலான எல்லா நோய்களிலிருந்தும் காக்கப்படுவான்.

## நாய் கடிக்காதிருக்க

وَكَلْبُهُمْ بَاسِطٌ ذِرَاعَيْهِ بِالْوَصِيْدِ

''அவர் நாயோ தன் இரு முன்னங்கால்களையும் விரித்துக் கொண்டு வாசலில் அமர்ந்துள்ளது.'' *(18:18)*

— நாய் முதலான மிருகங்கள் தாக்கும்போது மேற்கண்ட இந்த வசனத்தை ஓதிக் கொண்டால், அவற்றின் தீங்கிலிருந் தும் பாதுகாப்புப் கிடைக்கும். இவ்வசனத்தை ஓதுபவரைக் கடிக்கக் கூடாது என நாயிடம் இறைவன் உறுதிப்பாடு வாங்கியுள்ளதாக ஒரு ஞானி கூறுகிறார்.

## குறித்த நேரத்தில் உறக்கத்திலிருந்து விழிக்க

إِنَّ الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ كَانَتْ لَهُمْ
جَنَّاتُ الْفِرْدَوْسِ نُزُلًا ۝ خَالِدِينَ فِيهَا لَا
يَبْغُونَ عَنْهَا حِوَلًا ۝ قُل لَّوْ كَانَ الْبَحْرُ مِدَادًا
لِّكَلِمَاتِ رَبِّي لَنَفِدَ الْبَحْرُ قَبْلَ أَن تَنفَدَ
كَلِمَاتُ رَبِّي وَلَوْ جِئْنَا بِمِثْلِهِ مَدَدًا ۝ قُلْ
إِنَّمَا أَنَا بَشَرٌ مِّثْلُكُمْ يُوحَىٰ إِلَيَّ أَنَّمَا إِلَٰهُكُمْ
إِلَٰهٌ وَاحِدٌ ۖ فَمَن كَانَ يَرْجُو لِقَاءَ رَبِّهِ فَلْيَعْمَلْ
عَمَلًا صَالِحًا وَلَا يُشْرِكْ بِعِبَادَةِ رَبِّهِ أَحَدًا ۝

இறை வணக்கத்திற்காக நள்ளிரவில் குறிப்பிட்ட நேரத்தில் தூக்கத்திலிருந்து விழித்துக் கொள்ள விரும்புகிறவர்கள் இந்த சூராவில் மேற்கண்ட 107, 108, 109, 110 ஆகிய நான்கு வசனங்களை படுக்கைக்குச் செல்லும்போது ஓதிக் கொள்ள வேண்டும். பின்னர், 'இறைவனே! என்னைக் குறிப்பிட்ட நேரத்தில் தூக்கத்திலிருந்து விழித்தெழச் செய்வாயாக. மேலான இந்த வசனங்களை முன் வைத்துக் கேட்கிறேன். என் ஆத்மா உன்னிடமே இருக்கிறது!'' என்று இறைஞ்ச வேண்டும்.

## பித்னாவை விட்டு காவல் பெற

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றனர்:

''சூரா கஹ்ஃபின் துவக்கத்தை ஓதுவது ஃபித்னாவை விட்டும் கார்மானாமாயிருக்கும், தஜ்ஜாலைச் சந்திப்பின் சூரா கஹ்ஃபின் துவக்கத்தை ஓதுங்கள். இது ஃபித்னாவை விட்

டும் கார்மானமாயிருக்கும்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவுளமாயினர்.

## வீடும் வீட்டிலுள்ளோரும் பலன்பெற, வளம் பெற

சூரா கஹ்பின் துவக்கத்திலிருந்து, 'இன்ய கூலூன இல்லா கதிபா' வரை ஒரு துப்புரவான பாத்திரத்தில் எழுதி அதனைத் தண்ணீரில் கரைத்து அத்தண்ணீர் பூமியில் விழா வண்ணம் வீட்டின் நான்கு மதில்களிலும் தெளிப்பின் அந்த வீடு நலமும் வளமும் மகிழ்வும் பெற்று விளங்கும்.

தன் கண்ணேறு தனக்குப் படாமலிருக்கவும் பிறரின் கண்ணேறு ஏற்படாமல் இருக்கவும்,

'மாஷா அல்லாஹ் லாகுவ்வத்த இல்லாபில்லாஹ்'

(18:39)

ஒருவன் தன் பொருளின் மீதும், வீட்டின்மீதும், குடும்பத்தின் மீதும், தன் கண்ணோ பிறரின் கண்ணோ பட்டுத் தீமை ஏற்படாமல் இருக்க நாடின் மேலே கண்ட ஆயத்தை ஓதவோ தண்ணீரில் ஓதி ஊதிக் குடிக்கவோ வேண்டும்.

### கவனம் புக

அதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## உடைமைகள் பாதுகாப்பு பெற; அவற்றால் தீமை ஏற்படாதிருக்க

அண்ணல் நபி(ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர்:

ஓர் அடியான் மீதும் அவனுடைய பொருள் மீதும் அல்லாஹ் தன் அருளைச் செய்யும்பொழுது மாஷா அல்லாஹ் லாகுவ்வத்த இல்லாபில்லாஹ் (இவை அனைத்தும்) அல்லாஹ் (தன் பேரருளால்) எனக்குத் தந்தவையேயாகும். அல்லாஹ்வின் உதவியின்றி (நாம்) ஒன்றும் செய்துவிட முடியாது என்று அவன் கூறின், அவற்றின்மீது யாதொரு

ஆபத்தும் ஏற்படாது. அவற்றால் அவனுக்கு யாதொரு தீமை யும் நிகழாது.

வீட்டின் முகப்பில் பொறிக்கத்தகுந்த திருவசனம் இது.

## சிறையிலிருந்து விடுதலை பெற

சிறை வாய்ப்பட்டவன் 'மாஷா அல்லாஹு கான வலா ஹௌல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம் வ ஹஸ்புனல்லாஹு நிஃமல் வக்கீல்' என்று இரண் டாயிரம் தடவை ஓதின் அவன் இறையருளால் விடுதலை பெறுவான். இது சோதிக்கப்பட்டதாகும்.

## நோய் நீங்க

ஒருவர் கடுமையான நோய்வாய்ப்பட்டார். எவ்வளவோ மருத்துவம் செய்தும் நலன் ஏற்படவில்லை. இறுதியாக மருத்துவர்களும் கைவிட்டு விட்டார்கள். சொல்லொணா வருத்தத்துடன் ஒரு வெள்ளி இரவு அவர் துயிலும்பொழுது கனவொன்று கண்டார். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களைச் சூழ ஒரு பெரும் திரள் வந்து கொண்டிருந்தது. நேரே அவரை நோக்கி வந்த அண் ணல் நபி (ஸல்) அவர்கள் அவரின் தலைமாட்டில் அமர்ந்து, 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் பிஸ்மில்லாஹி ரப்பி யல்லாஹு ஹஸ்பியல்லாஹு தவக்கல்த்து அலல்லாஹி இஸ்தஸம்து பில்லாஹி ஃபர்ரள்த்து அம்ரீ இலல்லாஹி மாஷா அல்லாஹு லாகுவ்வத்த இல்லாபில்லாஹ்'' என்று ஓதி அவரின் மீது ஊதி ''இதனை நீர் அதிகமாக ஓதி வாரும். இது எல்லா நோய்களுக்கும் சஞ்சீவியாகும். எல்லாக் கவலை களையும் தீர்த்து வைக்கும் நன்மருந்தாகும், பகைவர்களை யும் வெற்றி கொள்ளும் ஆயுதமாகும்'' என்று அமுத வாய் விண்டனர்.

அப்பொழுது அங்கிருந்த ஒருவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களை நோக்கி, பகைவர்கள் எதிர்ப்படும் பொழுது இதனை ஓதினால் யாது பலன் கிட்டும் என்று வினவினார்.

''நன்மாராயம்! நன்மாராயம்! உதவியும் வெற்றியும் கிடைக்கும்'' என்று மறுமொழி பகர்ந்தனர் அண்ணல்.

அப்பொழுது நோயாளர், அண்ணல் நபி(ஸல்) அவர்களை நோக்கி, 'அவர்கள் யார்? அபூபக்கர் (ரலி) அவர்களா?' என்று வினவினர்.

அதற்கு அண்ணலார், ''அல்ல; அவர்கள் என் சிறிய தந்தை ஹம்ஸா ஆவர்'' என்று கூறினர்.

பின்னர் அவர்கள் தம்மைச் சூழ நின்று கொண்டிருந்த ஒரு கூட்டத்தினரை அவரிடம் சுட்டிக்காட்டி, ''இவர்கள் மார்க்கத்திற்காக உயிர் நீத்த தியாகிகள் (ஷஹீதுகள்)'' என்றனர். மற்றொரு கூட்டத்தினரை அவரிடம் கட்டிக்காட்டி, 'இவர்கள் ஸாலிஹீன்கள்' (நல்லோர்கள்) என்றார்கள்.

இத்துடன் கனவு கலைந்தது; திடுக்குற்று விழித்தெழுந்தார் அவர். என்ன வியப்பு! அவரைப் பல்லாண்டுகளாகப் பீடித்திருந்த நோய் மாயமாய் மறைந்து விட்டது. 'வலாஹவ் லவலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்'

அர்ஷைப் படைத்து அதனைச் சுமக்குமாறு அல்லாஹ் சில வானவர்களிடம் கூறியபொழுது அதனைச் சுமக்க தங்களுக்கு வலுவில்லை என்று அவர்கள் பதிலிறுத்தார்கள். அப்பொழுது அல்லாஹ், அவர்களை நோக்கி, 'லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹில் அலிய்யில் அளீம்' என்று ஓதுமாறு கூற அவர்கள் அவ்விதமே செய்தனர். அதற்கான வலு அவர்களை வந்தடைந்தது.

## கடினமான அலுவல் எளிதாக

எனவே கடினமான அலுவலை ஆற்றும் பொழுதும் துன்பச் சுமையைச் சுமக்கிற பொழுதும் இதனை ஓதின் அவை எளிதாக இறையருளால் ஆக்கப்பெறும்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூமூஸா அஷ்அரீ(ரலி) அவர்களை நோக்கி, ''நான் சுவனத்தின் புதையல்களில் ஒரு

புதையலை உமக்குக் காட்டவா!' என்று வினவினர். அதற்கு அவர்கள் சரி என்று கூறியபொழுது, 'லாஹவ்ல வலாக்குவ் வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்' என்பதே அது என்றனர் அண்ணல்.

அது சுவனத்தின் வாயில்களில் ஒன்று என்றும் சுவனத்தின் மரங்களில் ஒன்று என்றும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவாய் மலர்ந்துள்ளனர்.

## இருதயப் படபடப்பு நீங்க

இதனை எழுதி தஃவீஸ் செய்து இதயத்தின் நேராக அது கிடக்கும் வண்ணம் கழுத்தில் அணிந்து கொள்ளவும்.

## வறுமை ஏற்படாதிருக்க

''ஒருவன் இதனை நாள்தோறும் நூறு தடவை வழக்கமாக ஓதிவரின் அவன் ஒருபோதும் வறுமைவாய்ப்பட மாட்டான்' என்று அண்ணல் நபி(ஸல்) அவர்கள் கூறினர்.

## உலகத்துன்பம் அணுகாதிருக்கவும் சுவனம் புகவும்

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவனை உலகத் துன்பங்கள் அணுகா, அவன் சுவனம் புகுவான்.

## நோய் நொம்பலம் அணுகாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## 99 வகை நோய்களுக்கும் அருமருந்து

இது 99 வகை நோய்களுக்கும் அரு மருந்தாகும் ''அவற்றில் மிகவும் சிறியது கவலை'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

## எழுபது வகைத் துன்பங்கள் அகல

''இதனை அதிகமாக ஓதி வந்தால் எழுபது வகைத் துன்பங்கள் நீங்குகின்றன. அவற்றில் மிகவும் சிறியது வறுமை என்று மக்ஹூல் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## இறைவன் அருளிய பாக்கியங்களுக்கு பாதுகாப்பு

ஒருவன் இறைவன் தனக்கு அருளிய பாக்கியங்களான மதிப்பு, மரியாதை, சொத்து, கல்வி, அறிவு ஆகியவை தம்மிடம் நீடித்திருக்க வேண்டுமென்று விரும்பின் இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும். இக்கருத்துப்பட அண் ணல் நபி (ஸல்) அவர்கள் அருள்வாய் மலர்ந்துள்ளனர்.

## பாவம் நீங்கப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் பாவமில்லாப் பச்சிளம் குழவி போல் ஆகிவிடுகிறார், ''லாஇலாஹ இல் லல்லாஹு வல்லாஹு அக்பர்; வலாஹவ்ல வலாகுவ் வத்த இல்லா பில்லாஹ்'' என்று ஒருவர் கூறின் அவரின் பாவங்கள் கடல் நுரையைவிட அதிகம் இருப்பினும் நீங்கிவிடும்'' என அண்ணல்நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## உணவுத் துன்பம் நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும் என அண் ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## எழுபது விதமான தீமைகளை விட்டும் காவல் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## சிரமம், கடன் நீங்க

ஏதாவதொரு செயலில் சிரமம் ஏற்படின் அல்லது கடனால் தொல்லை ஏற்படின் இதனை ஆயிரம் தடவைகள் ஓதினால் அவை நீங்க அல்லாஹ் வழி செய்வான் என்ற கருத்துப்பட அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## சுவனம் புக, இறையருளை எய்தப்பெற

இதனை அண்ணல் நபி (ஸல்) சுவனத்தின் வாசல்களில் ஒன்று என்றும் அர்ஷின் கீழுள்ள புதையல் என்றும் கூறியுள் ளார்கள். கருத்து: இதனை அதிகமாக ஓதிவருபவர்கள் சுவ னம் புகுவார்கள். இறையருளை எய்தப் பெறுவார்கள்.

## நரகத்திலிருந்து பாதுகாவல் பெற; சுவனத்தை சுவீகரிக்க

நரகத்தை விட்டும் உங்களைப் பாதுகாக்கக் கூடியது. ''சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர், வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறி, இது மறுமையில் உங்களைச் சுவனத்தின்பால் இழுத்துச் செல்லும் என்றும் பகர்ந்தனர். மேலும் இதனை 'ஸையிதுல் இஸ்திஃபார்' என்றும் இதனை ஓதுபவரின் பாவங்கள் மன்னிக்கப் பெறும் என்றும் சுவனம் அவருக்கு நல்கப்படும் என்றும் அந்தக் கலிமாவே குர்ஆனில் கூறப்பட்டுள்ள அல்பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் என்றும் இதனை அதிகமாக ஓதிக்கொள்ளுமாறும் அவர்கள் கூறியுள்ளார்கள்.

## எதிரிகள் வெருண்டோட; அபாயம் நீங்க

ஒரு பகை அரசன் ஒரு நாட்டின் மீது பெரும் யானைப் படையுடன் படையெடுத்த பொழுது அவ்வூர் மக்கள் இறைவனிடம் பாதுகாவல் தேடி இதனை மடக்கி மடக்கி ஓத யானைகள் பிளிறிக்கொண்டு, வந்த வழியே வெருண்டோடி விட்டன.

## துர்ச் சகுனம் தீமை செய்யாதிருக்க

ஒருவன் துர்ச் சகுனத்தைப் பார்த்தவுடன் அவூது பில் லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம் என்று ஓதின் அதனால் யாதொரு தீமையும் நிகழாது போய்விடும்.

## தீய கனவுகள் பலியாதிருக்க

தீய கனவுகளைக் கண்டு விழித்ததும் மேலே கண்ட வண்ணம் ஓதி வலப்புறமும் இடப்புறமும் மும்மூன்று தடவை துப்பினால் தீய கனவுகளின் தீமைகளிலிருந்து அல் லாஹ் காத்தருள்வான்.

**ஷைத்தானை சாம்பலாக்க**

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

இது பற்றிய வரலாறு ஒன்று வருமாறு,

குற்றம் சாட்டப்பட்ட கிறிஸ்தவர் ஒருவர் சிறைக்கு அழைத்துச் செல்லப்படும் பொழுது வழியில் ஒருவன் தலையில் புல்கட்டு ஒன்றைச் சுமந்து வந்து கொண்டிருந்தான். அது அவனின் தலையிலிருந்து நழுவி விழுந்துவிடும் வண்ணம் தடுமாற அவன், 'லா ஹவ்ல வலாகுவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்'' என்று கூறினான். அதனைக் கண்ணியப்படுத்தும் வண்ணம் அதனை அந்தக் கிறிஸ்தவரும கூறினார்.

அது கண்டு வியப்புற்று சிறை அதிகாரி, ''இந்தக் கலிமாவைக் கூறும் நீர் ஏன் இஸ்லாத்தைத் தழுவவில்லை?'' என்று வினவினார். அதற்குச் சரியான மறுமொழி பகராது, ''நான் இதனை வானவர்களிடமிருந்து கற்றுக்கொண்டேன்'' என்றார் அந்தக் கிறிஸ்தவர்.

''எவ்வாறு?'' என்று சிறை அதிகாரி முன்னைவிடப் பன்மடங்கு வியப்புடன் வினவினார்;

அதற்கு அவர் கூறினார்: ''நான் என் சிறிய தந்தையின் செல்வ மகளை மணந்துகொண்டேன். அதற்கு முன் இருவரை அவள் மணந்திருந்தாள்; அவ்விருவருக்கும் மண அறையே மரண அறையாக மாறிவிட்டது. நான் மண முடித்த முதல் இரவு என்முன் ஒரு ஜின் வந்து நின்று, 'நீ இங்கு ஏன் வந்தாய்?'' என்று அதட்டியது. ''இவள் என் மனைவி'' என்று நான் பதிலிறுத்தேன். அதற்கு அது 'இதற்கு முன் இவளை மணமுடித்த இருவரையும் நான் என்ன செய்தேன் என்பதை நீ அறிவாயா? நல்லது, நான் உன் மீது இரங்கி உனக்கு ஒரு சலுகை செய்கிறேன். இன்று வானுலகம் சென்று வானவர்கள் பேசுவதை ஒற்றுக்கேட்டு வருவது என்னுடைய முறையாகும். நீயும் என்னுடன் வா'' என்று கூறியது. அதற்கு நான் இணங்கினேன்.

அடுத்த கணம் அது ஒட்டகம் போன்று உருவெடுத்து என்னையும் தன் முதுகில் ஏற்றி வைத்துக் கொண்டு விண்

ணிலே பறந்தது. விண்ணுலகில் அமரர்கள் லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்று ஓதிய ஓசை என் செவிப்பட்டது. அவ்வளவுதான், அந்த ஜின் மண்ணிலே வந்து 'பொத்'தென்று விழுந்தது. நான் அதன்மீது அமர்ந்திருந்ததால் எனக்கு யாதோர் அடியும் படவில்லை. சற்று நேரத்தில் மயக்கம் தெளிந்து எழுந்த அந்த ஜின் என்னை நோக்கிக் கண்களை மூடிக் கொள்ளுமாறு கூறியது. அவ்விதமே செய்தேன். என்ன புதுமை! என் வீட்டு வாயிலில் நின்று கொண்டிருந்தேன்.

அடுத்த நாள் இரவு நான் என் மனைவியின் அறைக்குச் செல்லுமுன் அந்த ஜின் சென்று கதவுகளை அடைத்துக் கொண்டது. பின்னால் வந்த நான் நிலைமையை ஒருவாறு உய்த்துணர்ந்து கதவின் சாவித்துளையில் வாயைவைத்து, 'லாஹவ்ல வலா குவ்வத, இல்லாபில்லாஹ்' என்று ஹவ்கலாவைத் திரும்பத் திரும்ப ஓதினேன். சற்று நேரத்தில் கதவு 'படார்' என்று திறக்கப்பட்டது. ஜின்தானோ கதவைத் திறந்தது என்று நான் ஐயுற்றுத் திடுக்குற்றேன். ஆனால் என்முன் என் மனைவி புன்முறுவலோடு நின்று கொண்டிருந்தாள். உள்ளே எட்டிப் பார்த்தேன். ஜின் எரிந்து சாம்பலாகிக் கிடந்தது. அப்பொழுது என் மனைவி என்னை நோக்கி, "நீங்கள் அந்த ஹவ்கலாவை ஓதியதும் விண்ணிலிருந்து ஒரு தீப்பிழம்பு இறங்கி வந்து அந்த ஜின்னை எரித்துச் சாம்பலாக்கிவிட்டது' என்று கூறினாள்.

இச்செய்தி கலீபா அல்மாமூனின் செவிப்பட்டதும் அந்தக் கிறிஸ்தவரை அழைத்து வரச்செய்து அவரின் அனுபவம் பற்றிய முழு விவரத்தையும் அவர் வாயிலாகவே கேட்டு வியப்புற்று அவரை உடன் விடுதலை செய்யுமாறு பணித்தார்.

முஹ்யித்தீன் ஆண்டகை அவர்கள் காட்டில் தவம் செய்து கொண்டிருக்கும் பொழுது தம்மைத் தாக்க வந்த ஷைத்தான்களை இந்த ஹவ்கலாவை ஓதியே சாம்பலாக்கினர் என்று வரலாறு கூறுகிறது.

## ரத்த வாந்தி நீங்க, எரிச்சலோடு ரத்தம் வருவது நிற்க

'அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்; ஹஸ்புனல் லாஹு வநிஃமல் வக்கீல் தபாரக்கல்லாஹு அஹ்ஸனுல் ஹாலிக்கீன், லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்' என்ற ஆயத்துக்களை ளுஹருக்குப்பின் 41- தடவை தண்ணீரில் ஓதி ஊதி அருந்த வேண்டும். இவ்வாறு தொடர்ந்து 21 - நாட்கள் செய்து வர வேண்டும்.

## கழுத்து வலி நீங்க

மேலே குறிப்பிடப்பட்ட ஆயத்துகளை வைகறை தொழுகைக்குப்பின் 41-தடவை ஓதிக் கழுத்தில் ஊத வேண்டும்.

## இரணம் விரிவாக

லா ஹவ்ல... அலிய்யில் அளீம் என்பதை வைகறைத் தொழுகைக்குப்பின் 100 தடவை வழக்கமாக ஓதி வரவேண்டும்.

## பிரசவ வேதனை நீங்கி, சுகப் பிரசவம் ஆக

பிரசவ வேளையில் வேதனையால் துன்புறும் பெண்ணின் நெற்றியில் பின்வருமாறு எழுதிக் கட்டின் வேதனை நீங்கி சுகப்பிரசவம் ஏற்படும்.

'அஷ் ஷகூரு அஸ்ஸபூரு வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹில் அலிய்யில் அளீம்,''

## இருதய நோய் நீங்க

ஒவ்வொரு நாளும் நூறு தடவை 'லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹில் அஸீஸில் ஹகீம்' என்று வழக்கமாக ஓதி வரவேண்டும். இது கெய்ரோவிலுள்ள அல் அஸ்ஹர் பல்கலைக் கழகத்தின் உலமாக்களால் சோதிக்கப் பட்ட கைகண்ட மருத்துவமாகும்.

### சிறிய மார்பகம் பெரிதாக

كَمَآءٍ اَنْزَلْنٰهُ مِنَ السَّمَآءِ فَاخْتَلَطَ بِهٖ نَبَاتُ
الْاَرْضِ فَاَصْبَحَ هَشِيْمًا تَذْرُوْهُ الرِّيٰحُ ۗ وَكَانَ
اللّٰهُ عَلٰى كُلِّ شَيْءٍ مُّقْتَدِرًا۝

அது மேகத்திலிருந்து நாம் இறக்கி வைக்கும் நீருக்கு ஒப்பாக இருக்கிறது. பூமியிலுள்ள புற்பூண்டுகள் (அதைக்குடித்து) அதனுடன் கலந்து (நல்ல பயிராயிற்று எனினும் அது பலன் தருவதற்குப் பதிலாக) காற்றடித்துக் கொண்டு போகக் கூடிய பதராகிவிட்டது. *(19:45)*

சிறிய மார்பகத்தைப் பெற்றுள்ள பெண்கள் மேற்கண்ட ஆயத்தை 13 -தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்த வேண்டும். இவ்வாறு 40 -நாட்கள் செய்ய வேண்டும்.

# ஸூரா மர்யம்

### செல்வம், நினைவாற்றல் பெற

செல்வத்தை எதிர்பார்த்தவன் இந்த சூராவை 7 -தடவை ஓதினால் செல்வம் கிடைக்கும். அத்துடன் அவனுக்கு நினைவாற்றலும் அதிகமாகும்.

### நோய் நீங்கப் பெற

நோயாளி ஒருவன் இதனை எழுதிக் கரைத்துக் குடித்தால் குணமடைவான்.

### ஆண்மை பெற

ஆண்மையை இழந்தவன் இதனை எழுதிக் கரைத்துக் குடித்தால், அவனுக்கு மீண்டும் ஆண்மை வந்துவிடும்.

## மரங்கள் நற்பலன் தர

இதனை எழுதித் தோட்டத்திலுள்ள மரம் ஒன்றில் கட்டினால், மரங்களிலிருந்து நற்பயன் கிடைக்கும்.

## நோய் நீங்க

நோயாளி இதனை ஏழு நாட்களுக்கு எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்; குணமடைவான்.

## பிசாசு தீமை செய்யாதிருக்க

ஷைத்தான், பிசாசு உள்ள வீட்டில் இதனைக் கட்டித் தொங்கவிட்டால், குடியிருப்போருக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.

## சுவனம் புக

இதனைத் தினமும் வழக்கமாக ஓதி வருபவர் மரணத்திற்குப் பிறகு சொர்க்கத்தில் இடம் பெறுவார்.

## மரங்கள் செழிக்க

மரங்கள் பட்டுப் போனால், இந்த சூராவை எழுதிக் கரைத்து மரங்களின் வேருக்குத் தெளிக்க வேண்டும். மரங்கள் நல்ல நிலையை அடையும்.

## பிள்ளை இல்லாதவன் பிள்ளை பெற

ஒரு காகிதத்தில் சூரா பாத்திஹாவை நாற்பது தடவை எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொண்டு இந்த சூராவை இரவில் இருபத்தொரு நாட்கள் தண்ணீரில் ஓதி ஊதி படுக்கைக்குச் செல்லுமுன் கணவனும் மனைவியும் அருந்திவர வேண்டும். இது சோதிக்கப்பட்டதாகும்.

## வீடு புனிதம் பெற; நல்ல கனவு காண

இந்த சூராவை எழுதி ஒரு பளிங்குக் கிண்ணத்தில் வைத்து அந்தக கிண்ணத்தை ஒரு வீட்டில் வைத்தால் அந்த வீட்டில் நலமும் புனிதமும் ஏற்படும். அங்குக் குடியிருப்பவர்கள் நல்ல கனவுகள் காண்பார்கள்.

## கண்ணியமும், அறிவும் பெற

وَاذْكُرْ فِي الْكِتٰبِ اِدْرِيْسَ اِنَّهٗ كَانَ صِدِّيْقًا نَّبِيًّا وَّرَفَعْنٰهُ مَكَانًا عَلِيًّا ○

*'(நபியே;) இத்ரீஸைப்பற்றியும் இவ்வேதத்தில் சிறிது கூறும். நிச்சயமாக அவர் மிகச் சத்தியவானாகவும் நபியாக வும் இருந்தார்; அவரை மிக்க மேலான இடத்திற்கு உயர்த்தி விட்டோம்'. (19:55, 57)*

*... இந்த வசனங்களை மஞ்சள் நிறப் பட்டில் தேன் கலந்த குங்குமத்தால் எழுதி மெழுகு கலந்த குந்திரிக்கப் புகைபோட்டு அணிந்து கொண்டால் கண்ணியமும், புத்திசா லித்தனமும் பெருகும்.*

# சூரா தாஹா

## எதிரியை மிகைக்க

*ஒருவன் எதிரியை மிகைக்க விரும்பின் இந்த சூராவை வைகறையில் வழக்கமாக ஓதி வரவேண்டும்.*

## பெண்ணுக்குத் திருமணம் நடக்க

*உரிய காலத்தில் ஒரு பெண்ணுக்கு திருமணம் நடக்க வில்லை என்றால் அவளுக்குத் திருமணம் நடக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் அவளோ அவள் உறவினரோ இந்த சூராவை 21 தடவை ஓத வேண்டும். அல்லது பச்சைப் பட்டில் எழுதி அவள் கழுத்தில் அணிவிக்க வேண்டும். விரைவி லேயே அவளுக்குத் திருமணம் நடக்கும்.*

## சூனியம் அணுகாதிருக்க

*இந்த சூராவை ஒருவன் தினமும் ஓதி வந்தால் சூனியத்தி லிருந்து காக்கப்படுவான்.*

## இரணம் கிடைக்க

சூரியன் உதயமாகும் முன் இதனை ஒருவன் தினந் தோறும் ஓதினால், அவனுக்கே தெரியாத வகைகளில் அவனுக்கு வருமானம் கிடைக்கும்; அவன் தேவைகள் நிறைவேறும்.

## ஒருவன் மீது படைப்பினங்கள் அன்பு செலுத்த

சூரியன் உதயமாகும் நேரத்தில் ஒருவன் இதனை வழக்கமாக ஓதிவரின் அவன்மீது படைப்புகள் அனைத்தும் அன்பு செலுத்தும்.

## பகைவர் பொல்லாங்கிலிருந்து காவல் பெற

மேலே கூறப்பட்ட வண்ணம் இதனை ஓதி வரவேண்டும்.

## மட்டில்லா வரிசைகள், பயன்கள் பெற

மேலே கூறப்பட்ட வண்ணம் இதனை ஓதி வரவேண்டும்.

## கல்வியில் முன்னேற்றம் அடைய, பேச்சாற்றல் பெற

رَبِّ اشْرَحْ لِيْ صَدْرِيْ ○ وَيَسِّرْ لِيْٓ اَمْرِيْ ○
وَاحْلُلْ عُقْدَةً مِّنْ لِّسَانِيْ ○ يَفْقَهُوْا قَوْلِيْ ○

அதற்கு (மூஸா) என் இறைவனே! என் இருதயத்தைத் (திடப்படுத்தி) விரிவாக்கு, நான் செய்ய வேண்டிய அலுவல்களை எனக்கு எளிதாக்கு. என் நாவிலுள்ள முடிச்சை அவிழ்த்துவிடு. என் வார்த்தைகன்ள (மக்கள்) விளங்கிக் கொள்ளுமாறு செய்.'

காலைத் தொழுகைக்குப் பின்னால் இந்த வசனங்களைத் தினந்தோறும் 21-தடவை ஓதி வருபவன் கல்வியில் முன்னேற்றமடைவான். சிறந்த பேச்சாளனாவான்.

## திக்குவாய் நீங்க

இதனை நாளொன்றுக்கு 41 தடவை வீதம் 41 நாட்களுக்கு ஓதி வரவேண்டும். அல்லது ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பிறகும் இதனை 21 -தடவை ஓதி வரவேண்டும்.

## கப்ரில் ஷைத்தானை அடக்க

مِنْهَا خَلَقْنٰكُمْ وَفِيْهَا نُعِيْدُكُمْ وَمِنْهَا نُخْرِجُكُمْ تَارَةً اُخْرٰى ○

'பூமியிலிருந்தே நாம் உங்களைச் சிருஷ்டித்தோம். பின்னர் அதிலேயே நாம் உங்களைச் சேர்த்துவிடுவோம். மற்றொரு தடவையும் அதிலிருந்தே நாம் உங்களை வெளிப்படுத்துவோம்' *(20:55)*

பிரேதத்தை அடக்கம் செய்யும்போது இந்த வசனத்தை மும்முறை ஓதி மூன்று பிடி மண்ணை அடக்கவிடத்தில் போட்டால், அந்தப் பிரேதத்தோடு பிறந்த ஷைத்தான் அடங்கி விடுவான்.

## கல்வியில் முன்னேற்றம் அடைய

''ரப்பி ஸித்னீ இல்மா''

இறைவனே! என் கல்வி அறிவை பின்னும் (பின்னும்) அதிகப்படுத்து. *(21:114)*

ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னாலும் இந்த வசனத்தை இயன்ற அளவு ஓதி வருபவன் கல்வியில் முன்னேற்றமடைவான்; அவன் உள்ளம் விரிவடையும். எதையும் கற்க முற்படும்போது இந்த வசனத்தை ஓதிக்கொள்ள வேண்டும்.

## திருமணம் ஆக; நோய் நீங்க; செல்வம் பெற

وَلَا تَمُدَّنَّ عَيْنَيْكَ إِلَىٰ مَا مَتَّعْنَا بِهِۦٓ أَزْوَٰجًا مِّنْهُمْ زَهْرَةَ ٱلْحَيَوٰةِ ٱلدُّنْيَا لِنَفْتِنَهُمْ فِيهِ ۚ وَرِزْقُ رَبِّكَ خَيْرٌ وَأَبْقَىٰ ۝ وَأْمُرْ أَهْلَكَ بِٱلصَّلَوٰةِ وَٱصْطَبِرْ عَلَيْهَا ۖ لَا نَسْـَٔلُكَ رِزْقًا ۖ نَّحْنُ نَرْزُقُكَ ۗ وَٱلْعَٰقِبَةُ لِلتَّقْوَىٰ ۝

*'(நபியே!) அவர்களில் சிலருக்குச் சுகமனுபவிக்க நாம் கொடுத்திருப்பவற்றின் பக்கம் நீர் உம்முடைய பார்வையை செலுத்தாதீர். இவை யாவும் இவ்வுலக வாழ்க்கையின் அலங் காரங்களே! அவர்களைச் சோதிப்பதற்காகவே (நாம் இவற்றை அவர்களுக்கு நல்கியுள்ளோம்). ஆனால் உம் இறைவன் உமக்குக் கொடுத்திருப்பதோ மிக்க மேலானதும் நிலையானதுமாகும். (நபியே!) தொழுது வருமாறு நீர் உம் குடும்பத்தினரை ஏவும். நீரும் அதன் மீது உறுதியாக இரும் (இதற்காக) நாம் உம்மிடம் யாதொன்றையும் கேட்கவில்லை. உமக்கு வேண்டியவற்றையெல்லாம் நாமே கொடுக்கின் றோம். முடிவான நன்மை பரிசுத்தத் தன்மைக்குத்தான்'*

*(20:131, 132)*

இந்த சூராவின் மேற்கண்ட 131, 132 ஆகிய இரண்டு வசனங்களை ஒருவன் எழுதி அணிந்து கொண்டால் - திருமணமாகாதவனாயிருந்தால், திருமணம் நடக்கும்; அதிக மறதியுள்ளவனாயிருந்தால், நினைவாற்றல் அதிகமாகும். நோயுள்ளவனாயிருந்தால் குணமேற்படும், வறிய நிலையிலி ருந்தால் செல்வம் கிடைக்கும்.

# சூரா அன்பிய்யா

## பகைவர்கள் அடங்க

இந்த சூராவை ஒருவன் தினம் 7 தடவை ஓதிவந்தால் அவனுடைய பகைவர்கள் அடங்கிவிடுவார்கள்.

## துக்கம் விலக

துக்கம், வேதனை விபத்து ஆகியவற்றில் சிக்கிக் கலங்கிக் கிடப்பவன் இந்த சூராவைத் தினம் மும்முறை ஓதி வரவேண்டும். அவனுக்கு விடுதலை கிடைக்கும்.

## மறுமையில் விசாரணை இலேசாக

ஹதீஸில் இவ்வாறு வந்திருக்கிறது:

''ஒருவன் இந்த சூராவை ஓதிவந்தால் மறுமையில் அவனுடைய விசாரணையை இறைவன் இலேசாக்குவான்.''

## காய்ச்சல் அகல

قُلْنَا يٰنَارُ كُوْنِىْ بَرْدًا وَّسَلٰمًا عَلٰٓى اِبْرٰهِيْمَ ۙ

'நெருப்பே! நீ இப்ராஹீமுக்கு சுகம் தரக்கூடிய விதத்தில் குளிர்ந்துவிடு' என்று நாம் கூறினோம். (21:69)

இப்ராஹீம் (அலை) அவர்களை நம்ரூத் நெருப்புக் குண்டத்தில் தூக்கி எறிந்த பொழுது இறைவன் கூறிய வாசகம் இது.

— காய்ச்சலால் துன்பப்படுகிறவனுக்கு இந்த வசனத்தை எழுதித் தாவீஜாக்கிக் கழுத்தில் அணிவிக்க வேண்டும். குணமேற்படும்.

முறைக் காய்ச்சலுக்கு இப்படிப் பரிகாரம் செய்ய வேண்டும்; காய்ச்சல் வருவதற்கு இரண்டு மணி நேரம் முன்னர் மூன்று அரச இலைகளில் இந்த வசனத்தை எழுத வேண்டும். அரைமணி நேரத்துக்கு ஓர் இலை வீதம், நோயாளி அவற்றை நக்கிவிடவேண்டும்.

## ஆபத்து நீங்க

ஆபத்தில் சிக்கிக் கொண்டவன் ஐயூப் (அலை) அவர்கள் இறைஞ்சிய அடுத்து வரும் வசனத்தை ஓத வேண்டும்.

## துன்பங்கள் நீங்கி மீட்சிப் பெற

رَبِّ إِنِّي مَسَّنِيَ الضُّرُّ وَأَنتَ أَرْحَمُ الرَّاحِمِينَ ۝
لَا إِلَٰهَ إِلَّا أَنتَ سُبْحَانَكَ إِنِّي كُنتُ مِنَ الظَّالِمِينَ ۝

*''நிச்சயமாக நோய் என்னைப் பிடித்துக் கொண்டது. (அதை நீ நீக்கிவிடு) நீயோ கிருபையாளர்களிலெல்லாம் மகா கிருபையாளன்''* *(21:83)*

*உன்னைத் தவிர வணங்குவதற்குரியோன் வேறு எவனு மில்லை, நீ மிகவும் தூய்மையானவன். நிச்சயமாக நானோ அக்கிரமக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்:* *(21:84)*

''லா இலாஹ இல்லா அன்த சுப்ஹானக
இன்னீ குன்து மினள் ளாலிமீன்''

மேற்கண்ட இந்த வசனம் குறித்து அறிஞர்கள் இப்படிக் கூறியிருக்கிறார்கள்.

இதில் 'இஸ்முல் அஃலம்' அடங்கியிருக்கிறது. எனவே நேர்மையான காரியத்துக்காக இந்த ஆயத்து ஓதப்பட்டால், இறைவனருளால் காரியம் நிறைவேறும்.

பெரியோர்களில் ஒருவர் பெருமானாரைக் கனவில் கண்டார். ''இறை தூதர் அவர்களே! எனக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கிறது. எவ்வழியில் அதனை நிறைவேற்ற முடியும்?'' என்று கேட்டார்.

பெருமானார் பதிலளித்தார்கள்: ''ஒருவன் உலூ செய்து நபில் தொழுது சுஜூது செய்தபடியே, லாஇலாஹ இல்லா அன்த... எனும் வசனத்தை 40 தடவை ஓதிப் பிரார்த்தனை

செய்தால், அந்தப் பிரார்த்தனையை இறைவன் நிறைவேற்றி வைப்பான்!

சிரமப்படுகிறவர்கள் இதனை ஓதி வந்தால் இறைவன் மீட்சியைக் கொடுப்பான்!

## ஷஹீதின் அந்தஸ்துடன் இறக்க

நோய் கொண்டவன் இதனை 40 தடவை ஓதிவந்தால் பிழை பொறுக்கப்பட்டவனாக குணமடைவான். இவன் இறந்து விட்டால். 'ஷஹீது' எனும் தியாகியின் படித்தரத்தை அடைவான் என்று அண்ணல் நபி(ஸல்) அவர்கள் கூறினர்.

## தூக்கம் வர

தூக்கம் வராதவர்கள் இதனை மான் தோலில் எழுதி இடுப்பில் அணிந்து கொள்ள வேண்டும். அதனை அப்புறப்ப டுத்தும் வரை தூக்கம் அவர்களை விடாது.

## மாதவிடாய் வர

இதனை 341 தடவை ஜம்ஜம் நீரில் ஓதி ஊதிப் பதி னொரு நாட்கள் அருந்தி வரவேண்டும்.

## சுகப் பிரசவம் ஏற்பட

மூன்று வெற்றிலைகளை எடுத்து அவற்றின் காம்பையும் வாலையும் கிள்ளிவிட்டு பதினொரு தடவை ஸலவாத்தை யும் பதினொரு தடவை இந்த ஆயத்தையும் ஓதி ஊதித் தின்னக் கொடுப்பின் சுகப்பிரசவம் ஏற்படும்.

## எண்ணங்கள் நிறைவேற

பெருமானார் (ஸல்) இவ்வாறு கூறியிருக்கிறார்கள்: ''இந்த வசனம், யூனுஸ் நபியவர்கள் மீனின் வயிற்றில் இருந்தபோது செய்த பிரார்த்தனையாகும். இதனை வைத்து ஒரு முஸ்லிம் நல்ல காரியத்துக்காகப் பிரார்த்தனை செய்தால், இறைவன் அதனை நிறைவேற்றி வைப்பான்.''

## பாவங்கள் மன்னிக்கப்பட, ஷஹீதுகளின் பதவியை அடைய

நோயுற்றோன் இதனை அதிகமதிகமாக ஓதின் அவன் இறந்துவிடின் 'ஷஹீதுகளின்' பதவியை எய்தப் பெறுவான்; பிழைத்துக்கொளின் பாவங்கள் மன்னிக்கப் பெற்று பரிசுத்த நிலையிலாவான்.

## நலன்கள் அனைத்தும் பெற

இதனை தினம் 1000 -தடவை ஓதுகிறவன் தான் விரும்பும் பதவியை அடைவான். அவனுடைய வருமானம் பெருகும். துன்பமும் துயரமும் போக்கப்படும். அவனுக்கு முன்னால் நற்காரியங்களின் வாசல் விரியத் திறந்து வைக்கப்படும். ஷைத்தானின் தீங்குகளிலிருந்து அவன் பாதுகாக்கப்படுவான். அதிகாரிகளின் தொல்லைகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். மனிதர்கள் அவனைப் பெரிதும் விரும்புவார்கள். பகைவர்கள் அவனுக்குப் பயப்படுவார்கள். அவன் எப்பொழுதும் செழிப்புற்றிருப்பான்.

ஒருவன் 11-தடவை 'ஸலவாத்' ஓதி இந்த வசனத்தை 3125 -தடவை ஓதி, அப்புறம் மீண்டும், 'ஸலவாத்து' 11 -தடவை ஓதினால் இவ்வாறு 40 நாட்கள் தொடர்ந்து செய்தால் அவன் எண்ணத்தை இறைவன் நிறைவேற்றி வைப்பான். ஓதத் துவங்கும்போது, ஒரு பாத்திரத்தில் தண்ணீர் எடுத்துத் தன் அருகில் வைத்துக் கொள்ள வேண்டும்.

## தொழுநோய் நீங்க

தொழு நோயாளர் ஒருவர் சான்றோர் ஒருவரைச் சந்தித்துத் தம் அவல நிலையைக் கூற, அவர் 21: 83, 84 -ஆவது திருவசனங்களை ஓதி உமிழ் நீரை அந்நோயாளர் மீது துப்ப நலன் ஏற்பட்டது என்று கூறுவர்.

## பதவி மீளப்பெற

وَذَا النُّوْنِ اِذْ ذَّهَبَ مُغَاضِبًا فَظَنَّ اَنْ لَّنْ نَّقْدِرَ عَلَيْهِ فَنَادٰى فِى الظُّلُمٰتِ اَنْ لَّآ اِلٰهَ اِلَّآ اَنْتَ سُبْحٰنَكَ اِنِّيْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ ○

*''யூனுஸ் நபியாகிய துன்னூனையும் (நாம் தூதராக ஆக்கினோம்) அவர் சினமுற்றுச் சென்ற காலை நாம் அவரைப் பிடித்துக் கொள்ள மாட்டோம் என்று எண்ணிக் கொண்டார். (மீன் வயிற்றின்) இருளிலிருந்து அவர் ''உன்னைத் தவிர வணங்குவதற்குரியோன் வேறில்லை. நீ மிகவும் தூய்மையாளன். நிச்சயமாக, நானே அக்கிரமக்காரர்களில் ஒருவனாகிவிட்டேன்'' என்று (நம்மை நோக்கி) இறைஞ்சினார்'' (21: 97)*

*ஒருவன் காலைத் தொழுகைக்குப் பிறகு இடையில் எவ்வித உலகப் பேச்சும் பேசாமல் இந்த வசனத்தை சரியாக 41 தடவை ஓதி வந்தால், இவ்வாறு 40 நாட்களுக்குத் தொடர்ந்து ஓதி வந்தால் அவன் விரும்பியதைப் பெற்றுக் கொள்வான். துன்பத்தில் சிக்கியிருந்தால் மீட்சியடைவான். பதவியிலிருந்து நீக்கப்பட்டிருந்தால் மீண்டும் பதவி கிடைக்கும். இது பரிசோதனை செய்யப்பட்ட ஒன்றாகும்.*

## குழந்தை பெற

رَبِّ لَا تَذَرْنِيْ فَرْدًا وَّاَنْتَ خَيْرُ الْوٰرِثِيْنَ ○

*'என் இறைவனே! நீ என்னை(ச்சந்ததியற்ற) தனித்தவனாக ஆக்கிவிடாதே! நீயோ அனந்தரம் கொள்வோரில் மிக்க மேலானவன்.*

*குழந்தையற்றவர்கள் ஜகரிய்யா (அலை) இறைஞ்சிய இந்த இறைஞ்சுதலை ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும்*

மும்முறை ஓதி வரவேண்டும். இறைவன் அவர்களுக்குக் குழந்தைப் பேற்றைக் கொடுப்பான்.

**கர்ப்பம் பாதுகாப்பு பெற**

وَالَّتِيٓ اَحْصَنَتْ فَرْجَهَا فَنَفَخْنَا فِيْهَا مِنْ
رُّوْحِنَا وَجَعَلْنٰهَا وَابْنَهَآ اٰيَةً لِّلْعٰلَمِيْنَ ○ اِنَّ هٰذِهٖٓ
اُمَّتُكُمْ اُمَّةً وَّاحِدَةً ۖ وَّاَنَا رَبُّكُمْ فَاعْبُدُوْنِ ○ وَتَقَطَّعُوْٓا
اَمْرَهُمْ بَيْنَهُمْ ۗ كُلٌّ اِلَيْنَا رٰجِعُوْنَ ○

*''தன் கற்பைக் காத்துக் கொண்ட (மர்யம் என்பவளை நினைவுக் கொணர்வீராக) ஜிப்ரீல் மூலம் அவருடைய கர்ப் பத்தில் நாம் ஊதினோம். அவளையும் அவளுடைய மகனை யும் உலகத்தாருக்கு ஓர் அத்தாட்சியாகவும் ஆக்கினோம். நீங்கள் அனைவரும் ஒரே வகுப்பார்தாம். உங்கள் அனைவ ருக்கும் இறைவன் நான் ஒருவனே! எனவே என்னையே நீங்கள் வணங்குங்கள். உங்களுடைய மார்க்கம் நிச்சயமாக ஒன்றே! நான் ஒருவனே உங்கள் இறைவன், என்னையே நீங்கள் வணங்குங்கள்.'' (21:91, 92, 93)*

இந்த சூராவின் மேற்கண்ட 91, 92, 93 ஆகிய மூன்று வசனங்களை எழுதி கர்ப்பிணி அணிந்து கொள்ள வேண்டும். நாற்பது நாள் கழித்ததும் அதனைக் குழந்தைக்கு அணிவிக்க வேண்டும். இதனால் கர்ப்பத்துக்கும் குழந்தைக்கும் பாதுகாப் புக் கிடைக்கும்.

### பிரசவ வேதனை நீங்க

أَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْٓا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَتَا
رَتْقًا فَفَتَقْنٰهُمَا ؕ وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَيْءٍ
حَيٍّ ؕ اَفَلَا يُؤْمِنُوْنَ ۝

'(துவக்கத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும்) தனித்த னியாக இல்லாமலிருந்ததை நாமே பிரித்தமைத்து (மழை) நீரைக் கொண்டு (உயிருள்ள) ஒவ்வொன்றையும் வாழ்ந்திருக்கச் செய்தோம் என்பதை இந்நிராகரிப்போர் பார்த்தேனும் நம்பமாட்டார்களா?''

இந்த சூராவின் மேற்கண்ட 30-ஆவது வசனத்தை எழுதி, பிரசவ வேதனை அனுபவிப்பவளுக்கு அணிவிக்க வேண்டும். அல்லது அவள் மீது ஓதி ஊதவேண்டும் - அல்லது ஏதேனும் ஒரு பொருளில் ஓதியூதி அவளுக்குத் தின்னக் கொடுக்க வேண்டும். இறைவனருளால் சுகப்பிரசவம் ஏற்படும்.

# சூரா ஹஜ்

இதற்குள்ள தனிச் சிறப்பு: இது பகலிலும், இரவிலும் பிரயாணத்திலும், ஊரிலும், மக்காவிலும், மதீனாவிலும் இறக்கப்பட்டதாகும். இதிலுள்ள சில வசனங்களைப் பயன் படுத்தி அநியாயக்காரர்களைத் தண்டிக்கலாம்.

# சூரா முஃமினூன்

### குடிப்பழக்கம் ஒழிய

இதனை இரவு நேரத்தில் வெள்ளைத் துணியில் எழுதிக் குடிகாரனுக்கு அணிவித்தால், அப்புறம் அவன் என்றைக்கும் குடிக்க மாட்டான்.

## கர்ப்பம் பாதுகாப்புப் பெற

وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ مِنْ سُلٰلَةٍ مِّنْ طِيْنٍ ۝ ثُمَّ
جَعَلْنٰهُ نُطْفَةً فِيْ قَرَارٍ مَّكِيْنٍ ۝ ثُمَّ خَلَقْنَا النُّطْفَةَ
عَلَقَةً فَخَلَقْنَا الْعَلَقَةَ مُضْغَةً فَخَلَقْنَا الْمُضْغَةَ
عِظٰمًا فَكَسَوْنَا الْعِظٰمَ لَحْمًا ۗ ثُمَّ اَنْشَاْنٰهُ خَلْقًا
اٰخَرَ ۗ فَتَبٰرَكَ اللّٰهُ اَحْسَنُ الْخٰلِقِيْنَ ۝

*நிச்சயமாக மனிதனைக் களிமண்ணால் படைத்தோம். பின்னர் அதனை நாம் இந்திரியமாக்கி ஒரு பத்திரமான இடத்தில் வைத்தோம். பின்னர், அந்த இந்திரியத்தை இரத்தக் கட்டியாக்கினோம், பின்னர் அவ்விரத்தக் கட்டியை மாமிசமாகச் செய்தோம். பின்னர் அம்மாமிசப் பிண்டத்திலிருந்து எலும்பை உற்பத்தி செய்து அவ்வெலும்புக்கு மாமிசத்தை அணிவித்தோம். பின்னர் அதனை(ப் பூரணமான மனித) சிருஷ்டியாக அமைத்தோம். சிருஷ்டிகர்த்தாவாகிய அந்த அல்லாஹ்வின் மகத்துவம்தான் என்னே!'' (23:12, 13, 14)*

கர்ப்பம் பாதுகாப்போடு இருப்பதற்கு இந்த சூராவின் மேற்கண்ட *12, 13, 14* ஆகிய வசனங்களை உபயோகித்துக் கொள்ளலாம். அவற்றை ஏழு இலைகளில் எழுதி கர்ப்பிணிக்கு கொடுக்க வேண்டும். ஒன்றின் பின் ஒன்றாக அவற்றை அவள் மென்று விழுங்க வேண்டும். ஒவ்வொரு இலைக்குப் பிறகும் சிறிது மாட்டுப்பால் குடிக்க வேண்டும். இவ்வாறு மூன்று நாட்கள் செய்தால், கர்ப்பத்துக்குப் பாதுகாப்பு ஏற்படும்.

## நல்ல குழந்தை பெற

*இவற்றைத் துணியில் எழுதிக் கணவன் தொப்பிக்கடியிலும் மனைவி கூந்தலுக்கடியிலும் வைத்துக் கொண்டால், பிறக்கும் குழந்தையை எல்லோரும் கண்ணியப்படுத்துவார்கள்.*

## சொறி, சிரங்கு நீங்க

*சொறி, சிரங்கால் பாதிக்கப்பட்ட ஒருவர் அலீ (ரலி) அவர்களைக் கனவில் கண்டு தம் நோயைப்பற்றி முறையிட, பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் ஃபதபாரகல்லாஹு அஹ்ஸனுல் ஹாலிகீன் (23: 14) என்ற ஆயத்தை ஓதி ஊத அவர் நலன் பெற்றார்.*

## கப்பல் பாதுகாப்புப் பெற

*கடலில் சென்று கொண்டிருக்கும் கப்பலுக்கு எல்லாவிதமான பாதுகாப்பும் ஏற்பட வேண்டுமானால் சூரியோதயத்துக்கு முன்னால் ஸூராபாத்திஹாவை மும்முறையும் இந்த வசனங்களை மும்முறையும் ஓத வேண்டும். அப்புறம் அடுத்து வரும் துஆவை ஓத வேண்டும்.*

يَا مَنْ فَلَقَ الْبَحْرَ لِمُوْسَى بْنِ عِمْرَانَ وَنَجَّى يُوْنُسَ
مِنْ بَطْنِ الْحُوْتِ وَسَخَّرَ الْفُلْكَ وَالْعَالِمُ بِعَدَدِ
قَطْرِ الْبَحْرِ وَرِمَالِهِ وَخَالِقُ أَصْنَافِهِ وَعَجَائِبِهِ اَلْكِفَايَةَ
اَلْكِفَايَةَ، اَلْكِفَايَةَ، يَا كَافِيَ مَنِ اسْتَكْفَاهُ يَا مُجِيْبَ
مَنْ دَعَاهُ يَا مُقْبِلَ مَنْ رَجَاهُ أَنْتَ الْكَافِيْ لَا كَافِيَ إِلَّا أَنْتَ

**பேய் நீங்க**

أَفَحَسِبْتُمْ أَنَّمَا خَلَقْنَٰكُمْ عَبَثًا وَأَنَّكُمْ إِلَيْنَا
لَا تُرْجَعُونَ ○ فَتَعَٰلَى ٱللَّهُ ٱلْمَلِكُ ٱلْحَقُّ ۖ لَآ إِلَٰهَ
إِلَّا هُوَ رَبُّ ٱلْعَرْشِ ٱلْكَرِيمِ ○

''நாம் உங்களை சிருஷ்டித்ததெல்லாம் வீணுக்காக என்றும் நீங்கள் நம்மிடம் கொண்டுவரப்பட மாட்டீர்கள் என்றும் எண்ணிக் கொண்டிருந்தீர்களா? எனவே மெய்யான அரசனாகிய அல்லாஹ் மிக உயர்ந்தவன் அவனைத் தவிர வணங்குவதற்குரியோன் வேறில்லை, கண்ணியமிக்க அர்ஷின் உரிமையாளன் அவனே.'' (23 : 115, 116)

... பேய் பிசாசினால் துன்பப்படுகிறவர்களுக்கு இந்த வசனங்களை ஓதிக் காதில் ஊத வேண்டும்.

# ஸூரா நூர்

**ஸ்கலிதம் என்றைக்கும் ஏற்படாதிருக்க**

ஒருவன் இந்த சூராவை எழுதித் தன் படுக்கைக்கு அடியில் வைத்துக் கொண்டால், அவனுக்கு என்றைக்குமே ஸ்கலிதம் ஏற்படாது.

**திருமண ஆசை அற்றுப்போக**

இதனை எழுதி 'ஸம்ஸம்' தண்ணீரால் அழித்துக் குடித்து விட்டால் மண முடிக்க வேண்டும் என்ற ஆசையே அற்றுப் போய்விடும். அவனே கலவியில் ஈடுபட்டாலும் இன்பம் ஏற்படாது.

**மாற்றானை நாடாதிருக்க**

وَلَا تُكْرِهُوْا فَتَيٰتِكُمْ عَلَى الْبِغَآءِ اِنْ اَرَدْنَ تَحَصُّنًا لِّتَبْتَغُوْا عَرَضَ الْحَيٰوةِ الدُّنْيَا ۭ وَمَنْ يُّكْرِهْهُّنَّ فَاِنَّ اللّٰهَ مِنْۢ بَعْدِ اِكْرَاهِهِنَّ غَفُوْرٌ رَّحِيْمٌ ۝

''மணமுடித்துக் கொள்ள வசதியற்றோர் அல்லாஹ் தன்னுடைய அருளைக் கொண்டு பொருளை கொடுக்கும் வரையில் அவர்கள் உறுதியாகத் தங்களுடைய கற்பைக் காத்து கொள்ளவும்... தங்கள் கற்பைக் காத்துக் கொண்டிருக்கும் உங்கள் அடிமைப் பெண்களை இவ்வுலக வாழ்க்கைக்குரிய ஒரு அற்பப் பொருளை நீங்கள் அடையும் பொருட்டு விபச்சாரம் செய்யும்படி அவர்களை நிர்பந்திக்காதீர்கள்.

*(24:33)*

இந்த வசனத்தையும் இதையடுத்த 34-வது வசனத்தையும் வைத்து, மாற்றாள் புணர்ச்சியில் ஆர்வம் கொண்டவனைத் திருத்தலாம்.

وَلَقَدْ اَنْزَلْنَآ اِلَيْكُمْ اٰيٰتٍ مُّبَيِّنٰتٍ وَّمَثَلًا مِّنَ الَّذِيْنَ خَلَوْا مِنْ قَبْلِكُمْ وَمَوْعِظَةً لِّلْمُتَّقِيْنَ ۝

''நிச்சயமாக நாம் உங்களுக்குத் தெளிவான வசனங்களையும் பயபக்தியுடையோர்க்கு நல்லுபதேசங்களையும் இதில் இறக்கி வைத்திருக்கிறோம்'' *(24:34)*

இவற்றைத் தண்ணீரில் ஓதியூதி, அந்தத் தண்ணீரினால் மாவு பிசைந்து ரொட்டி தயாரிக்க வேண்டும். அதை அவன் சாப்பிட வேண்டும். இவ்வாறு 7 -நாட்களுக்குத் தொடர்ந்து செய்தால் அவன் குணம் மாறுதலடைந்துவிடும். இது அவனுக்கு பெரிதும் பயனளிக்கும்.

**வருமானம், கண்ணியம் ஏற்பட**

اَللّٰهُ نُوْرُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ ؕ مَثَلُ نُوْرِهٖ كَمِشْكٰوةٍ
فِيْهَا مِصْبَاحٌ ؕ اَلْمِصْبَاحُ فِىْ زُجَاجَةٍ ؕ اَلزُّجَاجَةُ
كَاَنَّهَا كَوْكَبٌ دُرِّىٌّ يُّوْقَدُ مِنْ شَجَرَةٍ مُّبٰرَكَةٍ
زَيْتُوْنَةٍ لَّا شَرْقِيَّةٍ وَّلَا غَرْبِيَّةٍ ۙ يَّكَادُ زَيْتُهَا يُضِىْٓءُ
وَلَوْ لَمْ تَمْسَسْهُ نَارٌ ؕ نُوْرٌ عَلٰى نُوْرٍ ؕ يَهْدِى اللّٰهُ
لِنُوْرِهٖ مَنْ يَّشَآءُ ؕ وَيَضْرِبُ اللّٰهُ الْاَمْثَالَ لِلنَّاسِ ؕ
وَاللّٰهُ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ ۙ ۝ فِىْ بُيُوْتٍ اَذِنَ اللّٰهُ
اَنْ تُرْفَعَ وَيُذْكَرَ فِيْهَا اسْمُهٗ ۙ يُسَبِّحُ لَهٗ
فِيْهَا بِالْغُدُوِّ وَالْاٰصَالِ ۝ رِجَالٌ ۙ لَّا تُلْهِيْهِمْ
تِجَارَةٌ وَّلَا بَيْعٌ عَنْ ذِكْرِ اللّٰهِ وَاِقَامِ الصَّلٰوةِ
وَاِيْتَآءِ الزَّكٰوةِ ۙ يَخَافُوْنَ يَوْمًا تَتَقَلَّبُ
فِيْهِ الْقُلُوْبُ وَالْاَبْصَارُ ۙ ۝

அன்பு, ஒப்புதல், வருமானம், கண்ணியம், நன்னடத்தை முதலியவை தனக்கு ஏற்படவேண்டும் என்று ஒருவன் விரும்பினால், அவன் இந்த சூராவின் 35, 36, 37, 38 ஆகிய நான்கு வசனங்களை உபயோகித்துக் கொள்ளலாம்.

உபயோகிக்கும் முறை: வியாழன், வெள்ளி ஆகிய இரண்டு நாட்கள் நோன்பு வைத்துக் கொள்ளவேண்டும். வெள்ளிக்கிழமையன்று அஸர் தொழுகைக்கு முன்னர் 'கிப்லா'வை முன்னோக்கியவாறு உட்கார்ந்து கொள்ள வேண்

டும். சூரா யாசீனை ஒரு தடவை ஓதிவிட்டு அப்புறம் மேற்குறிப்பிட்ட வசனங்களை மான் தோலில் எழுத வேண் டும். இதற்கு உபயோகிக்கப்படும் சாயம், அறிவுத்துறையில் ஈடுபட்ட ஒருவரின் மைக் கூட்டிலிருந்து எடுக்கப்பட்டதாக இருக்க வேண்டும்.

அப்புறம்: அஸர் தொழுகையை நிறைவேற்றி விட்டு சூராகஹ்பை ஒரு தடவை ஓத வேண்டும். இப்படி ஓதும் போது, மேற்குறிப்பிட்ட மான் தோல் கையில் இருக்க வேண்டும்.

பிறகு அதனை யார் வைத்திருந்தாலும் பயன் கிடைக் கும், நினைத்தது நடக்கும்.

## கண்வலி நீங்க

மேலே கண்ட *84: 35, 36, 37* ஆயத்துடன் *38*-ஆவது ஆயத்தையும் சேர்த்து ஓதிக் கண்ணில் ஊதவேண்டும்.

## வருமானம், கண்ணியம் அதிகப்பட

'அல்லாஹு நூருஸ்ஸமாவாத்தி வல்லாஹு பிகுல்லி ஷையின் அலீம்' என்பது ஆயத்துந்நூர் (ஒளி வசனம்) (24: 35) என்று அழைக்கப் பெறுகிறது. இதனை வழக்கமாக ஓதிவரின் வருமானம், கண்ணியம் அதிகப்படும்.

## உள்ளம் விரிவடைய, வருமானம் பெருக

اَللّٰهُ نُوْرُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ ط

அல்லாஹ்வே வானங்கள் பூமி ஆகியவற்றின் பேரொளி யாக இருக்கிறான்.

இதை ஒருவன் எழுதித் தன்னிடம் வைத்துக் கொண் டால் அவன் உள்ளம் விரிவடையும்; வருமானம் பெருகும்.

# சூரா புர்கான்

## விசாரணையின்றி சுவனம் புக

'சூரா புர்கானை ஓதுகிறவன் விசாரணையின்றிச் சொர்க்கத்தில் பிரவேசிப்பான்' என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

## பாம்பு கடிக்காதிருக்க, கருத்தரிக்க பகைவர் தீங்கு செய்யாதிருக்க

இதனை மூன்று தரம் எழுதி அணிந்து கொண்டால் பாம்பு முதலிய விஷ ஜந்துக்களுக்குப் பயப்பட வேண்டியதில்லை. பாம்புப் புற்றுக்கே சென்றாலும் அவனுக்குத் தீங்கு ஏற்படாது. தம் இடத்தை விட்டே அவை வெளியேறிப் போய்விடும். அவன் தன் மனைவியோடு சேர்ந்தால் தாமதமின்றி உடனே கருத்தரிக்கும். பகைவர்கள் முன் செல்லினும் யாதொரு தீங்கும் செய்யமாட்டார்கள்.

## பாழ் கிணற்றில் நீர் பொங்க

وَهُوَ الَّذِىٓ اَرْسَلَ الرِّيٰحَ بُشْرًاۢ بَيْنَ يَدَىْ رَحْمَتِهٖ ۚ
وَاَنْزَلْنَا مِنَ السَّمَآءِ مَآءً طَهُوْرًا ۙ لِّنُحْیِۦَ بِهٖ بَلْدَةً
مَّيْتًا وَّنُسْقِيَهٗ مِمَّا خَلَقْنَآ اَنْعَامًا وَّاَنَاسِىَّ كَثِيْرًا ○

தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும்போது ஆற்றுக்கடியிலிருந்து மணல் கொண்டு வந்து, இந்த சூராவின் மேற்கண்ட *48, 49* -ஆகிய வசனங்களை அதில், ஓதியூதி, அம்மணலை மரத்தடியில் இறைத்து விட்டால் மரத்துக்குச் செழுமை ஏற்படும். அநத் மணலை பாழடைந்த கிணற்றில் கொட்டினால், கிணற்றுக்கடியிலிருந்து புனலூற்றுப் பொங்க ஆரம்பித்துவிடும்.

பரக்கத்தையும் செழிப்பையும் ஏற்படுத்துவதற்கு இது சிறந்த வழியாகும்.

### தாகம் நீங்க

وَهُوَ الَّذِيْٓ اَرْسَلَ الرِّيٰحَ بُشْرًاۢ بَيْنَ يَدَيْ
رَحْمَتِهٖ ۚ وَاَنْزَلْنَا مِنَ السَّمَآءِ مَآءً طَهُوْرًا ۝

*(25:48)* என்ற ஆயத்தை *21*-தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்த வேண்டும்.

### இல்லாளோ, மக்களோ தனக்கு அடங்கி நடக்க

ஒருவன் தன் மனைவியோ மக்களோ தனக்கு அடங்கி நடக்க வேண்டுமென்று விரும்பினால் இஷா தொழுகைக்குப் பின் *505*-தடவை பின்வரும் ஆயத்தை தொடர்ந்து *21* நாட்கள் ஓதிவர வேண்டும்.

رَبَّنَا هَبْ لَنَا مِنْ اَزْوَاجِنَا وَذُرِّيّٰتِنَا قُرَّةَ اَعْيُنٍ
وَّاجْعَلْنَا لِلْمُتَّقِيْنَ اِمَامًا ۝

எங்களின் இறைவனே! எங்களின் மனைவிகளையும் எங்களின் மக்களையும் எங்களுக்குக் கண் குளிர்ச்சியாக்கி வைத்தருள்வாயாக! அன்றி, பரிகத்தவான்களுக்கு வழி காட்டியாகவும் எங்களை நீ ஆக்குவாயாக. *(25:74)*

## ஸூரா ஷுஅரா

இந்த சூரா ஸபூர் வேதத்திற்கு பதிலாக இறக்கப்பட்டது என்று பெருமானார் கூறினர்.

## நற்காரியம் செய்வதற்கு

*அல்லஃதீகலக்கனீ ஃபஹூ வ யஹ்தீன்*

*'அவன் தான் என்னைப் படைத்தான். அவனே என்னை நேரான வழியில் நடத்துகிறான்'.*

— இந்த வசனம் குறித்துப் பெருமானார் இவ்வாறு கூறியிருக்கிறார்கள். ''ஒருவன் காலையில் வீட்டிலிருந்து புறப்படும் போதும் மாலையில் வீட்டுக்குத் திரும்பி வரும் போதும் இதனை ஓதினால் நற்காரியங்கள் பல செய்வதற்கு இறைவன் வழி வகுத்துக் கொடுப்பான்.''

## பசி ஏற்பட

وَالَّذِىْ هُوَ يُطْعِمُنِىْ وَيَسْقِيْنِ ۝

அவனே எனக்கு உண்ணவும் பருகவும் அளிக்கிறான் *(26 : 79)* என்ற வசனத்தை *21* தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்த வேண்டும்.

## பெண்களுக்கு மார்பகம் வீங்கிக் கொண்டால்

وَاِذَا مَرِضْتُ فَهُوَ يَشْفِيْنِ ۝

*(நான் நோயுற்ற பொழுது அவனே நலன் நல்குகிறான்)* *(26:80)* என்ற திருவசனத்தை ஓதி இரு கைகளிலும் ஊதி மார்பில் தடவி வர நலன் ஏற்படும்.

# சூரா நம்ல்

## ஒருவனை எல்லோரும் விரும்ப

يٰمُوْسٰى لَا تَخَفْ اِنِّىْ لَا يَخَافُ لَدَيَّ الْمُرْسَلُوْنَ ○
اِلَّا مَنْ ظَلَمَ ثُمَّ بَدَّلَ حُسْنًا بَعْدَ سُوْٓءٍ فَاِنِّىْ
غَفُوْرٌ رَّحِيْمٌ ○ لَا تَخَفْ لَا تَخَافُ دَرَكًا وَّلَا
تَخْشٰى ○ لَا تَخَفْ نَجَوْتَ مِنَ الْقَوْمِ الظّٰلِمِيْنَ ○
لَا تَخَافَا اِنَّنِىْ مَعَكُمَا اَسْمَعُ وَاَرٰى ○ لَا تَخَفْ
اِنَّكَ اَنْتَ الْاَعْلٰى ○

*... ரஜப் மாதம் முதல் வெள்ளிக்கிழமையன்று ஒருவன்* இதனை வெள்ளி மோதிரத்தில் செதுக்கி அணிந்து கொண்டால், அவனை எல்லோரும் விரும்புவார்கள். அவனுக்கு எல்லோரும் பயப்படுவார்கள். ஆண்களிடத்திலும் பெண்களிடத்திலும் அவனுக்கு கண்ணியம் ஏற்படும்.

## எறும்புகளின் தொந்தரவு அகல

يٰٓاَيُّهَا النَّمْلُ ادْخُلُوْا مَسٰكِنَكُمْ لَا يَحْطِمَنَّكُمْ
سُلَيْمٰنُ وَجُنُوْدُهٗ وَهُمْ لَا يَشْعُرُوْنَ ○

"எறும்புகளே, நீங்கள் வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள். சுலைமானும் அவருடைய ராணுவமும் (நீங்கள் இருப்பதை) அறியாது உங்களை (த் தங்கள் கால்களால்) மிதித்து விட வேண்டாம்" என்று கூறியது. *(27 : 18)*

இந்த வசனத்தை எழுதி வீட்டின் சுவரில் ஒட்டி வைத்தால் எறும்புகள் தொந்தரவு செய்யா.

### இனிப்பு பண்டங்களை எறும்புகளிலிருந்து பாதுகாக்க

அவை வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தில் கையை வைத்து 'ஹாதாலி வகீலில் காளி, அவ்ஹாதா லிரசூலில் காளி அவ்ஹாதா லிகுலாமில் காளி' என்று ஓத எறும்புகள் அவற்றை அணுகா.

# சூரா கஸஸ்

''சூரா கஸஸை ஒருவன் ஓதினால் அவனுடைய வாய்மைக்கு வானவர்கள் சான்று கூறுவார்கள்'' என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

### நெஞ்சுவலி, வயிற்றுவலி நீங்க

நெஞ்சுவலி, வயிற்றுவலி முதலியவற்றுக்கு இந்த சூராவை எழுதி அணிவிக்கலாம். குணமேற்படும். இது எல்லா நோய்களுக்கும் உயர்ந்த மருந்தாகும். இதனை எழுதி மழைத் தண்ணீரில் கரைத்துக் குடிக்கச் செய்யலாம்.

### பொருள்கள் காக்கப் பெற

பொருள் வைக்கப்பட்டிருக்கும் இடத்தில் இதனை எழுதித் தொங்கவிடின் அல்லாஹ் அப்பொருளை களவு சேதாரம் ஆகியவற்றிலிருந்து காத்தருள் புரிவான்.

وَلَمَّا وَرَدَ مَاءَ مَدْيَنَ وَجَدَ عَلَيْهِ أُمَّةً مِّنَ
النَّاسِ يَسْقُونَ وَوَجَدَ مِن دُونِهِمُ امْرَأَتَيْنِ
تَذُودَانِ ۖ قَالَ مَا خَطْبُكُمَا ۖ قَالَتَا لَا نَسْقِي
حَتَّىٰ يُصْدِرَ الرِّعَاءُ ۖ وَأَبُونَا شَيْخٌ كَبِيرٌ ○
فَسَقَىٰ لَهُمَا ثُمَّ تَوَلَّىٰ إِلَى الظِّلِّ فَقَالَ رَبِّ إِنِّي لِمَا
أَنزَلْتَ إِلَيَّ مِنْ خَيْرٍ فَقِيرٌ ○ فَجَاءَتْهُ إِحْدَاهُمَا
تَمْشِي عَلَى اسْتِحْيَاءٍ قَالَتْ إِنَّ أَبِي يَدْعُوكَ لِيَجْزِيَكَ
أَجْرَ مَا سَقَيْتَ لَنَا ۚ فَلَمَّا جَاءَهُ وَقَصَّ عَلَيْهِ الْقَصَصَ
قَالَ لَا تَخَفْ ۖ نَجَوْتَ مِنَ الْقَوْمِ الظَّالِمِينَ ○

ஃபிர் அவ்னுக்கு பயந்து மத்யன் ஓடிய மூஸா (அலை) அவர்களிடம் ஷுஐப் (அலை) 'நீர் தப்பித்துக் கொண்டீர்' என்று கூறினார்கள் என இவ்வசனங்கள் முடிவு பெறுகின்றன.

ஒருவன் யாருக்கேனும் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தால், இந்த் சூராவின் மேற்கண்ட 23, 24, 25 ஆகிய மூன்று வசனங்களைத் தொடர்ந்து ஓதவேண்டும்.

## நினைவாற்றல் பெற

கற்றதெல்லாம் நினைவில் நிலைப்பது, ஆழ்ந்த தத்துவங்களை உணர்ந்து கொள்வது ஆகிய பயன்களுக்கு இந்த

வழியில் ஆழ்ந்த நம்பிக்கையையும் உள்ளத்தில் உறுதியையும் ஏற்படுத்திக் கொள்ளலாம்.

மாதத்தின் முதல் வியாழனிலிருந்து தொடர்ந்தாற்போல் மூன்று நாட்களுக்கு நோன்பு பிடிக்க வேண்டும். அப்புறம் மேற்குறிப்பிட்ட வசனங்களைக் கண்ணாடிப் பாத்திரத்தில் எழுதி ஆற்றுத் தண்ணீரால் அழித்து சூரியோதயத்துக்கு முன்னால், மூன்று நாள் குடிக்க வேண்டும். ''காலைத் தொழுகைக்கு முன்னால்'' என்று சில நூல்களில் காணப்படுகிறது.

## அதிகாரிகள் துன்பம் செய்யாதிருக்க

இவ்வாறு செய்தால் மேற்குறிப்பிட்ட பயன்கள் அத்தனையும் கிடைக்கும்.

அதிகாரிகளால் உங்களுக்கு துன்பம் ஏற்படக்கூடும் என்று பயந்தால், அவர்களிடம் செல்லும்போது,

*கப்ஹானல்லாஹி வதஆலா*
*அம்மா யுஷ்ரிக்கூன்*

''இவர்கள் இணை வைப்பவைகளிலிருந்து அல்லாஹ் மிக்க உயர்ந்தவனும் பரிசுத்தமானவனுமாவான்'' *(28 : 68)* எனும் வசனத்தையும் இதையடுத்த இரண்டு வசனங்களையும் ஏழுமுறை ஓதிக் கொள்ளுங்கள்: அவை வருமாறு.

وَرَبُّكَ يَعْلَمُ مَا تُكِنُّ صُدُورُهُمْ وَمَا
يُعْلِنُونَ ۝ وَهُوَ اللَّهُ لَا إِلَٰهَ إِلَّا هُوَ لَهُ الْحَمْدُ
فِي الْأُولَىٰ وَالْآخِرَةِ وَلَهُ الْحُكْمُ وَإِلَيْهِ تُرْجَعُونَ ۝

''உமதிறைவன் அவர்களுடைய இருதயங்கள் மறைத்து வைத்திருப்பதையும் (அதற்கு மாறாக) அவர்கள் வெளியிடுவதையும் நன்கறிவான். அவன் தான் அல்லாஹ், அவனைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (இல்லவே) இல்லை. இம்மையிலும், மறுமையிலும் யாவும் அவனுக்குரியனவே! (மறுமையில் தீர்ப்புக் கூறும்) அதிகாரமும் அவனுக்குரியதே,

ஆதலால் (மறுமையில்) நீங்கள் (யாவரும்) அவனிடமே கொண்டு வரப்படுவீர்கள்.'' *(23:69, 70)*

وَاللّٰهُ غَالِبٌ عَلٰٓى اَمْرِهٖ

*பிறகு ''அல்லாஹ் தன் கற்பனையை நிறைவேற்றுவதில் மிகைத்தவனாக இருக்கிறான்''. (12:21)*

எனும் மேற்கண்ட வசனத்தை மும்முறை ஓதிக்கொண்டு அவர்களிடம் செல்லுங்கள். எல்லாவிதமான தீங்குகளிலிருந்தும் இறைவன் உங்களைக் காப்பாற்றுவான்.

**பகலில் கண் தெரியாதிருப்பது நீங்க**

وَاللّٰهُ غَالِبٌ عَلٰٓى اَمْرِهٖ وَلٰكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَعْلَمُوْنَ ○

என்ற ஆயத்தை காலை, மாலை நூறு தடவை ஓதி விரல்களில் ஊதிக் கண்களில் தடவிக் கொள்ள வேண்டும்.

**நலமே இல்லம் திரும்ப**

நெடுந்தொலைப் பயணம் புறப்படுபவன்.

اِنَّ الَّذِىْ فَرَضَ عَلَيْكَ الْقُرْاٰنَ لَرَآدُّكَ اِلٰى مَعَادٍ

''நபியே! நிச்சயமாக எவன் இந்தக் குர்ஆனின் கட்டளைகளை உம்மீது விதித்திருக்கின்றானோ அவன் நிச்சயமாக உம்மை உம்முடைய இல்லத்தில் திரும்பச் சேர்த்து வைப்பான்''. என்ற 29 : 85-வது திருவசனத்தை தன் வீட்டுச் சுவரில் எழுதி வைத்துச் செல்லின் அவன் நலமாக இல்லம் திரும்புவான்.

### ஓடிப் போனவன் இல்லம் மீள

இரவில் படுக்கைக்குச் செல்லுமுன் இரண்டு ரக்அத் 'நஃபில்' தொழுகை தொழுது மேலே கண்ட 29 : 86-ஆவது திருவசனத்தை 119 -தடவை ஓதி, இறைவனிடம் துஆ இறைஞ்ச வேண்டும். இவ்வாறு நாற்பது நாட்கள் செய்யின் இன்ஷா அல்லாஹ், ஓடிப்போனவன் இல்லம் மீள்வான்.

# சூரா அன்கபூத்

''ஒருவன் சூரா அன்கபூத்தை ஓதினால் அவனுக்குப் பத்து நன்மைகள் கிடைக்கும்'' என்று பெருமானார் கூறினார்கள்.

### காய்ச்சல் நீங்க; சோம்பல் நீங்க

இந்த சூராவை எழுதித் தண்ணீரால் அழித்துக் குடிக்கச் செய்தால் காய்ச்சல் நீங்கும். சோம்பேறித்தனம் மாறுவதோடு மகிழ்ச்சியும் ஏற்படும்; உள்ளம் விரிவடையும்.

உஷ்ண மேலீட்டால் நோய் வந்தால், இந்த சூராவை எழுதிக் கரைத்த தண்ணீரைக் கொண்டு முகத்தைக் கழுவ வேண்டும்.

இந்த சூராவில் 46-ஆவது வசனத்தையும் சூரா ரூமில் 17, 18, 19, 20-ஆவது நான்கு வசனங்களையும் சேர்த்து ஓதினால், எப்படிப்பட்ட நோயானாலும் நீங்கிவிடும். சூனியம் செய்யப்பட்டவர்கள் இந்த வசனங்களையும் எப்போதும் ஓதிவர வேண்டும்.

# சூரா ரூம்

பெருமானார் கூறினார்கள்:

''ஒருவன் சூரா ரூமை ஓதினால், இறைவனைத் துதிக்கிற வானவர்களின் எண்ணிக்கைப்படி அவனுக்கு நன்மை கிடைக்கும்.''

## நழுவியவை கிடைக்க

இந்த ஸூராவில் 17-வது வசனத்தை ஒருவன் ஓதினால் அன்று அவனிடமிருந்து நழுவிய அனைத்தும் அவனுக்குக் கிடைத்துவிடும் என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

பெருமானார் குறிப்பிட்ட வசனம் இதோ இருக்கிறது.

فَسُبْحَانَ اللّٰهِ حِيْنَ تُمْسُوْنَ وَحِيْنَ تُصْبِحُوْنَ ○

''நீங்கள் உங்கள் காலை நேரத்திலும், மாலை நேரத்திலும் அல்லாஹ்வைத் துதி செய்து கொண்டிருங்கள். (30:17)

وَلَهُ الْحَمْدُ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَعَشِيًّا وَّحِيْنَ تُظْهِرُوْنَ ○ يُخْرِجُ الْحَيَّ مِنَ الْمَيِّتِ وَيُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَيِّ وَيُحْيِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا ۭ وَكَذٰلِكَ تُخْرَجُوْنَ ○

## குற்றங்கள் மன்னிக்கப்பட

பொழுது விடிந்ததும் ஒருவன் மேற்குறிப்பிட்ட வசனத்தையும் அதையடுத்த பின்வரும் இரண்டு வசனங்களையும் மும்முறை ஓதினால் அவன் செய்த குற்றங்கள் மன்னிக்கப்படும் என்று அலீ(ரலி) அவர்கள் தமது நண்பர்களுக்குக் கூறுவார்களாம்.

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ ○ وَسَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ ○ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ ○

# ஸூரா லுக்மான்

## வயிற்றுவலி நீங்க

இந்த சூராவை எழுதி அழித்த தண்ணீரைக் கொண்டு வயிற்று வலியைப் போக்கலாம். அந்தத் தண்ணீரை நோயாளி குடிக்க வேண்டும்.

## நீரில் மூழ்கிச் சாகாதிருக்க

இதனை ஓதுகிறவன், தண்ணீரில் மூழ்கிச் சாகமாட்டான். இப்படிப்பட்ட மரணம் அவனுக்கு ஏற்படாது.

## அலைகடல் அடங்க

கடற் பிரயாணத்தை மேற்கொள்கிறவர்கள் பாதுகாப்புக் காக இந்த சூராவின் 21, 32-ஆகிய இரண்டு வசனங்களை உபயோகித்துக் கொள்ளலாம். இவற்றை ஏழு இலைகளில் எழுதிக் கடலில் போட்டுவிட வேண்டும். ஒன்றன்பின் ஒன்றாக கீழ்த் திசையில் போட வேண்டும். அலைகடலே அமைதியடைந்து விடும். இவ்வசனம் 'அலம் தர' என்று துவங்கி 'குல்லு கத்தாரின் கஃபூர் என்று முடிவுறுகிறது.

# சூரா அலிஃப், லாம், மீம் ஸஜ்தா

## கப்ரின் வேதனையிலிருந்து நீங்க

இதனை வழக்கமாக ஓதிவருபவருக்காக இது கப்ரில் அவருக்காக பரிந்துரைத்து மன்றாடும்.

## மறுமையில் நிழல் பெற

மறுமையில் சூரா ஸஜ்தா வரும்போது அதற்கு இரண்டு இறக்கைகள் இருக்கும். இந்த சூராவை ஓதிக் கொண்டிருந்த வர்களுக்கு அவை நிழல் கொடுக்கும்! ''உங்களுக்குப் பாதகம் ஏற்பட வழியே இல்லை'' என்று அது கூறும்.

இவ்வாறு இந்த சூராவைப் பற்றிப் பெருமானார் குறிப் பிட்டிருக்கிறார்கள். இந்த சூராவையும் சூரா முல்கையும்

அவர்கள் தினம் படுக்கைக்குச் செல்லுமுன் ஓதி வந்தார்கள். ''இந்த சூராக்கள் இரண்டும் திருக்குர்ஆனின் மற்ற சூராக்களைப் பார்க்கிலும் எழுபது மடங்கு உயர்ந்தவை'' என்று சொல்வார்கள். அப்புறம் அவர்கள் ஐந்து திருநாமங்களை கூறிப் பிரார்த்தனை செய்வார்கள்.

அவையாவன:

يَاقَدِيْمُ يَاحَيُّ يَادَآئِمُ يَافَرْدُ يَاصَمَدُ

## காய்ச்சல் வாதம் நீங்க

காய்ச்சலுக்கும் வாதத்துக்கும் இந்த சூராவை எழுதி அணிவிக்கலாம்.

## குழந்தை பாதுகாப்போடு வளர

الَّذِيْٓ اَحْسَنَ كُلَّ شَيْءٍ خَلَقَهٗ وَبَدَاَ خَلْقَ
الْاِنْسَانِ مِنْ طِيْنٍ ۝ ثُمَّ جَعَلَ نَسْلَهٗ مِنْ سُلٰلَةٍ
مِّنْ مَّآءٍ مَّهِيْنٍ ۝ ثُمَّ سَوّٰىهُ وَنَفَخَ فِيْهِ مِنْ رُّوْحِهٖ
وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَالْاَفْـِٕدَةَ ؕ
قَلِيْلًا مَّا تَشْكُرُوْنَ ۝

''அவனே ஒவ்வொரு பொருளையும் (படைத்து) அவற்றின் கோலத்தையும் மிக்க அழகாக அமைத்தான். ஆரம்பத்தில் மனிதனைக் களிமண்ணைக் கொண்டே படைக்கிறான்! பின்னர் ஓர் அற்பத் துளியாகிய (இந்திரியச்) சத்திலிருந்து அவனுடைய சந்ததியைப் படைக்கிறான். பின்னர் அதனைச் செப்பனிட்டுத் தன்னுடைய ''ரூஹை'' அதில் புகுத்தி உங்களுக்குக் காதுகள், கண்கள், இதயங்கள் முதலியவற்றையும் அவனே அமைக்கின்றான். இவ்வாறிருந்தும் உங்களில் நன்றி செலுத்துவோர் வெகுசிலரே''. (32:7, 8, 9)

குழந்தை பாதுகாப்போடு சிறப்பாக வளரவேண்டுமானால், அதற்கு இந்த சூராவின் மேற்கண்ட 7, 8, 9 ஆகிய மூன்று வசனங்கள் பெரிதும் பயனுள்ளவை.

உபயோகிக்கும் முறை: கண்ணாடிப் பாத்திரத்தில் இந்த சூராவை எழுதி மழைத் தண்ணீரால் அழித்து, வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு பகுதி உணவோடு கலந்து கொடுக்கப்பட வேண்டும். மறுபகுதியை, குடிப்பதற்கும் முகத்தில் தடவுவதற்கும், வைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஏழு நாட்கள் - ஏழு வாரங்கள் என்பது சிலரது கருத்து செய்ய வேண்டும்.

இப்படிச் செய்தால் ஏற்படும் விளைவைப் பார்த்து நீங்கள் பெரிதும் மகிழ்ச்சியடைவீர்கள்.

ஆனால் ஒன்று: குழந்தை பிறந்து 70 -நாட்களுக்குப் பிறகே இந்த முறையைக் கையாள வேண்டும். வேறு சிலரது கருத்து: 90 நாட்களுக்குப் பிறகுதான் உபயோகிக்க வேண்டும்.

# சூரா அஹ்ஸாப்

''சூரா அஹ்ஸாபை ஓதுகிறவன், இறைவனின் சந்நிதானத்தில், 'நன்றியுள்ளவன்' எனக் கணிக்கப்படுகிறான்'' என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

## மனைவி, மக்களிடம் மதிப்புப் பெற

இந்த சூராவை மான் தோலிலோ, வாழை இலையிலோ எழுதி, அதனை ஒரு சீசாவுக்குள் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டால், மனைவி மக்களிடம் மதிப்பும் கண்ணியமும் ஏற்படும்.

## பெண்ணுக்கு மாப்பிள்ளை கிடைக்க

இதனைக் காகிதத்தில் எழுதி ஒரு சீசாவில் வைத்துக் கொளின் பெண்ணுக்கு விரைவில் மாப்பிள்ளை கிடைப்பான், திருமணமாகும்.

يَاأَيُّهَا النَّبِيُّ اتَّقِ اللَّهَ وَلَا تُطِعِ الْكَافِرِينَ وَ
الْمُنَافِقِينَ ۗ إِنَّ اللَّهَ كَانَ عَلِيمًا حَكِيمًا ۝ وَاتَّبِعْ مَا
يُوحَىٰ إِلَيْكَ مِن رَّبِّكَ ۚ إِنَّ اللَّهَ كَانَ بِمَا تَعْمَلُونَ
خَبِيرًا ۝ وَتَوَكَّلْ عَلَى اللَّهِ ۚ وَكَفَىٰ بِاللَّهِ وَكِيلًا ۝

*''நபியே! நீர் அல்லாஹ்வுக்கே பயப்படும். நிராகரிப்போருக்கும் வஞ்சகருக்கும் (பயந்து அவர்களுக்கு) வழிப்படாதீர்! நிச்சயமாக அல்லாஹ் (யாவையும்) அறிந்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கிறான். உமது இறைவனால் உமக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டவைகளையே நீர் பின்பற்றும், நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவைகளை நன்கறிபவனாகவே இருக்கின்றான். (நபியே) நீர் அல்லாஹ்வையே முற்றிலும் நம்பும். அல்லாஹ்வே உமக்குப் போதுமான இரட்சகன்.''*

*(33:1, 2, 3)*[1]

இந்த சூராவின் மேற்கண்ட முதல் மூன்று வசனங்களைக் கஸ்தூரி கலந்த எண்ணெய்யில், காலைத் தொழுகைக்குப் பிறகு ஏழு நாட்களுக்கு ஓதியூதி வைத்துக் கொள்ளுங்கள். வெளியே செல்லும்போது எண்ணெய்யைத் தொட்டுப் புருவங்களில் தடவிக் கொள்ளுங்கள். அரசனோ, ஆண்டியோ, மிருகமோ - உங்களை பார்ப்பவர்கள் யாராயிருந்தாலும் உங்களுக்குப் பணிந்து உங்கள் தேவைகளை முடித்துக் கொடுப்பார்கள். உங்களுக்குப் பயந்து நடுங்குவார்கள்; நீங்கள் கேட்பதை எல்லாம் முடித்துக் கொடுப்பார்கள்.

## தூக்கம் வர

''இன்னல்லாஹ வ மலாயிகதஹு யுஸல்லூன அலந் நபிய்யி யா அய்யுஹல்லதீன் ஆமனூ ஸல்லூ அலைஹி வஸல்லிமூ தஸ்லீமா'' *(33:56)* என்ற ஆயத்தைத் தூக்கம் வரும்வரை ஓதிக்கொண்டிருக்க வேண்டும்.

# ஸூரா ஸபஃ

## மறுமையிலும் கண்ணியம் பெற

'ஸூரா ஸபஃவை ஒருவன் ஓதினால் மறுமையில் அவனை நபிமார்கள் கைகொடுத்துக் கண்ணியப்படுத்துவார்கள்'' என்று பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.

## விஷ ஜந்துக்களிலிருந்து பாதுகாப்புப் பெற

இந்த ஸூராவை ஒரு காகிதத்தில் எழுதி, அதனை ஒரு வெள்ளைத் துணியில் சுருட்டித் தன்னிடம் வைத்துக் கொண்டால் தரையில் ஊரும் உயிரினங்களிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். அது அவனிடம் இருக்கும்வரை அவனுக்கு எந்த ஆபத்தும் ஏற்படாது.

# ஸூரா பாதிர்

## சுவனம் புக

''ஸூரா பாதிரை ஒருவன் ஓதி வந்தால், தான் விரும்பும் வாயில் வழியாகச் சொர்க்கத்தில் பிரவேசிக்கலாம்'' என்று பெருமானார் (ஸல்) கூறினார்கள்.

## கால் நடைகள் பாதுகாப்புப் பெற

இந்த ஸூராவை எழுதிக் கால் நடைகளுக்கு அணிவித்தால் திருடு வழிப்பறி முதலியவற்றிலிருந்து அவை பாதுகாக்கப்படும்!

## வியாபாரம் செழிக்க

إِنَّ الَّذِيْنَ يَتْلُوْنَ كِتٰبَ اللّٰهِ وَاَقَامُوا الصَّلٰوةَ
وَاَنْفَقُوْا مِمَّا رَزَقْنٰهُمْ سِرًّا وَّعَلَانِيَةً يَّرْجُوْنَ
تِجَارَةً لَّنْ تَبُوْرَ ۝ لِيُوَفِّيَهُمْ اُجُوْرَهُمْ
وَيَزِيْدَهُمْ مِّنْ فَضْلِهٖ ۚ اِنَّهٗ غَفُوْرٌ شَكُوْرٌ ۝

எவர்கள் அல்லாஹ்வுடைய வேதத்தை ஓதி, தொழுகையையும் கடைப்பிடித்து, நாம் அவர்களுக்கு அளித்தவைகளை இரகசியமாகவும், பரகசியமாகவும் தானஞ் செய்து வருகிறார்களோ அவர்கள் நிச்சயமாக என்றுமே நஷ்டமடையாத (லாபம் தரும்) ஒரு வர்த்தகத்தை எதிர்பார்க்கலாம். (அல்லாஹ்) அவர்களுக்கு அவர்களுடைய கூலியைப் பூரணமாகவே கொடுத்துத் தன்னுடைய அருளைக் கொண்டு பின்னும் அதிகமாகவும் கொடுப்பான். நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்போனும் நன்றி செலுத்துவோரை அறிவோனுமாக இருக்கிறான். (35: 29, 30)

இதில் மேற்கண்ட 29, 30 -ஆகிய இரு வசனங்கள் வளர்ச்சி, 'பரக்கத்' லாபம், நற்பயன்கள் முதலிய நோக்கங்களுக்கு உதவக் கூடியவை.

சுத்தமான புதிய துணியிலிருந்து நான்கு துண்டுகளை வெட்டி எடுத்து அவற்றில் இந்த வசனங்களை எழுதி, சாக்கோடு சாக்காக வைத்துவிட வேண்டும். வியாபாரத்தில் பரக்கத்தும் வளர்ச்சியும் ஏற்படும்.

## இருதய வியாதி நீங்க

إِنَّ اللَّهَ يُمْسِكُ السَّمٰوَاتِ وَالْأَرْضَ أَنْ تَزُولَا ۚ
وَلَئِنْ زَالَتَا إِنْ أَمْسَكَهُمَا مِنْ أَحَدٍ مِّنْ
بَعْدِهٖ ۚ إِنَّهٗ كَانَ حَلِيمًا غَفُورًا ○

''வானங்களும் பூமியும் (தத்தம் எல்லையிலிருந்து) விலகி விடாதபடி தடுத்துக் கொண்டிருப்பவன் நிச்சயமாக அல்லாஹ்தான். (தம் எல்லையிலிருந்து) அவை இரண்டும் சாய முற்பட்டபோது அவை சாயாதபடி தடுக்கக் கூடியவன் அல்லாஹ்வைத் தவிர வேறொருவனுமில்லை. நிச்சயமாக அவன் பொறுமையுடையோனும் மன்னிப்புடையோனுமாக இருக்கிறான். (35:41)

இருதய வியாதியால் துன்புறுவோர் மேற்கூறப்பட்ட 41-வது வசனத்தை எழுதி அணிந்து கொண்டால் நலன் பெறுவர்.

# சூரா யாஸீன்

பெருமானார் கூறியிருக்கிறார்கள்:

''ஒவ்வொன்றுக்கும் உள்ளம் உண்டு. திருக்குர்ஆனின் உள்ளம் சூரா யாசீனாகும். ஒருவன் அதை ஓதினால், திருக்குர் ஆன் முழுவதையும் பத்துமுறை ஓதிய நற்கூலியை இறைவன் அவனுக்குக் கொடுப்பான். இதனை என் உம்மத்துகள் ஒவ் வொருவரும் மனனம் செய்திருப்பதை நான் விரும்புகிறேன்''

## சுவனம் புக

இதனை ஓதுபவன் முன் சுவனத்தின் எட்டு வாயில்களும் திறந்துள்ளன. அவற்றில் தான் விரும்பிய வாயில் வழியாக அவர் சுவனம் புகலாம்'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## இறப்பு வேளைத் துன்பம் இலேசாக

இறப்புப் படுக்கையில் கிடக்கும் ஒருவரின் அருகே அமர்ந்து இதனை ஓதின் அவரின் இறப்பு வேளைத் துன்பம் இலேசாகும்.

## கப்ரின் வேதனையிலிருந்து பாதுகாப்புப்பெற

இதனை வழக்கமாக ஓதி வருபவர் கப்ரின் வேதனையி லிருந்து காக்கப் பெறுவார். கப்ருகளுக்குச் சென்று இதனை ஓதின் அன்றைய தினம் அங்கு அடங்கப் பெற்றிருப்பவர்க ளின் வேதனை குறையும், ஓதியவருக்கும் அங்கு அடக்கப் பெற்றிருப்பவர்களின் எண்ணிக்கை அளவுக்கு நன்மை கிடைக்கும்.

## வயிற்று வலி நீங்க

இந்த சூராவை மழை நீரில் ஓதி ஊதி பதினொரு நாட்கள் அருந்தி வரவேண்டும்.

## நோய் நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## பைத்தியம் நீங்க

ஒரு பைத்தியக்காரன்மீது இதனை ஸயீது இப்னு ஸுபைர் (ரலி) அவர்கள் ஓதி ஊதினார்கள். அவன் நலன் பெற்றான்.

## கடன் நீங்க

கடன்பட்டோர் இதனை அதிகமதிகமாக ஓதுவதன் மூலம் கடன் நீங்கப் பெறுவர்.

## நோக்கம் நிறைவேற

''ஒருவன் இதனைக் காலையில் ஓதினால் அவனுடைய அன்றைய நோக்கங்களை இறைவன் நிறைவேற்றித் தருவான்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

## மார்க்கப் போர்புரிந்து இறந்த பலனைப் பெற

இதனை இரவில் ஓதி இறப்பெய்தியவர்கள் மார்க்கப் போர் புரிந்து இறந்த பலனை எய்தப் பெறுவார்.

## இம்மை மறுமையில் பாதுகாப்புப் பெற

சூரா யாஸீன் தன்னை ஓதுகிறவர்களுக்கு இம்மை மறுமைக்குரிய நன்மைகளைக் கொடுக்கும். உலகின் துன்பங்களிலிருந்து பாதுகாத்து மறுமையின் ஆபத்துகளிலிருந்து விடுதலை கொடுக்கும். இந்த சூரா தன்னை ஓதுகிறவர்களுக்கு எல்லாவிதமான நன்மைகளையும் சேர்த்துக் கொடுப்பதாலும், இதற்கு சேர்த்துக் கொடுக்கக் கூடியது'' ''பாதுகாக்கக் கூடியது'' என்று பெயரிடப்படுகிறது.

## கலக்கம் நீங்க

கலங்கிய மனத்தோடு இருப்பவன் இதனை ஓதினால் கலக்கம் கரைந்து போகும். ஒருவன் காலையில் ஓதினால் மாலை வரை அவனுக்கு மகிழ்ச்சி மாறாது. மாலையில்

ஓதினால் அடுத்த நாள் காலை வரை அவனுக்கு மகிழ்ச்சி மாறாது. தேவையுள்ளவன் ஓதினால் அவன் தேவை உடனே முடியும். நடுங்கியவன் ஓதினால் அமைதி ஏற்படும்.

## பகைவர் பயம் நீங்க; பகைவர் காணாதிருக்க

*இப்னு கல்பீ (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.*

*ஒருவன் ஒரு மனிதனை வெட்டிக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தினான். இதனை அவன் நல்லார் ஒருவரிடம் கூறி முறையிட்டபொழுது, ''நீ வெளியே செல்லும் பொழுது சூராயாசீனை ஓதிக் கொண்டு புறப்படு. நீ அவனின் கண்க ளில் தென்படமாட்டாய்'' என்று கூறினார் அவர். அவ்விதமே அவன் செய்தான். அவனுடைய எதிரி அவனைச் சந்தித்த போதிலும் அவனைக் காணவில்லை.*

## செல்வர், அதிகாரிகள் ஆகியோரிடமிருந்து அலுவல் நிறைவு பெற

*ஒருவன் ஒரு செல்வரிடமோ அதிகாரியிடமோ ஓர் அலுவலின் நிமித்தம் செல்லின் அவன் உளூவோடு இருந்து முப்பத்தைந்து தடவை யாசீனை ஓதி விட்டு அவர்களிடம் செல்லின் அவர்கள் அவன் மீது மகிழ்வுற்று அவன் வந்த அலுவலை இனிதே நிறைவேற்றி வைப்பர்.*

## துஆ கபூலாக

*இதனை ஓதிவிட்டு இறைவனிடம் துஆ இறைஞ்சின் அது நிறைவேற்றியருளப்படும்.*

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட

*பிஸ்மில்லாஹ்வுடன் சூரா யாசீனை ஓதத் துவங்கி அதில் முதலாவது 'முபீன்' என்ற சொல் வரும்போது வலது கைச் சுண்டு விரலை மடக்கிக் கொள்ள வேண்டும். பின்னர் பிஸ்மியுடன் சூரா யாசீனை ஓதத் துவங்கி இரண்டாவதாக ''முபீன்'' என்ற சொல் வரும்பொழுது வலது கை மோதிர விரலை மடக்கிக் கொள்ள வேண்டும்.*

பின்னர் மீண்டும் பிஸ்மியுடன் சூரா யாசீனை ஓதத் துவங்கி மூன்றாவதாக 'முபீன்' என்ற சொல் வரும்பொழுது நடுவிரலை மடக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறே மீண்டும் சூரா யாசீனை ஓதத் துவங்கி நான்காவது, ஐந்தாவது முபீன் வரும் பொழுது முறையே கலிமா விரல், பெருவிரல் ஆகியவற்றை மடக்கி ஆறாவது முபீனில் இடது கை சுண்டு விரலையும், ஏழாவது முபீனில் இடது கை மோதிர விரலையும் மடக்கிக் கொள்ள வேண்டும்.

இதன்பின் மீண்டும் பிஸ்மியுடன் யாசீனை ஓதத் துவங்கி முதலாவது முபீனில் இடது கை மோதிர விரலைத் திறந்து நீட்ட வேண்டும். பின்னர் மீண்டும் பிஸ்மியுடன் ஓதத் துவங்கி இரண்டாவது முபீனில் இடதுகை சுண்டுவிரலைத் திறந்து நீட்ட வேண்டும். இவ்வாறே துவக்கத்திலிருந்து ஓதி ஒவ்வொரு முபீனிலும் மடக்கப்பட்ட விரல்களை வரிசைப்படி திறந்து நீட்ட வேண்டும். இறுதியாக வலது கைச் சுண்டுவிரலைத் திறந்து நீட்டியதும், மீண்டும் பிஸ்மியுடன் யாஸீனை ஓதித் துவங்க வேண்டும். அப்பொழுது யாஸீன் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் வல் குர்ஆனில் ஹகீம் என்று ஓதத் துவங்கி அந்த சூரா முழுவதையும் ஓதி முடித்து, இறைவனிடம் நம் நாட்டத்தை எடுத்துரைத்து இறைஞ்சின் இன்ஷா அல்லாஹ், அது நிறைவேறும்.

## நாட்டம் நிறைவேற

உலமாக்களில் ஒருவர் கூறுகிறார்கள்:

சூரா யாசீனில் ரஹ்மான் என்ற சொல் நான்கு தடவையும் அல்லாஹ் என்ற சொல் மூன்று தடவையும் வருகிறது. இதே போன்று சூரா முல்க்கிலும் இச்சொற்கள் வருகின்றன.

சூரா யாஸீனை ஓதும்பொழுது 'ரஹ்மான்' என்ற சொல் வரும்பொழுது வலது கையில் ஒரு விரலை மடக்கிக் கொள்ளவும். அதேபோன்று, 'அல்லாஹ்' என்ற சொல் வரும்பொழுது இடது கையில் ஒரு விரலை மடக்கிக் கொள்ளவும்.

சூரா 'முல்க்'கில் 'ரஹ்மான்' என்ற சொல் வரும்பொழுது வலது கையில் நின்றும் ஒரு விரலைத் திறக்கவும்.

'அல்லாஹ்' என்ற சொல் வரும்பொழுது இடது கையில் நின்றும் ஒரு விரலைத் திறக்கவும். இதன்பின் நாட்டத்தை இறைவனிடம் இறைஞ்சின் அது இறையருளால் நிறைவேறும்.

குறிப்பு: சிறு விரலிலிருந்து மடக்கவும் திறக்கவும் செய்யப்பட வேண்டும்.

## சுவாசப்பை பற்றிய நோய்கள் நீங்க

சூரா யாசீனைத் துவக்கத்திலிருந்து முதலாவது 'முபீன்' வரும் வரை ஏழு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தி வருவதோடு இந்த ஆயத்துக்களை எழுதித் தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

## இருதய படபடப்பு நீங்க

சூரா யாசீனை ஓதித் தண்ணீரில் ஊதி தொடர்ச்சியாகப் பதினொரு நாட்கள் அருந்தி வர இறையருளால் இருதயப் படபடப்பு நீங்கும்.

## பாவம் நீங்கப் பெற

இதனை ஓதுபவரின் பாவங்களை அல்லாஹ் பொறுத்தருள்வான். ''இதனை இரவில் ஓதுபவர் காலையில் பாவங்கள் மன்னிக்கப் பெற்றவராய்ப் பரிசுத்த நிலையில் விழித்தெழுவார்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## திருமணமாக

திருமணமாகாத ஆணோ, பெண்ணோ இதனை அதிகமதிகமாக ஓதினால் அவர்கள் விரைவில் மணமுடிக்கப் பெறுவர்.

## சிறையிலிருந்து விடுதலை பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## நோக்கம் நிறைவேற

இதனை எந்த நோக்கத்திற்காக ஓதுகின்றோமோ அந்த நோக்கத்தை அது நிறைவேற்றி வைக்கும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## ஷைத்தானை விரட்ட

''சூரா யாஸீனையும் சூரா ஹஷ்ருடைய இறுதி மூன்று திருவசனங்களையும் கேட்டு ஷைத்தான்கள் வெருண்டோடு கின்றன'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## இறைவனிடம் பரிந்துரை பெற

''இதனை ஓதுபவருக்கு இது இறைவனிடம் பரிந்துரைக் கும்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

## பிரயாண நண்பன்

பிரயாணத்தில் ஒருவர் இதனை ஓதினால் உதவிகள் எதிர்பாரா வகையில் கிடைக்கும்.

## பீதி, அச்சம் நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதவேண்டும்.

## தண்ணீர், உணவு, உடை ஆகிய தேவை நிறைவேற

இதனை அந்த நோக்கம் கருதி ஓத வேண்டும்.

## நாள் முழுவதும் மகிழ்ச்சியோடு இருக்க

''இதனைக் காலையில் ஓதுபவர் மாலை வரையில் மகிழ்ச்சியோடிருப்பார்; மாலையில் ஓதுபவர் காலை வரை மகிழ்ச்சியோடிருப்பார்'' என்று ஒரு பெரியார் கூறுகின்றனர்.

## ஷஹீதுகளின் இறப்பை பெற

இரவில் இதனை வழக்கமாக ஓதி வருபவர் 'ஷஹீது'க ளின் இறப்பை எய்தப் பெறுவார்.

## சுகப்பிரசவம் ஏற்பட

'வஆயத்துல் லஹு¬முல்லைலு நஸ்லகு மின்ஹு¬ன்ன ஹார ஃப இதாஹு¬ம் முழ்லிமூன், வஷ்ஷம்ஸு¬ தஜ்ரீ லிமுஸ்தகர்ரில் லஹா தாலிக தக்தீருல் அஸீஸில் அலீம்'

இரவும் பகலும் இவர்களுக்கோர் அத்தாட்சியாகும். இரவிலிருந்தே நாம் பகலை வெளிப்படுத்துகின்றோம். இன்

றேல் இவர்கள் இருளில்தான் தங்கிவிடுவார்கள். தன்னுடைய வரையறைக்குள் (தவறாமல்) செல்லும் சூரியனும் (ஓர் அத்தாட்சியாகும்.) இது யாவையும் நன்கறிந்தோனும் மிகைத் தோனுமாகியவனால் அமைக்கப்பட்டது. (36: 38, 39)

இதனைச் சுத்தமான துணியில் எழுதி துப்புரவாக பிரசவ வேதனைப்படுபவளின் தொடையில் கட்டினால் விரைவில் சுகப்பிரசவம் ஏற்படும்.

## பேய் நீங்க

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) தம் 'கவசஸுல் குர்ஆனில்' பின்வருமாறு கூறுகின்றார்கள்: ஓர் அடிமைப் பெண் இரவில் சிறுநீர் கழிக்கச் சென்றபொழுது அவளைப் பேய்பிடித்துக் கொண்டது. அவளுக்கு,

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். அலிஃப் லாம் மீம் ஸாத் தாஹா தாஸீம் காஃப்ஹாயா அய்ன் ஸாத் யாசீன் வல்குர்ஆனில் ஹகீம், ஹாமீம் அய்ன் ஸீன் காஃப், வல்கலம் வமா யஸ்துருன்'' என்று ஓதி ஊத அவளைப் பிடித்திருந்த பேய் அகன்றுவிட்டது.

## குற்றங்கள் மன்னிக்கப் பெற

''ஒருவன் இந்த சூராவை வெள்ளியிரவு ஓதினால் பொழுது விடியும்போது அவன் குற்றங்கள் மன்னிக்கப்பட்டி ருக்கும்'' என்றும் இந்த சூராவைப் பற்றிக் கூறப்படுகிறது.

## தாய்ப்பால் சுரக்க

இந்த சூராவை எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்தால், தாய்க்குப் பால் அதிகமாக சுரக்கும்.

## நோயிலிருந்து பாதுகாப்புப் பெற

நோய்களிலிருந்தும் இதரத் துன்பங்களிலிருந்தும் தம் மைப் பாதுகாத்துக் கொள்ள நினைக்கிறவர்கள் இந்த சூராவை எழுதித் தொப்பியிலோ தலைப்பாகையிலோ அணிந்து கொள்ள வேண்டும்.

## இரவில் திருடரிடமிருந்து பாதுகாப்புப் பெற

படுக்கையை விரிக்கும்போது இந்த சூராவை ஓதினால் அந்த இரவு முழுவதும் திருடரிடமிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

## அநியாயக்காரன் அவமானமடைய

இரண்டு பேருக்கிடையே சச்சரவு ஏற்படும்போது இதனை ஓதினால், அநியாயக்காரன் அவமானமடைவான்.

## பகைவர்கள் பயம் நீங்க

وَجَعَلْنَا مِنْ بَيْنِ اَيْدِيْهِمْ سَدًّا وَّمِنْ خَلْفِهِمْ
سَدًّا فَاَغْشَيْنٰهُمْ فَهُمْ لَا يُبْصِرُوْنَ ○

'அவர்களுக்கு முன்புறம் ஒரு கவரும் பின்புறம் ஒரு கவருமாக ஆக்கி நாம் அவர்களை மூடிவிட்டோம். ஆதலால் அவர்கள் (எதனையும்) பார்க்க முடியாது.'

அரண் செய்யும் திருவசனம் என்று கூறப்படும் இதனைப் பகைவர்களின் முகத்துக்கெதிரில் ஓதியூதினால் அவர்களால் யாதொரு தீங்கும் செய்ய இயலாது போய்விடும்.

இந்த சூராவின் துவக்கத்திலிருந்து இதுவரை ஓதி பிடி மண் எடுத்துப் பகைவர்கள் மீது எறிந்து விட்டே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மக்காவிலுள்ள தம் இல்லத்திலிருந்து 'ஹிஜ்ரத்' புறப்பட்டனர். அதன் காரணமாக அல்லாஹ் அப்பகைவர்களின் கண்களை மறைத்துவிட்டான். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வெளியேறியதை அவர்களால் பார்க்க இயலாது போய்விட்டது.

## கண்ணேறு ஏற்படாதிருக்க

ஒருவன் தனக்குக் கண்ணேறு ஏற்படுமோ என்று அஞ்சும் நேரத்தில் இந்த ஆயத்தை ஓதிக்கொள்ள அவனுக்குக் கண்ணேறு ஏற்படாது.

## சிறுநீர் சுருக்கம் நீங்க

இந்த ஆயத்துடன் இதற்கு அடுத்த ஆயத்தாகிய 'வஸவாவுன் அலைஹிம் அ அன்ஃதர்த்தஹு௱ம் அம்லம் துன்ஃதிர்ஹு௱ம் லாயுஃமினூன்' என்பதையும் 101 தடவை ஓதி பன்னீரில் ஊதி அருந்த வேண்டும்.

## பட்டமரம் தளிர்க்க

إِنَّا نَحْنُ نُحْيِ الْمَوْتَىٰ وَنَكْتُبُ مَا قَدَّمُوا وَآثَارَهُمْ ۚ
وَكُلَّ شَيْءٍ أَحْصَيْنَاهُ فِي إِمَامٍ مُّبِينٍ ○

''நிச்சயமாக நாம் மரித்தோரை (மறுமையில்) உயிர் பெற்றெழச் செய்வோம். அவர்கள் செய்து அனுப்பிய வினைகளையும் அவர்கள் விட்டுச் சென்ற காரியங்களையும் நாம் எழுதி வருகின்றோம். இவைகள் ஒவ்வொன்றையும் லவ்ஹுல் மஹ்பூளில் பதித்தே வைத்திருக்கிறோம்.'' (36:12)

பட்டுப்போன மரங்கள் தளிர்ப்பதற்கும் வறண்ட நிலத்தில் வீடு கட்டுவதற்கும் இருள் சூழ்ந்த இதயத்தைக் கனிய வைப்பதற்கும் மேற்குறிப்பிட்ட வசனத்தை எடுத்துக் கொள்ளலாம். நோன்பு பிடித்த நிலையில், சுத்தமாக இருந்து கொண்டு, இந்த வசனத்தை ஒரு பாத்திரத்தில் குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீர் கொண்டெழுதிக் கொள்ள வேண்டும். அப்புறம் சூரா யாஸீனை முழுமையாக ஓதி அதன் மீது ஊத வேண்டும்; பிறகு மழைத் தண்ணீரால் அழித்து அந்தத் தண்ணீரை வைத்துக் கொள்ளுங்கள். அதனை வேர்களுக்குத் தெளித்தால், பட்ட மரம் கனி தரும், நிலத்தில் தெளித்துக் கொண்டால், அந்த நிலத்தில் வீடு கட்டலாம்! உள்ளத்தை கனிய வைப்பதற்கு அந்த தண்ணீரைக் குடிக்க வேண்டும்.

## கழுத்து வலி நீங்க

إِنَّا جَعَلْنَا فِيٓ أَعْنَاقِهِمْ أَغْلَٰلًا فَهِيَ إِلَى ٱلْأَذْقَانِ
فَهُم مُّقْمَحُونَ ○

*(நிச்சயமாக) நாம் அவர்களுடைய கழுத்துக்களில் மோவாய்க்கடை வரையில் விலங்குச் சங்கிலிகளைப் போட்டு விட்டோம், எனவே அவர்களின் தலைகள் (குனிய முடியாவண்ணம்) நிமிர்ந்து விட்டன. (36:8)* என்ற மேற்காணும் திருவசனத்தை எழுதித் தஃவீஸ் செய்து கழுத்தில் அணிவிக்க வேண்டும்.

## அனைவரும் அன்புடனும் நட்புடனும் வாழ

وَجَآءَ مِنْ أَقْصَا ٱلْمَدِينَةِ رَجُلٌ يَسْعَىٰ قَالَ
يَٰقَوْمِ ٱتَّبِعُوا۟ ٱلْمُرْسَلِينَ ○ ٱتَّبِعُوا۟ مَن
لَّا يَسْـَٔلُكُمْ أَجْرًا وَهُم مُّهْتَدُونَ ○

*'வஜா அ மின் அக்ஸல் மதீனத்தி ரஜுலுன் யஸ்ஆகால யாகௌமித் தபிவுல் முர்ஸலீன். அத்தபிவூ மல்லாயஸ் அலுக்கும் அஜ்ரன் வஹும் முஹ்த்ததூன்' (36:30,21)* என்ற ஆயத்துக்களை எழுதி தண்ணீரில் கரைத்து அத்தண்ணீரை அனைவரையும் அருந்தச் செய்தாலோ அல்லது அனைவரும் தண்ணீர் எடுத்து அருந்தும் பொதுக் கிணறுகளில் அதனை ஊற்றி அக்கிணற்றுத் தண்ணீரை அவர்கள் எடுத்து அருந்தினாலோ அனைவரும் மனக்கசப்பு நீங்கி அன்புடன் வாழ்வர்.

## பெண் குழந்தைகளையே பெற்றுக் கொண்டிருப்பவள் ஆண் குழந்தை பெற

*பின்வரும் ஆயத்தை ஸலவாத்துடன் ஒரு காகிதத்தில் எழுதி அதனை எழுபது துண்டுகளாகப் பிய்த்து ஒவ்வொரு துண்டையும் உணவுப் பொருள் துண்டுகளில் வைத்து அவற்றை ஒவ்வொன்றாக எழுபது நாட்கள் தொடர்ந்து உண்டு வரவேண்டும். இன்ஷா அல்லாஹ், ஆண் குழந்தை பிறக்கும். ஒருவேளை கருச்சிதைவு ஏற்பட்டு விடின் அது பெண் குழந்தை பிறப்பதைத் தடுப்பதற்கே என்று அறிக!*

سُبْحٰنَ الَّذِىْ خَلَقَ الْاَزْوَاجَ كُلَّهَا مِمَّا
تُنْۢبِتُ الْاَرْضُ وَمِنْ اَنْفُسِهِمْ وَمِمَّا لَا يَعْلَمُوْنَ ○

*சுப்ஹானல்லதீ ஹலக்கல் அஸ்வாஜ குல்லஹா மிம்மா துன்பித்துல் அர்ளு வமின் அன்புஸிஹிம் வமிம் மாலா யஃலமூன், (36:36) வஸல்லல்லாஹு அலா கைரி கல்க்கிஹி முஹம்மதின் வ ஆலிஹி அஜ்மயீன்.*

*பொருள்: இவர்களையும் பூமியில் முளைக்கும் புற்பூண்டுகளையும் ஜதை ஜதையாகப் படைத்து இவர்கள் (இது வரை) அறியாத மற்றவற்றையும் படைப்பவன் மிகத்தூயவன்.*

## முறிந்த எலும்பு ஒழுங்கு பெற

وَضَرَبَ لَنَا مَثَلًا وَّنَسِىَ خَلْقَهٗ ؕ قَالَ مَنْ
يُّحْىِ الْعِظَامَ وَهِىَ رَمِيْمٌ ○ قُلْ يُحْيِيْهَا
الَّذِىْٓ اَنْشَاَهَآ اَوَّلَ مَرَّةٍ ؕ وَهُوَ بِكُلِّ خَلْقٍ عَلِيْمٌ ○

(மரித்தோரை நம்மால் உயிர்ப்பிக்க முடியாதென எண்ணி அவன்) ஓர் உதாரணத்தை நம்மிடம் எடுத்துக் காட்டுகிறான். அவன் தன்னைப் படைத்தது யார் என்பதை மறந்துவிட்டு ''உக்கி மண்ணாய்ப்போன இந்த எலும்பை உயிர்ப்பிப்பவன் யார்?'' என்று (ஓர் எலும்பை எடுத்து அதனைத் தூளாக்கி ஊதிவிட்டு) அவன் கேட்கிறான்; (நபியே!) அதற்கு நீர் கூறும்: முதன் முறையில் அதனைப் படைத்தவன் எவனோ அவனே அதனை உயிர்ப்பிப்பான்; அவனோ எல்லா விதங்களிலும் படைக்க மிகவும் தெரிந்தவன். *(36:78,79)*

எலும்பு முறிவு போன்றவற்றுக்கு இந்த சூராவின் மேற்கண்ட 78, 79 ஆகிய இரண்டு வசனங்களை எண்ணெய்யில் 40 தடவை ஓதியூதித் தடவ வேண்டும்.

## தொத்துநோய் தாக்காமலிருக்க

*ஸலாமுன் கவ்லன் மிர்ரப்பிர் ரஹீம்.*

'நிகரற்ற அன்புடைய இறைவனால் (அவர்களை நோக்கி) 'சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக' என்று கூறப்படும். இதனைத் தொத்துநோய் காலத்தில் ஓதிவரின் தொத்துநோய் ஒருவனைத் தாக்காது. பொதுவாக இதனை வழக்கமாக ஓதி வருபவர் நோய்களிலிருந்து காவல் பெறுவர். *(23:58)*

சூரா யாஸீனுக்கு எத்தனையோ விதமான பலன்கள் இருக்கின்றன. அவற்றில் ஒரு சிறு பகுதியே மேலே தரப்பட்டிருக்கிறது.

## பாம்பு கடி விஷம் இறங்க

இந்தத் திருவசனத்தை ஒரு தட்டைப் பீங்கானில் பின்வருமாறு எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்யின் பாம்பு கடி விஷம் உடனே இறங்கி நலன் ஏற்படும்.

ஸீன் என்ற அரபி எழுத்தை ஒன்பது தடவை வரிசையாக எழுதி அதன்பின்,

*ஸலாமுன் கவ்லன் மிர்ரப்பிர் ரஹீம்*
என்று எழுத வேண்டும்.

இத்துடன் வெற்றிலையும், மிளகும், உப்பும் சேர்த்து மென்று விழுங்கச் செய்ய வேண்டும்.

### எல்லா நோய்களுக்கும் நிவாரணம்

இதனை ஒருவன் ஐந்து தடவை ஒரு காகிதத்தில் எழுதித் தாயத்துச் செய்து அணிந்து கொண்டால் இறையருளால் அவன் காலரா முதல் எல்லா நோய்களிலிருந்தும் காக்கப் பெறுவான்.

# சூரா ஸாப்பாத்

### ஷைத்தானை விரட்ட

''ஒருவன் சூரா ஸாப்பாத்தை ஓதினால், அவனைவிட்டு ஷைத்தான் விலகித் தூரமாகிவிடும்'' என்று பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.

### ஜின்களின் தொந்தரவில்லாதிருக்க

இதை ஒருவன் எழுதித் தன்பெட்டிக்குள் வைத்துக் கொண்டால், வீட்டுக்குள் ஜின்னே இருந்தாலும் தொந்தரவு ஏற்படாது.

### தேள் கடிக்காதிருக்க

*'ஸலாமுன் அலா நூஹின் ஃபில் ஆலமீன்'* (37:79)

(சாந்தியும் சமாதானமும் நூஹ்வுக்கு உண்டாவதாக என்று உலக முழுவதிலுமே கூறப்படுகிறது) என்ற திருவசனத்தை ஓதினால் தேள் தீண்டக்கூடாதென இறைவன் தேளிடம் உறுதிமொழி வாங்கி இருப்பதாக ஒரு பெரியார் கூறியுள்ளார்.

### பாம்பு, தேள் கடிக்காதிருக்க

*ஸலாமுன் அலா நூஹின் ஃபில் ஆலமீன் இன்னா கதாலிக நஜ்ஸில் முஹ்ஸினீன், இன்னஹு¬மின் இபாதினல் முஃமினீன்.*

*பொருள்: 'சாந்தியும், சமாதானமும் நூஹ்வுக்கு உண்டாவதாக! என்று உலகம் முழுவதுமே கூறப்படுகிறது. இவ்வாறு நன்றி செய்வோருக்கு நாம் கூலி கொடுக்கிறோம். (நூஹ்) விசுவாசமுள்ள நம் அடியார்களில் ஒருவராகவே இருந்தார்.'*

*(37: 79, 80, 81)*

இத்திருவசனங்களை ஒருவன் காலையில் ஓதினால் மாலைவரை பாம்பு, தேள் ஆகியவை அவனைத் தீண்டா. இவற்றை மாலையில் ஓதினால் காலை வரை அவனை அவை தீண்டா.

இத்திருவசனங்களை கிரகணம் பிடித்திருக்கும் நேரத்தில் தூய்மையுடன் அமர்ந்து 1111-தடவை ஓதி வைத்துக் கொளின் பின்னர் இவற்றை மூன்று தடவை ஓதி பாம்பு, தேள் தீண்டியவனுக்கு ஊதின் விஷம், உடனே இறங்கி அவன் நலம் பெறுவான்.

## தேள், நட்டுவாக்காலி விஷம் இறங்க

மதீனாவில் அபா முதக்கிர் என்ற ஒருவர் இருந்தார். அவர் நட்டுவாக்காலி விஷத்திற்கு மந்திரித்து வந்தார். அவருடைய மந்திரத்துக்கு நீங்காத எந்த நட்டுவாக்காலி விஷமும் இல்லை. இச்செய்தி அண்ணல் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. அவர்கள் அவரை அழைத்து அந்த மந்திரத்தைத் தம்மிடம் ஓதிக் காட்டுமாறு கூறினார்கள். அவர் பின்வருமாறு ஓதினார்.

''ஷஜ்னியத்தின் கர்னியத்துன் மல்ஹத்துன் நஜ்ருன் கஃபீத்தா மஸஹத்து கஃபீத்தா''

இதைக் கேட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''இது நூஹ் (அலை) அவர்கள் தம்முடைய கூட்டத்தினர் மீது எடுத்த அறுதிமானங்களாகும்'' என்று கூறினர்.

இத்துடன் ''ஸலாமுன் அலா நூஹின்ஃபில் ஆலமீன்'' என்று மூன்று தடவை ஓதுவது ஏற்றமென்று உலமாக்கள் கூறுகின்றனர்.

# சூரா ஸாத்

## பாவங்களிலிருந்து பாதுகாப்பு பெற

இந்த சூராவை ஓதுகிறவனுக்கு எல்லாவிதமான பாவங்களிலிருந்தும் இறைவன் பாதுகாப்பு அளிப்பான் என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

## இருமல் நீங்க

وَشَدَدْنَا مُلْكَهُ وَاٰتَيْنٰهُ الْحِكْمَةَ وَفَصْلَ الْخِطَابِ ۝

'வஷதத்னா முல்க்கஹு வஆத்தய்னாஹுல் ஹிக்மத்த வஃபஸ்லல் ஹித்தாப்' (38: 20) என்ற ஆயத்தை 21 தடவை ஊதி அந்த உப்பைத் தொண்டையில் தடவவேண்டும்.

## அன்பு பெருக

فَقَالَ اِنِّيْٓ اَحْبَبْتُ حُبَّ الْخَيْرِ عَنْ ذِكْرِ رَبِّيْ ۚ
حَتّٰى تَوَارَتْ بِالْحِجَابِ ۝ رُدُّوْهَا عَلَيَّ ۭ
فَطَفِقَ مَسْحًا بِالسُّوْقِ وَالْاَعْنَاقِ ۝

''நிச்சயமாக நான், (சூரியன்) திரைக்குள் மறைந்து விடும் வரையில் அல்லாஹ்வின் நாமத்தை ஸ்தோத்திரம் செய்வதை விட்டுப் பொருளை அதிகமான அன்பு கொண்டு விட்டேன் (என்று மனம் வருந்தி) அவைகளை என்னிடம் கொண்டு வாருங்கள்' எனக் கூறி அவைகளின் பின்னங்கால்களையும் (சுலைமான் தம் கையால் நீவி) தடவிக் கொடுத்தார்.'' *(38: 32, 33)*

*இதிலுள்ள மேற்கண்ட 32, 33-வது வசனங்களை இனிப்புப் பண்டங்களில் ஓதியூதி தின்னக் கொடுத்தால் அன்பு பெருகும்.*

### நல்ல தண்ணீர் கிடைக்க

*''உர்க்குள் பிரிஜ்லிக்க''*

*ஐயூப் (அலை) அவர்களை நோக்கி உம் காலை(ப் பூமியில்) தட்டும் (38:42) என்று இறைவன் கூறினான். இவ்விதமே அவர்கள் செய்ய நீருற்று ஒலித்தோடியது.*

*கிணறு தோண்டும்போது, ஊற்றைக் கண்டு பிடிக்கும் போது இந்த வசனத்தை ஓதினால், நல்ல தண்ணீர் உங்களுக்கு முன்னால் பொங்கி வரும்.*

## சூரா ஸுமர்

*''சூரா ஸுமரை ஓதுகிறவனின் ஆதரவை இறைவன் மறுமையில் துண்டிக்க மாட்டான்'' என்று பெருமானார் கூறினார்கள். இரவில் இதனை ஓதாது அவர்கள் தூங்குவதில்லை.*

### மக்கள் நன்றி செலுத்த

*இந்த சூராவை எழுதி அணிந்து கொண்டால், அல்லது மக்கள் படுக்கையிலோ வீட்டிலோ வைத்துக் கொண்டால் எப்போதும் நன்றி செலுத்துவார்கள்.*

### துன்பம் நீங்க

*வமா கதருல்லாஹ ஹக்க கத்ரிஹி.*

*''அல்லாஹ்வின் (மேலான) தகுதிக்குத் தக்கவாறு அவனை அவர்கள் கண்ணியப்படுத்துவதில்லை.'' (39: 67)*

எனும் வசனத்தை ஒருவன் ஓதினால், அவனுடைய துன்பங்கள் யாவும் பறந்து போகும்.

## ஸூரா முஃமின்

### சுவனத்தில் சிறப்புற

சொர்க்கத்தில் தான் சிறந்து விளங்க வேண்டும் என்று ஒருவன் விரும்பினால், அவன் இந்த சூராவை ஓதவேண்டும் என்பது பெருமானாரின் கருத்து.

### பரக்கத் ஏற்பட

حٰمٓ ۝ تَنْزِيْلُ الْكِتٰبِ مِنَ اللّٰهِ الْعَزِيْزِ الْعَلِيْمِ ۝
غَافِرِ الذَّنْۢبِ وَقَابِلِ التَّوْبِ شَدِيْدِ الْعِقَابِ
ذِى الطَّوْلِ ؕ لَآ اِلٰهَ اِلَّا هُوَ ؕ اِلَيْهِ الْمَصِيْرُ ۝

ஹாமீம் (இது யாவரையும்) மிகைத்தோனும் (யாவையும்) நன்கறிந்தோனுமாகிய அல்லாஹ்வால் அருளப்பட்ட வேதம். அவன் மன்னிப்புக்கோரலை அங்கீகரித்துப் பாவங்களை மன்னிப்பவன். பாவிகளை வேதனை செய்வதிலும் கடினமானவன். அருள் புரிவோன், அவனைத் தவிர வேறொரு நாயன் இல்லை. அவனிடம் (யாவரும் விசாரணைக்காகச்) செல்ல வேண்டியதிருக்கிறது. (40:1, 2, 3)

மேற்கண்ட மூன்று வசனங்களை எழுதி ஆயத்துல் குர்ஸியையும் அத்துடன் சேர்த்து எழுதி, கடையிலோ தோட்டத்திலோ வைத்தால் - வளர்ச்சியும் செழிப்பும் ஏற்படும்.

### பாதுகாப்புப் பெற

இவற்றைக் காலையில் ஓதினால் மாலை வரையும், மாலையில் ஓதினால் அடுத்த நாள் காலை வரையும் பாதுகாப்புக் கிடைக்கும் என்று பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.

## பகைவர் தோற்றோட

*''ஹாமீம் லா யன்ஸுரூன்''*

*போர் முனையில் இதனையே பெருமானார் (ஸல்) அவர்கள் ஓதியதோடு தம் தோழர்களையும் ஓதுமாறு பணித்துள்ளார்கள். இதனைத் திரும்பத் திரும்ப ஓதின் பகைவர் தோற்றோடுவர்.*

## சிரங்கு, நெஞ்சுவலி நீங்க

*சிரங்கு, நெஞ்சுவலி முதலியவற்றுக்கும் இந்த சூராவை எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்யலாம்.*

## அநியாயக்காரர்கள் தீங்கு செய்யாதிருக்க

فَسَتَذْكُرُوْنَ مَآ اَقُوْلُ لَكُمْ وَاُفَوِّضُ
اَمْرِيْٓ اِلَى اللّٰهِ اِنَّ اللّٰهَ بَصِيْرٌ بِالْعِبَادِ ۝

*''நான் உங்களுக்குக் கூறுவதன் உண்மையை நிச்சயமாக அதி விரைவில் நீங்கள் நினைத்துப் பார்ப்பீர்கள். என்னுடைய அலுவல்கள் அனைத்தையும் அல்லாஹ்விடமே ஒப்படைக்கின்றேன். நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களை உற்று நோக்கியவனாக உள்ளான்.''* *(40: 44)*

*— அநியாயக்காரர்களுக்குப் பின்னால் இந்த வசனத்தை ஓதினால், அவர்களால் என்றைக்கும் தீங்கிழைக்க முடியாது. அவர்களின் சதி முறியடிக்கப்படும்.*

## ஆடு, மாடுகளில் அதிகம் பால் சுரக்க

اَللّٰهُ الَّذِىْ جَعَلَ لَكُمُ الْاَنْعَامَ لِتَرْكَبُوْا مِنْهَا وَمِنْهَا تَاْكُلُوْنَ ۝ وَلَكُمْ فِيْهَا مَنَافِعُ وَلِتَبْلُغُوْا عَلَيْهَا حَاجَةً فِىْ صُدُوْرِكُمْ وَعَلَيْهَا وَعَلَى الْفُلْكِ تُحْمَلُوْنَ ۝ وَيُرِيْكُمْ اٰيٰتِهٖ فَاَىَّ اٰيٰتِ اللّٰهِ تُنْكِرُوْنَ ۝

*''அல்லாஹ்தான் உங்களுக்காக ஆடு, மாடு, ஒட்டகங்களைப் படைத்துள்ளான். (அவைகளில்) சிலவற்றின் மீது நீங்கள் அமர்ந்து செல்கின்றீர்கள். சிலவற்றை நீங்கள் உண்ணுகின்றீர்கள். அவற்றில் உங்களுக்கு வேறு பல பயன்களும் உள்ளன. உங்கள் மனத்திலுள்ள கோரிக்கைகளை நீங்கள் அடையும் பொருட்டு அதன் மீதும் கப்பலின் மீதும் நீங்கள் (பல இடங்களுக்கும்) சுமந்து செல்லப்படுகின்றீர்கள். மேலும் அவன் உங்களுக்குத் தன்னுடைய திருஷ்டாந்தங்களைக் காண்பிப்பான். அல்லாஹ்வுடைய திருஷ்டாந்தங்களில் எதைத்தான் நீங்கள் நிராகரிப்பீர்கள்?'' (40: 79, 80, 81)*

இந்த சூராவில் மேற்கண்ட 79, 80, 81 ஆகிய மூன்று வசனங்களை வைத்து, ஆடு, மாடு, ஒட்டகம் முதலியவற்றிலிருந்து அதிகப் பாலைப் பெறலாம்.

இவற்றை சுத்தமான பாத்திரத்தில் எழுதி, சுத்தமான தண்ணீரால் அதை அழித்துக் கால்நடைகளுக்குக் குடிக்கச் செய்ய வேண்டும். ஆனால் ஒன்று: இந்த தண்ணீர் சூரியன் படாததாக இருக்க வேண்டும். தண்ணீரை மேலே குறிப்பிட்டபடி குடிக்கச் செய்வதோடு அவற்றின் தீனியிலும் தெளிக்க வேண்டும்.

# சூரா ஹாமீம் ஸஜ்தா

## அதிகமான நற்கூலி பெற

''சூரா ஸஜ்தாவை ஒருவன் ஓதினால், அதன் எழுத்துக்களின் எண்ணிக்கைபோல் பத்து மடங்கு நற்கூலி அவனுக்குக் கொடுக்கப்படும்'' என்று பெருமானார் கூறினார்கள். இது தௌராத் வேதத்திற்குப் பதிலாக இறக்கப்பட்டது என்றும் கூறினார்கள்.

## கண்வலி நீங்க

கண்வலி, கண்ணெரிச்சல் போன்றவற்றுக்கு இந்த சூராவை எழுதி, அதை அழித்து தண்ணீரால் கழுவ வேண்டும்.

## காக்கை வலிப்பு ஏற்படாமலிருக்க

ஒருவன் சூரா ஸஜ்தாவை எழுதித் தாயத்து செய்து அணிந்து கொள்ளின் அவனுக்குக் காக்கை வலிப்பு நோய் வராது.

# சூரா ஷூரா

## ஒருவனுக்கு வானவர்கள் பாவமன்னிப்புக்கோர

இந்த சூராவை ஓதுகிறவனுக்கு வானவர்கள் பாவ மன்னிப்புக் கோருவார்கள் என்று பெருமானார் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

## பிறர் தொல்லையிலிருந்து பாதுகாப்புப்பெற

இதை எழுதி அணிந்து கொண்டால், மக்களின் தொல்லைகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

## பிரயாணத்தில் தாகம் ஏற்படாதிருக்க

இதை எழுதிக் கரைத்த தண்ணீரைக் குடித்தால் பிரயாணத்தில் தாகம் ஏற்படும்போது உதவியாய் இருக்கும்.

**பேய் நீங்க**

இந்தத் தண்ணீரை தெளித்தால், பிசாசு பிடித்தவனுக்கு ஆரோக்கியம் ஏற்படும்.

**இரணம் அதிகரிக்க**

اَللّٰهُ لَطِيْفٌ بِعِبَادِهٖ يَرْزُقُ مَنْ يَّشَآءُ ۚ وَهُوَالْقَوِيُّ الْعَزِيْزُ ۝

'அல்லாஹ் தன் அடியார்களை அன்பாகக் கவனித்து வருபவன். எனவே அவன் நாடியவர்களுக்கு (வேண்டிய) ஆகாரமளித்து வருகிறான். அவன் பலவானும் (யாவரையும்) மிகைத்தோனுமாயிருக்கிறான்'' இவ்வசனத்தை அதிகமாக ஓதிவரின் இரணம் அதிகரிக்கும்.

**துன்பம் நீங்க**

حٰمٓ ۝ عٓسٓقٓ ۝ كَذٰلِكَ يُوْحِيْٓ اِلَيْكَ وَاِلَى الَّذِيْنَ مِنْ قَبْلِكَ ۙ اللّٰهُ الْعَزِيْزُ الْحَكِيْمُ ۝

''ஹாமீம்'' அய்ன் ஸீன் காப் (நபியே! இந்த அத்தியாயம் உமக்கு அருள் செய்யப்படுகின்றது) இவ்வாறே (இதற்கு முன்னர்) உமக்கும் உமக்கு முன்னிருந்தவர்களுக்கும் அல் லாஹ் தன்னுடைய வசனங்களை வஹீ மூலம் அறிவித்து வந்திருக்கிறான். அல்லாஹ் அனைவரையும் மிகைத்தோனும் ஞானமுடையோனுமாய் இருக்கிறான். *(42:1, 2, 3)*

இதன் மேற்கண்ட முதல் மூன்று வசனங்களைத் துன்பம் நேர்ந்த காலை ஓதின் துன்பம் நீங்கும்.

## எதிரிகளிடமிருந்து காவல் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவரை அல்லாஹ் அவனுடைய எதிரிகளிடமிருந்து காத்தருள் புரிவான் என இமாம் கஸ்ஸாலி (ரஹ்) கூறுகின்றனர்.

## பிறரை வசீகரிக்க

'ஹாமீம் ஐன் ஸீன் காஃப், என்பதை இஷாவுக்குப் பின் 278 தடவை ஓதவேண்டும். ஓதுவதற்கு முன்னும் பின்னும் 11-தடவை ஸலவாத் ஓதிக் கொள்ளவேண்டும். அதன்பின் தான் வசீகரிக்க விரும்பியவரின் பெயரைக் கூறவேண்டும். இதனை மாதத்தின் முதல் வியாழக்கிழமை இரவு துவங்க வேண்டும்.

# ஸூரா ஸுக்ருப்

## மறுமையில் அச்சமற்றிருக்க

''அடியார்களே! இன்று உங்களுக்கு அச்சமில்லை. நீங்கள் கவலைப்படவும் மாட்டீர்கள். விசாரணையின்றிச் சொர்க்கத்தில் நுழையுங்கள்'' என்று மறுமையிலும் கூறப்படுகிற குழுவில் இந்த சூராவை ஓதுகிறவன் சேர்ந்து விடுவான்'' எனப் பெருமானார் (ஸல்) கூறியிருக்கிறார்கள்.

## தீய கனவு காணாதிருக்க

ஒருவன் இந்த சூராவை எழுதி தலையணைக்கடியில் வைத்துக் கொண்டு தூங்கினால் அவன் வெறுக்கத்தக்க விதத்தில் கனவு காணமாட்டான்.

## வீட்டிலுள்ளோருக்கு நன்மை ஏற்பட

ஒரு வீட்டுச் சுவரில் இதை எழுதினால் அந்த வீட்டிலிருப்பவர்களுக்கு நன்மை ஏற்படும்.

## பிடிவாதமுள்ள பெண்ணைத் திருத்த

இதனை எழுதிக் கரைத்த தண்ணீரைப் பிடிவாதம் கொண்ட பெண்ணை குடிக்கச் செய்தால், அவள் குணம் மாறுதலடைந்துவிடும்.

وَلَئِنْ سَأَلْتَهُمْ مَّنْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْأَرْضَ
لَيَقُولُنَّ خَلَقَهُنَّ الْعَزِيزُ الْعَلِيمُ ۝ الَّذِي جَعَلَ
لَكُمُ الْأَرْضَ مَهْدًا وَّجَعَلَ لَكُمْ فِيهَا سُبُلًا
لَّعَلَّكُمْ تَهْتَدُونَ ۝ وَالَّذِي نَزَّلَ مِنَ السَّمَاءِ
مَاءًۢ بِقَدَرٍ فَأَنْشَرْنَا بِهِ بَلْدَةً مَّيْتًا كَذٰلِكَ
تُخْرَجُونَ ۝ وَالَّذِي خَلَقَ الْأَزْوَاجَ كُلَّهَا وَ
جَعَلَ لَكُمْ مِّنَ الْفُلْكِ وَالْأَنْعَامِ مَا تَرْكَبُونَ ۝
لِتَسْتَوُا عَلَىٰ ظُهُورِهِ ثُمَّ تَذْكُرُوا نِعْمَةَ رَبِّكُمْ

இந்த சூராவின் மேற்கண்ட 9,10,11,12,13 ஆகிய ஐந்து வசனங்கள் பல்வேறு நோக்கங்களுக்கு உபயோகிக்கப் படுகின்றன.

## வழிகேடனைத் திருத்த

வழிகேட்டிலிருப்பவனை நல்வழிக்குக் கொண்டு வரலாம். இந்த வசனங்களைப் புதிய வெள்ளைப் பட்டில் எழுதி, அதனை அவனுடைய தொப்பியில் இணைத்துவிட வேண்டும்.

## குழப்பம் தெளிய

குழம்பிக் கிடப்பவனுக்குத் தெளிவு பிறக்க வேண்டுமானால், வழி இதோ இருக்கிறது: மணல் தரையில் உட்கார்ந்து 'தயம்மும்' செய்து 'கிப்லா'வை முன்னோக்கி உட்கார்ந்து இந்த வசனங்களை 7-தடவை ஓத வேண்டும். குழப்பம் நீங்கித் தெளிவு பிறக்கும்.

## மிருகங்களை வசப்படுத்த

மிருகங்களை கட்டுப்படுத்துவதற்குரிய வழி இது: மாதக் கடைசியில் மேற்குறித்த வசனங்களை மான்தோலில் எழுதி மிருகங்களுக்கு அணிவித்து விடுங்கள். அது உங்களுக்கு பணிந்து கட்டுப்படும்.

## கரையிலும், கடலிலும் பாதுகாப்புப் பெற

கரையிலும், கடலிலும் பாதுகாப்பு ஏற்பட வேண்டும் எனும் நோக்கத்திற்காகவும் இந்த வசனங்களை ஓதலாம்.

## கரு காக்கப் பெற

வயிற்றிலிருக்கும் குழந்தைக்கு இப்படி பாதுகாப்பு அளிக்கலாம்: வாரத்திற்கு ஒருமுறை இந்த வசனங்களைக் கண்ணாடிப் பாத்திரத்தில் எழுதி பன்னீர் கொண்டு அழித்துக் குடிக்கச் செய்ய வேண்டும். இவ்வாறு ஏழு வாரங்களுக்குச் செய்ய வேண்டும்.

## தம்பதிகளிடையே ஒற்றுமை ஏற்படுத்த

பிணங்கிக் கொண்டிருக்கிற தம்பதிகளுக்கு இந்த வசனங்களை நான்கு துண்டுக் காகிதங்களில் எழுதி வீட்டின் நான்கு மூலைகளில் புதைத்து விடுங்கள். தம்பதிகளுக்கிடையில் ஒற்றுமை ஏற்பட்டு விடும்.

## வாகனத்தின் மீது நலமாய் பயணம் செய்ய

سُبْحَانَ الَّذِىْ سَخَّرَلَنَا هٰذَا وَمَا كُنَّا لَهٗ مُقْرِنِيْنَ ۙ

வாகனத்தில் ஏறியதும் "இதன் மீது ஏற சக்தியற்றவர்களாக இருந்த எங்களுக்கு இதனை வசப்படுத்தித் தந்தவன் மிகப் பரிசுத்தமானவன்" என்ற மேற்கண்ட ஆயத்தை ஓதின் பயணத்தில் யாதொரு தீங்கும் நிகழாது. *(43:13)*

## வறுமை நீங்க

வறுமை நீங்குவதற்குச் சிறந்த வழி இது.

ஏதேனும் ஒரு மாதத்தின் ஆரம்பத்தில் தொடர்ந்தாற் போல் மூன்று நாட்களுக்கு நோன்பு பிடியுங்கள். முதல் நோன்பு செவ்வாயன்று இருக்க வேண்டும். வெள்ளி இரவில் புத்தாடை அணிந்து, உளூ செய்து கொள்ளுங்கள். சாதாரண உணவை உட்கொள்ளுங்கள். இஷாத் தொழுகை முடிந்த பிறகு, இரண்டு ரக்அத் தொழுது, உங்கள் சூழ்நிலைக்கும் மனத்துக்கும் நன்மை செய்ய வேண்டும் என்றும், நீங்கள் விரும்பாததையெல்லாம் தவிர்த்து உதவவேண்டும் என்றும் இறைவனிடம் பிரார்த்தனை செய்யுங்கள்.

அப்புறம் 'ஸலவாத்' 1000 தடவை ஓதுங்கள். பிறகு அடுத்து இடம் பெறுகிற ஆறு வசனங்களை 70-தடவை ஓதுங்கள். இந்தக் கட்டத்தில் 'இக்லாஸ்' எனப்படும் மன ஒருமை உங்களுக்கு இருக்க வேண்டும். பின்னர், உங்கள் தேவையை கூறிப் பிரார்த்தனை செய்யுங்கள். பிறகு, தூக்கம் அழுத்தும் வரை 'ஸலவாத்' ஓதுங்கள்.

இவ்வாறு மாதத்தின் ஆரம்பத்திலும் நடுவிலும் இறுதியிலும் செய்ய வேண்டும்.

இதனால் உங்கள் மார்க்கத்திலும் வாழ்விலும் தோன்றுகிற விளைவுகளைப் பார்த்து நீங்கள் பூரிப்படைவீர்கள்.

இந்த முறைப்படி நாம் செயலாற்றினோம். அதன் காரணமாக எல்லாப் பேறுகளும் பெற்றோம். எனவே இதனை அலட்சியமாக விட்டு விடாதீர்கள். திருக்குர்ஆனினால் விளையும் பயன்களில் இது ஒன்றாகும்.

يٰعِبَادِ لَا خَوْفٌ عَلَيْكُمُ الْيَوْمَ وَلَآ اَنْتُمْ تَحْزَنُوْنَ ○
اَلَّذِيْنَ اٰمَنُوْا بِاٰيٰتِنَا وَكَانُوْا مُسْلِمِيْنَ ○ اُدْخُلُوا
الْجَنَّةَ اَنْتُمْ وَاَزْوَاجُكُمْ تُحْبَرُوْنَ ○ يُطَافُ
عَلَيْهِمْ بِصِحَافٍ مِّنْ ذَهَبٍ وَّاَكْوَابٍ ۚ وَ
فِيْهَا مَا تَشْتَهِيْهِ الْاَنْفُسُ وَتَلَذُّ الْاَعْيُنُ ۚ
وَاَنْتُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○ وَتِلْكَ الْجَنَّةُ الَّتِيْٓ
اُوْرِثْتُمُوْهَا بِمَا كُنْتُمْ تَعْمَلُوْنَ ○ لَكُمْ
فِيْهَا فَاكِهَةٌ كَثِيْرَةٌ مِّنْهَا تَاْكُلُوْنَ ○

''என் அடியார்களே! இன்றையத் தினம் உங்களுக்கு யாதொரு பயமுமில்லை. நீங்கள் துக்கிக்கவுமாட்டீர்கள் (என்று அந்நாளில் கூறப்படும்) இவர்கள் தாம் நம்முடைய வசனங்களை விசுவாசித்து (நமக்கு) முற்றிலும் வழிபட்டு நடப்பவர்கள். எனவே (மறுமையில் இவர்களை நோக்கி) நீங்களும் உங்கள் மனைவிமார்களும் உங்களை அலங்கரித்துக் கொண்டு (மகிழ்ச்சியோடு) சுவனபதி சென்று விடுங்கள் என்று கூறப்படும். (பலவகை உணவுகளும் பானங்களும் நிறைந்த) பொன் தட்டுகளும் கிண்ணங்களும் அவர்களைச் சுற்றிக் கொண்டே இருக்கும். அங்கு அவர்கள் மனம் விரும்பியவைகளும் அவர்களுடைய கண்களுக்கு இரம்மியமானவைகளும் அவர்களுக்குக் கிடைக்கும். (அவர்களை நோக்கி) இதில் என்றென்றும் வாழ்ந்து கொண்டிருங்கள் (என்று கூறப்படும்) நீங்கள் செய்த நன்மைகளின் காரணமாகவே இச்சுவனபதியை நீங்கள் அனந்தரம் கொண்டீர்கள். நீங்கள் எண்ணக்கூடிய பல கனிவர்க்கங்களும் அதில் உங்களுக்கு உள்ளன என்று கூறப்படுகிறது.'' *(45: 68-73)*

# சூரா துகான்

## குற்றங்கள் மன்னிக்கப் பெற

இந்த சூராவை ஒருவர் ஓதினால் 70 ஆயிரம் வானவர்கள் பாவமன்னிப்புக் கோரிய நிலையில் அவருக்குப் பொழுது விடியும் - அவரின் குற்றங்கள் மன்னிக்கப்படும் என்று பெருமானார் கூறினார்கள். மேலும் ஒருவர் இதனை ஓதினால் அவர் மன்னிக்கப்பட்டவராகக் காலையில் எழுவார் என்றும் மறுமையில் ஹூருல் ஈனின் மணவாளராக அவர் வாழ்வார் என்றும் அவர்கள் கூறினர். இதனை வெள்ளி இரவு அல்லது பகலில் ஓதியவருக்கு அல்லாஹ் சுவனத்தில் ஒரு வீட்டைக் கட்டுகிறான் என்றும் அவர்கள் திருவாய் மலர்ந்தனர்.

## பிறர் மரியாதை பெற

இந்த சூராவை எழுதித் தன்னிடம் வைத்துக் கொண்டவன் ஷைத்தானின் தீங்குகளிலிருந்து பாதுகாக்கப்படுவான். மற்றவர்கள் அவனுக்கு மரியாதை செய்து பயப்படுவார்கள்.

## இறைஞ்சுதல் உடன் ஏற்றுக் கொள்ளப்பட

ஷஃபான் மாதம் முதற் பிறை இரவு இஷாத் தொழுகைக்குப் பிறகு இந்த சூராவின் முதல் 8 வசனங்களை 15 தடவை ஓத வேண்டும். இவ்வாறு 14 நாட்கள் வரை செய்ய வேண்டும். 14-ஆவது இரவில மட்டும் இந்த வசனங்களை 30 தடவை ஓத வேண்டும். அப்புறம் இறைவனை 'திக்ர்' செய்து ஸலவாத்து ஓதிப் பிரார்த்தனை செய்ய வேண்டும்.

மேற்குறிப்பிட்ட 'அமலை' எந்த நல்ல நோக்கத்திற்கும் உபயோகிக்கலாம். பிரார்த்தனை உடனுக்குடன் அங்கீகரிக்கப்படும். இதை நீங்கள் அனுபவத்திலேயே பார்க்கலாம்.

## வாக்குவாதத்தில் வெற்றி காண

போராட்டத்திலோ வாக்குவாதத்திலோ உங்களைவிட உங்கள் எதிரி வலிமையானவன் என்று தோன்றினால் இந்த

சூராவின் 51-59 ஆகிய வசனங்களை உபயோகித்துக் கொள்ள லாம்.

சுத்தமாக இருந்து சுத்தமான உடையணிந்து, அஸர் தொழுகைக்குப் பிறகு இந்த வசனங்களைப் புதிய வெள் ளைத் துணியில் கஸ்தூரி, குங்குமப்பூ, கற்பூரம் ஆகியவற்றை பன்னீரில் கலந்து எழுதுங்கள். அதைச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு எதிரியிடம் செல்லுங்கள். உங்களுக்கு முழு வெற்றி கிடைக்கும்.

# சூரா ஜாஸியா

## மானம் பாதுகாப்புப் பெற

''சூரா ஜாஸியாவை ஒருவன் ஓதினால் அவனுடைய மானம் பாதுகாக்கப்படும்'' என்று பெருமானார் (ஸல்) கூறியுள்ளார்கள்.

## இம்மையில் மறுமையில் பாதுகாப்பு பெற

இதனை ஓதினால் இம்மை மறுமையின் தீங்குகளிலி ருந்து பாதுகாப்புக் கிடைக்கும் என்றும் அவர்கள் கூறியிருக்கி றார்கள்.

## பிறர் புறம் பேசாதிருக்க

இதனை எழுதித் தன்னிடம் வைத்துக் கொண்டால், அல்லது அணிந்து கொண்டால், அல்லது கரைத்துக் குடித்தால் புறம், கோள் முதலியவற்றிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும். அவனைப் பற்றி யாரும் புறம்பேச மாட்டார்கள்.

## குழந்தை பாதுகாப்புப் பெற

பிரசவம் ஆனதும் இதனைக் குழந்தைகளுக்கு அணிவித் தால், எல்லாவிதமான தீமைகளிலிருந்தும் ஜின், ஷைத்தான்க ளின் தீங்குகளிலிருந்தும் அந்தக் குழந்தை பாதுகாக்கப்படும்.

## பரக்கத் ஏற்பட

حٰمٓ ○ تَنْزِيْلُ الْكِتٰبِ مِنَ اللّٰهِ الْعَزِيْزِ
الْحَكِيْمِ ○ اِنَّ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ لَاٰيٰتٍ
لِّلْمُؤْمِنِيْنَ ○ وَفِيْ خَلْقِكُمْ وَمَا يَبُثُّ مِنْ
دَآبَّةٍ اٰيٰتٌ لِّقَوْمٍ يُّوْقِنُوْنَ ○

''ஹாமீம் (யாவரையும்) மிகைத்தோனும் ஞானமுடையோனுமாகிய அல்லாஹ்வால்தான் இவ்வேதம் இறக்கப் பெற்றது. விசுவாசம் கொண்டோருக்கு வானங்களிலும் பூமியிலும் நிச்சயமாகப் பல அத்தாட்சிகள் உள்ளன. உங்களைப் படைப்பதிலும் (உலகில்) பல உயிரினங்களைப் பரப்பி வைப்பதிலும் விசுவாசத்தில் உறுதியான (நன்) மக்களுக்குப் பல அத்தாட்சிகளுள்ளன.''

வளர்ச்சி, 'பரக்கத்' ஆகிய நோக்கங்களுக்கு இந்த வசனங்களை உபயோகிக்கலாம். மரங்களில் அதிகக் கனிகளை உற்பத்தி செய்வது, அவற்றைப் பாதுகாப்பது, வருமானத்தைப் பெருக்கிக் கொள்வது ஆகிய நோக்கங்களுக்கும் ஓதலாம்.

ஓதும் முறை: ஆரம்பிக்கும் நாளன்று நோன்பு பிடிக்க வேண்டும். இந்த வசனங்களை ஒரு மரத்துண்டில் எழுதி கிணற்றிலோ, ஆற்றிலோ மிதக்கவிட வேண்டும். அந்தத் தண்ணீரைத் தெளிக்கும் இடத்தில் பரக்கத்தும் செழிப்பும் பொங்கிப் பெருகும்.

## மனிதரை வசியம் செய்ய

وَيْلٌ لِّكُلِّ اَفَّاكٍ اَثِيْمٍ ۝ يَّسْمَعُ اٰيٰتِ اللّٰهِ تُتْلٰى
عَلَيْهِ ثُمَّ يُصِرُّ مُسْتَكْبِرًا كَاَنْ لَّمْ يَسْمَعْهَا ۚ
فَبَشِّرْهُ بِعَذَابٍ اَلِيْمٍ ۝

("இவ்வாறு நிராகரித்து விட்டுப் பொய்யான தெய்வங்களைக்) கற்பனையாகக் கூறும் பாவிகளுக்கெல்லாம் கேடு தான். எவன் தனக்கு ஓதிக் காண்பிக்கப்பட்ட அல்லாஹ்வின் வசனங்களைக் கேட்ட பின்னர் அதனைத் தன் காதால் கேட்காதவன் போல் கர்வம் கொண்டு (நிராகரிப்பின் மீதே) பிடிவாதமாக இருக்கின்றானோ அவனுக்குத் துன்புறுத்தும் வேதனையைக் கொண்டு நீர் எச்சரிக்கை செய்யும்!''

*(45: 7, 8)*

மனிதரை வசப்படுத்துவதற்கு இந்த சூராவின் மேற்கண்ட 7, 8-ஆகிய இரண்டு வசனங்கள் பெரிதும் உகந்தவை.

ஒரு மனிதனிடமிருந்து நீங்கள் எதையேனும் அடைய விரும்பினால், இந்த வசனங்களை மும்முறை ஓதி உங்கள் வலக்கரத்தில் ஊதி மூடிக்கொள்ளுங்கள். சம்பந்தப்பட்ட ஆசாமியைக் கண்டதும் கையைத் திறந்து விடுங்கள். உங்கள் தேவை இலகுவாக முடிந்துவிடும்.

## வேட்டையில் வெற்றி

اَللّٰهُ الَّذِيْ سَخَّرَ لَكُمُ الْبَحْرَ لِتَجْرِيَ الْفُلْكُ
فِيْهِ بِاَمْرِهٖ وَلِتَبْتَغُوْا مِنْ فَضْلِهٖ وَلَعَلَّكُمْ تَشْكُرُوْنَ ۝
وَسَخَّرَ لَكُمْ مَّا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ جَمِيْعًا مِّنْهُ ؕ
اِنَّ فِيْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ ۝

*"அல்லாஹ் கடலை உங்களுக்கு வசதியாக அமைத்துள்ளான். அவனுடைய கட்டளையைக் கொண்டு கப்பலில் சென்று அவனுடைய அருளை நீங்கள் தேடிக் கொள்கிறீர்கள். (அதற்காக அவனுக்கு) நீங்கள் நன்றி செலுத்துவீர்களாக! அன்றி அவ்வாறே வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைத்தையும் அவன் தன்னுடைய அருளால் உங்களுக்குக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறான். கவனித்து ஆராயும் மக்களுக்கு நிச்சயமாக இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன."*

*(44: 12, 13)*

வேட்டைக்குச் செல்கிறவர்கள் இந்த சூராவில் மேற்கண்ட 12, 13 ஆகிய இரண்டு வசனங்களை எழுதி வேட்டைக் கருவியில் இணைத்துக் கொண்டால், வேட்டையாடும்போது மிகப் பெரும் வெற்றி கிடைக்கும்.

## தொழிலில் வெற்றிபெற

இதனை வியாபாரத் தலத்தில் வைத்தால் பரக்கத்தும் செழிப்பும் ஏற்படும்.

# சூரா அஹ்காப்

"ஒருவன் இந்த சூராவை ஓதினால், உலகிலுள்ள பொருள்களின் எண்ணிக்கையைப் போல பத்து மடங்கு நன்மை கிடைக்கும்; பத்து மடங்கு தீமை அழிக்கப்படும்; பத்து மடங்கு அந்தஸ்து கொடுக்கப்படும்", என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

## இரவு முழுவதும் இறைகாவல் பெற

இந்த சூராவை எழுதி அணிந்து கொண்டால், ஜின்னுடைய தீங்கிலிருந்தும் தூங்கிக் கொண்டிருக்கும் போதும் விழித்துக் கொண்டிருக்கும்போதும் ஏற்படுகிற ஆபத்துக்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும். இதனை தலையணைக்கடியில் வைத்துக் கொண்டால் இரவு முழுவதும் பாதுகாப்பு கிடைக்கும்.

## கெட்ட மகளை நல்வழிப்படுத்த

وَوَصَّيْنَا الْاِنْسَانَ بِوَالِدَيْهِ اِحْسَانًا ؕ حَمَلَتْهُ
اُمُّهٗ كُرْهًا وَّوَضَعَتْهُ كُرْهًا ؕ وَحَمْلُهٗ وَفِصٰلُهٗ
ثَلٰثُوْنَ شَهْرًا ؕ حَتّٰۤى اِذَا بَلَغَ اَشُدَّهٗ وَبَلَغَ
اَرْبَعِيْنَ سَنَةً ۙ قَالَ رَبِّ اَوْزِعْنِىْۤ اَنْ اَشْكُرَ
نِعْمَتَكَ الَّتِىْۤ اَنْعَمْتَ عَلَىَّ وَعَلٰى وَالِدَىَّ وَاَنْ
اَعْمَلَ صَالِحًا تَرْضٰٮهُ وَاَصْلِحْ لِىْ فِىْ ذُرِّيَّتِىْ ؕ
اِنِّىْ تُبْتُ اِلَيْكَ وَاِنِّىْ مِنَ الْمُسْلِمِيْنَ ○

*''மனிதன் தன்னுடைய தாய் தகப்பனுக்கு நன்றி செய்யுமாறு நாம் அவனுக்கு அறிவுரை பகர்ந்தோம். அவனுடைய அன்னை துன்பத்துடனே அவனை (கர்ப்பத்தில்) சுமந்திருந்து துன்பத்துடனேயே பிரசவிக்கின்றாள். அவன் கர்ப்பத்திலிருந்து இவன் பால்குடி மறக்கும் வரையில் முப்பது மாதங்கள் (மிகவும் துன்பத்துடன்) செல்கின்றன. இவன் வாலிபமாகி நாற்பது வயதை அடைந்தால் ''என் இறைவனே! என் மீதும் என் தாய் தகப்பன் மீதும் புரிந்த அருளுக்காக உனக்கு நான் நன்றி செலுத்தி உன்னுடைய திருப்தியை அடையக்கூடிய நற்கருமங்களைச் செய்யும்படி (யான நல்லறிவை) நீ எனக்குத் தந்தருள்வாயாக! எனக்கு உதவியாக இருக்கும்படி என்னுடைய குடும்பத்தை சீர்திருத்திவை. நிச்சயமாக நான் உன்னையே நோக்கினேன். (உனக்கு) முற்றிலும் வழிப்பட்டேன்'' என்று கூறுவான்.''* *(46: 15)*

தமக்குக் கட்டுப்படாத கெட்ட மகனைப் பெற்றுள்ளவர்கள் இதிலுள்ள மேற்கண்ட 15-ஆவது வசனத்தை தொழுகைக்குப் பின் ஓதிவரின் அவன் இறையருளால் நன்மகனாவான்.

# சூரா முஹம்மது

## சுனை நீர் அருந்த

''இந்த சூராவை ஒருவன் ஓதினால், சொர்க்கத்தின் ஆற்றுத் தண்ணீரை அவனுக்குப் புகட்டும் பொறுப்பு இறைவனுக்கு ஏற்பட்டுவிடும்'' என்று பெருமானார் கூறினார்கள்.

## மக்களின் அன்பைப் பெற

ஒருவன் இந்த சூராவை எழுதி ஸம் ஸம் கிணற்றுத் தண்ணீரால் அழித்துக் குடித்தால், மக்களின் அன்புக்கும் மதிப்புக்கும் அவன் உரித்தானவனாகி விடுவான்.

## நினைவாற்றல் பெற

மேலும் காதால் கேட்பதை எல்லாம் மனதில் பதித்துக் கொள்வான்.

## நோய் நீங்க

இந்த சூராவை எழுதி அழித்த தண்ணிரால் கழுவினால் நோய் குணமாகும்.

## இறையருளை எய்தப் பெற

இதனை ஓதிவருபவருக்கு அல்லாஹ் மதிப்பையும் மாண்பையும் வழங்குவதோடு அவர் மீது தன் பேரருளையும் சொரிகிறான்.

## எதிரியால் வெற்றி கொள்ளப்படாமல் இருக்க

இதனை எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொள்பவரை அவரின் எதிரியால் தோற்கடிக்க இயலாது போய்விடும்.

## துன்பத்திலிருந்து பாதுகாவல் பெற

இதனை ஓதி வருபவர் துன்பங்களிலிருந்து பாதுகாக்கப் பெறுவார்.

## போரில் வெற்றி காண

وَالَّذِيْنَ كَفَرُوْا فَتَعْسًا لَّهُمْ وَاَضَلَّ اَعْمَالَهُمْ ○
ذٰلِكَ بِاَنَّهُمْ كَرِهُوْا مَآ اَنْزَلَ اللّٰهُ فَاَحْبَطَ اَعْمَالَهُمْ ○

*''எவர்கள் நிராகரிக்கின்றார்களோ அவர்களுக்குக் கேடு தான். (அவர்களுடைய கால்களைப் பெயர்த்து) அவர்களு டைய செயல்களையெல்லாம் பயனற்றதாக்கி விடுவான். காரணம் அல்லாஹ் இறக்கி வைத்ததை மெய்யாகவே அவர் கள் வெறுத்து (நிராகரித்து விட்டார்கள்). எனவே அவர்களின் செயல்களையெல்லாம் (அல்லாஹ்) அழித்துவிட்டான்.''*

*(47: 8, 9)*

போர் துவங்கும்போது, போர்க்களத்து மண்ணில் ஒரு பிடி எடுத்து, இந்த சூராவின் மேற்கண்ட 8, 9-ஆகிய இரண்டு வசனங்களை அதில் ஓதியூதி, அந்த மண்ணைப் பகைவருக்கு முன்னால் இறைத்துவிட வேண்டும். இறைவனருளால் உங்க ளுக்கு வெற்றியும் பகைவருக்குத் தோல்வியும் கிடைக்கும். அவர்கள் கேவலப்பட்டுத் திரும்பிச் செல்வார்கள்.

# சூரா பத்ஹ்

## இறைகாவல் பெற

இந்த சூராவை நாள்தோறும் ஓதி வருபவர் தம்முடன் சேர்ந்து ஜிஹாத் செய்தவரின் கூட்டத்திலிருப்பார் என்று பெருமானார் (ஸல்) கூறியுள்ளார்கள்.

## நல்லவை பெற, தீயவை நீங்க

இதனை ஏழு நாட்களுக்குள் இருபத்தியொரு தடவை ஓத வேண்டும்.

## பகைவர்களை வெற்றி கொள்ள

இதனை ளுஹர் தொழுகைக்குப் பின் நாற்பத்தொரு தடவை ஓத வேண்டும்.

இதைப் பற்றிப் பெருமானார் (ஸல்) அவர்கள் குறிப்பிடும் பொழுது, ''உலகிலுள்ள அனைத்தையும்விட இது மாண்புடையது'' என்று கூறினர்.

## எல்லா அலுவல்களிலும் வெற்றி பெற

ஒருவன் இதனை எழுதித் தாயத்து செய்து அணிந்து கொண்டாலும் அல்லது ஒருசெயலை நினைத்துக் கொண்டு அதில் வெற்றி பெற ஓதி வந்தாலும் வெற்றி கிட்டும்.

## ஆண்டு முழுவதும் இறைகாவல் பெற

''ரமலான் முதல் இரவில் 'நபில்' தொழுகையில் ஒருவன் சூரா பத்ஹை ஓதினால், அந்த ஆண்டு முழுவதும் அவன் பாதுகாக்கப்படுவான்'' என்று பெருமானார் (ஸல்) கூறினார்கள்.

## ஆண்டு முழுவதும் வசதி பெற

ஞானிகளில் ஒருவர் கூறினார்: ''ரமலான் பிறையைப் பார்த்ததும் நின்றவண்ணமே ஒருவன் சூரா பத்ஹை மும்முறை ஓதினால் அந்த ஆண்டு அவனுக்கு இறைவன் வசதிகளை ஏற்படுத்துவான்.

## நீரில் மூழ்கிச் சாகாதிருக்க

இந்த சூராவை ஓதுவது, தண்ணீரில் மூழ்கி இறப்பதிலிருந்து பாதுகாப்புக் கொடுக்கும்.

## பயங்கர வேளையில் பாதுகாப்புப் பெற

போரும் பயமும் சூழ்ந்த வேளையில் இதனை எழுதி வைத்துக்கொண்டால் பாதுகாப்புக் கிடைக்கும்.

## வழக்கில் வெற்றிபெற

ஒருவன் இதனை நாற்பது தடவை ஓதிக்கொண்டு நீதி மன்றம் செல்லின் வழக்கில் அவனுக்கு அனுகூலமாக நீதி வழங்கப்படும்.

## பிரச்சினை தீர

ஒருவன் இதனை நூறு தடவை ஓதி இறைவனிடம் தன் குறை இரந்தால் அல்லாஹ் அவன் குறை நீக்கியருள்வான்.

## இழிந்தவர் உயர்வடைய; தோல்வியுற்றோர் வெற்றி பெற, கடன் நீங்க

இதனை வழக்கமாக ஓதி வரவேண்டும்.

## நோக்கம் நிறைவேற

ஜும்ஆவின் சுன்னத்துக்களை நிறைவேற்றியபின் இதனை ஏழு தடவை ஓத வேண்டும். பின்னர் 'அல்பத்தாஹ்' என்று 489 தடவை ஓத வேண்டும். இவ்வாறே அடுத்த ஜும்ஆ வரை ளுஹருக்குப்பின் ஓதி இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்.

## செயற்கரியவை செய்ய

إِنَّا فَتَحْنَا لَكَ فَتْحًا مُّبِينًا ۝ لِّيَغْفِرَ لَكَ اللَّهُ مَا
تَقَدَّمَ مِن ذَنبِكَ وَمَا تَأَخَّرَ وَيُتِمَّ نِعْمَتَهُ
عَلَيْكَ وَيَهْدِيَكَ صِرَاطًا مُّسْتَقِيمًا ۝ وَيَنصُرَكَ
اللَّهُ نَصْرًا عَزِيزًا ۝ هُوَ الَّذِي أَنزَلَ السَّكِينَةَ
فِي قُلُوبِ الْمُؤْمِنِينَ لِيَزْدَادُوا إِيمَانًا مَّعَ
إِيمَانِهِمْ ۗ وَلِلَّهِ جُنُودُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ
وَكَانَ اللَّهُ عَلِيمًا حَكِيمًا ۝

இந்த சூராவின் மேற்கண்ட முதல் நான்கு வசனங்களை மான் தோலில் குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீர் கொண்டெழுதித் தொப்பியில் அணிந்து கொண்டால் முக வசீகரமும், மக்களிடம் மதிப்பும், மரியாதையும் ஏற்படும். உங்களால் செய்ய முடியாது என்று தோன்றுகிற எல்லாக் காரியங்களையும் இந்த வழியில் செய்து முடிக்கலாம். இந்த வசனங்களின் பொருள், 'நபியே, நாம் உமக்குத் தெளிவானதொரு வெற்றியைத் தந்தோம்'... என்று துவங்குகிறது.

## இருதய வலி நீங்க

சூராஃபத்ஹில் 'லகத் ஸதக்கல்லாஹு' என்று துவங்கும் 27-ஆவது ஆயத்திலிருந்து அந்த சூராவின் இறுதியாகிய 'அளீமா' வரை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்த வேண்டும். இவ்வாறு ஏழு நாட்கள் செய்ய வேண்டும். *(47: 27, 28, 29)*

مُحَمَّدٌ رَّسُولُ اللَّهِ ۚ وَالَّذِينَ مَعَهُ أَشِدَّاءُ عَلَى الْكُفَّارِ
رُحَمَاءُ بَيْنَهُمْ ۖ تَرَاهُمْ رُكَّعًا سُجَّدًا يَبْتَغُونَ
فَضْلًا مِّنَ اللَّهِ وَرِضْوَانًا ۖ سِيمَاهُمْ فِي وُجُوهِهِم
مِّنْ أَثَرِ السُّجُودِ ۚ ذَٰلِكَ مَثَلُهُمْ فِي التَّوْرَاةِ ۚ وَ
مَثَلُهُمْ فِي الْإِنجِيلِ كَزَرْعٍ أَخْرَجَ شَطْأَهُ
فَآزَرَهُ فَاسْتَغْلَظَ فَاسْتَوَىٰ عَلَىٰ سُوقِهِ يُعْجِبُ
الزُّرَّاعَ لِيَغِيظَ بِهِمُ الْكُفَّارَ ۗ وَعَدَ اللَّهُ الَّذِينَ
آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ مِنْهُم مَّغْفِرَةً
وَأَجْرًا عَظِيمًا ۝

*'அல்லாஹ்வுடைய திருத்தூதராகிய முஹம்மத் நபி (ஸல்)யும் அவருடன் இருப்பவர்களும் நிராகரிப்போர் விஷயத்தில் கண்டிப்பானவர்களாகவும் தங்களுக்குள் மிக்க அன்புடையவர்களாகவும் இருப்பார்கள். குனிந்து சிரம் பணிந்து*

வணங்குபவர்களாக அவர்களை நீர் காண்பீர். அல்லாஹ்வின் அருளையும் அவனுடைய திருப்பொருத்தத்தையும் (எந்நேர மும்) விரும்பியவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய அடையாளமாவது: அவர்களுடைய முகங்களில் சிரம் பணி(ந்து வணங்கு)வதின் அடையாளமிருக்கும். இதுவே தவ்ராத்(என்னு வேதத்)தில் உள்ள அவர்களின் வர்ணிப்பு. (இன்ஜீலில் அவர்களுக்குள்ள உதாரணமாவது: ஒரு பயிரை ஒத்திருக்கின்றது. பின்னர் விவசாயிக்கு ஆச்சரியம் கொடுக் கும் விதத்தில் (வளர்ந்து) அது தன்னுடைய தண்டின்மீது நிமிர்ந்து நிற்கின்றது. இவர்களைக் கொண்டும் நிராகரிப்போ ருக்கு கோபமூட்டும் பொருட்டு (அந்த விசுவாசிகளைப் படிப்படியாக அபிவிருத்திக்குக் கொண்டு வருகின்றான். எனினும்) அவர்களில் எவர்கள் விசுவாசம் கொண்டு நற்கரு மங்கள் செய்கின்றார்களோ அவர்களுக்கு அல்லாஹ் மன்னிப் பையும் மகத்தான கூலியையும் வாக்களித்திருக்கிறான்.''

(48: 29)

இந்த சூராவில் மேற்கண்ட இறுதி வசனம் (48: 29) பற்றி இமாம் பூனி (ரஹ்) அவர்கள் இப்படிக் கூறுகின்றார்கள். ''இதனை எழுதி இதில் அடங்கியுள்ள திருப் பெயர்களையும் எழுதி வைத்துக் கொண்டால் அற்புதம் நிகழ்வதை பார்க்க லாம்.''

## சிறுநீர் பெய்யும்பொழுது எரிச்சல் நீங்க

இதனை எழுதிக் கழுத்தில் தாயத்தாக அணிந்து கொள்ள வேண்டும்.

## பாதுகாப்பும் ஆற்றலும் பெற

ஆண், பெண் குழந்தை அனைவருக்கும் இது பாதுகாப் பையும் ஆற்றலையும் தரக் கூடியதாகும்.

## நோய் நீங்க

இந்த வசனத்தை ரமலான் மாதம் 24-ஆம் இரவில் வெள்ளைப்பட்டில் கஸ்தூரி, கற்பூரம், பன்னீர் கொண்டெ ழுதி, அதை மான் தோலில் சுருட்டித் தன்னிடம் வைத்துக்

கொள்ள வேண்டும். எந்த நோய் வந்தாலும் இதனை அணி வித்தால் குணமேற்படும். யாரேனும், எதற்கேனும் யாருக்கே னும் பயந்தால், இதனை அவர்களுக்குக் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொல்லுங்கள். அமைதியும் பாதுகாப்பும் கிடைக் கும். இதை அணிந்து கொண்டிருப்பவர்களுக்கு எந்தத் தீங்குக ளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும். இது மிகப் பயனுள்ள ஒன்றாகும். மேலே கூறப்பட்ட நன்மைகளுக்கு அப்பால் இன்னும் பல மர்மங்கள் அதில் இருக்கின்றன. அவற்றை எழுத்து மூலமாக விளக்கக்கூடாது. அவை உள்ளங்களில் வைத்துப் பாதுகாக்கப்பட வேண்டியவை.

இந்த வசனம் பற்றிய ரசமான செய்தி ஒன்றுண்டு. இந்த வசனம், அரபி எழுத்துக்கள் அனைத்தையும் தன்னுள் அடக் கிக் கொண்டிருக்கிறது. இது போன்று மற்றொரு வசனம் திருக்குர்ஆனில் இருக்கிறது. சூரா ஆல இம்ரானில் 'தும்ம அன்ஸல அலைக்கும்' என்று ஆரம்பமாகும் வசனம். இந்த இரண்டு வசனங்களை நிகர்த்த வேறு வசனங்கள் திருக்குர் ஆனில் கிடையாது. அரபி எழுத்துக்கள் அனைத்தும் ஒருங்கே இடம் பெற்ற வேறொரு வசனத்தைக் குர்ஆனில் காணமுடி யாது. இந்த இரு வசனங்களையும் ஓதி வருபவர் துன்பங்கள் பகைவர் பயம் ஆகியவற்றிலிருந்து காவல் பெறுவர்.

இந்த இரு வசனங்களையும் எண்ணெய்யிலோ, பன்னீ ரிலோ ஓதி ஊதி உடலில் தேய்த்துக் கொண்டால் சகல வியாதிகளும், கட்டி, கொப்பளம் ஆகியவையும் நீங்கும்.

## பிரார்த்தனை நிறைவேற

இந்த வசனத்தை ஒருவன் அதிகமதிகமாக ஓதினால் அவனுடைய பிரார்த்தனை நிச்சயமாக ஏற்றுக் கொள்ளப்ப டும். அவன் தேவைகள் முடித்துக் கொடுக்கப்படும்.

## சிரமம் நீங்க

இருக்கிற சிரமங்கள் அனைத்தும் அப்புறப்படுத்தப்ப டும்.

### காதில் 'குர்' என்று சப்தம் ஏற்படுவது அகல

இந்த ஆயத்தை ஓதிக் காதில் ஊதவோ அல்லது எண்ணெயில் ஓதி ஊதி காதில் ஊற்றவோ செய்ய வேண்டும்.

### பிறரின் உதவிபெற

இந்த ஆயத்தை அதிகமாக ஓதிவர அவனுடைய நற்காரியங்களுக்கு பலர் உதவி செய்வார்கள்.

### இரணம் பெருக; ஷைத்தானிலிருந்து காவல் பெற

முஹம்மதுர் ரசூலுல்லாஹ், அஹ்மதுர் ரசூலுல்லாஹ் என்று ஜும்ஆவுக்குப்பின் 35-தடவை எழுதி தன்னுடன் வைத்துக் கொள்ள வேண்டும்.

## சூரா ஹுஜுராத்

### ஷைத்தானிலிருந்து காவல் பெற

இந்த சூராவை எழுதி வீட்டில் வைத்துக்கொண்டால் அந்த வீட்டுக்கு ஷைத்தான் அறவே வராது.

### தாய்ப்பால் சுரக்க

இதனை எழுதி அழித்துக் குடிக்கச் செய்தால், தாய்க்குப் பால் அதிகமாகச் சுரக்கும்.

### வயிற்றில் உள்ள குழந்தை பாதுகாப்புப் பெற

பாலைச் சுரக்க வைப்பதற்கும் வயிற்றிலுள்ள சிசுவைப் பாதுகாப்பதற்கும் இந்த சூராவை உபயோகித்துக் கொள்ளலாம்.

### 'வஹி' அதிகமாக வராமல் தடுக்க

ஒவ்வொரு நாளும் இந்த சூராவை மூன்று தடவை வீதம் நாற்பத்தொரு நாட்கள் தொடர்ந்து ஓதி வரவேண்டும்.

# சூரா காஃப்

இந்த சூராவை ஓதினால், மரண வேதனை சுலபமாகும்.

## வயிற்று நோய் நீங்க

வயிற்று நோய் கொண்டவர்களும் பீதி கொண்டவர்களும் இந்த சூராவை எழுதி மழைத் தண்ணீரில் கரைத்துக் குடிக்க வேண்டும்.

## குழந்தைகளுக்குப் பல் முளைக்க

பல் முளைக்காத குழந்தைக்கு இதனைக் குடிக்கக் கொடுத்தால் பல் முளைத்துவிடும்.

## வீட்டில் வசதி பெற

இது ஒரு வீட்டில் ஓதப்பட்டால் அங்கு வசதிகள் பெருகும்.

## கண்ணிலிருந்து 'காடரேக்ட்' நீங்க

'காடரேக்ட்'டின் காரணமாகப் பார்வை இழந்து வருவோர் பின்வரும் ஆயத்தை ஒவ்வொரு ஃபர்ளுத் தொழுகைக்குப் பின்பும் மூன்று தடவை ஓதி விரல்களில் ஊதிக் கண்களில் தடவி வர இறையருளால் நலன் ஏற்படும்.

''ஃபகஷஃப்னா அன்க ஃகித்தாஅகஃப பஸருகல் யவ்ம ஹதீத்'' (50: 22)

*(உன் பார்வையை மறைத்துக் கொண்டிருந்த திரையை உன்னை விட்டும் நாம் நீக்கி விட்டோம். இன்றைய தினம் உன்னுடைய பார்வை கூர்மையாயிருக்கிறது.)*

# சூரா தாரியாத்

## ஆண்மை பெற

ஒருவர் மணமுடித்தும் தாம் தம் மனைவியுடன் மருவ இயலா நிலையை ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களிடம்

கூறியபொழுது இரண்டு முட்டைகளை அவித்து உரித்துக் கொண்டு வருமாறு கூறி, ஒன்றில்,

வஸ்ஸமாஅ பனைனாஹா பிஅய்தின் வஇன்னா
லமூஸி ஊன்

நம்முடைய ஆற்றலைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை) மிக்க விசாலமாக்கியும் வைத்துள்ளோம். *(51: 47)*

என்ற திருவசனத்தை எழுதி அவரிடம் கொடுத்து இது உமக்கு என்று கூறி,

மற்றொரு முட்டையில்,
'வல் அர்ல ஃபரஷ்னாஹா ஃபநிஃமல் மாஹிதூன்''

பூமியை நாம் (விசாலமாக) விரித்தோம். விரிப்பவர்களிலெல்லாம் மிக்க மேலான விதத்தில் விரிப்பவர் நாமே.

*(51: 48)*

என்ற திருவசனத்தை எழுதி இது உம் மனைவிக்கு என்று கூறி மருவுமுன் நீங்கள் இருவரும், உங்களுக்குரிய முட்டையைத் தின்றுவிட்டு, மருவுங்கள் என்று கூற அவ்விதமே மருவி இன்பம் துய்த்தனர் என்று கூறப்படுகிறது.

## நோய் நீங்க

இந்த சூராவை நோயாளிக்கு ஓதி ஊதினால் குணமேற்படும்.

## சுகப் பிரவசம் ஏற்பட

கர்ப்பிணி இதனை எழுதி அணிந்து கொண்டால் பிரசவத்தில் சிரமம் ஏற்படாது. சுகப்பிரசவமாகும்.

**குழந்தை பிறக்க**

وَالسَّمَاءَ بَنَيْنٰهَا بِاَيْدٍ وَّاِنَّا لَمُوْسِعُوْنَ ○
وَالْاَرْضَ فَرَشْنٰهَا فَنِعْمَ الْمٰهِدُوْنَ ○
وَمِنْ كُلِّ شَيْءٍ خَلَقْنَا زَوْجَيْنِ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ ○

*(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை இவர்களின் அறிவுக்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசாலமாக்கியும் வைத்திருக்கின்றோம். பூமியை நாம் (விசாலமாக) விரித்தோம். விரிப்பவர்களிலெல்லாம் மிக்க மேலான விதத்தில் விரிப்பவர் நாமே. ஒவ்வொரு வஸ்துக்களையும் (ஆண் பெண் கொண்ட) ஜதை ஜதையாகவே நாம் சிருஷ்டித்திருக்கிறோம். (இதனைக் கொண்டு) நீங்கள் நல்லுணர்ச்சி பெறுவீர்களா? (51: 47, 48, 49)*

இதிலுள்ள மேற்கண்ட 47,48,49-ஆவது வசனங்களை குழந்தை இல்லாதவர் ஓதிவரின் குழந்தை பிறக்கும்.

**சிறையிலிருந்து வெளியேற**

சிறையில் இருப்பவன் இந்த சூராவை நிரந்தரமாக ஓதினால், இலகுவான விடுதலையை இறைவன் அவனுக்குக் கொடுப்பான்.

**பிரயாணத்தில் இறைகாவல் பெற**

பிரயாணம் செய்கிறவன் இதனை ஓதினால் எல்லாவிதமான தீங்குகளிலிருந்தும் பாதுகாக்கப்படுவான்.

**தேள் சாக**

இதை எழுதிக் கரைத்த தண்ணீரைத் தேளின்மீது தெளித்தால், அது செத்துவிடும்.

# சூரா நஜ்ம்

## அதிகாரம் பெருக

இந்த சூராவை மான் தோலில் எழுதி அணிந்து கொண்டால், அதிகாரம் பெருகும். எதிர்ப்பவர்கள் அடங்கிப் போவார்கள். இதை ஓதுகிறவன் எங்கு சென்றாலும், அவனுக்கு எல்லோரும் உதவி செய்வார்கள்.

# சூரா கமர்

## இறையன்பு பெற

இந்த சூராவை வெள்ளிக்கிழமையன்று எழுதித் தொப்பியில் அணிந்து கொண்டால் இறையன்பு கிடைக்கும்.

## கடினவேலை எளிதாவதற்கு

சிரமமான காரியங்கள் அனைத்தும் கலபமாக முடியும்.

## பயிர்களுக்கு அதிகமாகத் தண்ணீர் பாய

*வஃபஜ்ஜர்னல் அர்ல உயூனன் ஃபல்தகல் மாவு...*

*ஜஸா அன் லிமன் கான குஃபிர் (54: 11, 12, 13, 14, 15)*

பொருள்: அன்றி, பூமியின் ஊற்றுக் கண்களையும் பாய்ந்தோடச் செய்தோம். ஆகவே குறிப்பிட்ட ஓர் அளவுக்கு (இரு) ஜலங்களும் சேர்ந்து பொங்கின.

நூஹ் (அலை) அவர்களைப் பற்றிய இந்தத் திருவசனத்தை ஒரு புதிய ஓட்டில் எழுதித் தண்ணீர் பாயத் தாம் விரும்பும் இடத்திற்குச் சென்று கண்களை மூடிக் கொண்டு எறிந்துவிட வேண்டும். அந்த ஓடு விழும் இடத்தைப் பார்க்கக் கூடாது. இவ்விதம் செய்யின் இறையருளால் தண்ணீர் பாய்ந்து வயல் செழிக்கும்.

### ஆண்மை பெற

ஒருவன் நோயாலோ சூனியத்தாலோ ஆண் தன்மையை இழந்திருப்பின் ஃபஃபதஹ்னா அப்வாப... லிமன்கான குஃபிர் (54: 11, 12, 13, 14, 15) என்ற வசனங்களைத் தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

### நீரடைப்பு நீங்க

54: 11, 12 வசனங்களை மட்டும் எழுதி தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

# சூரா ரஹ்மான்

''இதனை ஓதி வருபவர் இறைவனின் அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்தியவர் போலாகிறார்'' என்று பெருமானார் கூறியுள்ளனர். எனவே இதனை இரவிலும், பகலிலும் ஓதி வந்தால் துன்பங்கள் நீங்கும்.

### கண் நோய் வராதிருக்க

இதனை எழுதி அணிந்து கொண்டால் கண் நோயிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

### செல்வனாக

இதனை வழக்கமாக ஓதி வரவேண்டும்.

### நோய் நீங்கப்பெற

இதனை வழக்கமாக ஓதி வருபவர் தம்மைப் பிடித்த நோய் நீங்கப் பெறுவார்.

### சிறையிலிருந்து மீள

இதனை ஓதி வரவேண்டும்.

### பாவம் நீங்கப் பெற

இதனை வழக்கமாக ஓதி வருபவரின் பாவங்களை அல்லாஹ் மன்னித்தருள்வான்.

## தன் மனதிற்கு உவந்தவனை அல்லது உவந்தவளைத் திருமணத்தின் மூலம் எய்தப் பெற

ஒருவனோ அல்லது ஒருத்தியோ இதனை அதிக மதிகமாக ஓதி வரவேண்டும்.

## ஈரல் நோய் வராதிருக்க

இதை எழுதியழித்த தண்ணீரைக் குடித்தால் ஈரல் சம்பந் தமான நோய் நீங்கும்.

## ஈரல் நோய் நீங்க மற்றொரு முறை

இதன் துவக்கத்திலிருந்து 'மரஜல் பஹ்ரைன்' வரை 11-தடவை ஓதி தண்ணீரில் ஊதி 21 நாட்கள் அருந்த வேண்டும், ஓதுவதற்கு முன் மூன்று தடவையும் ஓதிய பின் மூன்று தடவையும் ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டும்.

## விஷ ஜந்துக்கள் கடிக்காதிருக்க

இந்த சூராவை வீட்டுச் சுவரில் எழுதினால் தீங்கு தருகிற புழு பூச்சிகளிலிருந்து பாதுகாப்பு கிடைக்கும்.

## எண்ணங்கள் நிறைவேற

இதனை பதினொரு தடவை ஓதினால் எண்ணங்கள் நிறைவேறும்.

## அம்மை நோய் அகல

''எவனுக்கேனும் அம்மை வார்ப்பின் ஒரு கறுப்பு நூலை எடுத்து வைத்துக் கொண்டு இந்த சூராவை ஓதி ''ஃபபிஅய்யி '' என்ற ஆயத்து வரும்போதெல்லாம் அதில் ஒரு முடிச்சு போட்டு ஓதி முடித்த பின்னர் இதனை அம்மை வார்க்கப்பட் டவரின் கழுத்தில் கட்டிவிட வேண்டும். அம்மை இறங்கும் வரையில் இந்த சூராவை ஓதி வரவேண்டும். கைகண்ட பலன் கிடைக்கும்'' என காஜா முஈனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**சுவனவாசியாக**

சூரா ரஹ்மானையும் சூரா ஹதீதையும், சூரா வாகிஆ வையும் ஓதுபவன் விண்ணகத்திலும் மண்ணகத்திலும் பிர்தௌஸில் வாழ்பவன் எனப் பெயர் பெறுவான் என்று பெருமானார் கூறினர்.

## நினைவாற்றல் பெற

இதன் முதல் ஆயத்துக்களான 'அர்ரஹ்மான் அல்லமல் குர்ஆனிலிருந்து - வந்நஜ்மு வஷ்ஷஜரு யஸ்ஜுதான்' வரை எழுதி, 'லாதுஹர்ரிக் பிஹி லிஸானக்க லிதஃஜலபிஹி இன்ன அலைனா ஜம் அஹு வகுர்ஆனஹு ஃபஇதா குர்ஆனஹு ஃபத்தபிஉ குர்ஆனஹு தும்ம இன்ன அலைனா பயானஹு பல்ஹுவ குர்ஆனுன் மஜீத் ஃபீலௌஹின் மஹ்பூள்' என்பதையும் ஒரு பீங்கானில் எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்.

# சூரா வாகிஆ

## வறுமை ஏற்படாதிருக்க

''சூரா வாகிஆவை ஒவ்வோர் இரவும் ஓதுகிறவனுக்கு வறுமை ஏற்படாது; இதனை ஒவ்வொரு நாள் காலையில் ஓதுகிறவன் வறுமைக்கு அஞ்ச வேண்டியதில்லை'' என்று பெருமானார் கூறக் கேட்டிருக்கிறேன்'' என்று சொல்கிறார்கள் நபித்தோழர் இப்னுமஸ்ஊத்.

இவர்களின் மரணத் தருவாயில் உதுமான் (ரலி) அவர்கள் இவர்களை அணுகி இவர்களின் பெண் மக்களுக்கு ஏதாவது தாம் உதவி செய்யவா என்று வினவியபொழுது 'வேண்டாம் உங்களுக்குத் தேவை ஏற்படும் பொழுது சூரா வாகிஆவை ஓதிக்கொள்ளுங்கள்' என்று அவர்களிடம் கூறியுள்ளேன்' எனச்சொல்லி மேற்கண்டபடிக் கூறினர்.

## இறந்தவருக்கு தண்டனை குறைய

''பிரேதத்தின் மீது இதை ஓதியூதினால் தண்டனை குறையும்'' என்று கூறுகிறார் ஞானிகளில் ஒருவர்.

## உணவு பற்றிய சிரமம் நீங்க

உணவு பற்றிய சிரமம் ஏற்படுங்கால் இதனை ஓதுமாறு இமாம் கஸ்ஸாலி (ரஹ்) கூறியுள்ளார்கள்.

## நோய் நீங்க

இதனை நோயாளிக்கு ஓதியூதினால் நோய் குணமாகும்.

## பிரசவ வேதனை நீங்க

இதனைப் பிரசவ வேதனை அனுபவிப்பவளுக்கு ஓதியூதினால் சுகப்பிரசவம் ஏற்படும்.

## பயம், வறுமை, துன்பம் ஏற்படாதிருக்க

இதனைக் காலையிலும், மாலையிலும் சுத்தத்தோடு ஓதி வருகிறவன் பசியோடும் தாகத்தோடும் இருக்க வேண்டிய தில்லை. அவனுக்கு வறுமையோ, பயமோ, துன்பமோ ஏற்படாது.

## வாழ்வில் மகிழ்ச்சி அனைத்தையும் பெற

''ஒருவன் இதனை வழக்கமாக ஓதி வந்தால், வாழ்வில் மகிழ்ச்சியை நல்கும் அனைத்தையும் பெறுவான்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருவுளமானார்கள்.

## சுதந்திரமாக இரணம் தேடும் வழியில் ஈடுபட

உலமாக்களில் ஒருவர் கூறுகிறார்கள்:

''ஒருவன் ஒரே இருப்பில் இருந்து இதனை நாற்பது தடவை ஓதின் அவனுக்கு இரணத்திற்கான வழி திறக்கப்ப டும். அவ்வழியில் அவனின் மனம் ஈடுபடும். சொந்தமாக அவன் இரணம் தேடும் வழியில் ஈடுபட்டு, அதில் வெற்றி பெறுவான். இரணம் பற்றிய அவனுடைய அனைத்து நாட் டங்களும் நிறைவேறும்.''

இதனை அஸருக்குப் பின் பதினான்கு தடவை ஓதின் அப்பலன் கிடைக்கும் என்று கூறப்படுகிறது. இது சோதிக்கப் பட்டதாகும். பிரபலமானதாகும்.

## கடன் தீர

கடன் பட்டவன் இதனை வழக்கமாக ஓதிவரின் அவனு டைய கடனைத் தீர்க்க அல்லாஹ் வழி செய்வான்.

பொதுவாக இதனை மஃரிபுக்குப் பின்னர் ஓத வேண் டும்.

## நாட்டம் நிறைவேற

இதனை ஓதுபவரின் நாட்டங்களை அல்லாஹ் நிறை வேற்றியருள்வான்.

## வாந்தி நிற்க

இந்த சூராவின் துவக்கத்திலிருந்து 'உலாயிக்கல் முகர்ர பூன்' வரை 11 தடவை உப்பின் மீது ஓதி ஊதி அந்த உப்பை நாவில் வைத்துச் சுவைக்க வேண்டும்.

## சிறுநீர் அடைப்பு நீங்க

இஸ்பஹானில் ஒருவருக்கு சிறுநீர் பெய்வதில் வேதனை ஏற்பட்டது. ஒருவர் 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், வ புஸ்ஸத்தில் ஜிபாலு பஸ்ஸா ஃபகா னத்து ஹபாஅன் மும்பதா' (56: 6, 6) என்பதையும் 'வ ஹுமிலத்தில் அர்ளுவல் ஜிபாலு ஃபதுக்கத்தா தக்கத்தன் வாஹிதா' (69: 14) என்பதையும் எழுதிக் கரைத்துக் கொடுத்தார். நோயாளர் அதனை அருந்தியதும் நீர்த்தாரையிலிருந்து கல் வந்து விழுந்து வேதனை நீங்கியது.

பொருள்: மலைகள் (மோதிக்கொண்டு) தூள் தூளாகப் பறந்துவிடும். அவை வானத்தில் துகள் துகளாக பறந்துவிடும் (56: 5, 6)

'பூமியும் மலைகளும் தூக்கி எறியப்பட்டு ஒன்றோ டொன்று மோதி பலமாக அடிப்பட்டால்' (69:14)

## தொண்டை கரகரப்பு நீங்க

ஃபலவ்லா இதா பல அத்தில் ஹுல்க்கூம் வஅன்தும் ஹீனயிதின் தன்ளுரூன் (உங்களின் உயிர் நீங்கள் இறக்கும் தருவாயில் (உங்களின்) தொண்டைக் குழியை

அடைத்தால் அந்நேரத்தில் நீங்கள் பரக்கப்பரக்க விழிக்கிறீர்கள்.) (56:83, 84) என்ற திருவசனத்தை 101-தடவை ஓதிப் பகம்பாலில் தயாரிக்கப்பட்ட வெண்ணெய்யில் ஊதித் தொண்டைக்குள் தடவ வேண்டும். மேலும் இந்தத் திருவசனத்தை ஏழு தடவை ஓதி உப்பில் ஊதி அந்த உப்பைத் தண்ணீரில் குழப்பி தொண்டைக்குள் தடவ வேண்டும்.

### கழுத்து வீக்கம் வடிய

56: 83, 84, 85, 86, 87 ஆகிய திருவசனத்தை எழுதித் தஃவீஸ் செய்து கழுத்தில் அணிவிக்க வேண்டும்.

### ஒருதலை குத்து நீங்க

சூரா வாகிஆவில் ''லாயுஸ்த ஊன'' என்பதிலிருந்து இறுதிவரைப் பதினொரு தடவை ஓதித் தலையில் ஊத வேண்டும்.

## சூரா ஹதீத்

### வாள் வீச்சும் தீமை செய்யாதிருக்க

நபித் தோழர் இப்னு அப்பாஸ் (ரலி) கூறுகிறார்கள்:

''இந்த சூராவின் முதல் ஆறு வசனங்களில் (57: 1-6) இஸ்முல் அஃலம் மறைந்திருக்கிறது. எனவே இவற்றைப் போர் வீரன் ஒருவன் அணிந்து கொண்டால், அவன் மீது வாள் வீச்சு விழாது.''

### காய்ச்சல், வேதனை அகல

காய்ச்சலுக்கும் வேதனைக்கும்கூட இந்த வசனங்களை உபயோகித்துக் கொள்ளலாம்.

### ஈமான் வலுவடைய

இவ்வசனங்களை வழக்கமாக ஓதி வரவேண்டும்.

### சிறுநீரகக் கோளாறு அகல

இதனை 21-தடவை மழை நீரில் ஓதி ஊதி அருந்த வேண்டும்.

### சுவனப் பேறு பெற

சூரா ரஹ்மான், சூரா வாகிஆ, சூரா ஹதீத் ஆகியவற்றை ஒருவர் வழக்கமாக ஓதிவரின் அவர் சுவனப் பேற்றினை எய்தப் பெறுவார்.

# சூரா முஜாதலா

### நோயாளிக்கு தூக்கம் வர

நோயாளிக்கு இந்த சூரானவ ஓதியூதினால் அவனுக்குத் தூக்கம் வந்துவிடும். அவன் வேதனை அடங்கிவிடும்.

### ஷைத்தானிலிருந்து பாதுகாப்புப்பெற

இதனை இரவிலும் பகலிலும் தொடர்ந்து ஓதிவந்தால் ஷைத்தானின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

### தானியம் பாதுகாப்புப் பெற

இதனை எழுதி தானியத்தில் வைத்துவிட்டால் அதற்கு தீங்கு செய்யக்கூடிய அனைத்தும் அழிந்து போகும்.

### காசநோய் நீங்க

இதனை அதிகமாக ஓதிவரவேண்டும். ஓதி ஊத வேண்டும்.

# சூரா ஹஷ்ர்

### இம்மையிலும், மறுமையிலும் பாதுகாப்புப் பெற

''சூரா ஹஷ்ரை ஒருவன் ஓதினால், இம்மையிலும் மறுமையிலும் அவன் பாதுகாப்பு அடைவான்'' என்பது ஹுஜ்ஜதுல் இஸ்லாமின் கருத்து.

### பகைவர், தீயவர், வஞ்சகர் ஆகியவர்களின் பொல்லாங்குகளை விட்டு பாதுகாப்புப் பெற

இதனை நாள்தோறும் ஓதி வரவேண்டும்.

## எல்லா நோய்களும் நீங்க

இந்த சூரா, மரணம் ஒன்றைத் தவிர்த்து மற்ற எல்லா நோய்களுக்கும் மருந்தாகும் என்பது வேறு சிலரது கருத்து.

ஆரிபீன்களில் ஒருவர் இப்படி எழுதியிருக்கிறார்:

''எல்லா நோய்களுக்கும் இது உபயோகமானது. சூரா பாத்திஹா, இந்த சூராவின் இறுதியான நான்கு வசனங்கள் *(59: 21 - 24)* திருக்குர்ஆனில் இறுதியான மூன்று சூராக்கள் (மும்முறை) ஆகியவற்றை எழுதி, அதனடியில்

اَللّٰهُمَّ رَبَّ النَّاسِ اِلٰهَ النَّاسِ اَذْهِبِ الْبَاْسَ حَامِلَ كِتَابِىْ هٰذَا شِفَاءً لَّا يُغَادِرُهُ سَقَمٌ بِحَوْلِكَ وَقُوَّتِكَ وَقُدْرَتِكَ اِنَّكَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ وَصَلَّى اللّٰهُ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَسَلَّمَ ○

என்று எழுதி அதனை நோயாளிக்கு அணிவிக்க வேண்டும். எந்த நோயும் குணமாகும்.''

## காதில் ஊழை ஓடுவதைத் தடுக்க

சூரா ஹஷ்ரில் 'லவ் அன்ஸல்னா ஹாதல் குர்ஆன்' என்பதிலிருந்து இறுதிவரையுள்ள *21, 22, 23, 24* ஆயத்துகளை நோயாளியின் காதில் கையை வைத்த வண்ணம் ஓதி வர வேண்டும்.

## வானவர்களின் பிரார்த்தனையைப் பெற

பெருமானார் கூறினார்கள்.

''பொழுது விடிந்ததும் ஒருவன்.

اَعُوْذُ بِاللّٰهِ السَّمِيْعِ الْعَلِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ ○

என்று ஓதி, சூரா ஹஷ்ரின் இறுதி மூன்று வசனங்களை ஓதினால் அவனுக்காக இறைவன் 70,000 வானவர்களை ஏற்பாடு செய்வான். அவனுக்காக அவர்கள் மாலை வரை பிரார்த்தனை செய்து கொண்டிருப்பார்கள்'' அன்று அவன் இறந்துவிட்டால் 'ஷஹீது' எனப்படும் தியாகியின் அந்தஸ்து அவனுக்கு கிடைக்கும்'' அந்த மூன்று வசனங்கள் வருமாறு:

هُوَاللّٰهُ الَّذِىْ لَآ اِلٰهَ اِلَّا هُوَ ۚ عٰلِمُ الْغَيْبِ وَالشَّهَادَةِ ۚ
هُوَالرَّحْمٰنُ الرَّحِيْمُ ○ هُوَاللّٰهُ الَّذِىْ لَآ اِلٰهَ اِلَّا هُوَ ۚ
اَلْمَلِكُ الْقُدُّوْسُ السَّلٰمُ الْمُؤْمِنُ الْمُهَيْمِنُ
الْعَزِيْزُ الْجَبَّارُ الْمُتَكَبِّرُ ۚ سُبْحٰنَ اللّٰهِ عَمَّا
يُشْرِكُوْنَ ○ هُوَاللّٰهُ الْخَالِقُ الْبَارِئُ الْمُصَوِّرُ لَهُ
الْاَسْمَآءُ الْحُسْنٰى ۚ يُسَبِّحُ لَهٗ مَا فِى السَّمٰوٰتِ
وَالْاَرْضِ ۚ وَهُوَالْعَزِيْزُ الْحَكِيْمُ ○

அந்த அல்லாஹ்வைத் தவிர, வேறொரு நாயனில்லை. அவன் இரகசியத்தையும் பரகசியத்தையும் நன்கறிந்தவன். அவன் அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையோன். அந்த அல்லாஹ்வைத்தவிர, வணக்கத்திற்குரியவன் வேறொருவனுமில்லை. அவன்தான் மெய்யான அரசன்; பரிசுத்தமானவன்; சாந்தியும் சமாதானமும் அளிப்பவன். அபயமளிப்பவன்; இரட்சகன்; யாவையும் மிகைத்தவன்; அடக்கியாளுபவன். பெருமைக்குரியோன், இவர்கள் கூறும் இணை துணைகளை விட்டு அல்லாஹ் மிகப்பரிசுத்தமானவன். அந்த அல்லாஹ்தான் சிருஷ்டிகர்த்தா, (அவனே) சிருஷ்டிகளை ஒழுங்கு செய்வோன்; (அவனே) சிருஷ்டிகளின் ரூபத்தையும் அமைப்போன். அவனுக்கு அழகான பல திருநாமங்கள் இருக்கின்றன. வானங்களிலும் பூமியிலும் உள்ளவை யாவும் அவனையே துதி செய்கின்றன. அவன் (யாவரையும்) மிகைத்தோன்! ஞானமுடையோன். *(59:22, 23, 24)*

## சுவர்க்கம் வாஜிபாக

சூரா ஹஷ்ரின் மேற்கண்ட இறுதிப் பகுதியை இர விலோ பகலிலோ ஓதிய பின் அன்றைய தினம் இறப்பவ னுக்கு சுவர்க்கம் வாஜிபு என்றும் பெருமானார் கூறினார்கள்.

மாபெரும் இறைநேசச் செல்வர் இப்ராஹீம் அல்கவ் வாஸ் (ரஹ்) அவர்கள் ஹஜ்ஜுச் செய்வதற்காக மக்கா நகர் நோக்கி நடந்து சென்று கொண்டிருந்தார்கள். வழியில் இருட்டி விடவே ஆங்கிருந்த பாழ்மண்டபம் ஒன்றில் அவ்வி ரவைக் கழித்துவிட்டுச் செல்வதற்காக நுழைந்தனர். அங்கு ஒரு கொடிய வனவிலங்கு படுத்திருப்பதைக் கண்டு அவர்கள் வெளியே வெருண்டோடி வந்தார்கள். அப்பொழுது ''இப்றா ஹீமே! அஞ்சாதீர். உம்மை 72,000 வானவர்கள் காவல் புரிகின்றனர்'' என்று அசரீரி முழங்கியதைச் செவியுற்றனர்.

''ஏன் எதன் காரணமாக?'' என்று வியப்புடன் வினவி னார்கள் அவர்கள்.

''நீர் காலையிலும் மாலையிலும் 'அவூது பில்லாஹிஸ் ஸமீ இல் அலீம் மினஷ் ஷைத்தானிர் ரஜீம், என்று மூன்று தடவை ஓதி சூரா ஹஷ்ரிலுள்ள இறுதி மூன்று வசனங்களை ஓதி வந்ததால் இப்பேறு உமக்குக் கிடைத்தது'' என்று மீண்டும் அசரீரி முழங்கியது.

## நினைவாற்றல் பெருக

நினைவாற்றலுக்கும், புத்தி சாதுரியத்துக்கும் இந்த சூராவை எழுதி மழைத் தண்ணீரால் அழித்துக் குடிக்க வேண்டும்.

## நோய் நீங்க

எந்த உறுப்பில் எந்த நோய் ஏற்பட்டாலும் இந்த சூராவின் இறுதி வசனத்தை ஓதியூதினால் குணமேற்படும்.

## பக்கவாதம் நீங்க

மேற்கண்ட திருவசனங்களுடன்,

'வநுனஸ்ஸிலு மினல் குர்ஆனி மாஹு¬வ
ஷிஃபாவுன் வரஹ்மதுன் லில்முஃமினீன்'
என்ற திருவசனத்தை ஜம்ஜம் தண்ணீரில் கரைத்த மையால் எழுதி அத்தண்ணீரில் கரைத்துக் குடித்ததன் காரணமாகப் பக்கவாதத்தால் பீடிக்கப்பட்ட ஒருவர் தாம் நலன் பெற்றதாகக் கூறினார்.

# சூரா மும்தஹினா

## ஈரல் நோய் நீங்க

இதனை எழுதி மூன்று நாட்களுக்குத் தொடர்ந்தாற் போல் கரைத்துக் குடித்தால் ஈரல் சம்பந்தப்பட்ட நோய்கள் நீங்கும்.

# சூரா ஸப்

## பிரயாணத்தில் பாதுகாப்புப் பெற

இந்த சூராவைப் பிரயாணத்தில் நிரந்தரமாக ஓதிவந்தால், சொந்த ஊருக்கு வந்து சேரும்வரை, எல்லாவிதமான ஆபத்துக்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும். இதனை இரவில் ஓதாது பெருமானார் அவர்கள் தூங்கச் செல்வதில்லை.

### மஞ்சட்காமாலை நீங்க

இதன் துவக்கம் ஆயத்தாகிய 'ஸப்பஹ லில்லாஹி மாஃபிஸ்ஸமாவாத்தி வமாஃபில் அர்ளி வஹு¬வல் அஸீஸு¬ல்ஹகீம்' என்பதை 101-தடவை தண்ணீரில் ஓதி ஊதி அருந்தி வரவேண்டும்.

### கண்ணியம் பெற

يُرِيْدُوْنَ لِيُطْفِـُٔوْا نُوْرَ اللّٰهِ بِاَفْوَاهِهِمْ وَاللّٰهُ
مُتِمُّ نُوْرِهٖ وَلَوْ كَرِهَ الْكٰفِرُوْنَ ○ هُوَ الَّذِيْٓ
اَرْسَلَ رَسُوْلَهٗ بِالْهُدٰى وَدِيْنِ الْحَقِّ لِيُظْهِرَهٗ
عَلَى الدِّيْنِ كُلِّهٖ وَلَوْ كَرِهَ الْمُشْرِكُوْنَ ○ يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْ

هَلْ اَدُلُّكُمْ عَلٰى تِجَارَةٍ تُنْجِيْكُمْ مِّنْ عَذَابٍ اَلِيْمٍ ○
تُؤْمِنُوْنَ بِاللّٰهِ وَرَسُوْلِهٖ وَتُجَاهِدُوْنَ فِيْ سَبِيْلِ اللّٰهِ
بِاَمْوَالِكُمْ وَاَنْفُسِكُمْ ذٰلِكُمْ خَيْرٌ لَّكُمْ اِنْ كُنْتُمْ
تَعْلَمُوْنَ ○ يَغْفِرْ لَكُمْ ذُنُوْبَكُمْ وَيُدْخِلْكُمْ
جَنّٰتٍ تَجْرِيْ مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُ وَمَسٰكِنَ طَيِّبَةً فِيْ
جَنّٰتِ عَدْنٍ ذٰلِكَ الْفَوْزُ الْعَظِيْمُ ○ وَاُخْرٰى تُحِبُّوْنَهَا
نَصْرٌ مِّنَ اللّٰهِ وَفَتْحٌ قَرِيْبٌ وَبَشِّرِ الْمُؤْمِنِيْنَ ○

கண்ணியம், அந்தஸ்து, கம்பீரம் முதலிய அனைத்தும் உங்களுக்கு ஏற்பட வேண்டும் என்று விரும்பினால், இந்த சூராவில் மேற்கண்ட 8-13 ஆகிய ஆறு வசனங்களை எடுத்துக் கொள்ளுங்கள். குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீர் கொண்டு இவற்றை வெள்ளைப்பட்டில் எழுதிச் சட்டையில் இணைத்துக் கொள்ளுங்கள்.

# சூரா ஜுமுஆ

## ஷைத்தானிலிருந்து பாதுகாப்புப் பெற

இதனைத் தொடர்ந்து ஓதினால் ஷைத்தானின் ஊசலாட்டங்களிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

## இரணம் அதிகப்பட, பிரச்சினைகள் தீர

சூராஜுமுஆவை இஷாவுக்குப்பின் வழக்கமாக ஓதி வரவேண்டும் என காஜா குத்புத்தீன் பக்தியார் காக்கி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**பரக்கத் ஏற்பட, ஆபத்து நீங்க**

ذَالِكَ فَضْلُ اللّٰهِ يُؤْتِيهِ مَنْ يَّشَآءُ ۚ وَاللّٰهُ ذُوالْفَضْلِ الْعَظِيْمِ ۝

''இஃது அல்லாஹ்வுடைய அருளாகும். அவன் விரும்பியவர்களுக்கே அதனைக் கொடுக்கிறான். அல்லாஹ் மகத்தான அருளுடையோன்.'' *(62:4)*

இந்த வசனத்தை வெள்ளிக்கிழமையன்று ஒரு ஆப்பிள் பழத்துண்டில் எழுதிக் கொள்ளுங்கள். அதை எந்த இடத்தில் வைத்தாலும் 'பரகத்' ஏற்படும்; எல்லாவிதமான ஆபத்துகளும் நீக்கப்படும்.

# சூரா முனாபிகூன்

**கண் நோய் நீங்க**

இதை ஓதினால் கண்நோய் முதலியவை நீங்கும்.

# சூரா தகாபுன்

**அநியாயக்காரர்கள் தீங்கு செய்யாதிருக்க**

அரசனிடமிருந்தோ அநியாயக்காரனிடமிருந்தோ தனக்கு ஆபத்து ஏற்படக்கூடும் என்று ஒருவன் பயந்தால் அவன் இந்த சூராவை ஓதிக்கொண்டு அவர்களிடம் செல்ல வேண்டும். அவர்களால் அவனுக்கு எந்த தீங்கும் செய்ய முடியாது.

**மரணம் ஏற்படாதிருக்க**

இதனை வழக்கமாக ஓதிவருபவர்கள் திடீர் மரணம் ஏற்படாமல் காப்பாற்றப் பெறுவர்.

# ஸூரா தலாக்

## இரணம் அதிகப்பட, வறுமை நீங்க

وَمَنْ يَتَّقِ اللّٰهَ يَجْعَلْ لَّهٗ مَخْرَجًا ۙ وَّيَرْزُقْهُ مِنْ حَيْثُ لَا يَحْتَسِبُ ؕ

பொருள்: எவர்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து நடக்கின் றார்களோ அவர்களுக்கு ஒரு வழியை ஏற்படுத்தித் தருவான். அன்றி அவர்கள் எதிர்பார்க்காத வகையில் அவர்களைப் போஷிப்பான்!' இவ்வசனத்தை ஒருவன் வழக்கமாக ஓதிவ ரின் எதிர்பாராத வகையில் அவனுக்கு இரணம் வருவதோடு வறுமையும் அணுகாது.

''இதனை ஒருவர் பற்றிப் பிடித்துக் கொள்வாராயின் இது அவருக்குப் போதுமானது'' என்று பெருமானார் கூறி இத னைத் திரும்பத் திரும்ப ஓதினர்.

நடுக் கடலில் கப்பல் சென்று கொண்டிருக்கிறது. அப் பொழுது கடலிலிருந்து ஒரு மனிதர் வெளிப்பட்டு அந்தக் கப்பலில் உள்ளவர்களை நோக்கி, ''என்னிடம் இஸ்மு உள்ளது. அதனை எவர் எனக்கு ஆயிரம் பொற்காசுகள் தருகிறாரோ அவருக்கு நான் கற்றுக் கொடுப்பேன்'' என்று கூறினார்.

கப்பலில் இருந்தோர் அனைவரும் ஒருவர் முகத்தை மற்றவர்கள் பார்த்துக் கொண்டார்கள். அப்பொழுது அவர்க ளில் ஒருவர் முன் வந்து, ''நல்லது நான் ஆயிரம் பொற்காசு கள் தருகிறேன்; அதனை எனக்குக் கற்றுத்தாரும்'' என்றார்.

''சரி; அந்த ஆயிரம் பொற்காசுகளையும் எடுத்துக் கட லில் வீசிஎறியும்'' என்றார் வந்தவர்.

அவ்விதமே செய்தார் அவர். அப்பொழுது அந்த மனிதர் இவருக்கு ஓர் ஆயத்தைச் சொல்லிக் கொடுத்து,

''இதனை வலுவாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளும், நீர் நாடியது நடக்கும்'' என்று கூறிவிட்டுக் கடலிலே மறைந்து விட்டார்.

இதன்பின் அவர் அந்த ஆயத்தை ஓதினார்; ஓதினார்; ஓதிக்கொண்டே இருந்தார். திடீரெனக் கப்பல் உடைந்து சிதறுண்டது.

நல்ல வேளையாக அவரின் முன் ஒரு பலகைத் துண்டு மிதந்து வர, அதில் அவர் தொத்திக் கொண்டு அந்த ஆயத்தையே ஓதிக் கொண்டிருந்தார். அப்பலகை அவரின் உயிர் காக்கும் தெப்பம் போல் அமைந்து அவரை ஒரு தீவில் கொண்டு போய்ச் சேர்த்தது.

கரை இறங்கிய அவர் இறைவனுக்கு நன்றி செலுத்திய வண்ணம் அங்கு எவரேனும் இருக்கின்றனரா என்று அங்கு மிங்கும் சுற்றிப் பார்த்தார், ஒருவரும் இல்லை. அப்பொழுது அவருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. எனினும் பேரருளாளனாகிய அல்லாஹ் அந்த ஆயத்தை ஓதியதன் காரணமாகத் தம் உயிர் காத்தது போன்று தமக்கு அங்கு ஒரு வழியைக் காட்டுவான் என்று எண்ணிய வண்ணம் அந்த ஆயத்தை திரும்பத் திரும்ப ஓதிக் கொண்டு அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தார்.

அப்பொழுது அங்கு ஓரிடத்தில் அழகிய ஆரணங்கு ஒருத்தி வீற்றிருப்பதைக் கண்டு அவளை அணுகி, "பெண்ணே! நீ யார்? இங்கே வந்து நீ தன்னந் தனியே வீற்றிருக்கக் காரணம் யாது?" என்று வினவினார்.

அதற்கு அவள், "நான் இன்ன ஊரைச் சேர்ந்தவள். என்னை ஒரு ஜின் தூக்கிக் கொண்டு வந்து இங்கே வைத்து வளர்த்து வருகிறது" என்று கூறினாள்.

அப்பொழுது ஜின் வரும் அரவம் கேட்கவே அந்தப் பெண் அவரை ஒரு பொதும்பிற்குள் ஒளிந்து கொள்ளுமாறு கூறினாள். அவரும் அவ்வாறே செய்தார்.

பொதும்பிற்குள் புகுந்த அவர் அந்த ஆயத்தை உணர்ச்சி மீக்குற்றுத் திரும்பத் திரும்ப ஓதினார். என்ன வியப்பு! அவளை நோக்கி வந்த அந்த ஜின் திடீரென நெருப்பால் எரிந்து சாம்பலாகியது.

இது கண்டு அப்பெண்ணுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. அந்த மனிதர் பதுங்கிக் கொண்டிருந்த அந்தப் பொதும்பிற்குள் ஓடோடி வந்து அவரிடம் இந்த நற்செய்தியை எடுத்துரைத்து உவகைக் கூத்தாடினாள்.

பின்னர் அவள் அவரை நோக்கி, ''என்னை அந்த ஜின்னின் கொடும் பிடியிலிருந்து காத்தருளிய உமக்கு நான் நன்றிக் கடன் ஆற்ற வேண்டாமா?'' என்று கூறி அவரை அழைத்துக் கொண்டு மற்றொரு பொதும்பிற்குள் சென்றாள். அங்கு அந்த ஜின் சேர்த்து வைத்த நவரத்தினங்கள் குவியல் குவியலாகக் கிடந்தன. அவற்றைத் தங்களால் இயன்ற மட்டும் அவ்விருவரும் அள்ளிக் கொண்டார்கள்.

இப்பொழுது அவர்களின் முன் மற்றொரு பிரச்சினை வந்து நின்றது. எவ்வாறு அத்தீவை விட்டு நீங்கி ஊர் போய்ச் சேர்வது என்பதே அப்பிரச்சினை.

அதற்கான ஆயத்து தம்மிடம் இருப்பதை உணர்ந்து அவர் சிறிதேனும் துணுக்குறாது கடலோரம் அமர்ந்து அந்த ஆயத்தைத் திரும்பத் திரும்ப ஓதிக் கொண்டிருந்தார். சற்று நேரத்தில் அவ்வழியே ஒரு கப்பல் செல்வதைக் கண்டதும் அவர்கள் வெள்ளை வீசினார்கள்.

மாலுமி அவர்கள் மீது இரங்கி அவர்களை நோக்கி கப்பலை செலுத்திக் கொண்டு வந்தான். அவர்கள் இருவரும் கப்பலில் ஏறிக் கொண்டு தம் ஊர் சேர்ந்து மணமுடித்து செல்வச் சிறப்புடன் வாழ்ந்து வந்தார்கள்.

அவர்களுக்கு இத்துணைச் சீரும் சிறப்பும் நல்கிய அந்த ஆயத்து எதுவென அறிய ஆவலுறுகின்றீர்களா? அதுதான்:

வமையத்தகில்லாஹ யஜ்அல்லஹூ மஹ்ரஜன் வயர்ஸுகுஹு மின் ஹைது லா யஹ்தஸிபு (அல்லாஹ் பயபக்தியுடையவர்களுக்கு அவர்கள் எதிர்பாரா வகையில் இரணம் அளிக்கிறான்.)

என்ற ஆயத்தாகும். இங்கு இரணம் என்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ள 'ரிஸ்க்' என்ற சொல் உணவை மட்டுமல்லாது இறைவனிடமிருந்து கிடைக்கும் எல்லா விதமான உதவிகளையும் அருட்பேறுகளையும் குறிக்கும். 'ஒருவர் பற்றிப்பிடித்துக் கொள்வராயின் இது அவருக்குப் போதுமானது' என்று அருள் மொழி பகர்ந்தார்கள் என்று அறிக!

## நீண்ட காலம் உலகில் வாழ

*வ மன் யத்த கில்லாஹ யஜ்அல் லஹூ மக்ரஜன் வயர்ஸுக்ஹூ மின்ஹைது லாயஹ்தஸிபு வ மன்யதவக்கல் அலல்லாஹி ஃபஹுவ ஹஸ்புஹூ இன்னல்லாஹ பாலிகு அம்ரிஹி கத் ஜஅலல்லாஹூ லிகுல்லி ஷைஇன் கத்ரா.*

*(65:3-4)*

என்ற ஆயத்துகளை ஒருவன் ஒவ்வொரு வேளைத் தொழுகைக்குப் பின் மூன்று தடவை ஓதி 'யாமுஸப்பிபல் அஸ்பாபி ஸப்பிப்' என்று மூன்று தடவை ஓதிவந்தால் இறைவனருளால் அவன் பன்னெடுங்காலம் உலகில் வாழ்வான்.

## வாழ்க்கைப் பிரச்சினை தீர வழிகாண

وَمَنْ قُدِرَ عَلَيْهِ رِزْقُهُ فَلْيُنْفِقْ مِمَّآ اٰتٰىهُ اللّٰهُ ۗ لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا اِلَّا مَآ اٰتٰىهَا ۗ سَيَجْعَلُ اللّٰهُ بَعْدَ عُسْرٍ يُّسْرًا ○

*முடைப்பட்டவன், அல்லாஹ் அவனுக்குக் கொடுத்ததிலிருந்து தான் செலவு செய்வான். எம்மனிதனையும் அல்லாஹ் அவனுக்குக் கொடுத்ததற்கு அதிகமாக(ச்செலவு செய்யும்படி) நிர்ப்பந்திப்பதில்லை. கஷ்டத்திற்குப் பின்னர் அல்லாஹ் அதிசீக்கிரத்தில் சௌகரியத்தைக் கொடுத்து விடுவான்.*

*(65:7)*

— வாழ்க்கைப் பிரச்சினையில் சிக்கிக் கொண்டவர்கள், வறுமையில் அகப்பட்டுக் கொண்டவர்கள் இந்த வசனத்தை எடுத்துக் கொள்ளலாம். நல்ல எண்ணத்தோடு வெள்ளி இரவில் 'சஹர்' நேரத்தில் எழுந்திருக்க வேண்டும். 100 தரம் 'இஸ்திக்பார்' எனப்படும் பிரார்த்தனையைக் கூற வேண்டும். பிறகு மேற்குறிப்பிட்ட வசனத்தை தூக்கம் வரும் வரை ஓத வேண்டும். சிக்கலிலிருந்து எப்படி வெளியேறுவது என்று கனவில் தெரியும்.

# சூரா தஹ்ரீம்

## கடன், நோய் நீங்க

கடன் பட்டவர்கள், நோய் கொண்டவர்கள், சூனியம் செய்யப்பட்டவர்கள் முதலியோர் இந்த சூராவை ஓதினால் குணம் ஏற்படும். கடன் நீங்க அல்லாஹ் வழி செய்வான்.

## காக்கை வலிப்பு நீங்க

சூரா தஹ்ரீமை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தக் காக்கை வலிப்பு நீங்கும்.

# சூரா முல்க்

## நரக விடுதலை பெற, சுவனம் புக

பெருமானார் கூறினார்கள்: ''திருக்குர்ஆனில் 30 வசனங்கள் கொண்ட சூரா ஒன்று ஒரு மனிதனுக்குச் சிபாரிசு செய்தது அவன் குற்றங்கள் மன்னிக்கப்பட்டன. அவன் நரகிலிருந்து விடுதலை செய்யப்பட்டு சுவனம் புகுந்தான். அதுதான் சூரா முல்க்'' இந்த 30 வசனங்களில் 333 சொற்களும் 1321 எழுத்துக்களும் உள்ளன.

நபித் தோழர் ஒருவர் ஓரிடத்தில் கூடாரமடித்துத் தங்கிய பொழுது அங்கிருந்த கப்ருக்குள் இருந்து சூரத்துல் முல்க்கை ஓதும் சப்தம் வருவதைக் கேட்டு பெருமானார் அவர்களிடம்

கூறியபொழுது அதுதான் அக்கப்ரில் அடங்கப் பெற்றுள்ளவருக்கு நரகத்திலிருந்து விடுதலை நல்கியுள்ளது என்று கூறினர்.

## எல்லாத் துன்பங்களும் அகல

இதனை 11 தடவை ஓதின் எல்லாவிதமான துன்பங்களும் நீங்கும் இதனை வழக்கமாக ஓதி வருபவர் மறுமையில் யூசுஃப் (அலை) அவர்களின் அழகு பெற்று வானவர்களின் இறக்கைகள் மீதமர்ந்து இலங்கு வருவார் என அலீ (ரலி) கூறியுள்ளார்கள்.

## இறை மன்னிப்புப் பெற

இதனை ஒருவன் வழக்கமாக ஓதிவரின் இது அவனின் பாவம் பொறுக்கப்படும்வரை இறைவனிடம் மன்றாடும்.

(ஆதாரம்: மிஷ்காத்)

## கப்ரின் வேதனையிலிருந்து காவல் பெற

இதனை வழக்கமாக ஒவ்வோர் இரவும் ஓதிவர வேண்டும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர். மேலும் அவர்கள் கூறும் பொழுது, ''என்னுடைய உம்மத்துகள் ஒவ்வொருவர் இதயத்திலும் இது மனனமாகிப் பதிந்திருப்பதை நான் விரும்புகிறேன். காரணம் இதனை மனனம் செய்து மனத்தில் பதியப் பெற்றவரை அல்லாஹ் கப்ரின் வேதனையிலிருந்து காப்பாற்றுவான்.''

## 'லைலத்துல் கத்ரு' இரவு முழுவதும் வணக்கம் செய்த பலனைப் பெற

இதனையும் சூரா அலிஃப் லாம் மீம் ஸஜ்தாவையும் இரவில் வழக்கமாக ஓதி வரவேண்டும். இவ்விதமே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் செய்து வந்தார்கள்.

تَبٰرَكَ الَّذِىْ بِيَدِهِ الْمُلْكُ وَهُوَ عَلٰى كُلِّ شَىْءٍ
قَدِيْرُۨ ۝ الَّذِىْ خَلَقَ الْمَوْتَ وَالْحَيٰوةَ
لِيَبْلُوَكُمْ اَيُّكُمْ اَحْسَنُ عَمَلًا ؕ وَهُوَ
الْعَزِيْزُ الْغَفُوْرُ ۝ الَّذِىْ خَلَقَ سَبْعَ
سَمٰوٰتٍ طِبَاقًا ؕ مَا تَرٰى فِىْ خَلْقِ الرَّحْمٰنِ
مِنْ تَفٰوُتٍ ؕ فَارْجِعِ الْبَصَرَ هَلْ تَرٰى مِنْ
فُطُوْرٍ ۝ ثُمَّ ارْجِعِ الْبَصَرَ كَرَّتَيْنِ يَنْقَلِبْ
اِلَيْكَ الْبَصَرُ خَاسِئًا وَّهُوَ حَسِيْرٌ ۝

''(மனிதர்களே! வானம் பூமி முதலிய) யாவற்றின் ஆட்சி எவன் கையில் இருக்கின்றதோ அவன் மிக்க பாக்கியமுடையவன். வானம் பூமிகளை அழிக்கவும், ஆக்கவும் அவன் (விரும்பியவாறு அவைகளைச் செய்ய) யாவற்றின் மீதும் ஆற்றலுடையோன். உங்களில் நல்ல நடத்தையுடையோர் எவர்கள் என்று உங்களைச் சோதிக்கும் பொருட்டே, அவன் மரணத்தையும், வாழ்க்கையையும் சிருஷ்டித்திருக்கிறான். அவன் (யாவரையும்) மிகைத்தோன்; மிக்க மன்னிப்புடையோன். அவனே ஏழு வானங்களையும் அடுக்கடுக்காகப் படைத்தவன். மனிதனே! அந்த ரஹ்மானுடைய சிருஷ்டியில் நீ யாதொரு விக்கினத்தையும் காணமாட்டாய். மற்றொரு விடுத்தம் அதனை கவனித்துப்பார். அதில் யாதொரு பிளவை நீ காண்கின்றாயா? (பின்னும்) பின்னும் இருமுறை பார். (இவ்வாறு நீ எத்தனை முறை துருவித் துருவிப் பார்த்த போதிலும், யாதொரு குறையும் காணாது) உன்னுடைய பார்வைதான் அலுத்து, நாணமுற்று உன்னிடம் திரும்பிவிடும்.''

கண்ணேறுக்கு மேற்கண்ட 1, 2, 3, 4 ஆகிய வசனங்கள் கைகண்ட பலனை நல்கும். அவற்றைக் கொண்டு ஓதிப் பார்க்கவோ அவற்றை ஓதி ஊதிய தண்ணீரைக் குடிக்கச் செய்யவோ செய்ய வேண்டும்.

### கண் நோய் அகல

தொடர்ந்தாற்போல மூன்று நாட்களுக்கும் தினம் மும் முறை வீதம் இந்த சூராவை ஓத வேண்டும். குணமேற்படும். இதனை வைகறைத் தொழுகை ஃபர்ளுக்கும் சுன்னத்துக்கும் இடையில் ஓதுவது சிறந்தது.

### வறுமை நீங்கி வளவாழ்வு எய்த! கண்ணியம் பெற

'அலா யஃலமு மன் கலக வ ஹுவல் லதீஃபுல் கபீர்' என்ற திருவசனத்தை இரண்டாயிரத்துப் பன்னிரண்டு தடவை ஓத வேண்டும்.

### நம் கண் பிறருக்கு படாதிருக்க

ஒருவனை அல்லது ஒரு பொருளைக் கண்டு நமக்கு வியப்பேற்படின் அதனால் அவனுக்கோ அந்தப் பொருளுக்கோ தீமை ஏற்படாதிருக்க 'அல்லாஹும்ம பாரிக் ஃபீஹி' என்று ஓதின் யாதொரு தீமையும் ஏற்படாது என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

# சூரா நூன் வல் கலம்

### கடல் கொந்தளிப்பு அடங்க

கடல் கொந்தளிப்பாயிருக்கும் நேரத்தில் இதனை ஓதின் அது அடங்கும்.

### கண்ணேறு அகல

'கண்ணேறு மனிதனைக் கப்ரிலும் ஒட்டகத்தை சட்டியிலும் நுழையச் செய்துவிடும்' என்று பெருமானார்

கூறியுள்ளனர். பனூ அஸத் கிளையிலுள்ள சிலர் நச்சுப் பார்வையுடையவர்களாய் இருந்தனர். அவர்கள் எப்பிராணி யையும் பார்த்து புகழ்ந்துரைப்பின் அது செத்துவிடும். அவர்க ளைப் பெருமானாரின் பேச்சைக் கேட்குமாறு செய்து அவர்க ளின் கண்ணேறுபட்டுப் பெருமானாரை இறப்பெய்தச் செய்ய வேண்டுமென்ற கெடுநோக்குடன் குறைஷிகள் அவர்களை மக்கா அழைத்து வந்தனர். அப்பொழுதுதான்,

وَاِنْ يَّكَادُ الَّذِيْنَ كَفَرُوْا لَيُزْلِقُوْنَكَ بِاَبْصَارِهِمْ لَمَّا سَمِعُوا الذِّكْرَ وَيَقُوْلُوْنَ اِنَّهٗ لَمَجْنُوْنٌ ۝

''நிராகரிப்போர் நல்லுபதேசத்தைக் கேட்கும் பொழு தெல்லாம் அவர்கள் தங்களின் பார்வைகளைக் கொண்டே உம்மை வீழ்த்தி விடுபவர்களைப் போல் (உம்மை) பார்க்கின் றனர் அன்றி (உம்மைப் பற்றி) நிச்சயமாக ''அவர் பைத்தியக் காரர்தான்' என்றும் கூறுகின்றனர்'' என்ற திருவசனம் இறங்கி யது. இத்திரு வசனத்தை கண்ணேறுபட்டவர்களுக்குத் தண் ணீரில் ஓதி ஊதி அதனைக் குடிக்கவும் கொடுக்கலாம்.

# சூரா ஹாக்கா

## கரு பாதுகாக்கப் பெற

இதை எழுதி அணிவித்தால், வயிற்றிலிருக்கும் குழந் தைக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.

## குழந்தை அறிவாளியாக

இதை எழுதிக் கரைத்த தண்ணீரைக் குழந்தை பிறந்ததும் அதற்குக் குடிக்கக் கொடுத்தால் புத்தி சாதுரியம் ஏற்படும். குழந்தைக்கு ஏற்படக்கூடிய எல்லா இடையூறுகளிலிருந்தும் இறைவன் அதனைக் காப்பாற்றுவான்.

### குழந்தைக்கு நோய் ஏற்படாதிருக்க

இதனை எண்ணெயில் ஓதி, அதனைக் குழந்தைக்குத் தேய்த்தால் விஷப் பூச்சிகளிலிருந்தும், எல்லா விதமான நோய்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

## சூரா மஆரிஜ்

### தூக்கத்தில் ஸ்கலிதம் ஏற்படாதிருக்க

ஒருவன் இந்த சூராவை ஒவ்வோர் இரவும் ஓதினால் ஸ்கலிதம் ஏற்படாதவாறு அவன் காக்கப்படுவான். இந்தப் பாதுகாப்பு காலைவரை அவனுக்கு இருக்கும்.

இரவில் படுக்கையில் அமர்ந்து 'யா உமர்' என்று அரபு எழுத்துக்களில் வலதுகைக் கலிமா விரலால் நெஞ்சு, இரு தொடைகள், வயிறு ஆகியவற்றின் மீது எழுதிக் கொண்டு படுப்பின் ஸ்கலிதம் ஏற்படாது.

## சூரா நூஹ்

### சுவர்க்கம் புக

இதை நிரந்தரமாக ஓதுகிறவன் மரணமடைந்தால் சொர்க்கத்தில் தன் இடத்தை கண்டு கொள்வான்.

### தேவை நிறைவேற

தேவைக்காக இதனை ஓதினால் காரியம் சுலபமாக முடியும்.

### துன்பம், துயரங்கள் அகல

இதனை அதிகம் அதிகமாக ஓதி வரவேண்டும்.

### அநியாயக்காரன் தீமை செய்யாதிருக்க

இதனை ஒருவன் எழுதி அணிந்து கொண்டு அநியாயக் காரனிடம் சென்றால் அவனுடைய தீங்குகளிலிருந்து பாது

காப்புக் கிடைக்கும். இதனை அதிகமாக ஓதி இறைவனிடம் இறைஞ்சின் அல்லாஹ் அவனைத் தன் பகைவர்களிடமிருந்து காத்தருள்வான்.

## உறக்கத்தில் ஸ்கலிதம் ஏற்படாதிருக்க

இதனை ஒருவன் உறங்குமுன் ஓதினால் அவன் ஸ்கலிதம் ஏற்படாது பாதுகாக்கப்படுவான். இது பரிசோதிக்கப்பட்டதாகும்.

## கடும் பகைவர் அழிய

இதனை மக்கள் அனைவரும் ஒருங்கு திரண்டு அமர்ந்து நாளொன்றுக்கு ஆயிரம் தடவை வீதம் மூன்று நாட்கள் தொடர்ந்து ஓதின் கடும் பகைவர் அழிந்தொழிவர்.

## எல்லாவிதமான நற்பேறுகளையும் பெற

ஒருவர் ஒரு நாள் ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களிடம் வந்து தம் வறுமையைப் பற்றி முறையிட, ''நீர் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரும்'' என்றனர் அவர்கள். சற்று நேரம் கழித்து மற்றொருவர் வந்து தமக்கு மகப்பேறு இல்லையென்றும் தமக்காக இறைவனிடம் இறைஞ்சுமாறும் வேண்ட ''நீர் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரும்'' என்றனர் அவர்கள். பின்னர் வேறொருவர் வந்து அவ்வாண்டு மழையின்மையின் காரணமாகத் தம் பயிர்கள் காய்ந்து விட்டன என்று கூற ''நீர் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரும்'' என்றனர் அவர்கள்.

அப்பொழுது ஆங்கிருந்த ஒருவர், ''என்ன, எல்லாவிதமான பிரச்சினைகளுக்கும் ஒரே பரிகாரத்தையே கூறுகிறீர்கள்?'' என்று வியப்பு மொழி பகர, உங்கள் இறைவனிடம் (இஸ்திஃபார்) பாவ மன்னிப்பைக் கோருங்கள். நிச்சயமாக அவன் மிக மன்னிப்புடையோன்'' என்று கூறினேன். (அவ்வாறு செய்வீர்களாயின் தடைப்பட்டிருக்கும்) மழையை உங்களுக்குத் தொடர்ச்சியாய்ப் பொழியச் செய்வான். பொருள்களையும் மக்களையும் கொடுத்து உங்களுக்கு உதவி

புரிவான். உங்களுக்குத் தோட்டங்களையும் உற்பத்தி செய்து அவற்றில் ஆறுகளை ஓடச் செய்வான்'' என்ற திருமறை வசனங்களை (17:10, 11, 12) அவர்கள் ஓதினார்கள்.

இஸ்திஃபார் வருமாறு:

அஸ்தஃக்பிருல்லாஹ ரப்பீ மின்குல்லி ஃதன்பின் வஅதூபு இலைஹி.

# சூரா ஜின்

''இந்த சூராவை ஒருவன் ஓதினால்-ஜின், ஷைத்தானின் எண்ணிக்கைப்படி, அடிமைகளுக்கு உரிமை கொடுத்த நற்கூலி கிடைக்கும்'' என்று பெருமானார் கூறியிருக்கிறார்கள்.

## பேய், பிசாசு நீங்க

நல்ல தண்ணீரில் சூரத்துல் பாத்திஹாவையும் ஆயத்துல் குர்ஸியையும் சூரா ஜின்னில் 'குல்ஊஹிய' என்பதிலிருந்து துவங்கி 'வல்ஜின்னு அலல்லாஹி கதிபா' என்பது வரையுள்ள முதல் ஐந்து திருவசனங்களையும் ஓதிப் பேய் பிடித்தவனின் முகத்தில் அடிக்க வேண்டும், நலன் ஏற்படும். வீட்டில் தெளித்தால் வீட்டிலிருந்து பேய், பிசாசுகள் அகன்றுவிடும். ஆனால் இதனை எல்லோரும் செய்வது நல்லதல்ல.

## தீமை ஏற்படாதிருக்க

அரசனுக்குப் பயந்த ஒருவன் இதனை ஓதினால் பாதுகாப்புப் பெறுவான், கவலை தரக்கூடிய காரியம் குறித்து ஓதினால், காப்பாற்றப்படுவான்.

## பேய் நீங்க

இதனைத் தண்ணீரில் ஓதி ஊதிக் குடிக்கச் செய்யவோ தாளில் எழுதி தாயத்தாக அணியச் செய்யவோ செய்யலாம். பேயுள்ள வீட்டில் இதனைத் தண்ணீரில் ஓதி ஊதித் தெளிக்கச் செய்யலாம்.

## சிறையிலிருந்து விடுதலை பெற

கைதி ஒருவன் இதனை ஓதி வந்தால் விரைவில் சிறையி லிருந்து விடுதலை பெறுவான்.

# ஸூரா முஸ்ஸம்மில்

## இம்மை, மறுமைத் துன்பம் நீங்க

பெருமானார் கூறினார்கள்: "ஒருவன் ஸூரா முஸ்ஸம் மிலை ஓதினால், இம்மை - மறுமையில் சிரமங்கள் தவிர்க்கப் படும்."

## இரணம் பெருக

ஸூரா முஸ்ஸம்மிலைப் பின்கண்ட முறைப்படி ஒரு குறிப்பிட்ட இடத்தில் அமர்ந்து ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஓதி வரவேண்டும்.

ஸலவாத்து 11 தடவை
யாமுஃனி 111 தடவை
ஸூரா முஸ்ஸம்மில் 11 தடவை

ஓதியபின் இரணத்தை விரிவாக்கியருளுமாறு இறைவ னிடம் இறைஞ்சியபின் பதினொரு தடவை ஸலவாத்து ஓதி முடிக்க வேண்டும். இவ்வாறு தொடர்ந்து நாற்பது நாட்கள் செய்ய இறையருளால் இரணம் பல்கிப் பெருகும்.

## சிறுநீர் பெய்யும்போது எரிச்சல் ஏற்படுவதைத் தடுக்க

ஸூரா முஸ்ஸம்மிலை எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொள்ளவோ அல்லது தண்ணீரில் ஊதி அருந்தவோ செய்ய வேண்டும்.

## குழந்தை இறவாமல் இருக்க

ஒரு பெண் தான் பெற்ற குழந்தைகள் நீடித்து வாழ விரும்பின் பின்வரும் முறையைக் கையாள வேண்டும்.

41 நீல நிறமான நூல்களை எடுத்துக் கொள்ள வேண்டும். இவை ஒவ்வொன்றும் கருவுற்ற பெண்ணின் உயரத்தின்

அளவு இருக்க வேண்டும். சூரா முஸ்ஸம்மிலை 41 தடவை ஓதி அந்த நூல் கற்றையில் ஊத வேண்டும். ஒவ்வொரு தடவை ஊதும் பொழுதும் அதில் ஒரு முடிச்சுப் போடவேண் டும். இவ்வாறு 41 முடிச்சுகள் போட்டு முடிந்ததும் அந்த நூல்கற்றையைக் கருவுற்றவளின் இடுப்பில் கட்டிவிட வேண் டும். குழந்தை பிறந்தவுடன் அதனைக் கழற்றி அதன் மேல் மெழுகைப் பூசி குழந்தையின் கழுத்தில் அணிவிக்க வேண் டும்.

இவ்வாறு பதினொரு ஆண்டுகள் செய்ய வேண்டும். ஒவ்வோராண்டும் சூரா முஸ்ஸம்மிலை 41 தடவை ஓதி 41 நூல்களின் மீது ஊதி 41 முடிச்சுகள் போட்டு மெழுகு தடவி குழந்தையின் கழுத்தில் அணிவிக்க வேண்டும். குழந்தையின் கழுத்திலிருக்கும் பழைய கயிற்றைக் கழற்றிப் பத்திரமாக வைத்துக் கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு பதினொரு ஆண்டுகள் செய்து பதினொன்றாம் ஆண்டுகள் முடிவில் அவை அனைத்தையும் ஒன்று சேர்த்து ஒரு சுத்தமான இடத் தில் புதைத்து விடவேண்டும். இவ்வாறு செய்யின் இன்ஷா அல்லாஹ், குழந்தை நிறை வயது பெற்று வாழும்.

## எல்லாவிதமான பிரச்சினைகளும் தீர

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## நோய் நீங்கப் பெற

இதனை ஓதித் தண்ணீரில் ஊதி நோயாளிக்கு அருந்தக் கொடுக்க வேண்டும்.

## நாட்டங்கள் நிறைவேற

இதனை அதிகமாக ஓதி வருபவர் தம் நாட்டங்கள் நிறைவேறப் பெறுவார்.

## உணவு கஷ்டம் ஏற்படாதிருக்க

இதனை வழக்கமாக ஓதிவரின் உணவுக் கஷ்டம் ஏற்ப டாது.

### பெருமானாரைக் கனவில் காண

இதனை வழக்காக தினந்தோறும் ஓதிவரின் பெருமானாரைக் கனவில் காணலாம்.

### அதிகாரிகள் அன்பு செலுத்த

இதனை ஓதிக் கொண்டு அதிகாரிகளிடம் செல்லின் அவர்கள் அன்புடன் நடந்து கொள்வர்.

### செல்வம் பெருக

இதனைத் தினமும் ஏழு தடவை ஓதிவரின் செல்வம் பெருகும்.

## சூரா முத்தஸ்ஸிர்

பெருமானார் கூறினார்கள்: "ஒருவன் சூரா முத்தஸ்ஸிரை ஓதினால் மக்காவிலுள்ள முஸ்லிம்களின் எண்ணிக்கைப் படி அவனுக்கு நற்கூலி வழங்கப்படும்."

### செல்வம் பெற, வேலை வெற்றிகரமாக நிறைவு பெற, நோய் அகல

இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

### ஹாபிஸ் ஆக

இதனை ஓதி இறைஞ்சினால் குர்ஆனை மனனம் செய்யக்கூடிய ஆற்றல் ஏற்படும்.

## சூரா கியாமா

### மறுமையில் மேன்மை பெற

பெருமானார் கூறினார்கள்: "ஒருவன் சூரா கியாமாவை ஓதினால் மறுமையில் அவன் பிரகாசமான முகத்தோடு எழுப்பப்படுவான்."

### இறை மன்னிப்புப் பெற்று மீட்சி பெற

தவறு செய்து கொண்டிருப்பவன் இதனை ஓதினால் இறைவனிடமே மன்னிப்புக் கேட்டுத் திருந்தி விடுவான்.

### இரவில் கண் தெரியாதவர்களுக்கு நலம் ஏற்பட

*சூரா கியாமாவை சர்மாவில் ஓதி ஊதி அந்த சர்மாவை கண்ணில் தடவி வரவேண்டும்.*

# சூரா இன்ஸான் அல்லது தஹ்ர்

### ஆபத்து அடங்கலிலிருந்து காவல் பெற

*சூரா தஹ்ரை உளூஹிய்யா கொடுக்கப்பட்ட ஆட்டின் தோலில் ஆலிம்களின் மைக்கூட்டிலுள்ள மையால் எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொள்ள வேண்டும்.*

### மூல நோய் நீங்க

*லா யரவ்ன ஃபீஹா ஷம்ஸன் வலா ஸம்ஹரீரா (அதில் அவர்கள் சூரிய வெப்பத்தையும் பனியின் குளிர்ச்சியையும் காணமாட்டார்கள்) 76:13 என்ற திருவசனத்தை எழுதித் தஃவீஸ் செய்து புயத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.*

### சுவனம் கிடைக்க

*பெருமானார் கூறினார்கள்: ''சூரா இன்ஸானை ஒருவன் ஓதினால், அவனுக்கு இறைவன் தருகிற நற்கூலி சொர்க்கமும் பட்டாடையுமாகும்.''*

### பேச்சு வன்மை பெற

*இதனை வழக்கமாக ஓதிவருபவர்கள் சிறந்த பேச்சு வன்மையை எய்தப் பெறுவர்.*

### ஓடிப் போனவனை, காணாமல் போனவனைக் கொண்டுவர

*இந்த சூரா இறங்கப் பெற்றபின் பெருமானார் அவர்களின் பேச்சு வன்மையில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. அது கண்டு குறைஷிகள் வியப்புற்றனர்.*

*''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் ஹல் அதா அலல் இன்ஸானி ஹீனும் மினத்தஹ்ரி - ஃபஜ அல்னாஹு ஸமீஅம் பஸீரா''* *(76:1-2)*

*பொருள்: ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? (அதில்) அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலையிலிருந்தான். (பின்னர் ஆண், பெண் கலந்த) ஓர் இந்திரியத்துளியைக் கொண்டு நிச்சயமாக நாம் தான் மனிதனை சிருஷ்டித்தோம். அவனை நாம் சோதிக்கும் பொருட்டே செவியுடையோனாகவும், பார்வையுடையோனாகவும் அவனை ஆக்கினோம்.*

*இந்தத் திருவசனங்களை குங்குமப்பூ, கஸ்தூரி, பன்னீர் கொண்டு ஒரு தாளில் எழுதி அதனை மடித்து நாற்காலியின் காலில் கட்டி வைத்தால் ஓடிப்போனவன் அல்லது காணாமற் போனவன் விரைவில் இல்லம் திரும்புவான். இது அனுபவ பூர்வமானதாகும்.*

### மாதவிடாயின்போது அதிக ரத்தம் வருவதை நிறுத்த

*ஸூரா தஹ்ரை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்த வேண்டும். இவ்வாறு ஏழு நாட்கள் தொடர்ச்சியாகச் செய்து வரவேண்டும்.*

## ஸூரா முர்ஸலாத்

*பெருமானார் கூறினார்கள்: ''முர்ஸலாத்தை ஓதுகிறவன் இணை வைக்கும் குற்றத்தை விட்டு நீங்கியவன்!''*

### வெற்றியும், சிறப்பும் பெற

*சண்டையில், சச்சரவில் இதை ஓதினால் வெற்றியும் சிறப்பும் கிடைக்கும்.*

### வழக்கில் வெற்றி பெற

*இதனை எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொண்டு வழக்கறிஞர் வழக்காட வேண்டும். வழக்கறிஞர்களுக்குப் பயன் தரும் ஸூரா இது.*

# ஸூரா நபஃ

பெருமானார் கூறினார்கள்: ''ஸூரா நபஃவை ஓதுகிறவனுக்கு மறுமையில் இறைவன் குளிர்ந்த நீரைப் புகட்டுவான்.''

### திருட்டிலிருந்து பாதுகாப்புப் பெற

இந்த ஸூராவை ஓதினால், திருட்டிலிருந்தும் இதர தொல்லைகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

### நீதிபதி தீமை செய்யாதிருக்க

இந்த ஸூராவை ஓதியோ எழுதியோ வைத்துக் கொண்டு நீதிபதியிடம் செல்லின் அவருடைய தீமைகளை விட்டும் பாதுகாப்பு ஏற்படும்.

# ஸூரா நாஸிஆத்

### சுவனம் புக

பெருமானார் கூறினார்கள்: ''ஸூரா நாஸிஆத் ஓதுகிறவன் சிரித்த முகத்தோடு சொர்க்கத்தில் நுழைவான்.''

### பகைவர் தீமை செய்யாதிருக்க

பகைவர்களுக்கு முன்னால் இந்த ஸூராவை ஓதினால் அவர்களின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

# ஸூரா அபஸ்

### மறுமையில் மாண்பு பெற

பெருமானார் கூறினார்கள்: ''அபஸவை ஓதுகிறவன் மறுமையில் சந்திரன் போன்ற முகத்தோடு வருவான்!''

### மோசம் செய்யாதிருக்க

இந்த ஸூராவை சிப்பியில் எழுதி வைத்துக் கொண்டால், எல்லாவிதமான மோசடிகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

### பிரயாணத்தில் வழி தவறாதிருக்க

இதனை எழுதி வைத்துக் கொண்டால் பிரயாணம் செய்யும் ஒருவன் வழிதவற மாட்டான்.

# ஸூரா தக்வீர்

### சூனியம் தீமை செய்யாதிருக்க

சூனியம் செய்து புதைக்கப்பட்டிருக்கும் ஓர் இடத்தை அறியப்படாத வீட்டில் இதனை ஓதினால் அல்லாஹ் அவ்வி டத்தை அவனுக்கு உதிப்பின் மூலம் காட்டியருள்வான். அவனை அந்த சூனியத்தால் துன்பம் நேராது காக்கப் பெறும்.

### மறுமையில் அவமானம் ஏற்படாதிருக்க

பெருமானார் கூறினார்கள்: "ஸூரா தக்வீரை ஓதினால் மறுமையில் ஏற்படும் அவமானத்திலிருந்து அவனை இறை வன் காப்பாற்றுவான்.

### நாட்டம் நிறைவேற

இதனை மழை பெய்யும் நேரத்தில் நூறு தடவை ஓதி இறைவனிடம் தன் நாட்டத்தைக் கூறி இறைஞ்ச வேண்டும்.

### கண்ணொளி மங்காதிருக்க

இதனை ஓதி கையில் ஊதி கண்ணில் தடவிக் கொண் டால் கண்ணொளி மங்காது. கண்வலி வராது.

### வெட்டை அகல

இதனை ஜம்ஜம் தண்ணீரில் ஓதி ஊதி அருந்தி வரவேண் டும்.

# சூரா இன்பிதார்

## சிறையிலிருந்து விடுதலை பெற

*கைது செய்யப்பட்டவன் இந்த சூராவை ஓதினால் விடுதலை செய்யப்படுவான்.*

## காய்ச்சல் அகல

*காய்ச்சல்காரன் இந்த சூரா ஓதி ஊதப்பட்ட தண்ணீரில் குளித்தாலும் தீங்கு ஏற்படாது.*

# சூரா தத்பீப்

## பொருள்களின் அழிவைத் தடுக்க

*கவலை தரக்கூடிய எந்தப் பொருளிலும் இந்த சூராவை ஓதி யூதலாம். நிலைமை மாறுதலடைந்து விடும். அழிவை விட்டும் காக்கப்பெறும். தானியக் களஞ்சியத்தில் இதனை ஓதி ஊதினால் அதிலுள்ள தானியங்கள் சேதமின்றி காக்கப் பெறும்.*

## அரசர்களிடமிருந்தோ, அதிகாரிகளிடமிருந்தோ அனுகூலமான பதிலைப் பெற

*விண்ணப்பம் எழுதிய காகிதத்தின்மேல் மையில்லாத வெறும் பேனா முனையினால்,*

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ○ اِنَّ اللّٰهَ مَعَ الصَّابِرِيْنَ
نَصْرًا وَّقَدَّرَ لِمَنْ تَوَكَّلَ عَلَيْهِ يُسْرًا ○
وَشَرَحَ لِمَنْ فَوَّضَ اِلَيْهِ اَمْرَهٗ صَدْرًا ○
فَاِنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا ○

*என்று எழுதி அதன்பின் இந்த சூராவின் 18, 19, 20, 21, 22 ஆயத்துக்களாகிய 'இன்ன கிதாபல் அப்ரார்... 'இன்னல் அப்ரார லஃபீ நயீம்' என்பதையும் எழுதி அந்த விண்ணப் பத்தை மடித்து அனுப்பி வைத்தால் விரைவில் அனுகூலமான பதில் வரும்.*

# சூரா இன்ஷிகாக்

## மலடியும் குழந்தை பெற

*இந்த சூராவை எழுதி அணிவித்தால் மலடி குழந்தையை ஈன்றெடுப்பாள்.*

## விஷப் பூச்சிகளிலிருந்துப் பாதுகாப்புப் பெற

*இதை எழுதி அணிந்து கொள்வது விஷப் பூச்சிகளிலி ருந்து பாதுகாப்பளிக்கும்.*

## தேள் கடி விஷம் இறங்க

*இதனை ஓதி ஊத வேண்டும்.*

## சுகப் பிரசவம் ஏற்பட

*இதன் முதல் நான்கு வசனங்களை எழுதிக் கர்ப்பிணிக் குக் கட்டினால் சுகப்பிரசவம் ஏற்படும். பிரசவமானதும் அதனை அவிழ்த்துவிட வேண்டும்.*

# சூரா புரூஜ்

## பால்குடி மறக்கடிக்கப் பெற

*ஒரு குழந்தைக்கு பாலை மறக்கடிக்க எண்ணினால் இந்த சூராவை எழுதி அந்தக் குழந்தைக்கு அணிவித்துவிடுங்கள்; சுலபமாகப் பாலை மறக்கடித்து விடலாம்.*

## ஒருவனும் அவனின் சரக்குகளும் காக்கப் பெற

*பயணம் புறப்படுகிறவன் தன் வீட்டு வாயிலில் நின்று வல்லாஹு மின் வராயிஹிம் முஹீத், பல்ஹுவ குர்ஆனும்*

மஜீத் ஃபீ லவ்ஹின் மஹ்ஃபூள்'' 85:21, 22 என்ற ஆயத்தை மூன்று தடவை ஓதிக்கொண்டு செல்லின் அவனையும் அவனுடைய சரக்குகளையும் அல்லாஹ் பேணிக்காத்தருள் புரிவான்.

### படுக்கையில் பாதுகாப்புப் பெற

படுக்கையில் இதனை ஓதினால் பாதுகாப்பு கிடைக்கும்.

### தாய்ப்பால் சுரக்க

இந்த சூராவை எழுதிப் பாலில்லாத தாய்மார்களுக்கு கட்டின் பால் பெருகும்.

## சூரா தாரிக்

### மருந்து தீங்கு செய்யாதிருக்க

குடிக்கக்கூடிய மருந்துகளில் இந்த சூராவை ஓதியூதலாம் மருந்தினால் ஏற்படும் தீங்கு நீங்கும்.

### ஸ்கலிதம் ஏற்படாதிருக்க

படுக்கையில் ஓதினால், ஸ்கலிதம் ஏற்படாதபடி பாதுகாப்புக் கிடைக்கும்.

### திருடுபோன பொருள் மீட்கப்பெற

திருடுபோன இடத்தில் அஸர் தொழுகையைத் தொழுது இந்த சூராவை நாற்பது தடவை ஓதினால் திருடனும் அங்கு வந்து சேர்வான்; திருடப்பட்ட பொருளும் அங்கு வந்து சேரும் அல்லது அதனைத் திருடியவனைப் பற்றியும், அது எங்கு உள்ளது என்பதைப் பற்றியும் அவனுக்குக் கனவின் மூலம் அறிவிக்கப்படும்.

### கரு காக்கப் பெற

இன்குல்லு நஃப்ஸின் லம்மா அலைஹா ஹாஃபிளுன்....

ஸுல்பி வத்தராயிப், ஃபல்லாஹு கைருன் ஹாபிளன் வஹுவ அர்ஹமுர் ராஹிமீன். (85:4-7)

ஒவ்வொரு மனிதனிடமும் (நம்மால் ஏற்படுத்தப்பட்ட) கண்காணிக்கக் கூடிய ஒருவர் இல்லாமலில்லை. ஆகவே, மனிதன் தான் எதனால் படைக்கப்பட்டிருக்கிறான் என்பதைச் சற்றுக் கவனிக்கவும், குதித்து வெளிப்படும் ஒரு துளி நீரைக் கொண்டே படைக்கப்பட்டான். அது முதுகந்தண்டுக்கும் நெஞ்சுக்கும் நடுவிலிருந்து வெளிப்படுகின்றது.

இரட்சிப்பதில் அல்லாஹ் மிகவும் மேலானவன். அவனே அருளாளரில் எல்லாம் அருளாளன்.

மேற்கூறப்பட்ட திருவசனங்களை எழுதிக் கருவுற்றவளின் இடுப்பில் கட்டினால் கரு காக்கப் பெறும்.

## வீட்டிலிருந்து பேய், பிசாசு, ஜின் அகல

ஒரு வீட்டில் பேய், பிசாசு, ஜின் ஆகியவற்றின் அரவம் தெரியவரின் நான்கு ஆணிகள் எடுத்து அவை ஒவ்வொன்றின் மீதும் பின்வரும் வசனத்தை இருபது தடவை வீதம் ஓதி ஊதி வீட்டின் நான்கு மூலைகளிலும் அறைந்து விடவேண்டும்.

'இன்னஹு~ம் யகீதூன கைதன் வஅகீது கைதா, ஃபமஹ்ஹிலில் காஃபிரீன அம்ஹில்ஹு~ம் ருவைதா' (86:15, 16, 17)

''(நபியே!) நிச்சயமாக அவர்கள் (உமக்கு விரோதமாக) ஒரு சூழ்ச்சி செய்கின்றார்கள். நானும் (அவர்களுக்கு விரோதமாக) ஒரு சூழ்ச்சி செய்வேன். ஆகவே இந்நிராகரிப்போருக்கு (அது வரையில்) நீர் அவகாசம் அளியும் (அதிகமல்ல) ஒரு சொற்ப அவகாசம் அவர்களுக்கு அளியும்.''

# ஸூரா அஃலா

## ஜின் உபத்திரவம் அகல

ஜின் போன்றவற்றினால் பாதிக்கப்பட்டவர்களும் இந்த ஸூராவை ஓதலாம்.

### ஆபத்துக்கள் அணுகாதிருக்க

இதை வெள்ளிக்கிழமையன்று எழுதி அணிந்து கொண்டால், எல்லாவிதமான ஆபத்துகளிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

### நல்ல குழந்தை பெற

இதை எழுதி கர்ப்பிணிக்கு அணிவித்தால் தெளிவான உள்ளத்துடன் கூடிய குழந்தையை ஈன்றெடுப்பாள்.

### மனம் தெளிவாக, பாடம் மனதில் பதிய

ஒரு தட்டைப் பீங்கானில் இதை எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்.

### காதில் ஊழை வடிவதை நிறுத்த

சூரா அஃலாவை மூன்று தடவை ஓதிக் காதில் ஊத வேண்டும்.

## சூரா காஷியா

### உணவில் தீமை தவிர்க்க

சாப்பிடக் கூடிய பொருள்களில் இதை ஓதியூதினால் அவற்றினால் ஏற்படும் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

### வலி நீங்க

வலியுள்ள இடத்தில் இதனை ஓதி ஊத வேண்டும்.

### கக்குவான் நீங்க

சூரா காஷியாவை மூன்று தடவை ஓதித் தணணீரில் ஊதி அருந்தி வரவேண்டும்.

# ஸூரா பஜ்ர்

## நோய் நீங்க

இதனை 70 முறை ஓதியூதினால் நோயாளி குணமடைவான்.

## துன்பம் நீங்க

துன்பம் ஏற்பட்டாலும் இதனை 70 தடவை ஓதலாம். துன்பமும், துயரமும் நீங்கும்.

## நற்குழந்தை பிறக்க

நள்ளிரவில் இதனை ஓதி மனைவியுடன் மருவின் நற்குழந்தை பிறக்கும்.

# ஸூரா பலத்

## ஒரு நகரில் கண்ணியம் பெற

ஒருவன் இதனை மும்முறை ஓதிக் கொண்டு, ஒரு நகரத்தில் நுழைந்தால், அந்த நகரத்து மக்கள் பெரிதும் கண்ணியம் செலுத்துவார்கள். மனத்தின் குழப்பங்கள் நீங்கி, அமைதி ஏற்படும். அவன் வெற்றியோடு தன் தாயகத்துக்குத் திரும்பி வருவான்.

## எப்பொழுதும் பணம் பையிலிருக்க

திமிஷ்கில் இருந்த இறையன்பர்களில் ஒருவர் சொன்னார்: "இதனைக் காலைத் தொழுகைக்கு முன்னாலோ பின்னாலோ ஓதினால், எப்போதும் பையில் பணம் இருக்கும். இந்த ஸூரா ஏழைகளுக்குப் பணப்பையைப் போன்றது."

## குழந்தை பாதுகாப்புப் பெற

பிரசவமானதும் இதனை எழுதிக் குழந்தைக்கு அணிவித்தால், விஷப் பூச்சிகளின் தீங்குகளிலிருந்தும் நோய்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

## மக்களிடம் மாண்பு பெற

இதன் துவக்கத்திலிருந்து 'வஹ்தைனாஹு ந்நஜ்தைன்' வரை ஒரு துணியில் எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொளின் மக்கள் அவனை மதித்து சங்கை செய்வர்.

### அதிகாரிகளிடம் அலுவல் நிறைவேற

இந்த தஃவீஸை அணிந்துகொண்டு அதிகாரிகளிடம் செல்லின் அவனுடைய அலுவல் இனிதே நிறைவேறும்.

### மூத்திரப்பை வலி நீங்க

மூத்திரப்பை வேதனையால் வருந்துவோர் இதிலுள்ள 8, 9, 10 ஆயத்துகளாகிய, அலம் நஜ்அல்லஹூ ஐனைனி வலி ஸானன் வஷஃபத்தைனி வஹதைனாஹுன் நஜ்தைன், என்பவற்றை 21 தடவை பன்னீரில் ஓதி ஊதி அருந்திவர நலன் ஏற்படும்.

## சூரா ஷம்ஸ்

### பாதுகாப்பும் கண்ணியமும் பெற

இந்த சூராவை அதிகமாக ஓதினால் பாதுகாப்பும் கண் ணியமும் ஏற்படும்.

### இரத்த ஓட்டம் நிற்க

فَدَمْدَمَ عَلَيْهِمْ رَبُّهُم بِذَنۢبِهِمْ فَسَوَّىٰهَا ۝ وَلَا يَخَافُ عُقْبَٰهَا ۝

'எனினும் அவர்கள் அவரைப் பொய்யாக்கி அதன் (ஸாலிஹ் (அலை) அவர்களின் பெண் ஒட்டகத்தின்) கால் நரம்பைத் தறித்துவிட்டனர். ஆகவே அவர்களுடைய இறை வன் அவர்களின் இந்தப் பாவத்தின் காரணமாக அவர்களின் மீது வேதனையை இறக்கி அவர்கள் அனைவரையும் (தரை) மட்டமாக்கிவிட்டான். இவர்களின் முடிவைப் பற்றி(த் தன் னைப் பழிவாங்கி விடுவார்களென்று இறைவன்) பயப்பட வில்லை! (91:14,15)

காயத்திலிருந்து இரத்தம் பீரிட்டுப் பாயின், சாம்பலில் இதனை ஓதிக் காயத்தில் தூவின் இரத்த ஓட்டம் நிற்கும்

## குழந்தை சாகாமலிருக்க

அடிக்கடி குழந்தை சாகக் கொடுக்கும் பெண்கள் மிளகில் 40 தடவை சூரா ஷம்ஸை ஓதிப் பிரசவம் வரை அதனை தின்று வந்தால் குழந்தை தங்கும்.

## மூர்ச்சை தெளிய

மூர்ச்சையுற்றவனின் காதில் இந்த சூராவை ஓதி ஊதினால் மூர்ச்சை தெளியும்.

## காய்ச்சல் நீங்க

இதை எழுதிக் கரைத்த தண்ணீரினால் காய்ச்சலை நீக்கலாம்.

# சூரா லுஹா

## வெளியூர் சென்றவன் உடன் திரும்ப

வெளியூருக்குச் சென்றுவிட்ட ஒருவனின் பெயரைக் குறித்து இந்த சூராவை ஓதினால், அவன் சுகமாகத் திரும்பி வருவான். விரைவிலேயே திரும்பி வருவான்.

## மறந்து வைத்த பொருள் மீளப்பெற

ஏதேனும் ஒரு பொருளை எங்கேயேனும் வைத்து, இடத்தை மறந்து விட்டீர்களா? அப்படியானால் அந்தப் பொருளின் பெயரை இணைத்து இந்த சூராவை ஓதுங்கள்; வவஜதகளால்லன் ஃபஹதா என்பதை மூன்று தடவை ஓதி அந்த சூராவை முடியுங்கள். அதனை வைத்த இடம் நினைவுக்கு வந்துவிடும்! அந்தப் பொருள் கிடைக்கும். ஒரு வேளை கிடைக்கவில்லையெனில் அதைவிட நல்ல பொருள் கிடைக்கும்.

## வாய்ப்புண் குணமாக

சூரா லுஹாவை 41 தடவை சர்க்கரையில் ஓதி உண்டு வர வாய்ப்புண் குணமாகும்.

# சூரா இன்ஷிராஹ்

## நெஞ்சுவலி, மூத்திரப்பை நோய் வயிற்றுவலி தீர

இதனை நெஞ்சிலே ஓதியூதிக் கொண்டால், அது விரிவடையும், நெஞ்சு வலிக்கு இதனை ஓதியூதலாம். பயன் கிடைக்கும். மூத்திரப் பையில் தோன்றுகிற வியாதிகள் நீங்கும். இதனை எழுதிக் கரைத்த தண்ணீரைக் குடித்தால் ஏழு தடவை தண்ணீரில் ஓதியூதி அத்தண்ணீரைக் குடிப்பின் வயிற்றுவலி நீங்கிவிடும்.

## பாடங்களை எளிதில் மனனமாக்க

இந்த சூராவை ஒரு தட்டைப் பீங்கானில் எழுதிக் கரைத்துக் குடிப்பின் பாடங்கள் எளிதில் மனனமாகும்.

## இரணம் பெருக

இந்த சூராவை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## மனத்திலிருந்து ஷிர்க் நீங்கி ஈமான் ஏற்பட

எகிப்து நாட்டினர் ஒருவர் கூறுகிறார்:

இணை வைப்பவர் ஒருவர் என்னிடம் வந்து ''என் உள்ளத்திலுள்ள ஷிர்க்கை நீக்கும் திருவசனம் உங்களின் வேதத்தில் இருப்பின் அதைக் கொண்டு நான் இஸ்லாத்தைத் தழுவுகிறேன்'' என்று கூறினார். உடனே நான் சூரா இன்ஷிராஹ்வை எழுதித் தண்ணீரில் கரைத்து அதனைப் பருகச் செய்தேன். அதனை அவர் பருகி முடித்த அடுத்த கணம் அவரின் உள்ளத்திலிருந்து 'ஷிர்க்' நீங்கி அவர் இஸ்லாத்தைத் தழுவினார்.

## இதயப் படபடப்பு நீங்க

இதனை எழுதி ஜம்ஜம் நீரில் கரைத்துக் குடித்து வர வேண்டும்.

## நோய், துன்பம், திடுக்கம் அகல

இதனை எழுதிப் பன்னீரில் கரைத்து அருந்தி வர வேண்டும்.

### அலுவல் எளிதாக, இரணம் பெருக

*இதனை ஐவேளைத் தொழுகைக்குப் பின்னர் வழக்க மாக ஓதி வரவேண்டும்.*

### கக்குவான் நீங்க

*இதனை 21 தடவை ஓதி தண்ணீரில் ஊதி அருந்தி வரவேண்டும். இவ்வாறு தொடர்ச்சியாக ஏழு நாட்கள் செய்வதோடு அந்த சூராவை எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொளின் இறையருளால் கக்குவான் நீங்கும்.*

### வாங்கிய பொருளில் பரக்கத் ஏற்பட

*ஒருவன் ஒரு பொருளை வாங்கிய பின் இதனை ஓதின் அப்பொருளில் அவனுக்கு 'பரக்கத்' ஏற்படும்.*

## சூரா தீன்

### அபிவிருத்தி ஏற்பட

*தானியக் களஞ்சியத்தில் இந்த சூராவினை ஓதியூதினால் அபிவிருத்தி ஏற்படும்.*

### பிரயாணத்தில் பாதுகாப்புப் பெற

*ஆரிபீன்களில் ஒருவர் கூறினார்: பிரயாணப்படுகிறவன் இதனை எழுதி அணிந்து கொண்டால் தன் குடும்பத்தாரிடம் திரும்பி வரும்வரை, அவனுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்.*

### உடல் நலன், உறுதி ஆகியவை பெற

*இதனை ஒருவன் ஓதிவரின் அவன் இவ்வுலகில் வாழும் வரை உடல் நலன், உறுதி ஆகியவற்றை இறைவன் அளிக்கி றான் எனப் பெருமானார் (ஸல்) கூறினர்.*

### திக்குவாய் அகல

*ஃபஜ்ர், மஃரிப் தொழுகைக்குப்பின் இதனை 21 தடவை வழக்கமாக ஓதி வரவேண்டும்.*

# சூரா அலக்

### அதிகாரிகளிடம் கண்ணியம் பெற

*அரசரிடமோ அதிகாரியிடமோ செல்ல நேர்ந்தால் இந்த சூராவை மும்முறை ஓதிக்கொள்ள வேண்டும், அவர்களிடம் கண்ணியம் ஏற்படும்.*

### பிரயாணத்தில் ஆபத்து ஏற்படாதிருக்க

*இதனைப் புறப்படுமுன் எழுதி வைத்துக் கொண்டால் திரும்பி வரும்வரை எத்தகைய ஆபத்தும் ஏற்படாது.*

### தண்ணீரால் தடுமம், காய்ச்சல் முதலியவை ஏற்படாமல் இருக்க

*குளித்தல், உளூ செய்தல் போன்ற தண்ணீர் புழங்கும் அலுவல்களின் முடிவில் இந்த சூராவை ஓதினால் அந்தத் தண்ணீர் புழக்கத்தின் காரணமாக யாதொரு தீமையும் ஏற்படாது.*

# சூரா கத்ர்

*ஆரிபீன்களில் ஒருவர் கேட்டார். ''இஸ்முல் அஃலம் பற்றி உனக்கு நான் சொல்லித் தரட்டுமா?''*

*''சொல்லித் தாருங்கள்'' என்று நான் வேண்டிக் கொண்ட போது அவர் சொன்னார்; 'சூரா பாத்திஹா, சூரா இக்லாஸ், ஆயத்துல் குர்ஸி, சூரா கத்ர் ஆகியவற்றை முதலில் - ஓது! அப்புறம் கிப்லாவை முன்னோக்கி நீ விரும்பும் பிரார்த்தனையைக் கேட்டுக் கொள்.''*

*ஒருவன் இந்த சூராவை எழுதிக் கரைத்த தண்ணீரைக் குடித்தால், இறைவன் அவன் பார்வையில் ஒளியையும் அவன் உள்ளத்தில் நம்பிக்கையையும் ஏற்படுத்துவான்.*

## உணவு செரிக்க

உணவு செறியாமல் துன்புறுவோர் இதனைப் பதினொரு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்த வேண்டும்.

## நலமாகவும் வளமாகவும் வாழ

சூரா கத்ர் ஒரு தடவையும் சூரா இக்லாஸ் பத்து தடவையும் ஓதி துப்புரவான தண்ணீரில் ஊதி அத்தண்ணீரைப் புதுத்துணியில் தெளித்து அணிந்து கொண்டால் அது அவனிடம் இருக்கும் காலம் வரை அவன் நலமாகவும் வளமாகவும் இருப்பான்.

## இரணம் பெருக

சூரா கத்ரை முப்பது தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அத்தண்ணீரைப் புதுத் துணியில் தெளித்து, அணிந்து கொண்டால் அத்துணி அவனிடம் இருக்கும் வரையில் அவனுடைய இரணம் விரிவாக்கப்படும்.

## குழந்தை நல்லவனாக வளர

குழந்தை பிறந்ததும் அதன் வலது காதில் இந்த சூராவை ஓதி ஊதினால் அக்குழந்தை பெரியவனான பின் விபச்சாரத்தில் ஈடுபடாமல் காக்கப்பெறுவான் என்று இமாம் ஷெய்கு தவ்ரி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## அன்பாளர் நலம் பெற

தன் அன்பிற்குரியவன் முன் நெற்றி முடியைப் பிடித்து இதனை ஓதின் அவர்களிடமிருந்து விரும்பாத செயல் ஒன்றும் ஏற்படாது.

## சொறி, சிரங்கு அரிப்பு நீங்க

இந்த சூராவை ஏழு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தி வரவேண்டும் என்று ஜஃபர் ஸாதிக் (ரஹ்) கூறினர்.

### நற்பலன் பல பெற

இதனை ஓதுகிறவர் ரமலான் முழுவதும் நோன்பு நோற்று லைலத்துல் கத்ர் இரவில் விழித்திருந்து வணங்குபவருடைய நற்பலனைப் பெறுவார்.

## சூரா பையினா

### இறைவணக்கம் ஏற்றுக்கொள்ளப்பட

நோய், நொடி கொண்டவர்களுக்கு இதனை எழுதி அணிவித்தால் இறைவனருளால் குணமேற்படும். தினமும் சுப்ஹு நேரத்தில் இந்த சூராவை 21 தடவை ஒருவன் ஓதினால் அவனுடைய இறை வணக்கம் ஏற்றுக் கொள்ளப்படும்.

### ஆண்மை பெற

ஆண்மையில்லாதவர் இதனை ஒரு தட்டைப் பீங்கானில் எழுதி மூன்று நாட்களுக்கு கழுவிக் குடிப்பின் ஆண்மை எய்தப் பெறுவார்.

### மஞ்சள் காமாலை நீங்க

சூரா பையினாவை எழுதி தஃவீஸ் செய்து கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

## சூரா ஜில்ஜால்

### எதிரிகள் பயந்து வெருண்டோட

இப்னு கல்லீ தமக்கு நம்பிக்கையாளர் ஒருவர் அறிவித்ததாகப் பின்வரும் செய்தியைக் கூறுகிறார்.

ஓர் ஊரில் முஸ்லிம்கள் வாழ்ந்து வந்தார்கள். ஓரிரவு திடீரெனக் காஃபிர்கள் அவ்வூரை நாலா பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டார்கள். முஸ்லிம்களுக்கோ யாது செய்வதென்று தெரியவில்லை. பொறிவாய்ப்பட்ட எலி போன்று அவர்களின் நிலை ஆனது. தங்களின் ஊரில் வாழ்ந்து வந்த நல்லார் ஒருவரை அணுகி அவரிடம் முறையிட்டார்கள்.

அப்பொழுது அவர் பிடி மண் எடுத்து அதன் மீது ''வமார மைத்த இது ரமைத்த வலா கின்னல்லாஹ ரமா'' என்று ஓதி சூரத்து ஜில்ஜாலை ஓதத்துவங்கி ''யஸ்துருன்னாஸ— அஷ்தாத் தா'' வரை ஓதி அதில் ஊதி அந்த மண்ணை ஒருவரிடம் கொடுத்து அதனைக் கொண்டு போய் அவர்கள் தங்கியிருக் கும் இடத்தில் எறியுமாறு கூறினார். அவர் அவ்வாறு செய் யவே அவர்கள் கோழையாகித் தங்களிடையே பிணங்கிக் கொண்டு வெருண்டோடி விட்டார்கள். இறையருளால் முஸ் லிம்கள் காப்பாற்றப்பட்டனர்.

## குறித்த நேரத்தில் விழித்தெழ

இரவில் படுக்கையில் அமர்ந்து ஒரு தடவை 'பிஸ்மில் லாஹ்' ஓதி மூன்று தடவை சூரா ஜில்ஜாலை ஓதி முடித்து இந்த நேரத்தில் நான் விழித்தெழ வேண்டும் என்று நாவி னால் உரைத்து படுத்துறங்க வேண்டும். இறையருளால் அந்நேரத்தில் விழிப்பேற்படும்.

## பயப்படும் செயல்களிலிருந்து பாதுகாப்புப் பெற

பெருமானார் கூறினார்கள்: ஒருவன் தொழுகைக்குப் பிறகு அதிகமாக இதனை ஓதினால் மண்ணகத்தின் புதையல் அவனுக்குக் கொடுக்கப்படும். அவன் பயப்படும் காரியங்க ளிலிருந்து அவனுக்கு பாதுகாப்புக் கிடைக்கும்.

## நோய் அகல

இதனை எழுதிக்கரைத்த தண்ணீரை எந்த நோய்க்கும் உபயோகிக்கலாம்; குணம் ஏற்படும். அந்தத் தண்ணீரினால் நோயாளி தம் முகத்தை மும்முறை, பகல் நேரத்தில் கழுவிக் கொள்ள வேண்டும்.

## வாத நோய் அகல

எல்லாவிதமான நோய்களுக்கும் இந்த சூரா பெரிதும் பயனுள்ளதாகும். இதனை பிஸ்மியுடன் பீங்கானில் எழுதி 41 நாட்கள் கரைத்துக் குடித்தால் வாதநோய் அகலும். இதனை வழக்கமாக ஓதி வந்தாலும் வாதநோய் நீங்கும்.

### இம்மையிலும் மறுமையிலும் வெற்றியடைய

ஒருவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து தமக்கு ஒரு உருக்கமான அத்தியாயத்தைக் கற்றுத் தருமாறு வேண்டினார். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவருக்கு இந்த அத்தியாயத்தைக் கற்றுக் கொடுத்தனர். அப்பொழுது அவர், ''தங்களை உண்மையாக அனுப்பி வைத்த ஒருவன்மீது ஆணையாக, இதைவிட அதிகமாக நான் ஒருபோதும் ஓத மாட்டேன் என்று கூறினார். அவர் சென்றபின் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். 'அவர் வெற்றியடைவார்' என்று இருமுறை கூறினர்.

இந்த அத்தியாயம் திருக்குர்ஆனின் கால் பாகத்திற்குச் சமமானது என்றும் அவர்கள் கூறினார்கள்.

## சூரா ஆதியாத்

### பகைவர்களிடமிருந்து பாதுகாப்புப் பெற

ஒருவன் இந்த சூராவை எழுதித் தன்னிடம் வைத்துக் கொண்டால், பகைவரிடமிருந்து அவன் காக்கப்படுவான்.

### வளவாழ்வு பெற

மேலும் அவனுடைய பொருளாதார நிலை உயரும்.

### கண்ணேறு அகல

கண் திருஷ்டிக்கு இந்த சூராவை மும்முறை ஓத வேண்டும்.

## சூரா காரிஆ

### வறுமை நீங்கி வசதி ஏற்பட, வேலை இல்லாதவனுக்கு வேலை கிடைக்க

வறியவன் இதை அதிகமாக ஓதிவந்தால் அல்லது எழுதி அணிந்து கொண்டால் நிலைமை மாறுதலடையும்; வசதிகள் ஏற்படும்; வேலை கிடைக்கும்.

## தேவை நிறைவேற

ஏதேனும் தேவை முடிய வேண்டும் என்றால், இதனை 103 தடவை ஓத வேண்டும். தொடர்ந்து ஓதுவது பாதுகாப்பளிக்கும்.

## புழு, பூச்சிகள் நீங்க

சூரா 'காரிஆ'வை ஒரு தட்டைப் பீங்கானில் எழுதிப் பன்னீர் கொண்டு அழித்து வீட்டில் தெளித்தால் வீட்டை விட்டுப் புழு பூச்சிகள் அகன்றுவிடும்.

# ஸூரா தகாதுர்

## வேதனை, துயரம் நீங்க

வேதனையும் துயரமும் நீங்க வேண்டுமானால் இந்த சூராவை மும்முறை ஓதவேண்டும்.

## மகத்தான நற்கூலி பெற

மழை பொழியும்பொழுது இதனை ஏழு தடவை ஓதியவனுக்கு மகத்தான நற்கூலியுண்டு.

## தலைவலி நீங்க

அஸருக்குப்பின் ஓதித் தலைவலிக்கு ஓதிப்பார்த்தால் தலைவலி நீங்கும்.

## புதையல் இருக்கும் இடத்தை கண்டுபிடிக்க

ஒருவன் புதையல் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் இதனை அதிகமதிகமாக ஓதிவரின் அல்லாஹ் அவனுக்கு அது இருக்கும் இடத்தை உள்ள உணர்வின் மூலம் காட்டியருள்வான். அதனை எடுப்பதில் அவனுக்கு எத்தகு தீங்கும் ஏற்படாது காத்தருள்வான்.

## செல்வனாக

இதனை ஒருவன் வழக்கமாக ஓதிவரின் அவனை அல்லாஹ் செல்வனாக்குவான்.

### அல்லாஹ்வின் அருளைப் பெற

ஒருவன் இதனை மழை பெய்யும் பொழுது ஓதின் அவன் அல்லாஹ்வின் அருளைப் பெறுவான். இதனைக் கொண்டு மழை நீரைச் சேகரித்து சிறிது சிறிதாக அருந்திவ ரின் அது அவனுக்கு நற்பலன் அளிக்கும்.

## சூரா அஸ்ர்

### தலைவலி, காய்ச்சல் அகல

காய்ச்சலுக்கு இதனை ஓதிஊதினால் குணமாகும். தலை வலியும் நீங்கும்.

### பகைவரை அடக்க

நிந்தனை செய்து கொண்டிருக்கும் பகைவரை அடக்குவ தற்கு இந்த சூராவை 21 தடவை ஓதவேண்டும். பகைவர்கள் தம் நிந்தனையை நிறுத்திக் கொள்வதோடு, அவமானமும் அடைவார்கள்.

### கருவூலம் காக்கப் பெற

இதனை நான்கு புது ஓடுகளில் எழுதிக் கருவூலத்தின் நான்கு மூலைகளிலும் வைக்கவேண்டும்.

## சூரா ஹுமஸா

### செல்வம் பெற

செல்வத்துக்கு இந்த சூராவை 'நஃபில்' தொழுகைக்கு பிறகு ஓத வேண்டும்.

### வயிற்றுவலி நீங்க

வயிற்று வலிக்கு இதனை 10 முறை ஓத வேண்டும்.

### பொருள்கள் பாதுகாப்புப் பெற

எதற்கேனும் பாதுகாப்புத் தேவை என்றால் இதனை ஓத வேண்டும். இறைவன் பாதுகாத்துக் கொள்வான்.

### கண்ணேறு அகல

இதனை ஓதி ஊதினால் கண்ணேறு நீங்கும்.

### கண் நோய் அகல

சூரா ஹு¬மஸாவை ஓதி கண்ணில் ஊதச் செய்ய வேண் டும்.

### கையில் வேதனை அகல

சூரா ஹு¬மஸாவை நல்லெண்ணெய்யில் ஓதிஊதி கையில் தடவவேண்டும்.

# சூரா ஃபீல்

### போராட்டத்தில் வெற்றி காண

போராட்டத்தின் போது அணியில் நின்று இந்த சூராவை ஓதினால் எதிரிகள் தோற்றுப் போவார்கள். பகைவனுக்கு முன் ஓதினால் அவனை இறைவன் அவமானப்படுத்துவான். உங்களுக்குப் பகைவர்கள் அதிகமாக இருந்தால் வியாழனி ரவு மக்ரிபுக்கும் இஷாவுக்கும் இடையில் இதனை 1250 தடவை ஓதுங்கள்; பகைவர்கள் பணிந்து விடுவார்கள்.

# சூரா குறைஷ்

### நஞ்சும் தீமை செய்யாதிருக்க

ஒருவன் இந்த சூராவை தினமும் ஒருமுறை ஓதி வந்தால் அவனுடைய உணவில் நஞ்சு கலந்திருந்தாலும் அவனுக்குத் தீங்கு ஏற்படாது.

### பகைவர், திருடர், துன்பங்கள், இழப்புகள் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்பு பெற

பகைவர், திருடர் ஆகியோர் எதிர்பாரா வண்ணம் தாக்கி விடுவார்களோ என்ற அச்சம் ஏற்படின் இந்த சூராவை ஓத வேண்டும்.

எல்லாவிதமான இழப்புகள், துன்பங்கள் ஆகியவற்றிலி ருந்தும் பாதுகாப்புப் பெற இந்த சூராவை ஓத வேண்டும்.

''எல்லா விதமான இழப்புகள், துன்பங்கள் ஆகியவற்றி லிருந்தும் இந்த சூரா பாதுகாப்புத் தரும்'' என்று அபுல் ஹஸன் கஸ்வீரி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர். இது அனுப வத்தில் கண்டதாகும்.

## வீட்டிலுள்ளோர் நலம் பெற, உடைமைகள் பாதுகாப்புப் பெற

ஒருவன் வீட்டை விட்டுப் புறப்படுவதற்கு முன் ஆயத் துல் குர்ஸியையும் சூரா குறைஷையும் ஓதி ஊதி விட்டுச் செல்லின் அவன் திரும்பும் வரை வீட்டிலுள்ளோருக்கும் வீட்டிலுள்ள பொருள்களுக்கும் யாதொரு தீங்கும் ஏற்படாது.

## நெஞ்சுவலி, இருதயப் படபடப்பு நீங்க

இதனை எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்.

## நஞ்சின் தீமை அகல

இதனை குங்குமத்தால் எழுதி மழைத் தண்ணீரில் கரைத்து நஞ்சூட்டப்பட்டவனை அருந்தச் செய்யின் அந்த நஞ்சால் அவனுக்கு யாதொரு தீங்கும் ஏற்படாது காக்கப்பெ றும்.

## உணவில் 'பரக்கத்' ஏற்பட

இதனை ஒருவன் உணவில் ஓதி ஊதி உண்டால் அதில் அவனுக்கு 'பரக்கத்' ஏற்படும்.

## சிறுநீரகக் கோளாறு நீங்க

இதனை உணவில் ஓதி ஊதி அருந்தி வரவேண்டும்.

## செல்வனாக

இதனை அதிகமாக ஓதி வருபவன் விரைவில் செல்வனா வான்.

### கண்ணேறு நீங்க

இதனை ஓதி உணவில் ஊதி உண்ணவேண்டும்.

### பகைவர் தோற்றோட

இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் நூறு தடவை ஓத வேண்டும். இதனை ஓதுமுன்பும் ஓதிய பின்பும் ஸலவாத்தை ஓதிக் கொள்ள வேண்டும்.

### பகைமை நீங்கி நட்பு ஏற்பட

இருவருக்கிடையே பகைமை நீங்கி நட்பு ஏற்பட அவர்களில் ஒருவர் இஷாத் தொழுகைக்குப் பின் 333 தடவை இதனை ஓத வேண்டும். இதற்கு முன்னோ பின்னோ ஸலவாத் ஓதக் கூடாது.

### துன்பம் நீங்க

துன்பம் ஏற்பட்ட வேளையில் இதனை வைகறைத் தொழுகைக்குப் பின்போ அல்லது இஷாத் தொழுகைக்குப் பின்போ எழுபது தடவை ஓதவேண்டும். ஒரு தடவை பிஸ்மி ஓதிக்கொள்ள வேண்டும். முன்பின் 11 தடவை ஸலவாத் ஓதிக்கொள்ள வேண்டும். துன்பம் நீங்கும் வரை இதனை தொடர்ச்சியாக ஓதிவரின் இன்ஷா அல்லாஹ் விரைவில் துன்பம் நீங்கி நலன் ஏற்படும்.

## ஸூரா மாஊன்

### பிறர் உதவியின்றி வாழ

ஒருவன் இந்த சூராவை தினம் 41 தடவை ஓதினால், அவனும் அவன் குடும்பத்தாரும் என்றைக்கும் பட்டினி கிடக்க வேண்டியதில்லை; யாருடைய உதவியையும் அவர்கள் எதிர்பார்க்க வேண்டியதில்லை.

### வாக்கு வன்மை பெற

இதனை நிரந்தரமாக ஓதிவந்தால் வார்த்தையில் வலிமையும் பிரார்த்தனையில் வெற்றியும் ஏற்படும்.

# சூரா கவ்தர்

## பகைவனை வெற்றி கொள்ள

ஒருவன் இதனைத் தனித்த ஓர் இடத்தில் அமர்ந்து முந்நூறு தடவை ஓதின் அவன் தன் பகைவனை வெற்றி கொள்வான்.

## கண்வலி அகல

இதனைப் பதினொரு தடவை ஓதவேண்டும். ஓதுமுன் பதினொரு தடவை ஸலவாத்தும், ஓதியபின் பதினொரு தடவை ஸலவாத்தும் ஓதிக் கையில் ஊதிக் கண்களில் தடவிக் கொள்ள வேண்டும்.

## வாய்ப்புண் அகல

இதனை பாதாம் பருப்பின் மீது இருபத்தொரு தடவை ஓதி ஊதி, பின்னர் அந்தப் பருப்பை உடைத்து மாவாக்கி அந்த மாவை வாய்ப்புண் மீது தடவ வாய்ப்புண் நீங்கி நலன் ஏற்படும்.

## சுவன வாழ்வு பெற

ஒருவன் தன் ஆயுளில் இந்த சூராவை 1000 தடவை ஓதிவிட்டால், அவனுக்கு இறைவன் சொர்க்க வாழ்வை கொடுப்பான், 'கவ்தரி'ன் தண்ணீரைப் பருகும் பேறு அவ னுக்குக் கிடைக்கும்.

## பெருமானாரை கனவில் தரிசிக்க

இதனை 1000 தடவையும், 'ஸலவாத்'தை 1000 தடவை யும், வெள்ளியிரவில் ஓதிக்கொண்டு, சுத்தமான படுக்கையில் தூங்கிவிட்டால், பெருமானாரைக் கனவில் தரிசிக்கலாம்.

## பாதுகாப்புப் பெற

இதனை எழுதி அணிந்து கொண்டவனுக்கு எப்போதும் பாதுகாப்புக் கிடைக்கும்.

### புதுத் தண்ணீர் தீங்கு செய்யாதிருக்க

புதுத்தண்ணீரில் குளிக்கும்முன் இதனை மூன்று தடவை அதில் ஓதி ஊதிக் குளிப்பின் அதனால் யாதொரு தீங்கும் ஏற்படாது.

தாக சாந்திக்காக தண்ணீர் முதலிய பானங்களை அருந்தும் பொழுது மூன்று தடவை இதனை ஓதினால் அந்த பானங்களால் தாக சாந்தி ஏற்படுவதுடன் யாதொரு தீங்கும் ஏற்படாது.

### தலைவலி அகல

இதனை ஏழு தடவை ஓதி ஊத வேண்டும்.

### மாதவிடாயின் போது அதிக இரத்தப்போக்கை நிறுத்த

மழைத் தண்ணீரில் சூரா கஹ்ஃபை 313 தடவை ஓதி ஊதி அருந்த வேண்டும்.

## சூரா காஃபிரூன்

### ஈமானோடு இறப்பெய்த

ஈமான் வலிமை பெறுவதற்கு இந்த சூராவை தினம் 8 தடவை ஓத வேண்டும். இப்படி ஓதுகிறவன் ஈமானோடு மரணமடைவான்.

இந்த சூரா திருக்குர்ஆனில் கால்வாசிக்கு சமமானது. சூரியன் உதயமாகும் போதும் அஸ்தமிக்கும் போதும் ஒருவன் இதனை ஓதினால், ஷிர்க்கிலிருந்து அவன் காக்கப்படுவான்.

### நாட்டம் நிறைவேற

ஒருவன் இதனை ஞாயிற்றுக்கிழமை பொழுது புலரும் நேரத்தில் பத்துத் தடவை ஓதித் தன் நாட்டத்தை இறைவனிடம் கூறி இறைஞ்சினால் அது நிறைவேற்றியருளப்படும்.

### பிரயாணத்தில் எல்லோரினும் மதிப்பும் செல்வமும் பெற

பெருமானார் (ஸல்) அவர்கள் ஜுபைர் இப்னு முத்இமை நோக்கி, ''நீர் பிரயாணத்தில் மற்றவர்களைவிடத் தோற்றத்திலும், தகுதியிலும் சிறப்புற்று விளங்க வேண்டு மென்று விரும்புகிறீரா?'' என்று வினவியபொழுது 'ஆம்' என்றார் அவர். அப்பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள், 'சூரா காஃபிரூன், சூரா நஸ்ரு, சூரா இக்லாஸ், சூரா பலக், சூரா நாஸ் ஆகியவற்றை பிஸ்மியோடு ஓதி பிஸ்மியோடு முடியும்' என்றனர்.

அவ்விதமே தாம் செய்ததாகவும் அதன் காரணமாகத் தாம் பிரயாணத்தின்போது ஏனையோரைவிடப் பெரிதும் சிறப்பும் செல்வமும் பெற்றதாகவும் ஜுபைர் கூறுகின்றார்.

### இரணம் பெருக

இந்த சூராவை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## சூரா நஸ்ர்

'இந்த சூரா குர்ஆனின் நாலில் ஒரு பகுதிக்குச் சமமானது' என்று பெருமானார் கூறியுள்ளனர்.

### மீன் அதிகமாகப் பட

இதனை எழுதி வலையில் இணைத்து விட்டால், மீன் கள் கூட்டம் கூட்டமாக வந்து விழும்.

### பற்கள் விழாதிருக்க

வித்ரு தொழுகையின் முதலாவது ரகஅத்தில் பாத்திஹா சூராவுக்குப் பின் சூரா நஸ்ரையும், இரண்டாவது ரகஅத்தில் சூரா லஹபையும் மூன்றாவது ரகஅத்தில் சூரா இக்லாஸை யும் வழக்கமாக ஓதித் தொழுது வரவேண்டும்.

### கடன் நீங்கப் பெற

ஒருவன் சூரா நஸ்ரை இஷா தொழுதபின் அதே இடத் தில் அமர்ந்து 41 தடவை 41 நாட்கள் தொடர்ந்து ஓதிவரின்

அல்லாஹ்வின் பேரருளால் கடன் நீங்கப் பெறுவான். அதனை ஒவ்வொரு நாளும் ஓதுமுன் 11 தடவை ஸலவாத்தும் ஓதிய பின் 11 தடவை ஸலவாத்தும் ஓத வேண்டும்.

### துன்பம் அகல

துன்பங்களை நீக்குவதற்கு இந்த சூராவைத் தினமும் ஏழு தடவை ஓத வேண்டும்.

### வறுமை நீங்கி வளவாழ்வு ஏற்பட

சூரா காஃபிரூனையும் சூரா நஸ்ரையும் வழக்கமாக ஓதிவரின் வறுமை நீங்கி வளவாழ்வு ஏற்படுமென ஷிஹாபுஸ் ஸுஹ்ரீ (ரஹ்) கூறினர்.

### எதிரியை வெற்றி கொள்ள

ஒருவன் தன் ஆயுதத்தின் மீது இதனை எழுதி எதிரியுடன் போர் செயின் அவன் தன் எதிரியை வெற்றி கொள்வான்.

### துஆ ஏற்றுக் கொள்ளப்பட

சூரா நஸ்ரை ஒருவன் தொழுகையிலும் ஏனைய நேரங்களிலும் அதிகமாக ஓதி வருவானாயின் அவனுடைய 'துஆ' இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.

## சூரா லஹப்

### நோய், வலி நீங்க

வளர்ந்து வருகிற நோய்க்கும் இதை எழுதி உபயோகிக்கலாம். நோய் குறைந்து போகும். தொடர்ந்து ஆரோக்கியம் ஏற்படும். இதை எழுதி வலியுள்ள இடத்தில் கட்டினால் வலி நீங்கும்.

### தீமைகள் அகல

இதனை ஆயிரம் தடவை ஓத வேண்டும் என்று யஹ்யா மனேரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

# சூரா இக்லாஸ்

இக்லாஸ் என்றால் தூய்மை, விடுதலை என்று பொருள்.

*மரணத் துன்பம், மறுமைத் துன்பம் ஆகியவற்றிலிருந்து இது மனிதனுக்கு விடுதலை நல்குவதால் இதற்கு இக்லாஸ் எனப் பெயர் ஏற்பட்டது.*

## நரகத்திலிருந்து காவல் பெற

*திருக்குர்ஆனில் மூன்றில் ஒரு பகுதிக்கு இந்த சூரா சமமானது. மன ஒருமையோடு ஒருவன் இதனை ஓதினால் அவன் என்றைக்கும் நரகத்துக்குச் செல்ல வேண்டியதில்லை.*

## இறந்தவர்கள் நலன் பெற

*''அடக்க ஸ்தலங்களைக் கடந்து செல்லும் ஒருவன் சூரா இக்லாஸை 11 தடவை ஓதி அதற்கான நற்கூலியை இறந்தவர்களுக்காகத் தியாகம் செய்தால், இறந்தவர்களின் எண்ணிக்கைப்படி அவனுக்கு நற்கூலி கொடுக்கப்படும்'' என்று பெருமானார் (ஸல்) கூறினார்கள்.*

## இறந்தவருக்கு 'அதாபு' இலேசாக்கப்பட

*இதனை ஓதி, இறந்தவருக்கு 'ஹதியா' செய்யின் அவருக்கு மறுமையின் வேதனை இலேசாக்கப்படும்.*

## நோய் அகல

*இதனைப் பீங்கானில் எழுதி நோயாளிக்குக் கொடுக்க வேண்டும்.*

## இம்மை மறுமை பற்றிய நாட்டங்களை எய்தப் பெற

*இதனை ஓதி வருபவர் தங்களின் இம்மை, மறுமை பற்றிய நாட்டங்களை எய்தப் பெறுவர் என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.*

## ஆபத்து அணுகாதிருக்க

*இதனை எழுதித் தஃவீஸ் செய்து குழந்தைகளுக்கு அணிவிப்பின் அவர்கள் ஆபத்துகளை விட்டும் பாதுகாப்புப் பெறுவர்.*

## வறுமை அகல

ஒருவர் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து தமது வறிய நிலைமையைப் பற்றி முறையிட்ட பொழுது, அவர்கள் ''நீர் உம் இல்லத்தில் நுழையும் பொழுது வீட்டிலுள்ளோருக்கு ஸலாம் கூறவும். எவரும் இல்லாவிட்டாலும் ஸலாம் கூறவும். அதன்பின் ஸலவாத்துக் கூறவும். அதன்பின் சூரா இக்லாஸை ஓதிக் கொள்ளவும்'' என்றனர். அவ்விதமே அவர் செய்ய விரைவில் வறுமை நீங்கி செல்வரானார்; தம் உறவினர்களையும் ஆதரித்தார்.

## சுவனத்தில் இல்லம் பெற

''இதனை பத்து தடவை ஓதுகின்றவனுக்கு சுவனத்தில் ஓர் இல்லம் எழுப்பப்படும்'' என்று பெருமானார் கூறியுள்ளனர்.

## சிறையிலிருந்து மீட்சி பெற

கைது செய்யப்பட்டவர்கள், தாம் விடுதலை அடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் இந்த சூராவை தினம் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.

## செல்வனாக

ஒருவன் இதனை 13 தடவை ஓதிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தால், பொருளாதார நிலைமை உயரும். குறுகிய காலத்திலேயே அவன் பணக்காரனாகிவிடுவான்.

## நலன் அனைத்தும் பெற

''இதை நிரந்தரமாக ஓதி வருவது எல்லாவிதமான நன்மைகளையும் கொடுக்கக் கூடிய ாகும்'' என்று பெரியார்கள் கூறுகிறார்கள்.

## மன ஒருமை பெற

''மன ஒருமை ஏற்படவேண்டுமானால், சூரா இக்லாஸை ஓதுங்கள்'' என்று ஷைகு அபுல் ஹஸன் ஷாதலி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## நெருப்பு அணைய

நெருப்புப் பற்றிக் கொண்டதாகக் கேள்விப்பட்ட மாத்தி ரத்திலேயே பிஸ்மியுடன் இந்த சூராவை ஓதி நெருப்புப் பற்றிய திசையை நோக்கி ஊதின் நெருப்பு அணைந்துவிடும்.

## இருமல் அகல

இதனை 41 தடவை தண்ணீரில் ஓதி ஊதி அருந்திவர வேண்டும்.

## கப்ரின் வேதனை ஏற்படாதிருக்க

இறப்புப் படுக்கையில் கிடப்பவன் இதனை நூறு தடவை ஓதின் அவன் கப்ரின் வேதனையிலிருந்து காக்கப் பெறுவான்.

## சுவனம் புக

ஒருவர் இரவில் படுக்கையில் வலது புறமாகப் படுத்து நூறு தடவை ஓதின் அவரை வலது புறமாகவே சென்று சுவனம் புகுமாறு இறைவன் கூறுவானென அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இயம்பினர்.

## வயிற்றுவலி அகல

மூன்று மிளகுகளின் மீது இதனை 21 தடவை ஓதி ஊதி உண்டு வரவேண்டும். இவ்வாறு ஏழு நாட்கள் தொடர்ந்து செய்ய வேண்டும்.

## தேவைகள் நிறைவேற

இதனை ஏழாயிரம் தடவை ஓத வேண்டுமென யஹ்யா மனேரி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## சிறுநீர்ச் சுருக்கம் நீங்க

சிறுநீர் சுருக்கம் நீங்கி தாராளமாக சிறுநீர் பெய்ய இதனைப் பதினொரு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தி வர வேண்டும்.

### உடல் நலன் ஏற்பட

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

### உயிரும் உடைமையும் பாதுகாப்பு பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

### ஜின், ஷைத்தான் அணுகாதிருக்க

இதனை ஓதுபவரை ஜின், ஷைத்தான் ஆகியவை அணுகா

### வாய்ப்புண் அகல

சூரா இக்லாஸை சர்க்கரை மீது 41 தடவை ஓதி ஊதி அருந்தி வரவேண்டும்.

## சூரா ஃபலக்

### வருமானம் பெருக, இரணம் விரிவாக

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும் என இமாம் ஷாதலி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

### பிறரின் பொறாமையிலிருந்து காவல் பெற

இந்த சூராவை நிரந்தரமாக ஓதி வந்தால், மக்களின் பொறாமையிலிருந்தும் விஷமங்களிலிருந்தும் பாதுகாப்புக் கிடைக்கும்.

### சூனியம் அகல

இதனையும் இதையடுத்த சூராவையும் நூறு தடவை ஓதினால், 'ஸிஹ்ர்' நீங்கிப் போகும். எழுதி கரைத்துக் குடித்தாலும் இதே பயன்தான்.

### புயலிலிருந்து காவல் பெற

சூரா ஃபலக்கையும் சூரா நாஸையும் அதிகமதிகமாக ஓதிக் கொண்டிருக்க வேண்டும்.

# சூரா நாஸ்

## கண்ணேறு அகல

இதனை நிரந்தரமாக ஓதி வருபவன் ஆரோக்கியத்திலும் பாதுகாப்பிலும் இருப்பான். திருஷ்டிக்கு இதனை ஓதினால் குணமாகும். எந்த நோய்க்கும் இதனை ஓதி ஊதவும். தூங்கு முன் ஓதினால், ஜின்-வஸ்வாஸிலிருந்து பாதுகாப்புக் கிடைக் கும்.

## குழந்தைகள் பாதுகாப்புப் பெற

இதனை எழுதி அணிவித்தால் குழந்தைகள் பாதுகாக்கப் படுவர்.

## அதிகாரிகள், ஏனைய மனிதர்கள் தீங்கு செய்யாதிருக்க

அரசாங்க அதிகாரிகளிடம் செல்லும்போது இதை ஓதிக் கொள்ளலாம். அவர்களின் தீங்குகள் தவிர்க்கப்படும். ஏனைய மனிதர்களின் தீங்கு பற்றி அஞ்சுபவர் இதனை அதிகமதிக மாக ஓதி வரவேண்டும் என இமாம் ஷாதலி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.

## தேள் கடி விஷம் இறங்க

தேள் கடிக்கு இப்படிப் பரிகாரம் தேடலாம்; இந்த சூராவையும் இதற்கு முந்திய இரண்டு சூராக்களையும் உப்புக் கரைசலில் ஓதியூதி கடிக்கப்பட்ட இடத்தில் தடவ வேண்டும். விஷத்தையும் வேதனையையும் இறைவன் நீக்கி விடுவான்.

## பேய், பிசாசு அகல

பேய் பிடித்தவர்களுக்கு இதனை ஓதி ஊதின் பேய் அகன்று விடும்.

## சூனியம் பாதிக்காதிருக்க

சூனியத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு இதனை நூறு தட்வை ஓதி ஊதின் சூனியம் அகன்று விடும்.

ஒவ்வொரு நாளும் இதனை ஓதித் தம்மீது ஊதிக் கொள்வோரை சூனியம் பாதிக்காது.

## துன்பம் அகல

இதனை எழுதி அணிந்து கொளின் துன்பம் நீங்கும்.

## வேதனை அகல

உடலில் வேதனை உள்ள இடத்தில் வலது கையை வைத்து மூன்று தடவை பிஸ்மி ஓதி, ஏழு தடவை 'அவூது பில்லாஹி வகுத்ரத்திஹி மின் ஷர்ரி யா அஜிது வஉஹாதிரு' என்று ஓதி சூரத்து பலக்கையும், சூரத்து நாஸையும் ஓதி ஊதின் வேதனை நீங்கும்.

## ஜின், ஷைத்தான், வஞ்சனை, சூனியம், கண்ணேறு, விஷ ஜந்துக்களின் தீங்கு அணுகாதிருக்க

ஜுமுஆ தொழுது ஸலாம் கொடுத்ததும் அசையாது வீற்றிருந்து சூரா பாத்திஹா ஏழு தடவை, சூரா இக்லாஸ் ஏழு தடவை, சூரா ஃபலக் ஏழு தடவை, சூரா நாஸ் ஏழு தடவை ஓதி லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அலீம் ஏழு தடவை ஓதி, 'ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்!'' என்ற ஸலவாத்தை ஏழு தடவை ஓதிக் கையில் ஊதி முகத்திலும் உடலிலும் தடவிக் கொண்டால் அந்த வாரம் முழுவதும் மேலே கண்ட தீமைகள் ஏற்படா. ஒருவன் நாற்பது ஜுமுஆக்கள் இவ்வாறு ஓதின் அவனின் ஆயுளில் அவற்றால் அவனுக்குத் துன்பம் ஏற்படாது.

## கொடியவர்களின் பொல்லாங்கிலிருந்து காவல் பெற

ஒருவன் கொடியவர்களை அணுகு முன் சூரா நாஸை மூன்று தடவையும் சூரா ஃபலக்கை மூன்று தடவையும் ஓதிச் செலின் அவர்களின் பொல்லாங்கிலிருந்து அவனை அல்லாஹ் காத்தருள் புரிவான்.

## பைத்தியம் அகல

சூரா இக்லாஸ், சூரா ஃபலக், சூரா நாஸ் ஆகியவற்றை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்தச் செய்ய வேண்டும்.

## மார்பக வீக்கம் குறைய

பெண்கள் இவ்வாறே செய்ய வேண்டும்.

## சூனியம், ஷைத்தான் ஆகியவற்றிலிருந்து காவல் பெற

ஒருவன் 'குல்' என்று துவங்கும் நான்கு சூராக்களை இரவில் உறங்கு முன் ஓதிக் கையில் ஊதி உடலில் தடவிக் கொண்டால் சூனியம் ஷைத்தான் ஆகியவற்றிலிருந்து பாது காக்கப் பெறுவான்.

அபூதாலிப் மக்கீ (ரஹ்) அவர்கள் தம்முடைய 'கூத்துல் குலூப்' என்ற நூலில் பின்வரும் நிகழ்ச்சி ஒன்றைக் கூறுகின்ற னர்.

சிறந்த தாபியீன்களில் ஒருவரான இப்ராஹீம் தமீமி (ரஹ்) அவர்கள் ஒரு தடவை கஃபாவின் முற்ற வெளியில் இறைவனைத் துதித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது அழகிய உருவினர் ஒருவர் அவர்களை அணுகி அவர்களுக்கு ஸலாம் உரைத்து அவர்களின் வலப்புறத்தைத் தொட்டார். அவர்கள் அவரின் ஸலாத்திற்கு பதிலுரைத்து அவரை நோக்கி, ''அல்லாஹ்வின் அடியாரே! நீர் யார்?'' என்று வினவினர்.

அதற்கு அவர், ''நான் கிள்ரு, நீர் இறைவன்மீது கொண்ட பேரன்பின் காரணமாக நான் உம்மை அணுகினேன். நான் உமக்கு சில அன்பளிப்புகளைத் தர விரும்புகிறேன்'' என்றார்.

அந்த அன்பளிப்புகள் யாவை என்று வினவினர் இப்ரா ஹீம் தமீமி (ரஹ்) அவர்கள். கிள்ரு (அலை) கூறினர்:

நீர் பொழுது புலர்வதற்கு முன்னரும் பொழுது அடைவ தற்கு முன்னரும் சூரா பாத்திஹா, ஆயத்துல் குர்ஸி, சூரத்துல் காஃபிரூன், சூரா இக்லாஸ், சூரா ஃபலக், சூரா நாஸ் ஆகிய ஒவ்வொன்றையும் ஏழு தடவையும் 'சுப்ஹானல்லாஹி வல் ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல் லாஹு அக்பர்' என்று ஏழு தடவையும் அண்ணல் நபி (ஸல்)

செவ்வாய்க் கிழமை சூரத்து அன்கபூத் முதல் சூரத்து ஸாத் வரை

புதன்கிழமை சூரத்து ஸுமர் முதல் சூரத்து ரஹ்மான் வரை

வியாழக்கிழமை சூரத்து வாகிஆ முதல் இறுதிவரை

இவ்வாறு ஓதி முடித்தபின் ஸுஜூது செய்து இறைவனிடம் நம் நாட்டத்தைக் கேட்பின் அது இன்ஷா அல்லாஹ் இறைவனால் நிறைவேற்றியருளப்படும். இது சோதிக்கப்பட்டதாகும். இதில் சந்தேகமே இல்லை.

# அல்லாஹ்வின் அழகுத் திருப்பெயர்கள் ஆற்றும் அற்புதங்கள்

## சுவனம் புக

''அல்லாஹ்வுக்குத் தொண்ணூற்றொன்பது பெயர்கள் உள்ளன. அவற்றை எவர் சூழ்ந்தறிந்துள்ளாரோ அவர் சுவனம் புகுவர்'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி உள்ளனர். இங்கு சூழ்ந்தறிதல் என்பதற்கு 'இஹ்ஸாஉ' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு மனனம் செய்து கொளல் என இமாம் புகாரீ (ரஹ்) அவர்கள் விளக்கம் பகர்ந்துள்ளார்கள். அப்பெயர்கள் வருமாறு:

ஹுவல்லாஹுல் லதீ லாஇலாஹ இல்லாஹுவர் ரஹ்மானுர் ரஹீமுல் மலிக்குல் குத்தூஸுஸ் ஸலாமுல் முஃமினுல் முஹைமினுல் அஸீஸுல் ஜப்பாருல் முதகப்பிருல் ஹாலிக்குல் பாரிஉல் முஸவ்விருல் கப்பாருல் கஹ்ஹாருல் வஹ்ஹாபுர் ரஸ்ஸாக்குல் ஃபத்தாஹுல் அலீமுல் காபிலுல் பாஸித்துல் ஹாபிலுர் ராஃபிவுல் முஇஸ்ஸுல் முதில்லுஸ்ஸமீஉல் பஸீருல் ஹகமுல் அத்லுல் லத்தீஃபுல் கபீருல் ஹலீமுல் அலீமுல் கபூருஷ் ஷகூருல் அலிய்யுல் கபீருல் ஹஃபீலுல் முகீத்துல் ஹஸீபுல் ஜலீலுல் கரீமுர் ரகீபுல் முஜீபுல் வாஸிவுல் ஹகீமுல் வதூதுல் மஜீதுல் பாஇதுஷ்

ஷஹீதுல் ஹக்குல் வகீலுல் கவிய்யுல் மத்தீனுல் வலிய்யுல் ஹமீதுல் முஹ்ஸில் முப்திஉல் முயீதுல் முஹிய்யில் முமீத்துல் ஹய்யுல் கய்யூமுல் வாஜிதுல் மாஜிதுல் வாஹிதுல் அஹதுஸ்ஸமதுல் காதிருல் முக்ததிருல் முகத்திமுல் முஅஹ்ஹிருல் அவ்வலுல் ஆகிருல் லாஹிருல் பாத்தினுல் வாலில் முதஆலில் பர்ருத் தவ்வாபுல் முன்இமுல் முன்தகிமுல் அஃபுவ்வுர் ரவூஃபுல் மாலிக்குல் முல்கி துல்ஜலாலி வல்இக்ராமிர் ரப்புல் முக்ஸித்துல் ஜாமிஉல் கனிய்யுல் முஃனிய்யுல் முஃத்தில் மானிஉல் லார்ருன் நாஃபிஉன் நூருல் ஹாதில் பதீஉல் பாக்கில் வாரிதுர் ரஷீதுஸ் ஸபூர்.

இறைவனின் இந்த 99 திருப்பெயர்களையும் கூறிஇறைவனை விளித்துக் கேட்கப்படும் 'துஆ' நிச்சயம் இறைவனால் நிறைவு செய்து தரப்படும் என்றும் தாம் துன்புற்ற வேளைகளில் இந்த இஸ்முகளை ஓதி 'துஆ' இறைஞ்சித் தம் துயர் நீங்கப் பெற்றதாகவும் ஆன்றோர்கள் பலர் கூறியுள்ளனர்.

(அல்லாஹ்வை விளித்து அவனை ஜபிக்குங்கால் அவனின் ஒவ்வொரு பெயருக்கு முன்பும் 'யா' என்ற விளிச் சொல்லை சேர்த்துக் கொள்ள வேண்டும். அந்த அந்த இஸ்முகளின் எழுத்துக்களுக்கான எண்ணிக்கையின்படி அவற்றை ஓதிவருதல் நலம். அந்த எண்ணிக்கை அவற்றின் அருகில் பொறிக்கப்பட்டுள்ளது. எந்த இஸ்மை அதிகமாக ஓதி வருகிறாரோ அத்தகுதியில் இறைவன் தஜல்லியாகி ஓதுபவரின் தகுதிக்குத் தக்க வண்ணம் அருள்பாலிக்கிறான்.)

## அல்லாஹ் (99)

اَللّٰهُ

அல்லாஹ்வின் முழு முதற்பெயராகிய இதுவே இஸ்முல் அஃலம் என்று கூறப்படும். உள்ளத்தை வேறு எங்கும் சிதறவிடாது அல்லும் பகலும் அயராது அல்லாஹ், அல்லாஹ் என்று ஜபித்துக் கொண்டிருக்கும் மெய்ஞ்ஞானிகள் தாம் ஃபனா நிலையை (அதாவது தம்மை மறந்து அல்லாஹ் அளவில் தம்மை அழித்துகொள்ளும் நிலையை) எய்துகின்ற

னர். பெறுதற்கரிய பேறுகளில் எல்லாம் இது மிகப்பெரும் பேறாகும். எனவே தான் குணங்குடியாரும 'அல்லாஹூ என்னுங்கள் சதாகாலமும் அல்லாஹூ என்னுங்கள்' என்று கூறிச் சென்றார். இதனை ஒருவர் அல்லும் பகலும் வாயும் உள்ளமும் ஒன்றி ஜபித்துக் கொண்டிருப்பின் உள்ளம் தெளிவடையும். நல்ல முன்னறிவிப்புக் கனவுகள் தோற்றமளிக்கும். அவரின் அலுவல்கள் அனைத்தையும் அல்லாஹ் மேற்கொண்டு விடுவான். அவர் இறைநேசர்களின் படித்தரத்தை நோக்கிச் சென்று கொண்டிருப்பார்.

## துன்பம் அகல

இதனை ஒருவன் ஜும்ஆ தொழுகையைத் தொழுதபின் மனமொன்றி 200- தடவை ஓதின் அவனுடைய துன்பங்கள் அகலும்.

## தீரா நோய் நீங்க, பேய் நீங்க

இதனை நோயாளியின் மீது 66 தடவை ஓதி ஊதின் தீராத நோயும் தீரும். நோயாளி, இறப்பின் பிடியிலிருந்து காக்கப்படுவான். 66 தடவை ஒரு காகிதத்தில் எழுதி நோயாளிக்கு தாயத்தாகவும் அணிவிக்கலாம். இவ்விதமே எழுதி பேய்பிடித்தவர்களுக்கு தஃவீஸ் எழுதிக் கட்டினால் பேய் நீங்கும்.

## மதிப்பும் மாண்பும் எய்த

இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## குளிர் நீங்க

குளிர் காலத்தில் இதனை எழுதி, ஒருவன் தன்னுடன் வைத்துக் கொளின் அவன் குளிரின் தாக்குதலில் நின்றும் காக்கப் பெறுவான்.

## கஷ்பு ஏற்பட

ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் இதனை ஒருவன் நூறு தடவை வழக்கமாக ஓதிவரின் அவனுடைய உள்ளத்தில் ஞானோதயம் (கஷ்பு) ஏற்படும்.

## ஷைத்தான் அகல

இதனை ஒரு பீங்கானில் இடம் உள்ள மட்டும் எழுதி அதனைத் தண்ணீரில் அழித்து அத்தண்ணீரைப் பேய் பிடித்தவன் முகத்தில் அடிப்பின் அந்தப் பேய் அவனை விட்டு அகலும். முப்பத்து மூன்று ஆண்டு காலமாகப் பேய் பிடித்திருந்தவனுக்கு ஒருவர் மூன்று நாட்கள் இஃதிகாப் இருந்து இவ்விதம் செய்ய அப்பேய் வெருண்டோடியது என பூனி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.

## பேய் நீங்க

பேய்ப் பிடிக்கப் பெற்றவர்களின் விரல்களில் இதனை எழுத வேண்டும்.

## சந்தேகம் நீங்கி, மன உறுதி ஏற்பட, ஈமான் உறுதி பெற

ஒருவன் ஆயிரம் தடவை 'யா அல்லாஹ்' என்று ஓதின் அவனுடைய சந்தேகங்கள் நீங்கும். மன உறுதியும் மன பலமும் ஏற்படும். ஈமான் உறுதி பெறும்.

## தேவை நிறைவேற

ஒருவன் தனிமையான இடத்தில் அமர்ந்து இதனை 5000 தடவை ஓதி தன் இரு கைகளையும் விண்ணை நோக்கி ஏந்தி தீனில் அனுமதிக்கப்பட்ட எந்தத் தேவையைப் பற்றியேனும், இறைவனிடம் இறைஞ்சின் அது இனிதே நிறைவேறும்.

## அற்புதங்கள் வெளியாக

''ஒருவன் இதனை நாளொன்றுக்கு 2360 தடவை வீதம் வழக்கமாக ஓதி வந்தால் அவனில் நின்றும் பல அற்புதங்கள் வெளியாகும்'' என்று 'நஹ்த்துல் பிதாயத்தி வதவ்ஸீஃபுன்னிஹாத்தி' என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஈமான் வலுவுற

இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## கடினமான காரியங்கள் இலேசாக

இதனை ஒரு தாளில் 3125 தடவை எழுதி அதனை அழித்த தண்ணீரைக் கொண்டு மாவில் உருண்டைகள் செய்து அவற்றைக் கடலில் எறிந்துவிட வேண்டும்.

## அனைத்து நோய்களும் அகல

*இதனைத் தூய்மையான தட்டைப் பீங்கானில் அறுபத்தாறு தடவை எழுதிக் கரைத்து நோயாளிக்குப் புகட்ட வேண்டும்.*

## வலிப்பு, இழுப்பு முதலிய நோய்கள் நீங்க

*இதனை ஒரு செம்புப் பாத்திரம் முழுவதும் எழுதி அதனை ஸைத்தூன் எண்ணெய்யினால் அழித்து அந்த எண்ணெய்யை உடலில் தடவ நலன் ஏற்படும்.*

## தீய எண்ணங்கள் அகல

*தீய எண்ணங்களால் துன்புறுவோர் இதனை ஒரு பளிங்குப் பாத்திரம் நிறைய எழுதி மழைத் தண்ணீரினாலோ ஜம்ஜம் தண்ணீரினாலோ கரைத்து அத்தண்ணீரைப் பல தடவை அருந்தின் தீய எண்ணங்கள் நீங்கி உள்ளம் தூய்மை பெறும்.*

**ரஹ்மான்** *(அருளாளன்)* اَلرَّحْمٰنُ

*(ஜமாலி 298)*

## நினைவாற்றல் பெற

*இதனை ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் 1000 தடவை ஒருவன் ஓதிவரின் அவன் நல்ல நினைவாற்றலைப் பெறுவான். உள்ளம் இருள் நீங்கி ஒளிபெறும்.*

## இறையருள் எய்தப் பெற; பிரச்சினை தீர

*இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் 298 தடவை ஓதிவரின் இறையருள் கிடைக்கும்; துன்புறுத்தும் பிரச்சினை தீரும்.*

## அதிகாரிகள், தீயோர் தீமை செய்யாதிருக்க

*ஒருவன் இதனை ஒரு காகிதத்தில் எழுதி அதன் மீது 'யா ரஹ்மான்' என்று 150 தடவை ஓதி ஊதி அதனை தஃவீஸாகக் கட்டி அணிந்து கொண்டு அதிகாரிகள், தீயோர்கள் ஆகியோரிடம் சென்றால் அவர்கள் அவனுக்கு யாதொரு தீங்கும் இழைக்க மாட்டார்கள்.*

## பிறரின் அநீதியிலிருந்து காவல் பெற

ஒருவன் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் நூறு தடவை ஓதி வரவேண்டும்.

## பொடு போக்கு அகல

இவ்விதமே செய்து வரவேண்டும்.

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட

இதனை அதிகமதிகமாக ஓதி இறைஞ்ச வேண்டும்.

## காய்ச்சல் நீங்க

இதனைத் தண்ணீரில் ஓதி ஊதி நோயாளியை அருந்தச் செய்ய வேண்டும்.

## இறைஞான இரகசியங்களை அறிய, துஆ ஏற்றுக் கொள்ளப்பட

இதனை ஒவ்வொரு எழுத்தாக எழுதி மழைநீர், ஜம்ஜம் நீர் அல்லது பன்னீரால் கரைத்துக் குடிப்பின் அவனின் உள்ளம் ஒளிபெற்று அவன் இறைஞான இரகசியங்களை அறிவான். இவ்வாறு ஒருவன் செய்துவரின் அவனின் 'துஆ' இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும், அவனின் நாட்டங்கள் நிறைவேறும்.

## எதிரிகள், வெறுப்புடையோர் ஆகியோரின் நட்பைப் பெற

ஒருவன் குளித்து, உளூ செய்து மனித சஞ்சாரமில்லாத இடத்தில் தனியாக அமர்ந்து இதனை நாலாயிரம் தடவை ஓதி அதன்பின் தன்னுடைய விரோதிகள் அல்லது தன்மீது வெறுப்புக் கொண்டோர் ஆகியோரிடம் சென்றால் அவர்களின் அன்பையும் நட்பையும் பெறுவான். இதில் எவ்வித ஐயமுமில்லை.

## பாவச்செயல் புரிவதில் நின்றும் காவல் பெற

ஒருவன் இதனை ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பின்பும் நூறு தடவை ஓதிவரின் அவன் பாவச் செயல் புரிவதில் நின்றும் காவல் பெறுவான்.

## இளகிய மனம் படைக்கப் பெற

கல்நெஞ்சம் படைத்தவன் இதனை இவ்விதமே ஓதிவரின் அவனின் உள்ளத்தில் இரக்கம் சுரந்து அது இளகப்பெறும்.

## இதயம், ஈரல் பற்றிய நோய் நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## உலகத் துன்பங்களிலிருந்து காவல் பெற

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதிவரின் அவனை உலகத் துன்பங்களிலிருந்தும் இறைவன் காத்தருள் புரிவான்.

## தீயோன் திருந்த

இதனை கஸ்தூரியாலும் குங்குமத்தாலும் எழுதித் தீய நடத்தையுள்ளவன், பண்பாடில்லாதவன் ஆகியோரின் இல்லத்தில் புதைத்துவைத்தால் அவர்கள் பண்பும் நேர்வழியும் பெறுவர்.

## பிறரின் அன்பையும் இரக்கத்தையும் பெற

இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## பிறர்கண்டு அஞ்ச

தன்னைப் பிறர் கண்டு அஞ்சவும் தன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடக்கவும் ஒருவன் விரும்பின் அவன் இதனைக் கஸ்தூரி, குங்குமம் கொண்டு ஒரு தாளில் ஐம்பது தடவை எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொள்ள வேண்டும்.

## அரசர்கள், அதிகாரிகள் ஆகியோரின் அன்பைப் பெற

ஒருவன் 'யா ரஹ்மானு குல்லி ஷையின் வ ராஹிமுஹு' என்பதை நாளொன்றுக்கு 500 விடுத்தம் மூன்று நாட்களுக்கு

ஓதியபின் நான்காவது நாள் அதனை உளூவுடன் 1000 தடவை ஓதியபின் அதனைத் தன் உள்ளங்கையில் ஓதி ஊதிக் கொண்டு தான் விரும்பும் நபரைச் சந்திக்க வேண்டும். அப்பொழுது அந்த இஸ்மை பதினைந்து தடவை மனத்திற்குள் ஓதிக்கொள்ள வேண்டும்.

## நாட்டங்கள் நிறைவேற

''யா ரஹ்மானுத் துன்யா வ ரஹீமா'' என்று 41 நாட்கள் அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

**ரஹீம்** *(அன்புடையோன்)* اَلرَّحِيْمُ
*(ஜமாலி 258)*

## உள்ளத்தில் அன்பு, இரக்கம் ஏற்பட

இதனை நாள்தோறும் நூறு தடவை ஒருவன் ஓதிவரின் அவனுடைய உள்ளத்தில் அன்பு, இரக்கம் ஆகியவற்றின் ஊற்றுக்கண்கள் திறக்கும்.

## செல்வம் பெற, பதவி உயர்வு பெற

இதனை நாள்தோறும் 500 தடவை ஓதிவரின் செல்வம் பெருகும்; பதவி உயர்வு கிடைக்கும்.

## தீய செயல் செய்யாது இறைகாவல் பெற

விரும்பத்தகாத செயல்களில் ஈடுபட்டு விடுவோம் என்று ஒருவன் அஞ்சின் அவன் தினமும் யா ரஹ்மான் யா ரஹீம் என்று நூறு தடவை ஒதி வரவேண்டும். 'யா அல்லாஹ், யா ரஹ்மான், யா ரஹீம், யா அர்ஹமர் ராஹிமீன்' என்று ஓதுவது சிறப்புடையதாகும்.

## ஆபத்துகள் அணுகாதிருக்க

தொழுகைக்குப் பின் இதனை நூறு தடவை வழக்கமாக ஓதிவரின் அவன் எல்லா ஆபத்துக்களிலிருந்தும் காவல் பெறுவான்.

## படைப்பினங்கள் அன்பு செலுத்த

மேற்கூறிய வண்ணம் அவன் ஓதிவரின் மனிதர் முதல் எறும்பு ஈறாகப் படைப்பினங்கள் அனைத்தும் அவன்மீது அன்பு செலுத்தும்.

## கத்தியாலோ, வாளாலோ, ஆயுதங்களாலோ தீமை ஏற்படாதிருக்க

இதனை ஒரு தாளில் 280 தடவை அழகாக எழுதி அதனைத் தஃவீஸ் செய்து ஒருவன் அணிந்து கொளின் அவனைக் கத்தியாலோ, வேறு ஆயுதங்களாலோ எதிரிகள் தீமை செய்ய இயலாது போய்விடும்.

## நீண்டநாள் நோய் நீங்க

யா அல்லாஹ், யா ரஹ்மான், யா ரஹீம் என்ற திக்ரை நீண்ட நாள் நோயுற்றவன் அஸருத் தொழுகைக்குப் பின் இருந்து மஃரிப் வரைக்கும் 41 நாட்கள் ஓதிவரின் நலன் பெறுவான் என்று காஜா முயீனுத்தீன் கஷ்ஸ்தி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.

## பெரும் நெருக்கடி தீரவும்

இவ்வாறே செய்ய வேண்டும் என்று ஆன்றோர்கள் கூறுகின்றனர்.

## பிரச்சினைகள் தீரவும் அலுவல்களில் வெற்றி காணவும்

ஒருவன் 'அர் ரஹீம்' என்று எழுதித் தன் தலையணை யின் கீழ் வைத்துப் படுத்துறங்கின் அல்லாஹ் அவனுடைய பிரச்சினைகள் தீர வழி காட்டுவான். அவன் தான் நாடியதை எய்தப் பெறுவான்.

இது மௌலானா ஷைகு முஹம்மது (ரஹ்) அவர்கள் மேற்கொண்ட முறையாகும்.

## பகைவர்களிலிருந்து காவல் பெற

ஒருவன் அர்ரஹ்மானுர் ரஹீம் என்பதை அதிகமதிகமாக ஓதவோ தஃவீஸ் எழுதி அணிந்து கொள்ளவோ செயின் அல்லாஹ் அவனுடைய பகைவர்களின் ஆபத்துகளிலிருந்தும் அவனைக் காத்தருள் புரிவான்.

## குழந்தை அழாதிருக்க, ஆபத்து நீங்க

இதனை 298 தடவை எழுதி தஃவீஸ் செய்து கழுத்தில் அணிவிக்க வேண்டும்.

## மரம் செடி, காய் காய்க்க, பழம் பழுக்க

ஒரு தட்டைப் பீங்கானில் 'அர் ரஹ்மானுர் ரஹீம்' என்பதை அதிகமதிகமாக எழுதி அதனைத் தண்ணீரால் அழித்து அந்தத் தண்ணீரை மரம், செடிகள் ஆகியவற்றின் வேரில் ஊற்றினால் அவை நன்கு காய்க்கும், பழம் பழுக்கும்.

## இருவரிடையே அன்பும் நேசமும் ஏற்பட

'அர் ரஹ்மானுர் ரஹீம்' என்பதை எழுதி அதனை அழித்த தண்ணீரை ஒருவர் மற்றொருவருக்கு அருந்தக் கொடுப்பின் அவர், அன்னார்மீது அன்பு செலுத்துவார். இருவரிடையே நேசம் பெருகும்.

## மறதி நீங்கவும் பாவம் தவிர்க்கவும்

'அர் ரஹ்மானுர் ரஹீம்' என்பதை ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பின்னும் அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## ஆபத்து அணுகாதிருக்க

ஒருவன் 'அர்ரஹ்மானுர் ரஹீம்' என்று ஒரு மோதிரத்தின் முகப்பில் செதுக்கி அணிந்து கொளின் அவன் எவ்வித ஆபத்துக்கும் ஆளாகாது [illegible]ர்.

## சகல அலுவல்களிலும் வெற்றி காண

இவ்விதம் செதுக்கப்பட்ட மோதிரத்தை ஒருவன் ஜும்ஆ தொழுத பின் அணிந்து கொளின் அவன்தான் மேற்கொண்ட அனைத்து அலுவல்களிலும் வெற்றி காண் பான்.

## ஒருவர் மீது மற்றவர் அன்பு செலுத்த

ஒருவன் மற்றொருவனை நேசிப்பானாயின் அவன் 'அர் ரஹ் மானுர் ரஹீம்' என்று எழுதி அத்துடன் தான் நேசிப்பவ னின் பெயர் அவனின் தாய் பெயர் ஆகியவற்றையும் எழுதித்

தஃவீஸ் செய்து அணிந்து கொள்வானாயின் அந்த நேசத்தை அவன் எய்தப் பெறுவான்.

## மக்களின் அன்பைப் பெற

அர் ரஹ்மானுர் ரஹீம்' என்பதை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## தலைவலி நீங்க

இதனைத் தனித்தனி எழுத்துக்களாக இருபத்தொரு தடவை எழுதி அணிந்து கொள்ள வேண்டும்.

## சிறுநீர் பெய்யும்பொழுது எரிச்சல் ஏற்படுவது நீங்க

ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பின்பும் 'பிஸ் மில் லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், லாஇலாஹ இல்லாஹுவர் ரஹ்மானுர் ரஹீம்' என்று ஏழு தடவை ஓதிவர வேண்டும்.

**மலிக்** *(அரசர்)* الْمَلِكُ

*(ஜமாலி 90)*

## அரசாங்கத் தொல்லை நீங்க

இதனை ஒருவன் காலையில் நூறு தடவை ஓதிவரின் அவன் அகத்தூய்மை எய்தப் பெறுவான்; அரசாங்கத்தால் ஏற்படும் தொல்லைகள் நீங்கும்.

## பிறரின் தேவையற்றிருக்க; சீமானாக

இதனை ஒருவன் வைகறைத் தொழுகைக்குப் பின் 122 தடவை ஓதிவரின் அவன் இறையருளால் பிறரின் தேவையற்றவனாகி விடுவான். சீமானாகிவிடுவான்.

## அரசன் அல்லது அதிகாரி தன் பதவியைக் காத்துக் கொள்ள

இந்த 'மலிக்' என்ற இஸ்முடன் இறைவனின் மற்றொரு பெயராகிய 'குத்தூஸ்' என்பதையும் சேர்த்து 'யா மலிக்குல் குத்தூஸ்' என்று வழக்கமாக ஓதி வந்தால் ஒருவனின் அரசாங் கம் அல்லது பதவி அவனிடம் தங்கும்.

## தீய இச்சைகள் அடங்க

சாதாரண மனிதர்கள் இதனை இவ்வாறு ஓதிவரின் அவர்கள் தீய இச்சைகளை அடக்கி ஆளும் வல்லபத்தைப் பெறுவர்.

## உள்ளம் ஒளிர

இதனை நண்பகலில் நூறு தடவை ஓதிவர வேண்டும்.

## ஆற்றல், அதிகாரம் அதிகமாக

இதனை அரசன் அல்லது அதிகாரி வழக்கமாக ஓதிவரின் அல்லாஹ் அவனுக்கு ஆற்றலையும், அதிகாரத்தையும் அதிகமாக நல்குவான். அவனுடைய எதிரிகளால் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது போய்விடும். இதே போன்ற பலன் மலிக்குன் கதீருன் என்று ஓதிவந்தாலும் கிடைக்கும்.

## வீடும் - வீட்டிலுள்ளோரும் எக்காலமும் நலமும் வளமும் பெற்று வாழ

மலிக் என்பதோடு கதீரு என்பதையும் சேர்த்து 'மலிக் குன் கதீருன்' என்று எழுதி அதனை வீட்டில் தொங்க விட்டால் அந்த வீடும் அந்த வீட்டிலுள்ளோரும் எக்காலமும் வளமும் நலமும் பெற்று இலங்குவர்.

## உத்தியோக உயர்வும் போட்டியில் வெற்றியும் ஏற்பட

இதனுடன் கதீர் என்பதையும் சேர்த்து 'யாமலிக் யா கதீர்' என்று அதிகமதிகமாக ஓதி வந்தால் உத்தியோகத்தில் உயர்வும், போட்டிகளில் வெற்றியும் கிட்டும். நாளொன்றுக்குக் குறைந்தது 404 தடவையாவது ஓதவேண்டும்.

## செல்வனாக

ஒருவன் இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் 130 தடவை வழக்கமாக ஓதிவரின் அவன் செல்வனாவான்.

## கண்ணியம் - மதிப்பு எய்தப் பெற

*கண்ணியம், மதிப்பு ஆகியவற்றை எய்தப் பெறும் நோக்குடன் இதனை அதிகமதிகமாக ஒருவன் ஓதிவரின் அவன் அவற்றை விரைவில் எய்தப் பெறுவான்.*

## அரசனும் தன் சொல் கேட்க

*''ஒருவன் 'அல் மலிக்' என்று 90 தடவை வழக்கமாக ஓதிவரின் அவன் இதயம் தெளிவு பெறுவான்; செல்வம் பெறுவான்; அரசனும் அவனின் சொற்கேட்டு நடப்பான்'' என்று ஷா அப்துர் ரஹ்மான் சிஷ்தி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.*

## ஜலாலிய்யத்தும் செல்வமும் எய்தப் பெற

*ஒருவன் இதனை நாளொன்றுக்கு 9000 தடவை ஓதிவரின் அவன் ஜலாலிய்யத்தும் (அதிகாரமும்) செல்வமும் எய்தப் பெறுவான்.*

## இறையன்மையை எய்தப் பெற

*''ஒருவன் இதனை இரவு பகலாக ஓதிவரின் அவன் அதிகாரத்தையும் செல்வத்தையும் விரும்பவில்லையாயின் அவன் இறையண்மையை எய்தப் பெறுவான்'' என்று மக் தூப் ஜஹானியான் முதலிய இறை நேசச் செல்வர்கள் கூறுகின்றார்கள்.*

## [illegible]ம் நிறைவேற

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

## இறைஞானம் எய்தப் பெற

*இதனை அதிகமாக ஓதி வருபவன் இறைஞானம் எய்தப் பெறுவான்.*

## மறதியும் பொடுபோக்கும் நீங்க, உளம் தூய்மையுற

*இதனை ஒருவன் நாள்தோறும் நண்பகல் நேரத்தில் நூறு தடவை ஓதின் மறதியும் பொடுபோக்கும் நீங்கும், உளம் தூய்மை பெறும்.*

**குத்தூஸ்** *(தூயன்)* اَلْقُدُّوْسُ

*(ஜமாலி 170)*

## வானவர்களின் நற்பண்பு பெற

*ஜும்ஆ தொழுதபின் இதனை ஒருவன் ரொட்டியில் எழுதி உண்பின் அவன் வானவர்களின் நற்பண்புகளை எய்தப் பெறுவான்.*

## எவருடைய உதவியும் தேவைப்படாதிருக்க

*இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.*

## நாட்டம் நிறைவேற

*இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவரின் நாட்டங்கள் நிறைவேறும்.*

## பேய் பிசாசுகள் அணுகாதிருக்க

*ஒருவன் முற்பகலில் அதிகமாக ஓதிவரின் அவனைப் பேய்பிசாசுகள் அணுகா.*

## எதிரிகளை பயமுறுத்த; பிசாசு நீங்க

*இத்துடன் 'ஸுப்பூஹுன்' என்று சேர்த்து ஸுப்பூஹுன் குத்தூஸுன் என்று ஓதிப் போர்க்களத்தின் நடுவே நின்று போர் செய்யின் எதிரிகள் திடுக்குற்று விடுவர். இதனை 264 தடவை ஓதித் தண்ணீரில் ஊதிப் பேய் பிடித்தவர்கள் மீது தெளித்தால் அல்லது அவர்களுக்குப் புகட்டினால் பேய் வெருண்டோடும்.*

## கவலை நீங்க

*'ஸுப்பூஹுன் குத்தூஸுன் என்று வழக்கமாக ஓதிவரின் ஒருவனைப் பிடித்த கவலைகள் நீங்கும். ஸுப்பூஹுன் குத்தூஸுன் ரப்புல் மலாயிக்கத்தி வர்ரூஹ் என்று ஒரு ரொட்டித் துண்டில் எழுதி ஜும்ஆ தொழுகைக்குப் பின் 264 தடவை ஓதி ஊதி புசித்தால் இறைவன் அவனை மறைவான*

*ஆபத்துகளிலிருந்து காத்தருள் புரிவான். வணக்கம் புரிவதற் கான உற்சாகம் அவனுக்கு அதிகப்படும்.*

*ஒருநாள் இப்ராஹீம் (அலை) தம் ஆட்டுக்கிடைகளின் நடுவே வீற்றிருக்கும் பொழுது ஒரு வானவர் மனித உருவில் வந்து ஸுப்பூஹுன் குத்தூஸுன் ரப்புனா வரப்புல் மலாயிக் கத்தி வர்ரூஹ் (துதிக்கப்பட்டோன், தூயோன் எங்கள் இறை வன், அவன் வானவர்களுக்கும் ஆன்மாக்களுக்கும் இறை வன்) என்று கூற அதனை மீண்டும் கூறுமாறும் தம் ஆட்டுக்கி டைகளில் பாதியைத் தருவதாகவும் சொன்னார்கள், அண் ணல். அவர் அவ்விதமே ஓத, மீண்டும் அதனை ஓதுமாறும் தம் ஆட்டுக்கிடைகளில் மறுபாதியைத் தருவதாகவும் கூறி னர், அண்ணல். அவ்விதமே அவர் செய்ய மீண்டும் அதனை ஓதுமாறும் தம்மையே அவருக்கு அடிமையாக்கிக் கொள்வ தாகவும் கூறினர். அவ்விதமே அவர் செய்ய இப்ராஹீம் (அலை) அவர்கள் தம்மை அடிமையாக்கிக் கொண்டனர். அப்பொழுது இறைவன் அவர்களுக்கு கலீல் (நண்பர்) என்ற பட்டத்தை வழங்கி அவர்களைக் கௌரவித்தான்.*

## மனம் தெளிவடைய

*இதனை ஒவ்வொரு நாளும் உச்சி வேளையில் 100 தடவை ஓதி வரவேண்டும்.*

## மனத்திலும் உடலிலும் உள்ள எல்லா முஸீபத்துகளும் நீங்க

*இதனை இரவு 3 மணிக்குப்பின் 1000 தடவை ஓதிவர வேண்டும்.*

## எதிரிகளிடமிருந்து பாதுகாவல் பெற

*ஒருவன் எதிரிகளிடமிருந்து பயந்து ஓடும் வேளையில் இதனை ஓதின் அவனை இறைவன் காத்தருள் புரிவான்.*

## பயணத்தில் களைப்பேற்படாதிருக்கவும் பிறரின் தேவையற்றிருக்கவும்

*ஒருவன் இதனை பயணத்தின்போது அதிகமாக ஓதின் அவனுக்குப் பயணக்களைப்போ, பிறரின் தேவையோ ஏற் படா.*

### மூளை சுறுசுறுப்படைய

*இதனைப் பீங்கானில் எழுதிக் குடிக்க வேண்டும்.*

### உள்ளம் வெளிச்சம் பெற

*இதனை அதிகமதிகம் ஓதவேண்டும்.*

### பிறர் தன்னைக் கண்டு அஞ்ச

*இதனை வெள்ளைத்தாளில் கஸ்தூரி குங்குமப்பூவால் எழுதித் தன்னிடம் வைத்துக் கொள்ள வேண்டும்.*

### எதிரியும் நட்பாளனாக

*இதனை 319 தடவை ஓதி இனிப்புப் பண்டத்தில் ஊதி எதிரிக்குக் கொடுப்பின் அவன் நண்பனாக மாறிவிடுவான்.*

### தான் விரும்பும் ஒருவரை வசீகரிக்க

*இதனை இஷாவுக்குப்பின் அதிகமதிகமாக ஓதி வர வேண்டும்.,*

**ஸலாம்** *(குற்றம் குறைகள் இல்லாதவன்)* اَلسَّلَامُ

*(ஜமாலி 131)*

### மனம் அமைதி பெற

*இதனை வைகறைத் தொழுகைக்குப்பின் நியமமாக ஓதிவந்தால் மன அமைதி ஏற்படும்.*

### சகல ஆபத்துக்களை விட்டும் ஸலாமத் பெற

*இதனை நாள்தோறும் 524 தடவை ஓதிவர வேண்டும்.*

### நோய் அகல

*இதனை நோயாளியின் தலையில் கையை வைத்து 120 தடவை ஓதி ஊத வேண்டும். அல்லது தண்ணீரில் ஓதி ஊதிக் கொடுக்க வேண்டும்.*

### பயம் அகல

*இதனைத் தொடர்ந்து ஓதி வருபவனை எத்தகைய பயமும் பீடிக்காது.*

## எதிரியும் நேசனாக

இதனை ஓர் இனிப்புப் பண்டத்தில் 319 தடவை ஓதி ஊதி எதிரியிடம் உண்ணக் கொடுப்பின் அவன் நேசனாகி விடுவான்.

## கல்வியில் முன்னேற்றம் அடைய

இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் வழக்கமாக ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.

## காசநோய் அகல

'அஸ்ஸலாமுல் முஃமின்' என்று முந்நூறு தடவை ஓதி இனிப்புப் பண்டத்தில் ஊதி உண்ண வேண்டும்.

## கோழையும் வீரனாக

இதனைத் தண்ணீரில் ஊதி அருந்தச் செய்ய வேண்டும். இஃது இஸ்முல் அஃலம் என்றும் கூறப்படுகிறது.

**முஃமின்** (அமைதி அபயம் நல்குபவன்) اَلْمُؤْمِنُ

(ஜமாலி 136)

## தனக்கும் தன் பொருளுக்கும் பாதுகாவல் பெற

ஒருவன் இதனை நாள்தோறும் முப்பத்தாறு தடவை ஓதிவரின் அவனுக்கோ அவனுடைய பொருளுக்கோ யாதொரு அபாயமும் ஏற்படாது. அவனை ஷைத்தானும் அணுக அஞ்சுவான்.

## பயணிகள் பயம் நீங்கப் பெற

பயணிகள் பயங்கரமான இடங்களில் பயணம் செய்யும் பொழுது இத்துடன் ஸலாமு என்பதைச் சேர்த்து ஸலாமு முஃமினு என்று அதிகமாக ஓதின் பயம் நீங்கப் பெறுவதுடன் எவ்வித ஆபத்துமின்றி ஸலாமத்தாக இல்லம் சேர்வார்கள்.

## படைப்பினங்கள் அனைத்தும் கீழ்ப்படிய

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதின் மனிதர்கள் மட்டுமல்லாமல் படைப்பினங்கள் அனைத்தும் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும். அவற்றின் மீது அவன் ஆதிக்கம்

செலுத்தும் தகுதி பெறுவான். இதனை ஒருவன் எழுதித் தன்னுடன் வைத்துக் கொளினும் இப்பயனை எய்தப் பெறுவான்.

## வெளிரங்க, அந்தரங்க செல்வங்கள் பாதுகாக்கப் பெற

*ஒருவன் இதனை அதிகமாக ஓதவோ, எழுதித் தன்னுடன் வைத்துக் கொள்ளவோ செய்யின் அவனுடைய வெளிரங்க அந்தரங்கச் செல்வங்கள் அல்லாஹ்வின் அடைக்கலத்தில் இருக்கும். அவற்றை ஷைத்தானால் வெற்றிகொள்ள இயலாது.*

## நாவின் வீக்கம் குறைய

*ஒருவனின் நா வீங்கிவிடின் இதனை முந்நூறு தடவை ஓதி நாவில் ஊதச் செய்ய வேண்டும்.*

## ஷைத்தானின் தீங்கிலிருந்து காவல் பெற

*ஒருவன் இதனை எழுதித் தன்னுடன் வைத்துக் கொளின் ஷைத்தானால் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது போய்விடும்.*

## முஹைமின் *(பாதுகாவலன்)*

الْمُهَيْمِنُ

*(ஜமாலி 145)*

## நாட்டங்கள் நிறைவேற; மாண்பு பெற

*இதனை குளித்துவிட்டு ஒருவன் மன ஒருமையுடன் நூறு தடவை ஓதின் அவனுடைய நாட்டங்கள் இறையருளால் நிறைவேறும். துன்பம் தொலைந்து மகிழ்வு ஏற்படும். மாண்பும் மதிப்பும் எய்தப் பெறுவான்.*

## ஷைத்தான், மனிதர் ஆகியவர்களின் தீமையிலிருந்து காக்கப் பெற

*ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதவும் எழுதி அணிந்து கொள்ளவும் செய்யின் அவன், மனிதர், ஷைத்தான் ஆகியவற்றின் தீமைகளிலிருந்து காக்கப் பெறுவான்.*

## மறைவானவற்றை அறிய

*இதனை அதிகமதிகமாக ஓதிவரின் அல்லாஹ். அவனுக்கு மறைவான விஷயங்களை அறிவித்துக் கொடுப்பான்.*

## நடப்பவைகள் பற்றி முன் உணர்வு பெற

ஒருவன் இஷாத் தொழுகை தொழுதபின் வழக்கமாக இதனை 145 தடவை ஓதிவரின் உலகத்தில் நடக்கக் கூடிய காரியங்கள் பற்றி முற்கூட்டியே உள்ளுணர்வால் அறியப் பெறுவான்.

## அநியாயக் காரர்களிடமிருந்து பாதுகாப்புப் பெற

இதனை நாள்தோறும் வழக்கமாக 136 தடவை ஓதி வரவேண்டும்.

## நெருக்கடிகள் தீரவும் எண்ணங்கள் எளிதாக நிறைவேறவும்

இதனை வழக்கமாக ஓதிவர வேண்டும்.

## அகமும் புறமும் தூய்மை பெற

ஒருவன் குளித்துத் தூய்மை பெற்று உளூ செய்து தனித்ததோர் இடத்தில் இரண்டு ரகஅத் தொழுது இதனை மனமொன்றி நூறு தடவை ஓதின் அவனுடைய அகமும் புறமும் தூய்மை பெறும்.

## சுவனம் புக

'இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் சுவனம் புகுவார்' என ஷா அப்துர் ரஹ்மான் சிஷ்தி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.

**அஸீஸ்** *(மிகைத்தவன்)* اَلْعَزِيْزُ

*(ஜமாலி 91)*

## பிறரின் தேவையற்றிருக்க; சீமானாக

இதனை ஒருவன் 41 நாட்களுக்கு 41 தடவை வீதம் விடாது தொடர்ந்து ஓதிவரின் அவன் பிறரிடம் தேவையற்றவனாகி விடுவான்; சீமானாவான்.

## மழை பெய்ய

ஊரினர் ஒருங்குகூடி நின்று, இரவு மூன்று மணிக்கு இதனை 200 தடவை ஓதி இறைஞ்சின் இறையருளால் மழை பெய்யும்.

## பகைவரை அடக்க

யா அஸீஸுல் மனீஃஉல் காலிபு அலா ஜமீஇ அம்ரிஹி ஃபலா ஷைஅ யுஆதிலுஹு (தன் அலுவலில் மிகைத்தவன், விலக்குபவன், வல்லவன் அவனுக்கு நிகர் எவருமில்லை) என்று ஏழு நாட்கள் ஒருவன் ஓதி வருவானாயின் அவனுடைய பகைவனை இறைவன் ஒடுக்கி விடுவான்.

## மக்களால் மதிக்கப் பெற

இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் 41 தடவை வீதம் தொடர்ந்து நாற்பது நாட்கள் ஓதிவர வேண்டும். அல்லது, இதனை ஜும்ஆ தொழுகைக்குப் பின் கஸ்தூரி குங்குமப்பூவால் எழுதி நறுமணப் புகையிட்டு தன்னுடன் வைத்துக் கொள்ள வேண்டும்.

## எதிரிப்படை தோற்றோட

மேலும் போர் முனையில் மேற்கண்ட துஆவை எழுபது தடவை ஓதி எதிரிப்படையை நோக்கித் தன் கையால் சாடை செய்யின் எதிரிகள் தோற்றோடுவர் என்று சுஹ்ரவர்த்தி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.

## வறுமை நீங்க, வள வாழ்வு பெற; தலைமைத்தனம் பெற

ஒருவன் வைகறைத் தொழுகைக்குப் பின் இதனை 41 தடவை ஓதி வந்தால் வறுமை ஒழிந்து வளவாழ்வு எய்தப் பெறுவான். ஒவ்வொரு தொழுகைக்குப் பின் நூறு தடவை இதனை ஓதிவரின் விரைவில் வளவாழ்வு எய்தப் பெறுவான். தலைவனாவான்.

## பகைவர்களின் பிடியிலிருந்து நீங்கிக் கண்ணியம் பெற

'யா அஸீஸ் மின் குல்லி அஸீஸின் பி ஹக்கி யா அஸீஸ்' என்று ஓதின் ஒருவன் தன் பகைவரின் பிடியிலிருந்து நீங்கி கண்ணியம் பெறுவான்.

## எதிரியின் சக்தி கரைந்து நசிந்து போக

ஒருவன் தனிமையில் அமர்ந்து இதனை 6666 தடவை ஓதின் விரோதிகளின் மறைமுகமான எதிர்ப்புகள் இவனை வந்தணுகா, அவர்களின் சக்தியும் நசிந்து போகும்.

**கௌரவமும் மதிப்பும் உயர**

*இதனை அதிகமாக ஓதி வரவேண்டும்.*

**இழந்த மதிப்பை மீண்டும் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

**சுவனம் எய்தப் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் ஜன்னத்துல் பரீன் என்ற சுவனம் புகுவார்.*

**ஜப்பார்** *(ஆட்சி நடத்துவோன்)* اَلْجَبَّارُ

*(ஜமாலி 206)*

**தீயோரின் பொல்லாங்கு தீமை பயக்காதிருக்க**

*இதனை ஒருவன் காலையிலும், மாலையிலும் 206 தடவை ஓதிவரின் தீயோரின் பொல்லாங்கை விட்டும் காக்கப் பெறுவான்.*

**கௌரவமும், மதிப்பும் ஏற்பட**

*ஒருவன் இதனை வெள்ளி மோதிரத்தில் எழுதி அணிந்து கொளின் அவனுக்கு மக்களிடையே கௌரவமும் மதிப்பும் ஏற்படும்.*

**பிறர் தன்னைப் பற்றிப் புறம் பேசுவதைத் தடுக்க**

*ஒருவன் இதனை நாள்தோறும் 206 தடவை ஓதி வர வேண்டும்.*

**எதையும் தாங்கும் இதயம் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**பகைவரை அடக்க**

*இதனை ஜும்ஆவுக்குப்பின் 300 தடவை ஓத வேண்டும்.*

**அதிகாரத்தைக் காத்துக் கொள்ள**

*அரசர் அல்லது அதிகாரி தன் ஆட்சியையோ அதிகாரத்தையோ காத்துக்கொள்ள விரும்பின் இதனை அதிகமாக ஓதி வரவேண்டும்.*

## இழந்த உடல் வலிமையைப் பெற

*நோயால் உடல் நலிந்தவர்கள் இதனை கடுகு எண்ணெய்யில் 119 தடவை ஓதி ஊதி அதனை ஏழு நாட்கள் தொடர்ந்து உடலில் தேய்த்துக் கொள்ளவேண்டும்.*

## தலைவலி நீங்க

*இதனை ஏழுமுறை நெற்றியில் எழுதிக் கொள்ள வேண்டும்.*

## மற்றவர்கள் தன்னை மிகைக்காதிருக்க

*இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## பிள்ளைப் பேறில்லாதவர்கள் பிள்ளை பெற

*இஷாத் தொழுகைக்குப் பின் மூன்று பாதாம் பருப்புகளில் கணவன் இதனை மூவாயிரம் தடவை ஓதி ஊதி அவற்றில் இரண்டைத் தான் உண்டு மற்ற ஒன்றை மனைவியை உண்ணச் செய்ய வேண்டும். இவ்வாறு பதினொரு நாட்கள் செய்துவர வேண்டும்.*

## பிறர் பயப்பட

*பிறர் தமக்குப் பயப்பட வேண்டுமென்றும் தமக்கு எதிராக சூழ்ச்சி செய்யக் கூடாதென்றும் விரும்புபவர் இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## செல்வமும் அதிகாரமும் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் செல்வமும் அதிகாரமும் பெறுவார்.*

## முதகப்பிர் *(பெருமைக்குரியோன்)*

الْمُتَكَبِّرُ

*(ஜமாலி 662)*

## நன்மை, பரக்கத் ஏற்பட

*இதனை அதிகமாக ஓதிவரின் நன்மை, பரக்கத் ஏற்படும். செல்வமும் மதிப்பும் உயரும்.*

## நற்குழந்தை பிறக்க

*மனைவியை மருவுமுன் இதனை ஒருவன் பத்துத் தடவை ஓதிக் கொளின் அவனுக்கு இறையருளால் நற்குழந்தை பிறக்கும்.*

## பெரியோர்களைக் காணும் வாய்ப்புபெற

இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதிவரின் அவன் பெரியோர்களைக் காணும் வாய்ப்பினை எய்தப் பெறுவான்.

## தீய கனவு காணாதிருக்க

ஒருவன் இதனை நாளொன்றுக்கு 21 தடவை வீதம் ஓதிவரின் அவனுக்குத் தீக்கனவுகள் தோன்றா.

## எதிரியின் பயம் நீங்க

இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதி வந்தால் விரோதி யின் நா அவனைப் பற்றித் தீய வார்த்தைகள் பேசுவதை விட்டும் தடுக்கப்படும்.

## கண்ணியம் அதிகரிக்க, அதிகாரிகள் சாதகமாக, அநியாயக்காரன் அடங்க

இதை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும். அல்லது கழுத்தில் தாயத்தாக அணிந்து கொள்ள வேண்டும்.

## வேலை நலமாக நிறைவுற

ஒரு வேலையைத் துவங்குமுன் இதனை அதிகமதிகமாக ஓதித் துவங்கின் அந்த வேலை நன்மையாக நிறைவுறும்.

## வீண் பேச்சு நீக்கித் தனிமையில் இருக்க

வீண் பேச்சை நீக்கித் தனிமையில் இருக்க விரும்புவோர் இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## தலைவர்களும் ஒருவனுக்கு மரியாதையும் கௌரவமும் அளிக்க

இதனை ஒருவன் நாள்தோறும் 662 தடவை ஓதிவரின் அவனுக்கு ஊரின் பிரதான தலைவர்கள் கீழ்ப்படிவார்கள். அவனுடைய சொல்லுக்கு மதிப்பளிப்பார்கள்.

## ஆண் குழந்தை பிறக்க

இதனைப் பத்துத் தடவை ஓதியபின் ஒருவன் தன் மனைவியை மருவின் அவனுக்கு இறைவனருளால் ஆண் குழந்தை பிறக்கும்.

**காலிக்** *(படைப்பவன்)*
*(ஜமாலி 721)*

الْخَالِقُ

## உள்ளம் ஒளிர

*இதனை ஒருவன் நள்ளிரவில் பிறர் உறங்கும் பொழுது அதிகமாக ஓதின் அவனுடைய உள்ளம் ஒளிரும்.*

## மறுமை நாள் வரை நன்மை பெற

*மேலும் இறைவன் தன் வானவர்களை நோக்கி மறுமை நாள் வரை செய்த செயலின் நன்மைகளை இவனுக்கு எழுதுங்கள் என்று கூறுவான்.*

## ஆபத்திலிருந்து தப்ப

*இதனை நாள்தோறும் நூறு தடவை ஓதிவரின் ஆபத்திலி ருந்து பாதுகாப்பு ஏற்படும்.*

## கர்ப்பம் தரிக்க

*இதனை வெள்ளித்தாயத்தில் செதுக்கி அணிந்து கொண்டு மனைவியை மருவவேண்டும்.*

## ஆண் குழந்தை பிறக்க

*இதனைத் தினந்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண் டும்.*

## குழந்தை காக்கப் பெற

*இதனை எழுதிக் குழந்தையின் கழுத்தில் தஃவீஸாக அணிவிக்க வேண்டும்.*

## விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற

*இதனை நூறு தடவை ஓதிக் கொண்டு அதில் ஈடுபட வேண்டும்.*

## ஒருவனுக்காக வானவரும் இறைஞ்ச

*இதனை ஒருவன் வழக்கமாக ஓதிவரின் இறைவன் ஒரு வானவரைப் படைப்பான். அவர் இவனுக்காக உலக முடிவு நாள் வரை இறைஞ்சிக் கொண்டிருப்பார்.*

## முகம் வசீகரம் பெற்று ஒளிர

*வழக்கமாக இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## நோய்களுக்கான மருந்துகளையும் பரிகாரங்களையும் அறிய

*'காலிக் முஹ்யீ' என்ற திருப்பெயர்களை மருத்துவர்கள் அதிகமதிகமாக ஓதிவரின் அல்லாஹ் அவர்களுக்கு எல்லா வியாதிகளுக்கான மருந்துகளையும் பரிகாரங்களையும் அவர்கள் எதிர்பாரா வண்ணம் காட்டியருள்வான்.*

## காணாமற்போனவர் திரும்பி வரவும் காணாமற்போனது திரும்பக் கிடைக்கவும்.

*இதனை 5000 தடவை ஓதியபின் இறைவனிடம் இரு கரம் ஏந்தி இறைஞ்ச வேண்டும்.*

## வழி துலங்க

*திக்குத் தெரியாது தயங்குபவர்கள் இதனை அதிகமதிகமாக ஓதின் அவர்களுக்கு வழி துலங்கும்.*

## இலகுவாக அலுவல் முடிய

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

*எதிரி மிகைக்காமல் இருக்க*

*இதனை அதிகமதிகமாக ஓதிவரும் ஒருவனை அவனுடைய எதிரியால் ஒருபோதும் வெற்றி கொள்ள இயலாது.*

## அலுவல் செய்வதற்கான ஆற்றல் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் அலுவல் செய்வதற்கான ஆற்றலையும் உரத்தையும் எய்தப் பெறுவார்.*

**பாரிஉ** *(உண்டுபண்ணுபவன்)*

*(ஜமாலி 212)* اَلْبَارِئُ

## துன்பம் நீங்க

*இதனை நாளொன்றுக்கு நூறு தடவை வீதம் ஒருவன் ஏழு நாட்கள் தொடர்ச்சியாக ஓதிவரின் அவன் துன்பங்களிலிருந்து விடுதலை பெறுவான்.*

## மலடி பிள்ளை பெற

ஏழு நாட்கள் நோன்பு நோற்கவேண்டும். ஒவ்வொரு நாளும் நோன்பு திறக்கும் பொழுது இதனை இருபத்தியொரு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அத்தண்ணீரைக் கொண்டு நோன்பு திறக்க வேண்டும்.

## கப்ரில் தங்காது மேலான 'மர்த்தபா'வை எய்த

இதனை ஒருவன் நாளொன்றுக்கு நூறு தடவை வீதம் ஓதிவரின் அவனை இறைவன் கப்ரில் தங்க வைக்காது மேலான 'மர்த்தபா'வுக்குக் கொண்டு சென்று விடுவான்.

## நற்குழந்தை பெற

இதனை வெள்ளி இரவு 101 தடவை ஓதின் நற்குழந்தை பிறக்கும்.

## நன் மரணம் ஏற்பட

மேலும் நன் மரணம் ஏற்படும்.

## நாட்டம் ஈடேற

இதனை நாள்தோறும் 246 தடவை ஓதிவர வேண்டும்.

## உதவி புரிபவர் ஏற்பட

தனிமையாய் இருப்பவர் இதனைத் தொடர்ந்து ஓதி வந்தால் இறைவன் அவருக்கு ஓர் உதவியாளரை ஏற்படுத்துவான்.

## மருத்துவர்களிடம் அதிகமான மக்கள் வர

இதனை மருத்துவர் எழுதித் தம்முடன் வைத்துக் கொள்ள வேண்டும்.

## கப்ரின் வேதனை அணுகாதிருக்க

இதனை ஒருவன் நாள்தோறு 100 தடவை ஓதிவரின் அவனைக் கப்ரில் வேதனை செய்யப்பட மாட்டாது. அல்லாஹ் அவனைக் கப்ரில் தனிமையாக்கவும் மாட்டான்.

## அன்பு, நட்பு அதிகப்பட

ஒருவன் இதனை ஒரு ரோஜாப்பூவின் மீது 75 தடவை ஓதி ஊதித் தாம் நேசிக்கும் ஒருவரிடம் கொடுத்து அவர்

அதனை முகர்ந்தால் அதன் காரணமாக இருவரிடையே அன்பும் நட்பும் அதிகப்படும்.

## கண்நோய் நீங்க

'அந்நாஃபிஉல் பாரி' என்று 11 தடவை ஓதி கண்ணில் ஊத வேண்டும்.

## முஸவ்விர் *(உருவாக்குபவன்)* اَلْمُصَوِّرُ

*(ஜமாலி 336)*

## நூதன பொருள்களைக் கண்டுபிடிக்க

இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் அவன் நூதனப் பொருள்களைக் கண்டுபிடிக்கும் ஆற்றலைப் பெறுவான்.

## மலடு நீங்கி கருத்தரிக்க

மலட்டுப் பெண் ஏழு நாட்கள் நோன்பு நோற்று ஒவ்வொருநாளும் தண்ணீரால் நோன்பு திறக்குமுன், 'அல்பாரிஉ அல்முஸவ்விர்' என்று இருபத்தொரு தடவை ஓதிவிட்டு நோன்பு திறந்து கணவனுடன் மருவின் அவள் இறையருளால் ஏழு நாட்களுக்கு முன்பே கருத்தரிப்பாள்.

## துன்பம் அகல

இதனை நியமமாக ஓதிவரின் துன்பம் அகலும்.

## சாலிஹான குழந்தை பெற

ஒருவன் தன் படுக்கை விரிப்பில் அமர்ந்து இதனைப் பத்துத் தடவை ஓதியபின் மனைவியுடன் மருவின் சாலிஹான நற்குழந்தை பிறக்கும்.

## கஷ்டமான காரியம் இலேசாக

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## கடன் நீங்க

கடன் பட்டார் இதனை அதிகமதிகமாக ஓதி வந்தால் கடன் நீங்கும்.

## பிறரை வசியப்படுத்த

ஒருவன் உளூ செய்தபின் தன் வலதுகை கலிமா விரலால் யாமுஸவ்விர் என்று தன் நெற்றியில் எழுதிக்

*கொண்டு தான் விரும்பும் நபரைச் சந்திப்பின் அவர் வசியமா வார்.*

**கப்பார்** *(காரணத்தோடு மன்னிப்பவன்)* اَلْغَفَّارُ

*(ஜமாலி 281)*

## பாவமன்னிப்பு பெற

*இதனை ஒருவன் ஜும்ஆ தொழுகை தொழுத பின் நூறு தடவை ஓதின் இறைவன் அவனுடைய பாவங்களை மன்னித் தருள்வான்.*

## இரணம் அதிகரிக்க

*இதனை அவ்வாறு ஓதின் அவன் துன்பங்கள் நீங்கப்பெ றுவான். அவனுடைய இரணம் அதிகரிக்கும்.*

## பாவம் மன்னிக்கப் பெறவும் மக்கள் அன்பு செலுத்தவும்

ஒருவன் ஜும்ஆ தொழுகை தொழுதபின் இதனை ஆயிரம் தடவை ஓதவேண்டும். ஒவ்வொரு நூறு தடவைக் கும் ஒரு தடவை 'இக்பிர் துனூபி' என்று ஓதிக் கொள்ள வேண்டும். இவ்வாறு ஓதி முடிப்பின் அவனின் பாவங்கள் மன்னிக்கப் பெறுவதோடு மக்களும் அவன் மீது அன்பு செலுத்துவார்கள்.

## இறை மன்னிப்புப் பெற

*அஸர் தொழுதபின் 'யாகப்பார் இஃபிர்லீ' என்று நூறு தடவை ஓதிவரின் இறைவன் அவனுடைய பாவங்களைப் பொறுத்தருள்வான்.*

**கஹ்ஹார்** *(அடக்கி ஆள்பவன்)* اَلْقَهَّارُ

*(ஜமாலி 306)*

## எதிரிகளை அடக்க

*இதனை ஒருவன் சுப்ஹு சுன்னத் தொழுகைக்கும் ஃபர்ளுத் தொழுகைக்கும் நடுவே அதிகமாக ஓதின் அவனு டைய எதிரிகள் அடங்கிவிடுவர். இதனை ஒவ்வொரு ஃபர் ளுத் தொழுகைக்குப் பின்னும் 306 தடவை ஓத வேண்டும் என மௌலானா யஃகூப் சர்கீ (ரஹ்) கூறுகிறார்கள்.*

## உலகப் பற்று நீங்க

*மேலும் அவன் உலக ஆசாபாசங்களில் உழலாது இனிய அமைதி பெறுவான். அவனுக்கு அமைதியான இறப்பு கிடைக்கும் இது 'குத்புக்களின் அஸ்மாக்களில் ஒன்று' என்று கூறப்படுகிறது.*

## துன்பம், கவலை நீங்க

*ஒருவன் இதனை அதிகமாக ஓதின் அவன் துன்பம் கவலை நீங்கி மகிழ்ச்சியுறுவான்.*

## அல்லாஹ்வுடைய அன்பைப் பெற

*ஒருவன் இதனை அதிகமாக ஓதின் அல்லாஹ்வின் அன்பைப் பெறுவான்.*

## எண்ணங்கள் ஈடேறப் பெற

*ஒருவன் பள்ளியிலோ வீட்டிலோ அமர்ந்து தலையைத் திறந்த வண்ணம் இரு கரங்களை ஏந்தி 100 தடவை இதனை ஓதின் அல்லாஹ் அவனின் எண்ணங்களை நிறைவேற்றியருள்வான்.*

## பிறரின் கொடுமைகளிலிருந்து பாதுகாவல் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும். இதற்கும் மேலாக 'இன்னல்லாஹ ஹுவல்லதீ லைஸ கமிஃதிலிஹி ஷைஉன் வஹுவல் வாஹிதுல் கஹ்ஹார்' என்று ஓதிவரின் நிச்சயம் பலன் கிடைக்கும். இது சோதிக்கப்பட்டதாகும்.*

## கடின வேலை இலகுவாக

*கடின வேலையில் ஈடுபட்டுள்ளோர் இதனை நூறு தடவை ஓதிவரின் அவ்வேலை இலகுவாக முடிந்துவிடும்.*

## மனைவி கீழ்ப்படிந்து நடக்க

*சூனியம் செய்யப்பட்டதன் காரணமாக மனைவி கீழ்ப்படிந்து நடக்காதிருப்பின் இதனை ஒரு தட்டைப் பீங்கானில் எழுதி அருந்தச் செய்யவேண்டும்.*

**வஹ்ஹாப்** *(அதிகமாக வழங்குபவன்)* اَلْوَهَّابُ

*(ஜமாலி 14)*

## பிறர்பால் தேவையற்றிருக்க

இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் அவன் பிறரின் தேவையற்றவனாகி விடுவான். அவன் கண்ணியமும் பெறு வான். வறுமை நீங்கி வள வாழ்வும் பெறுவான்.

## பட்டினி, பசியிலிருந்து காவல் பெற

ஒருவன் இதனை அதிகமாக ஓதினாலோ அல்லது எழுதி வைத்துக் கொண்டாலோ அல்லது லுஹர் தொழுகையின் கடைசி சஜ்தாவில் நாற்பத்தொரு தடவை ஓதினாலோ அவ னுக்கு இறைவன் பட்டினி, பசியிலிருந்து வியக்கத்தக்க முறையில் நிவாரணமளிப்பான்.

## நாட்டம் ஈடேற

ஒருவன் நள்ளிரவில் வீட்டிலோ அல்லது பள்ளிவாச லிலோ மூன்று தடவை சஜ்தாச் செய்து நிமிர்ந்து அமர்ந்து கையைத் தூக்கி, தலையைத் திறந்த வண்ணம் இதனை நூறு தடவை ஓதின் அவனுடைய நாட்டம் நிறைவுறும்.

## காணாமல் போன பொருளை மீண்டும் பெற

இதனை அதிகமதிகமாக ஓத வேண்டும்.

## இரணம் அதிகப்பட

லுஹா தொழுகை தொழுதபின் சஜ்தாவின் ஆயத்தை ஓதி சஜ்தாவில் இதனை ஏழு தடவை ஓத வேண்டும்.

(வேறொரு முறை) 'லுஹா தொழுகை இரண்டு இரண்டு ரகஅத்தாக நான்கு ரகஅத்துகள் தொழுது ஸலாம் கொடுத்து பின் சஜ்தாவில் விழுந்து இதனை 104 தடவை ஓதவேண்டும். இறையருளால் இரணம் விரிவாகும். என ஷா அப்துல் அஸீஸ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள். அவகாசம் இல்லை யெனில் இதனை 50 தடவை ஓதினாலும் போதும் என்று அவர்கள் சொல்கிறார்கள். (மற்றுமோர் முறை) ஒருவன் புதன்கிழமை குளித்து உளூச் செய்து இரண்டு ரக்அத் லுஹா தொழுதபின் இதனை 1000 தடவை ஓதின் அவனுக்குக் கணக்கிலடங்காச் செல்வத்தை அல்லாஹ் கொடுப்பான்.

## பிறிதொரு முறை

வைகறைத் தொழுகைக்கு முன்னும் பின்னும் 300 தடவை இதனை வழக்கமாக ஓதி வரவேண்டும். இதனை

ஓதுவதற்கு முன் *11* தடவை ஸலவாத்தும் ஓதிய பின்னர் *11* தடவை ஸலவாத்தும் ஓதிக் கொள்ள வேண்டும். இவ்வி தம் செய்து வந்தால் இறையருளால் இரணம் அதிகப்படும்.

## தானும் தன் சந்ததிகளும் செல்வம் பெற்றுவாழ

ஒவ்வொரு நாளும் வைகறைத் தொழுகைக்குப் பின் 'யாவஹ்ஹாப்' என்று *1400* தடவை ஓதி வரவேண்டும். ஓதுவதற்கு முன்னும் பின்னும் *14* தடவைகள் வீதம் ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டும். இவ்விதம் ஒருவன் செய்துவரின் அவன் செல்வனாவான். அவன் மட்டுமல்லாது அவனின் சந்ததிகளும் செல்வந்தர்களாக வாழ்வர் என்று சில 'வலி'மார் கள் கூறுகிறார்கள்.

## துன்பம் நீங்க

ஒரு மைதானத்திற்குச் சென்று கையேந்தி யா வஹ்ஹாப் என்று நூறு தடவை இறைஞ்சின் துன்பம் நீங்கிவிடும் என யஃகூப் சர்கீ கூறுகிறார்கள்.

**ரஸ்ஸாக்** *(இரணமளிப்பவன்)* اَلرَّزَّاقُ

*(ஜமாலி 308)*

## இல்லத்தில் 'பரக்கத்' ஏற்பட, நோய் அணுகாதிருக்க

வைகறைத் தொழுகைக்கு முன் வைகறையின் துவக்கத் தில் அல்லது வைகறைத் தொழுகை தொழுத பின் இதனை இல்லத்தில் ஒவ்வொரு மூலையிலும் *10* தடவை ஓதி ஊதின் பரக்கத் ஏற்படும். நோய் அணுகாது. கிப்லாவை நோக்கி இருந்து வலது பக்கத்திலிருந்து துவங்கி ஊத வேண்டும்.

## துன்பம் நீங்கி இரணம் பெற

ஒருவன் ஜும்ஆ தொழுகை தொழுதபின் இதனை வழக்கமாக *1232* தடவை ஓதிவரின் அவனுடைய துன்பம் நீங்கும். இரணம் விரிவாகும்.

## கிள்ரு (அலை) அவர்களை தரிசிக்க

ஒருவன் தனித்ததோர் இடத்தில் அமர்ந்து இதனை ஆயிரம் தடவை வழக்கமாக ஓதிவரின் இன்ஷா அல்லாஹ் அவன் கிள்ரு (அலை) அவர்களைத் தரிசிக்கும் பேறுபெறு வான். ஆனால் ஒரு நிபந்தனை, அவனுடைய சம்பாத்தியம் 'ஹலால்' ஆனதாக இருக்க வேண்டும்.

**பத்தாஹ்** *(திறப்பவன்)* اَلْفَتَّاحُ

*(ஜமாலி 489)*

## நாட்டம் நிறைவேற, இரணம் அதிகரிக்க, கவலை நீங்க

*வைகறைத் தொழுகைக்குப் பின் ஒருவன் இதனைத் தன் கையை நெஞ்சிலே வைத்துக் கொண்டு 71 தடவை ஓதின் அவனுடைய உள்ளம் தூய்மையுறும். நாட்டங்கள் நிறைவேறும், இரணம் அதிகரிக்கும். கவலை நீங்கும்.*

## சிரமமான வேலை நிறைவேற

*இஷாத் தொழுகைக்குப் பின் யாபத்தாஹ் என்று நூறு தடவை ஓதி வரவேண்டும் என யஹ்யா மனேரி (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்.*

## தொட்டது துலங்க

*ஒருவன் இதனை நாள்தோறும் 450 தடவை ஓதியபின் இதா ஜாஅ நஸ்ருல்லாஹி சூராவை ஏழு தடவை ஓதி வந்தால் அவன் தொட்டது துலங்கும் என இப்னு அரபி (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்.*

## அலுவல்களில் வெற்றி பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

**அலீம்** *(மிக அறிபவன்)* اَلْعَلِيْمُ

*(ஜலாலி 150)*

## ஞானம் ஏற்பட

*இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் அவனுக்கு தகுந்த அளவு கல்வி ஞானம் ஏற்படும். இறைவனின் இரகசியங்களில் ஒன்று தனக்குத் தெளிவாக வேண்டுமென்ற நோக்குடன் ஒருவன் இதனை ஓதிவரின் அது அவனுக்குத் தெளிவாகும்.*

## மறைவானவற்றை அறிய

*ஒருவன் மறைவான விஷயம் ஒன்றை அறிய விரும்பின், 'யா அலீமு யா ஆலிமல் கைபி' என்று 100 தடவை ஓதிவிட்டு*

உறங்கின் அவன்தான் விரும்பிய மறைவான விஷயத்தை அறிந்து கொள்வான்.

## ஞானி ஆக

தொழுகைக்குப் பின் நூறு தடவை யா அலீமு யா ஆலிமல் கைபி என்று வழக்கமாக ஓதி வரவேண்டும்.

## வெறி நாய் கடித்தவனுக்கு

'அலீமுன், ஹகீமுன்' என்ற இஸ்முகளை எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்ய வேண்டும்.

## கொடிய ஜந்துக்களின் விஷம் இறங்க

இதனை எழுதி ஸைத்தூன் எண்ணெயில் கரைத்துக் குடிக்கச் செய்ய வேண்டும்.

## பாவ மன்னிப்புப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவரின் பாவங்களை அல்லாஹ் மன்னித்தருள்வான்.

## துவங்கும் அலுவலின் நன்மை, தீமையை அறிய

ஒருவன் தான் துவக்கவிருக்கும் அலுவலின் நன்மை; தீமையை அறிய விரும்பின் அவன் வெள்ளி இரவு இரண்டு 'ரக்அத்' நஃபில் தொழுதபின் சஜ்தாவில் விழுந்து 'யா அலீம்' என்று நூறு தடவை ஓதிவிட்டு அதே இடத்தில் படுத்துறங்க வேண்டும். கனவின் மூலம் அதன் நன்மை, தீமை அறிவிக்கப் படும்.

## நாட்டங்கள் அனைத்தும் நிறைவேற

ஒருவன் உளுச் செய்து கானகம் சென்று அங்கு இரண்டு 'ரக்அத்' நஃபில் தொழுகை தொழுதபின் கிப்லாவை முன் னோக்கியவனாக இதனை ஆயிரம் தடவை ஓதின் அவனு டைய நாட்டங்கள் அனைத்தையும் அல்லாஹ் நிறைவேற்றிய ருள்வான்.

## நினைவாற்றல் பெற

இதனை அதிகமாக ஓதி வருபவர் நல்ல நினைவாற் றலை எய்தப் பெறுவர்.

## துன்பம், அபாயம் அணுகாமல் இருக்க

ஒருவன் இதனை நாள்தோறும் பன்னிரண்டு தடவை ஓதிவரின் அவன் இறை காவலில் இருப்பான்.

**காபிள்** *(கைப்பற்றுவோன்)* اَلْقَابِضُ

*(ஜலாலி 903)*

## உணவுத் துன்பம் ஏற்படாதிருக்க

இதனை ஒருவன் நாற்பது நாட்களுக்கு நாற்பது ரொட்டித் துண்டுகளில் எழுதி உண்டால் அல்லது நாற்பதுபிடி உணவில் ஓதி ஊதி உண்டால் அல்லது நாள்தோறும் ஓதி வந்தால் அவனுக்கு ஒரு போதும் உணவுத் துன்பம் ஏற்படாது.

## கப்ரின் துன்பம் அகல

இதனை நாள்தோறும் ஓதிவரின் கப்ரின் **வேதனையிலி**ருந்து காவல் பெறலாம்.

## உடலில் வேதனை, காயம் ஏற்படாதிருக்க

மேலே கூறிய வண்ணம் ரொட்டித் துண்டில் எழுதிச் சாப்பிடின் உடலில் காயமோ வேதனையோ ஏற்படாது.

## எதிரியை வெற்றி கொள்ள எதிரிக்கு உதவி கிடைக்காமல் போக

இதனை மூன்று நாட்கள் தொடர்ந்து ஓத வேண்டும்.

## வறுமை ஏற்படாதிருக்க

ஒருவன் உணவுண்ணும் பொழுது இதனை **ஓதின்** அவனை வறுமை அணுகாது.

## நரக நெருப்புத் தீண்டாமலிருக்க

ஒருவன் இதனை வழக்கமாக ஒவ்வொரு வேளைத் தொழுகைக்குப் பின்னரும் **ஓதிவரின் அவனை** நரக நெருப்பு தீண்டாது.

**பாசித்** *(விரிவாக்குபவன்)* اَلْبَاسِطُ

*(ஜமாலி 72)*

## இரணம் பெருக

*இதனை உணவுண்டபின் ஒருவன் 127 தடவை ஓதிவரின் அவனுடைய இரணம் விரிவாகும்.*

## பிறரின் அன்பைப் பெற

*ஒருவன் வைகறை நேரத்தில் இதனைப் பத்துத் தடவை ஓதிக் கையில் ஊதி முகத்தில் தடவிக் கொண்டால் அவனுக்குப் பிறரின் தேவை ஏற்படாது. அவன் மீது அனைவரும் அன்பு செலுத்துவர்.*

## ஆபத்து ஏற்படாதிருக்க

*இதனை ஒவ்வொரு நாளும் 72 தடவை ஓதிவர வேண்டும்.*

## எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருக்க

*பின் இரவில் 'யா பாஸித்' என்று இறைவனிடம் கையேந்தி இறைஞ்ச வேண்டும். எதிர்பாரா வண்ணம் இரணம் கிடைக்கும்.*

## செல்வனாக

*அ) ஒருவன் ஒவ்வொரு நாளும் லுஹா தொழுகைக்குப் பின் பத்துத் தடவை அல்லது நூறு தடவை ஓதி முகத்தில் தடவிக் கொள்வானாயின் அல்லாஹ் அவனைச் செல்வனாக்குவான்; அவன் பிறரின் தேவையற்றவனாகி விடுவான்.*

*ஆ) ஒவ்வொரு வேளைத் தொழுகைக்குப் பின்பும் இதனை ஒருவன் 72 தடவை வழக்கமாக ஓதிவரின் அவன் செல்வனாவான் என்று அஷ்ரப் அலீ தானவி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.*

## கண் ஒளிவு பெற

*விடிந்தெழுந்ததும் கண்களை மூடிய வண்ணமே கலிமா விரலால் எச்சிலைத் தொட்டு 'பாஸித்' என்று கூறி இமைகளின் மீது வழக்கமாகத் தடவி வரவேண்டும்.*

## எல்லாப் படைப்புகளும் ஒருவன் மீது அன்பு செலுத்த

*இதனை தினம் 288 தடவை ஓதி வர வேண்டும்.*

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதிவிட்டு இறைஞ்சின் அவனுடைய இறைஞ்சுதல் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.

## குடல் அனுபந்தம் நீங்க

குடல் அனுபந்தத்தால் துன்புறுவோர் 'யா பாஸித் யா கரீம்' என்று 500 தடவை தண்ணீரில் ஓதி ஊதி அருந்த நலன் ஏற்படும்.

## ஹாபிள் *(தாழ்த்துவோன்)* اَلْخَافِضُ

*(ஜமாலி 1481)*

## நாட்டம் நிறைவேற

இதனை ஐந்நூறு தடவை ஓதி இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்.

## அதிகாரிகள், அரசர்கள் அன்பைப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## அநியாயக்காரர்களிடமிருந்து பாதுகாவல் பெற

இதனை ஒவ்வொரு நாளும் எழுபது தடவை ஓதி வரவேண்டும் என்று மௌலானா யஃகூப் சர்கீ கூறுகின்றனர்.

## எதிரிகளை வெற்றிகொள்ள

இதனை ஒருவன் ஏழாயிரம் தடவை ஓதின் அவன் தன் எதிரிகளை வெற்றி கொள்வான். ஐந்நூறு தடவை ஓதிக் கொண்டு வெளியில் செல்லின் பகைவர்களால் அவனுக்கு யாதொரு தீங்கும் ஏற்படாது.

## துன்பம் நீங்கித் தேவை நிறைவேற

இதனை ஒருவன் நாள்தோறும் ஐந்நூறு தடவை ஓதிவரின் அவனுடைய தேவைகளை அல்லாஹ் நிறைவேற்றி, அவனுடைய துன்பங்களை நீக்கிவிடுவான்.

## எதிரிகளை வெற்றிகொள்ள (மற்றுமோர்முறை)

ஒருவன் மூன்று நாட்கள் நோன்பு நோற்று நான்காவது நாள் 'யா ஹாஃபிளுர் ராஃபிஉ' என்று எழுபது தடவை ஓதின் அவன் தன்னுடைய எதிரியை வெற்றி கொள்வான்.

**ராபிஃ** *(நிலையை உயர்த்துவோன்)* الرَّافِعُ

*(ஜலாலி 351)*

## ஆபத்து நீங்கப் பெற

இதனை ஒருவன் நாள்தோறும் நூறு தடவை ஓதிவரின் அவனுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது.

## செல்வம் பெருக; உயர் அந்தஸ்து கிட்ட

இதனை நாள்தோறும் நண்பகலில் லுஹருக்குப்பின் நூறு தடவை ஓதின் செல்வம் பெருகும். கண்ணியமும் ஏற்படும். துன்பம் நீங்கும். உயர் பதவி கிட்டும். அநீதிக்காரர் களிடமிருந்து அச்சம் தீர இதனை நாள்தோறும் எழுபது தடவை ஓதி வரவேண்டும்.

## பிறரின் தேவையற்றவனாக, மாண்புமிக, செல்வமும் அதிகரிக்க

இதனைப் பௌர்ணமி நள்ளிரவில் நூறு தடவை ஓத வேண்டும்.

## எண்ணங்கள் ஈடேற

ஒருவன் இதனை நாள்தோறும் இருபது தடவை வழக்க மாக ஓதின் அவனுடைய எண்ணங்கள் நிறைவேறும்.

## படைப்புகளின் நடுவே மேலான அந்தஸ்து அடைய

ஒருவன் இதனை வெள்ளிக்கிழமை இரவு மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையில் 140 தடவை ஓதி வந்தால் படைப்புக ளின் நடுவே மேலான பதவியை அடைவான்.

## செல்வமும் நல்லொழுக்கமும் பெருக

இதனை இரவில் 3 மணி முதல் 5.30 மணிக்குள் 1000 தடவை வழக்கமாக ஓதி வந்தால் செல்வமும் நல்லொழுக்க மும் பக்தியும் பெருகும் என்றும் இப்பலன் உடன் அவனுக் குக் கிட்டும் என்றும் உறுதியாகக் கூறப்படுகிறது.

**முஇஸ்ஸு** *(கண்ணியப்படுத்துவோன்)* الْمُعِزُّ

*(ஜலாலி 117)*

## மனிதர்களிடம் மாண்பு பெற

*இதனை ஒருவன் வெள்ளி, திங்கள் இரவு மஃரிபுத் தொழுகைக்குப்பின் 140 தடவை ஓதின் அவன் மனிதர்களி டையே மாண்பு பெறுவான். அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் அவன் பயப்பட மாட்டான்.*

## மாண்பு மிக, எதிரி சரணாகதியடைய, நாட்டங்கள் ஈடேற

*இதனை இஷாவுக்குப்பின் குறைந்த அளவு 140 தடவை யாவது வழக்கமாக ஓதிவர வேண்டும்.*

**முதில்லு** *(இழிவடையச் செய்பவன்)* اَلْمُذِلُّ

*(ஜலாலி 770)*

## பொறாமைக்காரர்களின் தீங்கு அணுகாதிருக்க

*இதனை ஒருவன் சஜ்தாவில் 75 தடவை ஓதி இறைவனே! என்னை இன்னாரின் பொல்லாங்கிலிருந்து காப்பாற்று' என்று இறைஞ்சின் அவன் பொறாமைக்காரர்களின் பொல் லாங்குகளை விட்டும் காக்கப் பெறுவான். 77 தடவை ஓதினால் நலம்.*

## கடமையைச் சரிவர செய்ய

*ஒருவன் தன் கடமையை சரியாக நிறைவேற்ற விரும் பின் இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும். அதற்கான ஆற்றலை அவன் எய்தப் பெறுவான்.*

## குறிப்பிடப்பட்ட எதிரியிடமிருந்து மீட்சி பெற

*ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதி, பகைவனின் பெயரைச் சொல்லி அவனின் தீமைகளிலிருந்து காத்தருள் புரியுமாறு இறைஞ்சின் அவனுடைய இறைஞ்சுதல் இறைவ னால் ஏற்றுக் கொள்ளப்படும்.*

**ஸமீஉ** *(செவியேற்பவன்)* اَلسَّمِيْعُ

*(ஜலாலி 180)*

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட

*இதனை ஒருவன் வியாழனன்று ளுஹர் தொழுகைக்குப் பின் ஐந்நூறு தடவை ஓதின் அவனுடைய இறைஞ்சுதல்*

இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும். இடையில் எவருடனும் பேசக்கூடாது.

## இறைவனின் தனிப்பெரும் அருளைப் பெற

*இதனை வியாழனன்று வைகறைத் தொழுகையில் சுன்னத்துக்கும் ஃபர்லுக்கும் இடையில் நூறு தடவை ஓதின் அவன் இறைவனின் தனிப்பெரும் அருளைப் பெறுவான்.*

## மிருகங்களின் சப்தங்களின் பொருளை விளங்க

*'ஸமீஉன் பஸீருன்' என்று அதிகமாக ஓதிவருபவர் மிருகங்கள் பறவைகள் ஆகியவற்றின் சப்தங்களின் பொருள் விளங்கிக் கொள்வார்.*

## இந்திரிய ஸ்கலிதம் ஏற்படாதிருக்க

*அஸ்ஸமீஉல் முமீத் என்பதை வலக்கையை இருதயத்தின் மீது வைத்துப் பதினோரு தடவை ஓதி விட்டுப் படுத்தால் அன்றிரவு ஸ்கலிதம் ஏற்படாது.*

## வானவர்களின் சப்தத்தைக் கேட்க

*'ஸமீஉன் பஸீருன்' என்று அதிகமதிகமாக ஓதி வருபவர் வானவர்களின் சப்தத்தைக் கேட்பர்.*

## செவிடு அகல

*காது மந்தமாக உள்ளவர்கள் 'ஸமீஉன் பஸீருன்' என்று எழுதி எண்ணெய்யில் போட்டுக் காதில் ஊற்றிவரின் செவிடு நீங்கும்.*

## நாட்டங்கள் நிறைவேற

*இதனை நாள்தோறும் 'ளுஹா' தொழுதபின் நூறு தடவை ஓதி வரவேண்டும்.*

## காது வலி நீங்க

*காது வலியால் துன்புறுவோரின் காதில் யாஸமீஉ என்று 27 தடவை ஓதி ஊதச் செய்ய வேண்டும்.*

## கண் பார்வை தெளிவு பெற

*கண் பார்வை மங்கலாகிக் கொண்டு வருவோர் யாஸமீஉ யா முஜீபு யா ஸமீஉத் துஆயி யா லதீஃபுல்லிமா யஷாஉ*

இஹ்ம்ஃபில் இலா பஸீர்' என்ற துஆவை அதிகமதிகமாக ஓதி இறைஞ்ச வேண்டும்.

**பஸீர்** *(பார்ப்பவன்)*

*(ஜமாலி 302)*

اَلْبَصِيْرُ

## நல்ல செயலாற்ற

இதனை ஒருவன் ஜும்ஆ தொழுகைக்கு முன்போ வைகறைத் தொழுகை சுன்னத்துக்கும் பர்லுக்கும் இடையிலோ நூறு தடவை ஓதின் அவனுடைய அகப்பார்வை திறக்கும். அவனிலிருந்து நல்ல செயல்கள் வெளியாகும். இறைகாவல் கிட்டும். அவன் இறைவனின் நேர் கவனிப்பில் இருப்பான்.

## அல்லாஹ்வுடைய அருட்பார்வை பெற

இதனை ஜும்ஆவின் சுன்னத் தொழுகைக்கும் குத்பாவுக்கும் இடையே நூறு தடவை ஓதி வரவேண்டும். (மற்றொரு முறை) இதனை வழக்கமாக ஒவ்வொரு ஃபர்ளு, சுன்னத் தொழுகைகளுக்கு நடுவில் ஓதி வரவேண்டும்.

## இறை உதவி பெற

இதனை வைகறைத் தொழுகையின் சுன்னத்துக்கும் பர்ளுக்குமிடையே நூறு தடவை ஓதி வரவேண்டும்.

## துர் மரணத்திலிருந்து காவல் பெற

ஒருவன் இதனை அஸர் தொழுகைக்குபின் ஏழு தடவை ஓதி வரவேண்டும்.

## கண் நோய் நீங்க

ஜும்ஆவின் முந்திய சுன்னத் தொழுகைக்கும் குத்பாவுக்கும் இடையிலுள்ள நேரத்தில் இதனை நூறு தடவை ஓதி இரண்டு கலிமா விரல்களிலும் உமிழ் நீரை எடுத்து அதில் ஊதி, இரு கண்களிலும் தடவிக் கொண்டு, ''இறைவனே! எனக்கு இந்த 'பஸீர்' என்ற உன் திருப்பெயரின் மாண்பினால் என் கண் நோயை அகலச் செய்வாயாக!'' என்று இறைஞ்சின் இறையருளால் கண் நோய் நீங்கும்.

**கண் பார்வை கூர்மையாக**

இதனை ஓதிக் கொண்டு கண்களுக்கு சுர்மா இடவேண்டும்.

**மன ஒளி பெற**

ஒருவன் இதனை ஜும்ஆத் தொழுகைக்குப் பின் நூறு தடவை ஓதின் அவனுடைய மனதில் ஒளி ஏற்படும்.

**அல்லாஹ்வுடைய திருப்பொருத்தத்தைப் பெற**

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை எய்தப் பெறுவர்.

**கண்ணேறு ஏற்படாதிருக்க**

இதனை எழுதிக் குழந்தையின் கழுத்தில் தஃவீஸாக அணிவிக்க வேண்டும்.

**தொத்து நோய் அணுகாதிருக்க**

அஸர் தொழுகைக்குப் பின் இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

**ஹகம்** (பகுத்தறிவாளன்) اَلْحَكَمُ

(ஜலாலி 68)

**வருத்தம் நீங்க**

ஒருவனுக்கு துன்பம் நேர்ந்த காலை இதனை ஓதின் அவன் துன்பம் நீங்கப் பெறுவான்.

**ஆத்ம இரகசியங்களை அறிய**

இதனைத் தூங்கும் வரை பல தடவை ஓதி விட்டுத் தூங்கின் ஆத்மீக இரகசியங்கள் பலவற்றை அறிய வரலாம்.

**அகப்பார்வை தெளிவாக**

இதனை வெள்ளிக்கிழமை நள்ளிரவில் அதிகமாக ஓதி வர வேண்டும்.

**பிறரின் தேவையற்றிருக்க**

இதனை ஐவேளைத் தொழுகைகளுக்குப் பின்னர் எண்பது தடவை வழக்கமாக ஓதி வரவேண்டும்.

**மக்களிடையே மாண்பு பெற**

இதனை ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் 68 தடவை ஓதி வர வேண்டும்.

**அரசுரிமை, தலைமைப் பதவி பெற**

இதனை அதிகமாக ஓதி வரவேண்டும்.

**பகைவரும், நேசராக; பொறாமையாளர் நட்புறவு கொள்ள**

இதனை அதிகமதிகமாக ஓதிவரின் பகைவரும் நேசரா வர். பொறாமைக்காரர்களும் நட்புறவு கொண்டாட முன்வரு வர்.

**அல்லாஹ்வுடைய அருளை எய்தப் பெற**

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

**நினைவாற்றல் அதிகப்பட; அறிவு கூர்மையாக**

இதனை மோதிரத்தில் எழுதி அணிந்து கொள்ள வேண் டும்.

**குழந்தை பேச**

இதனை எழுதிக் கரைத்துக் குழந்தைகளை அருந்தச் செய்ய வேண்டம்.

**அத்லு** *(நீதியுள்ளோன்)* اَلْعَدْلُ

*(ஜலாலி 104)*

**எதிர்பாராவண்ணம் இரணம் கிடைக்க**

ஒவ்வொரு தொழுகைக்கு பின்பும் இதனை வழக்கமாக ஓதிவர வேண்டும்.

**நற்செயல் புரிய; வழி ஏற்பட**

மேலே கூறிய வண்ணமே செய்து வரவேண்டும்.

**இம்மையின் தீங்கு அணுகாதிருக்க**

இதனை மஃரிப் தொழுகைக்குப்பின் வழக்கமாக ஆயி ரம் தடவை ஓதி வரவேண்டும்.

**பிறரின் இதயங்களை ஈர்த்து நிற்க, பிறர் தனக்கு வழிப்பட**

வெள்ளி இரவு இதனை 104 தடவை ஓதியபின் 21 ரொட்டித் துண்டுகளில் எழுதி அவற்றை உண்ண வேண்டும்.

## நெறி நீதி தவறா நீதிமானாக ஆக

இதனை ஒருவன் எண்ணிக்கையில்லாமல் அதிகமதிக மாக ஓதி வந்தால் இறைவன் அவனைத் தவறிலிருந்து காத்து நீதியாளனாக ஆக்கி விடுவான். இறைவனுக்குப் பயந்த நீதிபதிகள் அவசியம் ஓதி வரவேண்டிய இஸ்மாகும் இது.

## அதிகாரிகள் மதிக்க

இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.

## நீதி கிடைக்கப் பெற

ஒருவன் தனக்கு நீதி கிடைக்க விரும்பின் இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## அநியாயக்காரர்களின் கொடுமையிலிருந்து காக்கப் பெற

இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.

**லதீப்** *(உள்ளன்புடையோன்)* اَللَّطِيْفُ

*(ஜமாலி 129)*

அல்லாஹ்வின் திருப்பெயர்களில் இது தனிச்சிறப்பு வாய்ந்ததென்றும் துரிதமாகப் பலனளிக்க வல்லதென்றும் துன்பங்களில் இது பூரணமாக பலன் அளிக்கும் என்றும் தாருன் நஶீம் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## இரணம் அதிகரிக்க

இதனை ஒருவன் நாள்தோறும் 129 தடவை ஓதிவரின் அவனுடைய இரணம் அதிகப்படும். அவனின் அலுவல்கள் அனைத்தும் சிரமமின்றி நிறைவுறும்.

## பெண் மக்களுக்குத் திருமணம் நிகழ

குளித்து உளுச் செய்து இரண்டு ரக்அத் நபில் தொழுது விட்டு இதனை நூறு தடவை ஓதி இறைஞ்ச வேண்டும்.

## பசி, நோய், துன்பம், கவலை அகல, நாட்டம் நிறைவேற

இரண்டு ரக்அத் தொழுது நூறு தடவை இதனை ஓதி இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்.

### கடன் நீங்க

இவ்வாறே செய்து வரவேண்டும்.

### நினைவாற்றல் ஞானோதயம் ஏற்பட

இதனை வழக்கமாக அதிகமாக ஓதிவந்தால் நினைவாற்றல் அதிகப்படும். கஷ்ஃபும் ஞானோதயமும் ஏற்படும்.

### தொழில் துறையில் வெற்றி பெற

இதனை அதிகமாக ஓதிவர வேண்டும்.

### வழியில் பயமற்றுப் பயணம் செய்ய

இதனை நூறு தடவை ஓதிக் கொள்ள வேண்டும்.

### இறுக்கம், திடுக்கம், தாங்கொணாத் துயரம், நெருக்கடி நீங்க

ஒருவன் இதனை தினம் ஏதாவதொரு வக்த்தில் 16341 தடவை வீதம் ஒன்பது நாட்கள் ஓத வேண்டும். அதன் பின் எல்லாத் தொழுகைகளுக்குப் பிறகும் 129 தடவை ஓதி 'அல்லாஹு லதீஃபும்பி இபாதிஹீ யர்ஸுகு மையஷாஉ வஹுவல் கவிய்யுல் அஸீஸ்' என்ற ஆயத்தை ஏழு தடவை ஓதினால் அவனைப் பீடித்த அனைத்து துன்பங்களும் நீங்கிவிடும்.

### நாட்டம் நிறைவேற

இதனை வெள்ளி இரவு 4000 தடவை ஓத வேண்டும்.

### கஷ்டம் நீங்க

துன்பம் நேர்ந்தக்கால் இதனை 900 தடவை ஓதினால் அத்துன்பம் நீங்கிவிடும். இதனை அதிகமதிகமாக ஓதுபவர்கள் இறைகாவலில் இருக்கின்றார்கள் என்றும் அவர்களுக்கு யாதொரு துன்பமும் வந்தணுகாதென்றும் ஆரிஃபீன்கள் கூறுகிறார்கள்.

### தீராத நோய்க்கும் அருமருந்து

இதனை அதிகமதிகமாக ஓதிவரின் தீராதநோயும் தீரும்.

### தனிமையில் அச்சம் நீங்க

ஒருவன் தனித்திருக்கும் பொழுது இதனை அதிகமதிகமாக ஓதின் அவன் அச்சம் நீங்கப் பெறுவான்.

## குறிப்பிட்ட ஒரு நபரின் அன்பையும் நட்பையும் பெற

*நள்ளிரவில் ஒரே இருப்பில் அமர்ந்து 'யா லதீஃப் அன் தல்லாஹ்' என்று 1700 தடவை ஓத வேண்டும். இவ்வாறு ஏழு நள்ளிரவுகள் ஓத வேண்டும். ஓதும் பொழுது நாம் விரும்பும் நபரை மனத்தில் எண்ணிக் கொள்ள வேண்டும்.*

## இரணம் பெருக (மற்றொரு முறை)

*இதனை வைகறைத் தொழுகைக்குப் பின்போ இஷாத் தொழுகைக்குப் பின்போ 119 தடவை ஓதி, அதன் பின் ''இன்னல்லாஹ ஹுவர் ரஸ்ஸாக்கு துல் குவ்வத்தில் மத்தீன்' என்று 119 தடவை ஓத வேண்டும். ஓதும் முன்பும் பின்பும் 11 தடவை ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டும்.*

**ஹபீர்** *(செய்தி அறிவிப்பவன்)* اَلْخَبِيْرُ

*(ஜலாலி 812)*

## தீயவனின் பிடியிலிருந்து விடுதலை பெற

*இதனை ஒருவன் அதிகமாக ஓதின் மனத்தின் தீமைகளி லிருந்தும் தீயவனின் பிடியிலிருந்தும் விடுதலை பெறுவான். துன்பத்தில் சிக்கியவன் ஓதின் துன்பம் நீங்கப் பெறுவான்.*

## கனவின் மூலம் மறைவான விஷயங்களை அறிய

*இதனை எழுதித் தலைமாட்டில் வைத்துக் கொண்டு படுக்க வேண்டும்.*

## அறிவு கூர்மையாக

*இதனை பீங்கானில் எழுதிக் குடிக்க வேண்டும்.*

## ஞான திருஷ்டி பெற

*இதனைத் தொடர்ந்து ஒருவன் ஏழு நாட்கள் ஓதிவரின் அவ்வாண்டில் நிகழவிருக்கும் செய்திகள், பிறரின் இதயங்க ளிலுள்ள செய்திகள் ஆகியவை ஆத்மீக முறையில் அவனுக் குத் தெரியவரும். இதனை அதிகமதிகமாக ஓதி வந்தால் கஷ்ஃபு வெளியாகும். இதுவே கஷ்ஃபு ஏற்படுவதற்கான அடி மூலமாகும்.*

## மன இச்சை நீங்கப் பெற

*ஒருவனின் நஃப்ஸ் அம்மாரா (மன இச்சை) அவனை மிகைக்க முற்படும்பொழுது இதனை அவன் அதிகமதிகமாக ஓதின் அது அடங்கப்பெறும்.*

## தீராத பிரச்சினை தீர

*ஒரு பிரச்சினையைத் தீர்க்க இயலாது துன்புறும் ஒருவன் இதனை இஷாவுக்குப்பின் நூறு தடவை ஓதின் அது தீர்வதற்கான வழி ஏற்படும்.*

## கொடிய வனவிலங்குகள், விஷ ஜந்துக்கள் ஆகியவற்றிலிருந்து காவல் பெற

*இதனை ஒருவன் ஏழு நாட்கள் தொடர்ந்து ஓதிவரின் அவன் கொடிய வனவிலங்குகள், விஷ ஜந்துக்கள் ஆகியவற்றிலிருந்து இறைவனால் காக்கப் பெறுவான்.*

**ஹலீம்** *(பொறுமையாளன்)*
*(ஜமாலி 88)* اَلْحَلِيْمُ

## வயல்கள் நல்ல பலன்களை நல்க

*இதனை அதிகமாக ஓதித் தண்ணீரில் ஊதி அத்தண்ணீரை வயல்களில் தெளிப்பின் பயிர்கள் பூச்சிகளிலிருந்தும் ஏனைய தீமைகளிலிருந்தும் காக்கப் பெறுவதுடன் நற்பலன்களை நல்கும்.*

## செடி செழித்து வளர; வயல் செழித்து வளர

*செடியை நடும் பொழுதோ நாற்றை நடும் பொழுதோ இதனை 28 தடவை ஓதிக் கொள்ள வேண்டும்.*

## அதிகாரியின் கோபம் தணிய

*இதனை ஓதிக்கொண்டு அவரின் முன் செல்ல வேண்டும்.*

## மன அமைதி, பொறுமை ஏற்பட

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

## மக்களின் அன்பைபெற

*ஒருவன் இதனை லுஹர் தொழுகைக்குப்பின் வழக்கமாக ஓதிவரின் அவன் மக்களின் அன்பைப் பெறுவான்.*

## நோய் நீங்க

*ஒருவன் அலீ (ரலி) அவர்களிடம் வந்து இன்னவன் நோய் வாய்ப்பட்டுள்ளான் என்று கூறினான். ''அவன் நலன் பெற விரும்புகின்றாயா?'' என்று அவர்கள் வினவிய*

பொழுது, ''ஆம்'' என்றான் அவன். ''அவ்விதமாயின் நீ நோயாளனிடம் சென்று இதனை ஓதி ஊது'' என்று கூறினர். அவன் அவ்வாறே செய்ய நோயாளன் நலம் பெற்றான். அந்த துஆ வருமாறு:

*யாஹலீமு யாகரீமு இஷ்ஃபி ஃபுலானா*

## தொழில் வளர

*இதனை ஒருவன் காகிதத்தில் எழுதி அதனைத் தண்ணீர் கொண்டு அழித்து அத்தண்ணீரை அவன் பயன்படுத்திப் பலன் பெற்று வரும் ஆயுதங்களிலும் தொழில் நிலையங்களி லும் தெளித்தால் தொழில் அபிவிருத்தியடையும்.*

## கப்பல் மூழ்காது காக்க.

*இதனை எழுதிக் கழுவிய நீரைக் கப்பலில் தெளித்தால் கப்பல் மூழ்காது.*

## தலைமைத்தனம் நீடிக்க

*ஒருவன் தான் வகித்து வரும் தலைமைப் பதவி தன்னி டம் நீடித்திருக்க விரும்பினால் அவன் இதனை அதிகமதிக மாக ஓதி வரவேண்டும்.*

## துன்பத்திலிருந்து மீட்சி பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## ஆபத்து அணுகாதிருக்க

*இதனை எழுதிக் கழுத்தில் அணிய வேண்டும்.*

## மிருகங்கள் நலமாக

*இதனை ஒரு தட்டைப் பீங்கானில் எழுதித் தண்ணீரில் கரைத்து அந்தத் தண்ணீரை மிருகங்கள் மீது தெளிப்பின் அவை நோய் நொம்பலங்களின்றி நலமாக இருக்கும்.*

**அளீம்** *(பெருமைக்குரியோன்)*

*(ஜலாலி 1020)*

اَلْعَظِيْمُ

## இறைவனிடம் கண்ணியம் ஏற்பட

## மக்களிடம் மாண்பு பெற

*இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதின் கண்ணியம் பெறுவான். மக்கள் அவனை அணைந்து நிற்பர்.*

## வயிற்று வலி நீங்க

இதனை எழுபது தடவை ஓதித் தண்ணீரில் ஊதிக்குடிப் பின் இறையருளால் வயிற்று வலி நீங்கும்.

**கஃபூர்** *(மிகவும் மன்னிப்பவன்)* اَلْغَفُوْرُ

*(ஜமாலி 1286)*

## நோய் நீங்க

இதனை மூன்று காகிதத் துண்டுகளில் எழுதி மூன்று நாட்கள் நோயாளியின் கழுத்தில் அணிவித்தால் அவன் நோய் நீங்கப் பெறுவான். இதனை மருந்துகளில் நூறு தடவை ஓதி ஊதிக் குடிக்கவோ, தடவவோ செய்யின் அம்மருந்துகளால் நற்பலன் கிடைக்கும்.

## துன்பம் கவலை நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## செல்வத்திலும் குழந்தைகளிலும் 'பரக்கத்' ஏற்பட

இதனை அதிகமதிகமாக ஓதிவரின் செல்வத்திலும் குழந்தைகளிலும் 'பரக்கத்' ஏற்படும்.

## ஆபத்தை விட்டும் இறைகாவல் பெற

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## கண்ணேறு நீங்க

இதனை எழுதிக் குழந்தைகளின் கழுத்தில் தாயத்தாக அணிவிக்க வேண்டும்.

## பாவ மன்னிப்புப் பெற

''ஒருவன் சஜ்தாவில் விழுந்து யாரப்பிஃக்பிர்லீ'' என்று மூன்று தடவை ஓதின் அவனுடைய முந்தைய பிந்தைய பாவங்கள் மன்னிக்கப் பெறும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

## முன்கோபிகள் குதர்க்கவாதம் செய்பவர் முரண்டு செய்பவர்கள்

இதனை அதிகமதிகமாக ஓதிவந்தால் அவர்கள் தம் தீய பண்புகள் நீங்கப்பெற்று, நற்பண்புகளை எய்தப் பெறுவார்கள்.

### காய்ச்சல் அகல

*இதனை காய்ச்சலால் துன்புறுவோர் தினம் ஆயிரம் தடவை ஓதி வந்தால் காய்ச்சல் படிப்படியாக நீங்கப் பெற்று நலமுறுவர்.*

### சுரம், தலைவலி, கவலை, துன்பம் நீங்க

*இதனை ஒரு காகிதத்தில் எழுதி அதில் எழுதப்பட்ட எழுத்துக்களை ஒரு ரொட்டியில் ஒட்டச் செய்து அந்த ரொட்டியை உண்ண வேண்டும். அல்லது இதனை ஒரு தட்டையில் எழுதித் தண்ணீரில் கழுவிக் குடிக்க வேண்டும்.*

### உளத் தூய்மை பெற

*இதனை அதிகமதிகமாக ஓதிவரின் உளத் தூய்மை பெறும்.*

**ஷகூர்** *(நன்றியுள்ளவன்)* اَلشَّكُوْرُ

*(ஜலாலி 526)*

### வாழ்க்கைச் சிக்கல் தீர

*வாழ்க்கைச் சிக்கலில் உழல்வோர் இதனை 41 தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அத்தண்ணீரால் கண்களிலும் நெஞ்சிலும் தடவிக் கொண்டால் நிவாரணம் பெறுவர்.*

### வறுமையுற்றோர் வளம் பெற

*இதனை நாள்தோறும் 21 தடவை ஓதி வரவேண்டும்.*

### மக்களிடம் கண்ணியம் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

### மறுமையில் மிகப்பெரும் மாண்பு பெற

*இதனை நாள்தோறும் ஐயாயிரம் தடவை ஓதி வர வேண்டும்.*

### இரணத்திற்கான வழி பெருக

*ஒருவன் இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதி வந்தால் அவனுக்கு இறையருளால் இரணத்திற்கான வழி பெருகும்.*

## படைப்புகள் வழிப்பட, நோய் அகல, நாட்டங்கள் அனைத்தும் நிறைவேற

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## கண் புகைச்சல் அகல

*கண் பார்வை திடீரென மங்கலாகிவிடின் இதனை 41 தடவை தண்ணீரில் ஓதி ஊதி, அத்தண்ணீரால் கண்களைக் கழுவ வேண்டும்.*

## வேலை கிடைக்கப் பெற

*வேலை கிடைக்காது தவிப்போர் இதனை நாளொன் றுக்கு 51 தடவை ஓதிவரின் விரைவில் வேலை கிடைக்கப் பெறுவர்.*

**அலிய்யு** *(உயர்ந்தவன்)* اَلْعَلِيُّ

*(ஜலாலி 110)*

## செல்வனாக

*இதனை எழுதி ஒருவன் அணிந்து கொண்டால் அவனு டைய சிதறிய செயல்கள் அனைத்தும் ஒன்றுபடும், அவன் செல்வனாவான்.*

## பயணத்தில் அன்பிற்குறியவர்களைச் சந்திக்க

*மேலும் பிரயாணத்தில் தன் அன்பிற்குரிய நேசர்களைச் சந்திப்பான்.*

## எல்லாவிதமான ஆபத்துக்களிலிருந்தும் காவல் பெற

*இதனை காலையிலும் மாலையிலும் ஓதிவர வேண்டும்.*

## ஊர் திரும்ப

*ஊர் திரும்ப வசதியில்லாதிருப்பவன் இதனை 1000 தடவை ஓதிவரின் இறைவன் அவ்வசதியை அவனுக்கு நல்குவான்.*

## கால் வீக்கம் வடிய

*இதனை மூன்று நாளைக்குத் தொடர்ந்து அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## பயணிகள் சேர வேண்டிய இடத்தில் போய்ச்சேர

*பயணிகள் தாம் போய்ச் சேர வேண்டிய இடத்திற்கு போய்ச் சேர வலுவோ வசதியோ இன்றி இருந்தால் இதனை*

எழுதி அணிந்து கொள்ளவோ அதிகமதிகமாக ஓதவோ வேண்டும்.

## தகுதி உயர, தொழில் வளர, கீர்த்தி ஓங்க

*இதனை ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் 110 தடவை வீதம் வழக்கமாக ஓதி வரவேண்டும். மேலும் எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொள்ள வேண்டும்.*

## மதிப்பை மீளப் பெற

*மதிப்பை இழந்த ஒருவர் இதனை அதிகமதிகமாக ஓதிவரின் அவர் இழந்த மதிப்பை மீண்டும் எய்தப் பெறுவார்.*

## குழந்தை வளர

*வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு இதனை எழுதி அணிவிப்பின் அது இறையருளால் விரைவில் வளர்ச்சி அடையும்.*

**கபீர்** *(பெரியவன்)* اَلْكَبِيْرُ

*(ஜலாலி 232)*

## இறை ஞானம் பெற

*இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் அவனுக்கு இறைஞானம் அதிகப்படும்.*

## வேதனை நீங்க

*நோயாளர் இதனை 101 தடவை ஓதித் தம் நெஞ்சில் ஊதிக் கொளின் நோயால் ஏற்படும் வேதனை குறையும்.*

## தம்பதிகளிடையே அன்பும் ஒற்றுமையும் ஏற்பட

*இதனை ஓதி உணவுப் பொருளில் ஊதித் தம்பதிகள் அருந்தின் அவர்களிடையே அன்பும் ஒற்றுமையும் அதிகப்படும்.*

## பிறர் தமக்கு அஞ்சி அடிபணிந்து நடக்க

*அரசர்களோ அல்லது உயர்பதவியிலுள்ள அதிகாரிகளோ இதனை அதிகமதிகமாக ஓதிவரின் அவர்களின் கீழுள்ளவர்கள் அவர்களுக்கு அஞ்சி அடிபணிந்து ஒழுகுவர்.*

## பதவி மீளப் பெற

*பதவியிலிருந்து நீக்கப்பட்டவன் ஏழு நாட்கள் நோன்பு நோற்று இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவரின் அவன் இழந்த பதவியை இறையருளால் எய்தப் பெறுவான்.*

## தீயவர்களின் பிடியிலிருந்து விடுதலை பெற

இதனை அதிகமதிகமாக ஓதி இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்.

## விண்ணிலும் மண்ணிலும் உள்ளோர் வழிப்பட

இதனை நியமமாக ஓதி வருபவர்களுக்கு விண்ணிலும் மண்ணிலும் உள்ளவர்கள் வழிப்படுவார்கள்.

## மேற்கொண்ட அலுவலை வெற்றிகரமாக முடிக்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## வாழ்க்கையில் உன்னத நிலையை எய்தப்பெற

இதனை அதிகமதிகமாக ஓதிவருபவர் வாழ்வில் **உன்னத** நிலையை எய்தப் பெறுவார்.

## படைப்புகள் அனைத்தும் வசப்பட

இதனை மோதிரத்தில் செதுக்கி அதைச் சுற்றி 'அல் முல்க்' என்று எழுதி அணிந்து கொள்ள வேண்டும்.

## மதிப்பு உயர

இதனை அதிகமாக ஓதி வருபவர் மதிப்பு உயரப் பெறுவார். அவரை அவரின் எதிரிகளால் வெற்றி கொள்ள இயலாது போய்விடும். அனைவரிலும் மாண்பு பெற்றவராக ஆகிவிடுவார்.

## துன்பம், துயரங்களிலிருந்து காக்கப் பெற

இதனை அதிகமாக ஓதி வருபவர் துன்பம், துயரங்களிலிருந்து காக்கப் பெறுவார்.

## விஷ ஜந்துக்கள் தீண்டாதிருக்க; மிருகங்கள் தீங்கு செய்யாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவரை விஷ ஜந்துக்கள் தீண்டா; விலங்குகள் தீங்கு செய்யா.

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட

'யா கபீரு முதஆல்' என்று 773 தடவை ஓதிவிட்டு இறைவனிடம் இறைஞ்சின் அந்த இறைஞ்சுதல் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.

**ஹபீள்** *(காப்பாற்றுவோன்)* الْحَفِيظُ

*(ஜலாலி 998)*

## விபத்தால் இறப்பதை தவிர்க்க, கண்ணேறு அகல

இதனை எழுதி தஃவீஸ் செய்து அணிந்து கொளின் நீர், நெருப்பு, காற்று ஆகியவற்றால் இறப்பு நேராது கண்ணேறு நீங்கும்.

## வன விலங்குகளும் தீங்கு செய்யாதிருக்க

வனவிலங்குகளிடையே தூங்கினாலும் அவை யாதொரு தீங்கும் செய்யா.

## மனிதர், ஜின், ஷைத்தான் தீங்கு செய்யாதிருக்க

மேலும் மனிதர், ஜின், ஷைத்தான் ஆகியவற்றால் தீங்கு நேராது.

## நஷ்டம், துன்பம் ஆகியவை ஏற்படாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதவோ எழுதி அணிந்து கொள்ளவோ செய்ய வேண்டும்.

## இறை காவல் பெற

ஒருவன் அபாயம் சூழ்ந்த இடத்தில் இதனை ஓதின் அவன் இறையருளால் காப்பாற்றப் பெறுவான். ஒரு பிரயா ணத்தின் போது தாம் திருடர்களிடையே சிக்கிக் கொண்ட பொழுது இதனைத் தாம் அதிகமதிகமாக ஓத திருடர்கள் வெருண்டோடி விட்டதாக இமாம் பூனி (ரஹ்) அவர்கள் கூறுகின்றனர்.

## நோய் அகல

இதனை நோயாளிகள் மீது ஏழு நாட்களுக்கு ஓதி ஊத வேண்டும்.

## விக்கல் நீங்க

மூன்று முடக்கு தண்ணீரில் இதனை ஓதி ஊதி அருந்த வேண்டும். ஒவ்வொரு முடக்கு அருந்தும் முன்பும் 'யா ஹஃபீள்' என்று ஏழு தடவை ஓதிக்கொள்ள வேண்டும்.

## வயிற்றுக் கடுப்பு அகல

*இதனை 300 தடவை தண்ணீரில் ஓதி ஊதி அருந்த வேண்டும்.*

## ஆபத்து, தீங்கு ஆகியவற்றிலிருந்து இறை காவல் பெற

*இதனை ஒருவன் காலையிலும் மாலையிலும் 99 தடவை வீதம் வழக்கமாக ஓதிவரின் அவனை எல்லாவிதமான ஆபத்துகளை விட்டும் தீங்குகளை விட்டும் இறைவன் காத்தருள் புரிவான்.*

## காணாமற் போன பொருள் திரும்பக் கிடைக்க

*ஒரு பொருள் காணாமற் போய்விடின் இரவில் மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையில் இரண்டு ரகஅத் நஃபில் தொழுகை தொழுது இதனை 119 தடவை ஓதி அதன் பின் சூரத்து லுக்மானின் 16-வது ஆயத்தாகிய (இன்னஹா இன் தக்கு.... லதீஃபுன் ஹபீர்) என்பதை 119 தடவை ஓதின் இறையருளால் காணாமற்போன பொருள் கிடைக்கப் பெறும்.*

**முகீத்** *(உறுதிப்படுத்துவோன்)* اَلْمُقِيْتُ

*(ஜலாலி 550)*

## நோன்பு நோற்கும் ஆற்றல் பெற

*நோன்பு நோற்பவர் இதனை மண்ணில் எழுதியோ மலரில் ஓதியோ முகர்ந்தால் அவருக்கு நோன்பு நோற்கும் ஆற்றல் ஏற்படும்.*

## கண் சிவப்பு மாற

*இதனைப் பத்துத் தடவை ஓதி கண்களில் ஊதினால் கண்களிலுள்ள சிவப்பு மாறும்.*

## அச்சம், திடுக்கம் அகல

*இதனை அதிகமதிகமாக ஓதி வந்தால் அச்சம், திடுக்கம் ஆகியவை நீங்கும்.*

## அதிகமாக அழும் குழந்தைகளுக்கு

*இதனை எழுதிக்கழுத்தில் கட்டினால் அழுகை நின்று விடும்.*

## வறுமை தீயகுணம், பீடை நீங்க

வறிஞனின் வறுமையும் உடலிலுள்ள பீடையும் தீய குணங்களுள்ள பிள்ளைகளின் தீய குணங்களும் நீங்க இதனை ஒரு காலியான குடத்தில் ஏழு தடவை ஓதி ஊதி அதன்பின் இந்த இஸ்மையும் எழுதி, அதில் தண்ணீர் ஊற்றி அத்தண்ணீரைக் குடித்து வரச் செய்யவேண்டும்.

## திருமணமாக

மணமாகாத பெண்கள் இதனை அதிகமதிகம் ஓதி வந்தால் இறையருளால் திருமணம் நிகழும்.

## சகல நோய்களும் நீங்கப் பெற

இத்திருநாமத்துடன் 'அல்காயிம்' என்பதையும் சேர்த்து ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் ஏழு தடவை ஓதிவர வேண்டும்.

## வறுமை நீங்க

இதனை ஒவ்வொரு நாளும் ஏழு தடவை தண்ணீரில் ஓதி ஊதிக் குடிக்க வேண்டும். இவ்விதம் செய்து வருபவர் ஒரு போதும் உணவின்றிப் பட்டினி கிடக்கமாட்டார்.

## பயணத்தில் துன்பமும் புது வீட்டில் துயரமும் ஏற்படாதிருக்க

மேலே குறிப்பிட்ட வண்ணம் செய்து அத்தண்ணீரை அருந்திப் பயணம் செய்யின் பயணத்தில் யாதொரு துன்பமும் அணுகாது. புதுவீட்டில் குடி புகுவோர் அருந்தின் அப்புது வீட்டில் அவர்களுக்கு இறைகாவல் கிட்டும்.

## நாட்டம் நிறைவேற

தண்ணீர்க் குடத்தில் இதனை ஏழு தடவை ஓதி ஊதி அத்தண்ணீரைக் குடித்து வரவேண்டும்.

## துன்பம் அகன்று மகிழ்ச்சி ஏற்பட

இந்த இஸ்முடன் சூரத்து குறைஷையும் சேர்த்து ஓதினால் துன்பம் நீங்கி மகிழ்ச்சி ஏற்படும்.

## அலுவல்களில் வெற்றி பெற

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## எதிர்பாரா வகையில் இரணம் எய்தப் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதிவருபவருக்கு எதிர்பாரா வண்ணம் இரணம் கிடைக்கும்.*

**ஹஸீப்** *(கணிப்பவன்)* اَلْحَسِيْبُ

*(ஜமாலி 80)*

## பகைவர், விலங்கு தீமை செய்யாதிருக்க

*இதனை நாள்தோறும் 76 தடவை ஓதிவரின் பகைவர், அண்டை வீட்டுக்காரர், விலங்கு ஆகியவற்றின் தீங்குகளில் இருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.*

## சிறையிலிருந்து விடுதலை பெற

*சிறைப்பட்டோர் இதனை அதிகமதிகமாக ஓதிவரின் விரைவில் சிறையிலிருந்து விடுதலை பெறுவர்.*

## எல்லாத் தீமைகளிலிருந்தும் பாதுகாப்புப் பெற, நாட்டம் நிறைவேற

*'ஹஸ்பியல்லாஹுல் ஹஸீப்' என்று எழுபது தடவை வியாழனன்று துவங்கி மறு 'வியாழன் வரை காலையிலும் மாலையிலும் ஓதி வந்தால் எல்லா விதமான தீங்குகளிலிருந்தும் ஒருவன் காவல் பெறுவான். திருடர் பொறாமைக்காரர்கள் கண்ணேறு உள்ளவர்கள் ஆகியோரின் பொல்லாங்கிலிருந்தும் காவல் பெறுவான். அந்த வியாழன் முடிவதற்குள் இது நிகழும்.*

## மஞ்சட் காமாலை அகல

*இதனைத் தண்ணீரில் 300 தடவை ஓதி அருந்த வேண்டும் இவ்வாறு 21 நாட்கள் செய்ய வேண்டும்.*

## அச்சம் அகல

*ஒருவன் எதைப் பற்றியேனும் எவரைப் பற்றியேனும் அஞ்சிக் கொண்டிருப்பின் இதனை பொழுது புலர்வதற்கு முன் 27 தடவையும் பொழுதடைந்தபின் 27 தடவையும் ஓதின் அவன் ஒரு வாரம் முடிவடைவதற்குள் அது பற்றிய அச்சம் தீர்ந்தவனாவான். இதனை வியாழக்கிழமை ஓதத் துவங்க வேண்டும்.*

**ஜலீல்** *(உயர்வானவன்)* اَلْجَلِيْلُ

*(ஜலாலி 73)*

## மக்களிடையே மாண்பு பெற

*இதனை கஸ்தூரி, குங்குமப்பூ ஆகியவற்றால் ஒரு காகிதத்தில் எழுதி வைத்துக் கொண்டால் அல்லது உணவுப் பொருளில் எழுதி உண்டால் மக்களிடையே மாண்பு ஏற்படும். இதனைத் தினம் 1000 தடவை ஓதி வந்தாலும் இத்தகு பலன் கிடைக்கும்.*

## பிறரின் தீங்கிலிருந்து காவல் பெற

*இதனை கஸ்தூரி, குங்குமப்பூ கொண்டு தஃவீஸ் எழுதி அணிந்து கொள்ள வேண்டும்.*

## எதிரியை அச்சமுறச் செய்ய

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

**கரீம்** *(வள்ளற்றன்மையுடையோன்)* اَلْكَرِيْمُ

*(கண்ணியவான் ஜமாலி 270)*

## கண்ணியம் பெற, இறையருள் பெற

*உறங்குமுன் இதனை அதிகமதிகமாக ஓதின் மக்களிடையே கண்ணியம் ஏற்படும். இறையருள் கிட்டும். அவனைக் கண்ணியவான் என்று வானவர்கள் கூறுவர்.*

*இது அலீ (ரலி) அவர்கள் அதிகமதிகமாக ஓதி வந்த இஸ்மாகும். எனவேதான் அவர்களின் பெயருக்குப் பின்னால் கர்ரம ஹ"ல்லாஹு" என்ற அடைமொழி சேர்க்கப்படுகிறது.*

## வானவரின் இறைஞ்சுதல் பெற

*இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதிவரின் அல்லாஹ் அவனுக்காக இறைஞ்சுமாறு ஒரு வானவருக்குப் பணிப்பான்.*

## இதயம் ஒளிர

*இதனை நேமமாக ஓதி வரவேண்டும்.*

## வேலை கிடைக்க

*இதனை அகீக் கல்லில் செதுக்கி மோதிரத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.*

**வறுமை அணுகாதிருக்க**

ஒருவன் இதனை நாள்தோறும் 1080 தடவை ஓதிவரின் அவனை வறுமை வந்தணுகாது.

**ரகீப்** (கவனிப்பவன்) اَلرَّقِيْبُ

(ஜலாலி 312)

**தீயோர் தீங்கு செய்யாதிருக்க**

இதனை ஒருவன் தன் குடும்பத்தார், தன் பொருள்கள் ஆகியவற்றின் மீது 70 தடவை ஓதி ஊதின் நெருப்பு, தண்ணீர், களவு, தீமை ஆகியவற்றின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும்.

**பரக்கத் ஏற்பட**

இதனை நாள்தோறும் ஏழு தடவை ஓதி வரவேண்டும்.

**குழந்தைகள் நலமாக வாழ**

இவ்வாறே பெற்றோர்கள் நாள்தோறும் ஓதிவர வேண்டும்.

**பிறர் தம்மீது அன்பு செலுத்த**

இதனை பீங்கானில் எழுதிக் கழுவி அவரை அருந்தச் செய்ய வேண்டும்.

**வேதனை அகல**

சிரங்கு, கட்டி ஆகியவற்றால் துன்புறுவோர் அவற்றின் மீது இதனை ஊதின் வேதனை நீங்கும்.

**பரு, கட்டி, புண் ஆகியவை ஆற**

இதனை அவற்றின் மீது ஓதி ஊத வேண்டும்.

**காணாமற்போன பொருள் கிடைக்கப் பெற**

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

**நீர், நெருப்பு, பகைவர், கள்வர் ஆகியவற்றிலிருந்து காவல் பெற**

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## கருச்சிதைவு ஏற்படாதிருக்க

*கருச்சிதைவு ஏற்பட்டு கட்டி விழுந்து விடுமோ என்று அஞ்சுபவர் தம் கையை வயிற்றில் வைத்து ஏழு தடவை ஓதினால் இறைவன் கருவை காத்தருள் புரிவான்.*

## பயணத்தின்போது குழந்தை காணாமல் போகாதிருக்க

*ஒருவன் தன் கையைக் குழந்தையின் கழுத்தில் வைத்து இதனை ஏழு தடவை ஓத வேண்டும்.*

*முஜீப் (பதிலளிப்போன்)*

*(ஜலாலி 55)* اَلْمُجِيْبُ

## இறைகாவல் பெற

*இதனை ஒருவன் ஓதவோ அல்லது எழுதி வைத்துக் கொள்ளவோ செய்யின் அவன் இறைகாவல் பெறுவான்.*

## நாட்டம் நிறைவேற

*இதனை ஆயிரம் தடவை ஓதி இறைஞ்சின் நாட்டங்கள் நிறைவேறும்.*

## தலைவலி அகல

*தலைவலி உள்ளவனுக்கு இதனை ஓதி ஊதின் தலை வலி நீங்கும்.*

## மனைவி, மக்கள், சுற்றத்தார், நண்பர் ஆகியோர் தன்மீது அன்பு செலுத்த

*ஒருவன் தன் மனைவி, மக்கள், உற்றார், உறவினர், நண்பர்கள் ஆகியோர் அனைவரும் தன்மீது அன்பு செலுத்த வேண்டுமென்று விரும்பினால் அதனை சுப்ஹு தொழுகைக் குப் பின் 99 தடவை வழக்கமாக ஓதிவர வேண்டும்.*

## இறைஞ்சுதல் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட

*இதனையோ அல்லது இதனுடன் 'ஸரீஉ' என்பதையும் சேர்த்து 'யாமுஜீபு யா ஸரீஉ' என்றோ அதிகமதிகமாக ஓதி இறைவனிடம் இறைஞ்சினால் அவ்விறைஞ்சுதலுக்கு இறை வன் நிச்சயம் பதிலளிப்பான். அதாவது அவ்விறைஞ்சுதல் விரைவில் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.*

**இரணம் பெருக**

*யா காஃபீ யா கனிய்யு யா பத்தாஹு யா ரஸ்ஸாக்கு யா கரீமு யா வஹ்ஹாபு யாஃதத் தவ்லி யா முஜீப் என்று வழக்கமாக ஓதிவரின் இரணம் விரிவடையும்.*

**வாஸிஃ** *(தாராளத் தன்மையுடையவன்)* اَلْوَاسِعُ

*(ஜலாலி 137)*

**போதுமான வசதி ஏற்பட**

*இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதிவரின் அவன் எல்லாவற்றிலும் பொதுவான வசதியை எய்தப் பெறுவான்.*

**இரணம் பெருக**

*இதனை வளர்பிறையில் எழுதித் தஃவீஸ் செய்து அதன் மீது சூரா ஃபாத்திஹாவை 137 தடவை ஓதிஊதி அணிந்து கொள்ள வேண்டும்.*

**கிடைத்ததைக் கொண்டு மன நிறைவு பெற**

*இதனை அதிகமாக ஓதுபவர் இறைவன் தமக்குத் தந்த தைக் கொண்டு மன நிறைவுறுவார்.*

**மதிப்பும் மரியாதையும் எய்தப் பெற**

*இதனை அதிகமாக ஓதி வரவேண்டும்.*

**தேள் கடி விஷம் இறங்க**

*இதனை எழுபது தடவை ஓதி ஊதினால் தேள்கடி விஷம் இறங்கும்.*

**ஆன்மீக, லௌகீகச் செல்வங்களைப் பெற**

*ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதின் ஆன்மீக, லௌகீகச் செல்வங்களை எய்தப் பெறுவான்.*

*இதனை ஹிள்ரு (அலை) அதிகமாக ஓதி வருகிறார்கள் என்று கூறப்படுகிறது.*

**வாணிபம் செழிக்க, இரணம் பெருக, அறிவு பெருக, மதிப்பு அதிகமாக**

*இதனை ஒருவன் நாள்தோறும் 548 தடவை ஓதிவரின் அவனுக்களிக்கப்படும் இரணம் விரிவடையும். அவனின்*

அறிவு விசாலமடைவதோடு மதிப்பும் அதிகப்படும். வியாபாரிகள் அவசியம் ஓதிவரவேண்டிய இஸ்மாகும் இது.

### பயனற்ற பொருளால் பயன் பெற

ஒருவனிடம் பயனற்ற பொருள் ஏதேனும் இருப்பின் இதனை அதிகமதிகமாக ஓதின் அதனால் அவனுக்குப் பயன் ஏற்பட இறைவன் வழி வகுப்பான்.

### உடல் பருமனாக

மெலிந்துள்ளவர்கள் தம் உடல் பருமனாக மேற்கண்டவாறு ஓதிவர வேண்டும்.

## ஹகீம் *(அறிஞன்)* الْحَكِيمُ

*(ஜலாலி 78)*

### இறைஞான இரகசியங்களை அறிய

இதனை ஒருவன் நள்ளிரவில் அதிகமாக ஓதின் அவன் இறையருளால் பல இறைஞான இரகசியங்களை அறியப்பெறுவான்.

### முடியாத அலுவலில் வெற்றி பெற

அலுவல் முடியாது சிரமப்படுவோர் இதனை அதிகமாக ஓதிக் கொண்டு செயலாற்றின் அவ்வலுவல் வெற்றியுடன் முடிவுறும்.

### மனிதர்களின் அன்பைப் பெற

இதனை லுஹருத் தொழுகைக்குப் பின் முன்னூறு தடவை ஓதவேண்டும்.

### துன்பம் அகல

இதனை அதிகமதிகமாக ஓதுபவர் துன்பம் நீங்கப் பெறுவர்.

### அஞ்சத்தக்க பிராணிகளும் மனிதர்களும் ஜின்களும் ஒருவனை அணுகாது விலகிச் செல்ல

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதி வந்தால் அஞ்சத்தக்க பிராணிகளும் மனிதர்களும் ஜின்களும் அவனை அணுகா. அஞ்சி விலகிப் போகும்.

## தொழில் நுட்பம் பெற

*ஒருவன் தான் செய்யும் தொழிலில் நுட்ப அறிவு பெற இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.*

## ஆபத்துக்கள் அணுகாதிருக்க

*இதனை நாள்தோறும் வழக்கமாக 72 தடவை ஓதிவர வேண்டும்.*

## நாட்டங்கள் நிறைவேற

*இவ்விதமே செய்ய வேண்டும்.*

**வதூத்** *(அன்பு செலுத்துவோன்)* اَلْوَدُوْدُ

*(ஜமாலி 20)*

## பகைவனை நண்பனாக்க

*இதனை 1001 தடவை ஓதி உணவுப் பொருளில் ஊதி பகைவனிடம் கொடுத்து உண்ணச் செய்யின் அவன் நண்ப னாகி விடுவான்.*

## அயலார், சுற்றத்தார் பகைவர் தம்மை மதிக்க

*இதனை வைகறைத் தொழுகைக்குப்பின் 99 தடவை ஓதி ஒவ்வொரு தடவையும் நெஞ்சில் ஊதிக்கொள்ள வேண்டும்.*

## சிறுவர், சிறுமியர் நேர்வழிப்பட

*ஜும்ஆத் தொழுகைக்குப்பின் ஓர் உணவுப் பொருளில் இதனை 1001 தடவை ஓதி ஊதி வழி திருந்தாத சிறுவர் சிறுமியருக்குக் கொடுப்பின் அவர்கள் நேர்வழிபடுவர்.*

## தம்பதிகளிடையே ஒற்றுமை ஏற்பட இருவரும் ஒருவர் மற்றவரைப் பிரியாதிருக்க

*இதனை 1000 தடவை உணவுப் பொருளில் ஓதி ஊதிக் கணவனும் மனைவியும் உண்ண வேண்டும். இருவருக்கும் இடையே மனத்தாங்கல் ஏற்பட்டிருப்பின் ஒருவர் மற்றொரு வருக்குக் கொடுத்து உண்ணச் செய்ய வேண்டும்.*

## சுகமும் நலமும் பெற

*ஒருவன் தொழுகைக்குப்பின் இதனை 400 தடவை வழக்கமாக ஓதி வந்தால் அவனுக்கு சுகமும் நலமும் குவிய லாக வரும். அனைவரும் அவன்மீது அன்பு செலுத்துவர்.*

## பொடுபோக்காகவுள்ளவர்கள், இபாதத்தில் இன்பம் காண

'யா வதூத் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' என்று வெள்ளைத் துணியில் எழுதித் தஃவீஸ் செய்து அணிந்து கொள்ள வேண்டும். இதனை ஜுஂம்ஆ தொழுததும் அங்கேயே அமர்ந்து எழுத வேண்டும்.

## வெண்குட்டம், கருங்குட்டம் பற்றிய அச்சம் தீர

'அய்யாமுல் பீள்' மூன்று நாட்கள் நோன்பு நோற்று; நோன்பு திறக்கும் நேரத்தில் இதனை அதிகமதிகம் ஓதிக் கொண்டிருக்க வேண்டும்.

## இரணம் பெருக

இவ்விதமே தஃவீஸ் எழுதி அணிந்து கொண்டால் இரணம் விரிவாகும்.

## மக்களின் அன்பைப் பெற

மக்களின் அன்பைப் பெற இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

**மஜீத்** *(சிறப்பாளன்)*

*(ஜமாலி 57)*

اَلْمَجِيْدُ

## தொழு நோய் அகல

தொழு நோயாளர் இதனை பிறை *13, 14, 15* ஆகிய மூன்று நாட்களும் நோன்பு நோற்று நோன்பு திறக்கும் வேளையில் இதனை அதிகமதிகமாக ஓதினால் அவர் இறையருளால் அந்நோய் நீங்கப் பெறுவார். சொறி, சிரங்கு, வெண் குஷ்டம் உள்ளவர்களும் இவ்வாறு செய்யலாம்.

## பிறரின் அன்பைப் பெற

இதனை வைகறைத் தொழுகைக்குப் பின் 99 தடவை ஓதிவர வேண்டும்.

## பேரும் புகழும் பெற

இதனை ஒருவன் தினம் ஆயிரம் தடவை ஓதி வந்தால் அவன் மனிதர்களிடையே பேரும் புகழும்பெற்று விளங்குவான்.

## நீர்க்கடுப்பு நோய் அகல

*சிறுநீர் பெய்யும்பொழுது கடுப்பும் எரிச்சலும் ஏற்படின் மாதத்தின் 13, 14, 15-ஆம் பிறைகளில் நோன்பு நோற்று, நோன்பு திறந்தபின் இதனை அதிகமதிகமாக ஓதித் தண்ணீரில் ஊதி அத்தண்ணீரை அருந்தின் இறையருளால் நலன் ஏற்படும்.*

## வெண்குஷ்டம் அகல

*மேலே குறிப்பிட்ட மூன்று நாட்களும் நோன்பு நோற்று நோன்பு திறந்ததும் இதனை அதிகமாக ஓத வேண்டும்.*

## இழந்த மதிப்பை எய்தப் பெற

*இதனை 99 தடவை ஓதிக் கைகளில் ஊதி உடலில் தடவி வரவேண்டும்.*

## உள்ளம் வெளிச்சம் பெற

*இரவில் உறக்கம் வரும்வரை நெஞ்சில் கையை வைத்து இதனை நூறு தடவை ஓதிக் கொண்டிருக்க வேண்டும்.*

**பாயிது** *(மறுமையில் உயிர்த்தெழச் செய்வோன்)*

*(ஜமாலி 573)* الْبَاعِثُ

## கல்வி, அறிவு, யுக்தி ஆகியவை அதிகப்பட, இதயம் ஒளிர

*உறங்கும் நேரத்தில் ஒருவன் தன் கையைத் தன் நெஞ்சில் வைத்த வண்ணம் இதனை 101 தடவை ஓதின் அவனுக்குக் கல்வி, அறிவு, யுக்தி ஆகியவை அதிகப்படும். இதயம் பிரகாசமாகும்.*

## ஆட்சியாளர்களிடம் அலுவல் முடிக்க

*ஆட்சியாளர்களிடம் நேர்மையான அலுவலை முடிக்கச் செல்வோர் இதனை 70 தடவை ஓதி நெஞ்சில் ஊதிக் கொண்டு செல்லின் அவ்வலுவலில் வெற்றி ஏற்படும்.*

## நன்மைகள் ஏற்படவும் தீமைகளிலிருந்து காக்கப் பெறவும்

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

**ஷஹீது** *(சான்று பகர்வோன்)* اَلشَّهِيْدُ

*(ஜமாலி 319)*

### மனைவி மக்கள் நற்பண்பு பெற

தீய பண்புகளைப் பெற்றுள்ள மனைவி, மக்களின் நெற்றியில் இதனை வைகறையில் ஆயிரம் தடவை ஓதி ஊதின் அவர்கள் நற்பண்புகளை எய்தப் பெறுவர். அவர்கள் கீழ்ப்படிந்து நடப்பர். இருபத்தியொரு தடவை என்றும் வேறொரு நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### காணாமற்போன பொருள் மீளவர

ஓரிடத்தில் வைக்கப்பட்ட பொருள் காணாமற்போய்விடின் ஒரு சதுரமான துணியை எடுத்து அதன் நான்கு மூலைகளிலும் இதனை எழுதி அதன் நடுவில் காணாமற்போன அந்தப் பொருளின் பெயரை எழுதி அவ்விடத்தில் வைப்பின் இறையருளால் அது மீளவரும் அல்லது அது இருக்கிற இடம் தெரியவரும்.

### இதயம் ஒளி பெற

இதனை வெள்ளியன்று வைகறையில் எழுதி இதயத்தின் பக்கம் படும்படி வைத்துக் கொள்ள வேண்டும்.

**ஹக்** *(உண்மையானவன்)* اَلْحَقُّ

*(ஜலாலி 108)*

### காணாமற்போன பொருள் கிடைக்க

ஒரு பொருள் காணாமற் போய்விடின் இதனை ஒரு காகிதத்தின் நான்கு மூலைகளிலும் எழுதி அக்காகிதத்தில் அப்பொருளின் பெயரையும் எழுதி அதனைக் கையில் வைத்த வண்ணம் நள்ளிரவில் அல்லது ஸஹர் நேரத்தில் விண்ணை நோக்கி இறைஞ்சின் இறையருளால் காணாமற் போன பொருள் கிடைக்கும். அல்லாஹ் துன்பங்களிலிருந்தும் காத்தருள் புரிவான்.

## இறை அறிவு பெற

*ஒருவர் வைகறைத் தொழுகை, மக்ரிபுத் தொழுகைக்குப் பின் இதனை வழக்கமாக நூறு தடவை ஓதிவரின் இறைவனைப் பற்றிய அகமிய அறிவு ஏற்படும். பக்திமானாவார்.*

## மக்களிடையே கண்ணியம் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

## உடல் அழகும் நற்பண்பும் பெற

*ஒருவன் தனக்கு உடல் அழகும் நற்பண்புகளும் ஒருங்கே வாய்க்கப் பெற விரும்பினால் இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.*

## சிறையிலிருந்து வெறியேற

*ஒருவன் இதனை நள்ளிரவில் திறந்த தலையுடன் 160 தடவை ஓதிவரின் அவன் விரைவில் விடுதலை செய்யப்படுவான்.*

**வக்கீல்** *(பொறுப்பேற்றுக் கொள்பவன்)* اَلْوَكِيْلُ

*(ஜலாலி 66)*

## இடி, காற்றின் தீமையிலிருந்து பாதுகாப்புப் பெற

*வெள்ளம், இடி, காற்றின் தீமைகளிலிருந்து காவல் வேண்டுவோர் இதனை ஓதின் அவற்றின் தீமைகளிலிருந்து பாதுகாப்புப் பெறுவர்.*

## செல்வம் பெற

*இதனை அதிகமதிகம் ஓதிவர வேண்டும்.*

## தேவை நிறைவேற

*எந்தத் தேவையானாலும் இதனை ஓதி இறைஞ்சின் அத்தேவை நிறைவுறும்.*

## பிறர் உதவியின்றி அலுவல் இனிதே நிறைவேற

*ஒருவன் இந்த இஸ்மை வழக்கமாக ஓதிவரின் அவனுடைய அலுவல்கள் பிறர் உதவியின்றி இனிதே நிறைவேறும். அல்லாஹ்வே அவற்றை முடித்து வைப்பான்.*

## அச்சம் தீர

*இதனை ஒவ்வொரு நாளும் அஸர் நேரத்தில் ஏழு தடவை ஓதி வந்தால் அவன் எல்லாப் பொருள்களின் தீமைகளை விட்டும் அச்சம் தீர்ந்தவனாகிவிடுவான்.*

## அநியாயக்காரர்களின் கொடுமையிலிருந்து காவல் பெற

*இதனை 'உளூ'வோடு நாள்தோறும் 196 தடவை ஓதிவர வேண்டும்.*

**கவிய்யு** *(உறுதியாளன்)* اَلْقَوِيُّ

*(ஜலாலி 116)*

## முயற்சி, ஆற்றல் பெற, உடல் தெம்பு பெற

*முயற்சி இல்லாதார், ஆற்றல் இல்லாதார், உடல் வலிமையில்லாதவர் இதனை ஓதின் அவர் அவற்றை எய்தப் பெறுவார். இது உடலுக்கு 'டானிக்' போன்றதாகும்.*

## பகைவர் கொடுமையிலிருந்து பாதுகாப்புப் பெற

*இதனை அஸருத் தொழுகைக்குப் பின் 300 தடவை ஒருவன் தொடர்ச்சியாக ஓதிவரின் அவன் பகைவரின் பொல்லாங்கிலிருந்து பாதுகாவல் பெறுவான். ஆயிரம் தடவை ஓதின் பகைவர் சக்தியற்றுப் போவார்கள். அல்லது ஒரு ரொட்டி சுட்டு அதனைத் துண்டு துண்டாகப் பிய்த்து யா கவிய்யு என்று கூறிக் கூறி ஒவ்வொன்றாக எடுத்துப் பறவைகளின் முன்போட தன் பகைவர் தாழ்ந்துவிடுவர்.*

## பகலில் மட்டும் கண் தெரியாதிருந்தால்

*ஒவ்வொரு ஃபர்லான தொழுகைக்குப் பின்பும் 'யா கவிய்யு' என்று 102 தடவை ஓதி விரல்களில் ஊதிக் கண்களில் தடவிக் கொள்ள வேண்டும்.*

## பசி ஏற்பட

*பசி ஏற்படாது வயிறு மந்தமாக இருப்பின் யா கவிய்யு என்று முந்நூறு தடவை ஓதி ஊதி அருந்தப் பசி ஏற்படும்.*

## நினைவாற்றல் பெற

*ஒவ்வொரு வேளைத் தொழுகைக்குப் பின்பும் தலையில் கையை வைத்து 'யா கவிய்யு' என்று பதினொரு தடவை வழக்கமாக ஓதி வரவேண்டும்.*

## ஆண்மை பெற

*'யா கவிய்யு, யா மத்தீன்'* என்பதைக் காலையிலும் மாலையிலும் ஆயிரம் விடுத்தம் ஓதி வரவேண்டும். ஓது முன்பு மூன்று தடவையும் ஓதிய பின்பு மூன்று தடவையும் ஸலவாத்து ஓதிக்கொள்ள வேண்டும்.

**மத்தீன்** *(நிலையானவன்)* اَلْمَتِيْنُ

*(ஜலாலி 500)*

## ஆற்றல் பெற, அதிகாரம் பெற

ஆற்றல் பெறாதவன் இதனை ஓதிவரின் அவன் ஆற்றல் பெறுவான். இதனைத் திங்களன்று 360 தடவை ஓதி வருப வன் அதிகாரம் எய்தப் பெறுவான்.

## தீய பண்புகள் அகல

தீய பண்புள்ளவர்கள் மீது இதனை ஓதி ஊதின் அவர்கள் நற்பண்புகள் எய்தப் பெறுவர்.

## தாய்ப்பால் சுரக்க; ஆடுமாடுகளுக்கு பால்சுரக்க

இதனை எழுபது தடவை ஓதி ஊதின் பாலில்லாத் தாய்மார்களுக்குப் பால் சுரக்கும். அல்மத்தீன் என்று ஒரு தட்டைப் பீங்கானில் எழுதித் தண்ணீரில் கரைத்துக் குடித்தா லும் பால் சுரக்கும். இப்படி செய்து பால் சுரக்காத ஆடு மாடுகளுக்குப் புகட்டினாலும் அவற்றிற்குப் பால் சுரக்கும்.

## தாய்ப்பால் மறக்கடிக்க

குழந்தைகளுக்குத் தாய்ப்பாலை மறக்கடிக்க இதனை எழுதிக் கரைத்துக் குழந்தைகளுக்குப் புகட்ட வேண்டும்.

## உடல் வலிவும், இரண விரிவும், தொழில் முன் னேற்றமும், பகைவர்களிடம் வெற்றியும் பெற

இதனுடன் கவிய்யு என்பதையும் சேர்த்து *'யா கவிய்யு யா மத்தீன்'* என்று நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.

## கிணற்றில் நீர் அதிகம் சுரக்க

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும். ஓதி ஊதிய தண்ணீரைக் கிணற்றிற்குள் கொட்ட வேண்டும்.

**நாட்டங்கள் நிறைவேற**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**நோய் அகல**

*இதனைப் பீங்காளில் எழுதிக் கரைத்து நோயாளனுக்குக் கொடுக்க வேண்டும்.*

**குழந்தை பால்குடிக்க**

*குழந்தை தாயிடமோ, செவிலியிடமோ பால் குடிக்க மறுப்பின் இதனை எழுதிக் கழுவிப் பாலூட்டும் தாயோ செவிலியோ அருந்தவும், மார்பில் தடவிக் கொள்ளவும் செய்யின் குழந்தை பிரியத்துடன் பால் குடிக்கும். பாலும் அதிகமாகச் சுரக்கும்.*

**தாய்ப்பாலோ செவிலித் தாயின் பாலோ குழந்தைக்குத் தீங்கு செய்யாமலிருக்க**

*தாயின் பாலோ அல்லது செவிலித்தாயின் பாலோ குழந்தைக்கு ஏற்றுக் கொள்ளாதிருப்பின் இதனை எழுதி தாயோ, செவிலித்தாயோ அருந்தின் அவர்களின் பால் குழந்தைக்கு ஏற்றதாக அமையும்.*

**பாவம் செய்யாமலிருக்க**

*இதனை பத்துத் தடவை ஓதி ஒரு சிறுவன் மீதோ அல்லது சிறுமியின் மீதோ ஊதின் அவர்கள் பாவச் செயல்களிலிருந்து காக்கப் பெறுவர்.*

**வலிய்யு** *(நேசன்)* اَلْوَلِيُّ

*(ஜமாலி 56)*

**பிறரின் அன்பைப் பெற**

*இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதிவரின் அவன் பிறரின் அன்பைப் பெறுவான்.*

**மனைவி கீழ்ப்படிய**

*அடங்காப்பிடாரியான மனைவிமீது இதனைப் பல தடவை ஓதி ஊதின் அவள் கீழ்ப்படிதலுள்ள நன் மனைவியாவாள்.*

**எசமானைத் தனக்கு இணங்கி நடக்குமாறு செய்ய**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

## விலாயத் எய்தப் பெற

இதனை வெள்ளி இரவு ஆயிரம் தடவை ஓதி வருவதை வழக்கமாக்கிக் கொள்ள வேண்டும். அல்லாஹ் தன் நேசர்களின் கூட்டத்தில் இவ்வாறு ஓதி வருபவர்களை சேர்த்தருளப் போதுமானவன்.

## இறைவனின் நல்லடியாராக, 'வலீ' ஆக

இதனை சாத்தாரணமாக அதிகம் ஓதிவர வேண்டும்.

## பதவி உயர

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## படைப்பினங்களின் இரகசியங்களை அறிய

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவன் படைப்பினங்களின் இரகசியங்களை அறிவான்.

## மற்றவர்களின் உள்ளங்களை அறிய

இதனை அதிகமதிகமாக ஓதிவருபவர் பிறரின் உள்ளங்களில் உள்ளதை கஷ்பின் மூலம் அறிய வருவர்.

## இல்லாள் நற்பண்புடையவளாக ஆக

ஒருவன் தன் மனைவி நற்பண்புடையவளாக இருக்க விரும்பின் உளூவுடன் அதிகமாக ஓதி அதன் பின் ஸலவாத் ஓதியபின் அவளை அணுகின் அவள் தீக்குணங்கள் நீங்கி நற்பண்புகளை எய்தப் பெறுவாள்.

**ஹமீது** *(புகழத் தக்கவன்)* اَلْحَمِيْدُ

*(ஜமாலி 62)*

## தீயவர் நல்லவராக

தீய இயல்புகளைப் பெற்றுள்ளோர் இதனை ஒரு பாத்திரத்தில் எழுதி அதில் நீர் அருந்திவரின் அவர் அவற்றிலிருந்து நீங்கி நல்வழிப்படுவார். மேலும் மக்ரிபுத் தொழுகைக்குப் பின் இதனை 99 தடவை ஓதிவரின் அவர் நற்பண்புகளை எய்தப் பெறுவார். தீய சொல் உரைக்கும் வழக்கத்தையும் அவர் விட்டொழிப்பார்.

## திக்குவாய் அகல

இதனை எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்.

## செல்வனாக

*'யா ஹமீதல் ப*ஃ*ஆலி *ஃ*தல்மன்னி அலாஜமீஇ கல்கிஹி பிலுத்*ஃ*பிஹி' (தன் ஈகையின் மூலம் படைப்பினங்கள் மீதும் வள்ளன்மை கொண்ட செயல் திறனும் புகழும் படைத்த வனே) என்பதனையே ஒருவன் எப்போதும் ஓதிவரின் அவன் பெரும் செல்வனாகி விடுவான் என ஸுஹ்றவர்தீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.*

## பரக்கத் ஏற்பட

*இதனை வெள்ளித் தட்டில் எழுதி வீட்டில் அல்லது கடையில் வைக்க வேண்டும்.*

## அதிகாரம் பெற, முக அழகு பெற

*ஒருவன் சுப்ஹு தொழுகைக்குப் பின் இதனை வழக்க மாக 99 தடவை ஓதி கையில் ஊதி முகத்தில் தடவிக் கொண்டால் அவன் அதிகாரமுடையவனாவான். அவனு டைய முகம் அழகு பெற்றுத்துலங்கும்.*

## பிறரின் பாராட்டைப் பெற, பெயரும் புகழும் எய்த

*இதனை அதிகமதிகமாக ஓதிவருபவரின் அனைத்துச் செயல்களையும் மக்கள் பாராட்டுவர். அவர் பேரும் புகழும் எய்தப் பெறுவர்.*

## சதா பேசிக் கொண்டிருப்பவர் வாயடங்க

*ஒருவன் எப்பொழுது பார்த்தாலும் எதையேனும் பேசிக் கொண்டிருப்பின் இதனை எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய் யின் அத்திய பண்பு நீங்கும்.*

**முஹ்ஸீ** *(நுணுக்கமாய் ஆய்ந்து அறிபவன்)* اَلْمُحْصِيْ

*(ஜலாலி 148)*

## இறை வணக்கத்தில் ஈடுபட

*வணக்கத்தில் ஈடுபாடு இல்லாது பொடுபோக்காக உள் ளவர்கள் தம் நெஞ்சில் கைவைத்து இதனை ஏழு தடவை ஓதிவிட்டு இரவில் தூங்கின் இறையருளால் அவர்களுக்கு இறை வழிபாட்டில் ஈடுபட ஆர்வம் ஏற்படும்.*

## கப்ரிலும் மறுமையிலும் இறைகாவல் பெற

இதனை வெள்ளி இரவில் நியமமாக ஆயிரம் தடவை ஓதிவரின் கப்ரின் வேதனையை விட்டும் மறுமையின் துன் பங்களை விட்டும் இறைகாவல் பெறலாம்.

## பாவங்களை விட்டு நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## அறிவு கூர்மையாக

இதனை மோதிரத்தில் செதுக்கி அணிந்து கொள்ள வேண்டும்.

## எல்லாப் படைப்புகளும் அடங்கி நடக்க

ஒருவன் இதனை இருபது ரொட்டித் துண்டுகளில் இருபது தடவை ஓதி ஊதி நாள்தோறும் சாப்பிட்டுவரின் எல்லாப் படைப்புகளும் அவனுக்கு அடங்கி நடக்கும். இதனை அதிகமதிகமாக ஓதிவருபவரும் இப்பலனைப் பெறு வர்.

## கஷ்ட நஷ்டங்கள் அணுகாதிருக்க

ஒருவன் இதனை நாள்தோறும் 592 தடவை ஓதிவரின் அவனை கஷ்டங்கள் அணுகா.

## நினைவாற்றல் பெற

மறதியுள்ளவர்கள் இதனை அதிகமதிகமாக ஓதிவரின் நினைவாற்றல் எய்தப் பெறுவர்.

## உடலிலுள்ள நோய் அனைத்தும் நீங்கப் பெற

அதிகமதிகமாக இதனை ஓதி வருபவன் உடலிலுள்ள அனைத்து நோய்களும் நீங்கப் பெறுவான்.

## கருச்சிதைவு ஏற்படாமல் காக்க

தன் மனைவிக்கு கருச்சிதைவு ஏற்படுமோ என்று அஞ்சு பவன் ஸஹர் நேரத்தில் தன் வலதுகைக் கலிமா விரலால் அவளின் வயிற்றில் வட்டமிட்டு இதனை 90 தடவை ஓதி ஊத வேண்டும். இறையருளால் கரு காக்கப்பெறும். பிரசவம் ஏற்படாது தாமதித்தாலும் இவ்வாறு செய்யின் நலன் ஏற்படும்.

**முப்திஉ** *(துவங்குவோன்)*

*(ஜலாலி 88)*

اَلْمُبْدِئُ

### கரு பாதுகாக்கப் பெற

*கருவுற்றவளின் வயிற்றில் இதனை வைகறை வேளையில் 19 தடவை ஓதி ஊதின் கரு காக்கப் பெறும். கருச்சிதைவு ஏற்படாது.*

### அதிகமான நன்மைகளைச் செய்யவும், பாவங்களிலிருந்து தப்பவும்

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

### களவு போன பொருள் கிடைக்க

*இதனை, அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

### துன்பம், துயரம் அணுகாதிருக்க

*இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.*

### நாவன்மையும் அறிவு கூர்மையும் எய்தப் பெற

*ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதி வந்தால் அவன் சிறந்த நாவன்மை பெற்று விளங்குவான். அவன் அறிவாளியாவான். பேச்சாளர்கள் ஓதி வரவேண்டிய இஸ்மாகும் இது.*

### வேலை இலகுவாக முடிய

*இதனை அதிகமதிகமாக ஓத வேண்டும்.*

**முஈத்** *(மீளச் செய்வோன்)*

*(ஜலாலி 490)*

اَلْمُعِيدُ

### பெண் மணமுடிக்கப் பெற

*ஒரு பெண் மணமுடிக்க விரும்பின் இதனை அதிகமதிகமாக ஓதி வந்தால் அவளுக்கேற்ற ஆடவன் கிடைத்து அவளுக்கு விரைவில் திருமணம் நிகழும். இது சோதிக்கப் பட்டதாகும்.*

### வீட்டிலிருந்து காணாமற் போனவரை மீளச் செய்ய; காணாமற்போன பொருள் கிடைக்க

*ஒருவர் வீட்டிலிருந்து காணாமற் போய்விடின் இரவில் எல்லோரும் தூங்கியபின் இதனை 70 தடவை ஓதி வீட்டின் நாற்கோணங்களிலும் ஊதி காணாமற்போனவரின் பெயரைக்*

கூறி, அவரை மீளச் செய்யுமாறு ஏழு நாட்கள் இறைஞ்சின் அவர் ஏழு நாட்களில் இல்லம் திரும்பி வந்து விடுவார். அல்லது அவர் எங்குள்ளார் என்பதைப் பற்றிய செய்தி கிடைக்கும். இவ்விதம் செய்யின் காணாமற்போன பொருள்களும் கிடைக்கும்.

## இழந்த வேலை மீளப் பெற

வேலை இழந்தவன் இதனைத் தினம் 4000 தடவை ஓதிவரின் இன்ஷா அல்லாஹ் அவன் மீண்டும் அவ்வேலையை எய்தப் பெறுவான்.

## மறந்ததை நினைவு கொள்ளப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் மறந்தவை அனைத்தையும் நினைவு கொள்ளப் பெறுவார்.

## திடுக்கம் ஏற்படாதிருக்க

இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதி வருபவர் திடுக்கமுறார்; தியக்கமுறார்.

## நேர்வழி பெற

நேர்வழி பெற விரும்புவோர் இதனை அதிகமதிகமாக ஓதிக் கொண்டிருக்க வேண்டும்.

**முஹ்யீ** *(உயிரளிப்போன்)*

*(ஜலாலி 28)*

اَلْحَيُّ

## இறையச்சம் ஏற்பட

தனக்கு இறையச்சம் ஏற்பட விரும்புபவன் இதனை ஏழு நாட்களுக்கு ஓதித் தன் நெஞ்சில் ஊதிக் கொண்டால் அவனுக்கு இறையச்சம் ஏற்படும்.

## வேதனை அகல

உடலில் எவ்விடத்திலும் வேதனை ஏற்படின் இதனை நூறு தடவை ஓதி ஊதின் வேதனை நீங்கும்.

## உடல் நலம் பெற

நோயாளர் இதனை ஃபர்ளு தொழுகைக்குப் பின் 68 தடவை வழக்கமாக ஓதிவரின் அவர்களைப் பீடித்த நோய் அகலும், அவர்கள் சுகமும் திடகாத்திரமும் பெறுவர்.

## பேய், பிசாசுகளிலிருந்து காவல் பெற

இதனை அதிகமதிகம் ஓதிவர வேண்டும்.

## உடலின் வலி நீங்க

இதனை ஏழு தடவை ஓதிக் கையில் ஊதி உடலில் வலியுள்ள இடத்தில் தடவ வேண்டும்.

## இதயம் ஒளிர

இதனை அதிகமதிகம் ஓதிவர வேண்டும்.

## அநியாயக்காரர்களை விட்டும் காவல் பெற

இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.

## சிறை செய்யப்படாதிருக்க

இதனை ஒவ்வொரு நாளும் 88 தடவை ஓதித் தம் உடலில் ஊதிக் கொள்பவர் ஒரு போதும் சிறை செய்யப்படார்.

## உடலிலுள்ள உறுப்புகளில் ஒன்று இழக்கப்படாமலிருக்க

தன் உடலிலுள்ள ஏதாவதொரு உறுப்பு இழக்கப்படும் நிலை ஆகுமோ என்று அஞ்சுபவன் இதனை ஏழு தடவை ஓதி உடலில் தடவிக் கொளின் அவ்விதம் நேராது அல்லாஹ் காத்தருள் புரிவான். அவனுக்குத் துணிவும் ஏற்படும்.

**முமீத்** *(இறப்பு நல்குவோன்)*

*(ஜமாலி 490)*

اَلْمُمِيْتُ

## மறுமை பற்றிய அச்சம் ஏற்பட

மறுமை பற்றிய அச்சம் தனக்கு ஏற்பட வேண்டுமென்று விரும்புபவன் இதனை உறங்குமுன் ஏழு தடவை ஓதித் தன் நெஞ்சில் ஊதிக் கொள்ள வேண்டும்.

## மனம் கட்டுப்பட, உடல் வழிப்பட

இதனை உறங்கும் வரை ஓதிக் கொண்டிருப்பின் மனம் நமக்குக் கட்டுப்படும். உடல் நமக்கு இடம் கொடுக்கும், வழிபடும். தீய இச்சைகள் அடங்கி ஒடுங்கிவிடும்.

## சூனியம் பலியாதிருக்க

இதனை ஒருவன் நாள்தோறும் ஏழு தடவை ஓதிவரின் எந்தச் சூனியமும் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்யாது.

## விரோதிகளின் பொல்லாங்கு பலியாதிருக்க

இதனை நாள்தோறும் எழுபது தடவை ஓதிவர வேண்டும்.

## ஊதாரிச் செலவு செய்யாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

**ஹய்யு** *(என்றும் உயிரோடுள்ளவன்)* اَلْحَيُّ

*(ஜலாலி 18)*

## நோய் நீங்க, ஆயுள் நீடிக்க

இதனை அதிகமதிகமாக ஓதிவரின் நோய் நீங்கும். ஆயுள் நீடிக்கும். நெடுவாழ்வு வாழ இதனை நாளொன்றுக்கு மூவாயிரம் தடவை ஓதி வரவேண்டும். இதனைக் கஸ்தூரியாலும் பன்னீராலும் எழுதிக் கரைத்துக் குடித்தால் நோய் நீங்கும். இதனை நோயாளிமீது 70 தடவை ஓதி ஊதின் அவர் நோய் நீங்கப் பெற்று நீடுவாழ்வார்.

## நோயே ஏற்படாமலிருக்க

இதனையே ஒருவன் மூன்று லட்சம் தடவை ஓதி முடித்தால் அவனை நோய் அணுக அஞ்சும். அவனுடைய வாணாளில் அவனுக்கு நோயே வராது. ஏற்கனவே இருந்த நோயும் அகன்று விடும்.

## மந்த புத்தி நீங்க

இதனை எழுதி கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

## இறைவனின் கோபத்திலிருந்து பாதுகாவல் பெற

யூனுஸ் (அலை) அவர்களின் கூட்டத்தினரை அழிக்கக் கருமேகம் வந்து தீச்சுடர்களை வீசிய பொழுது அவர்கள் அஞ்சி யூனுஸ் (அலை) அவர்களை எங்குத் தேடியும் காணாத பொழுது ஒரு ஷைகை அணுகிக் காத்தருள் புரியுமாறு வேண்ட அவர்,

*யா ஹய்யு ஹீன லா ஹய்யு*
*யா ஹய்யு ஹீன துஹ்யில் மௌத்தா*
*லா இலாஹ இல்லா அன்த*

*''இறைவனே! எல்லாப் பொருள்களும் உயிரற்ற நிலையில் இருந்தபொழுது உயிரோடிருந்தவனே! இறந்தவர்களை உயிர்ப்பிக்கப்படும் பொழுது உயிரோடிருப்பவனே! உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் எவனுமில்லை.''*

*என்று அழுது கெஞ்சி 'துஆ' இறைஞ்ச கருமேகமே செழுமழையைப் பெய்து சென்றது.*

**நோயிலிருந்து காக்கப் பெற**

*இதனை 120 தடவை எழுதி வாசலில் தொங்கவிட வேண்டும்.*

**பூச்சிகளிலிருந்து தாவரங்களைப் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**கய்யூம்** *(நிலையானவன்)* اَلْقَيُّوْمُ

*(ஜலாலி 156)*

**பதற்றம் அகல**

*இதனை அதிகமதிகமாக ஓதிவரின் பதற்றம் நீங்கும்.*

**நாட்டம் நிறைவேற**

*ஸஹர் நேரத்தில் இதனை நியமமாக நூறு தடவை ஓதிவரின் நாட்டங்கள் நிறைவேறும். கண்ணியம் ஏற்படும். மக்கள் அன்பு செலுத்துவர்.*

*ஹையுல் கய்யூம் என்பதே இஸ்முல் அஃலம் என இமாம் நவவீ (ரஹ்) கூறுகின்றனர்.*

*இறந்தவர்களை உயிர்ப்பிக்குமுன் ஈஸா (அலை) இதனையே ஓதிக் கொள்வார்கள்.*

**கப்பல் பாதுகாப்புப் பெற**

*கப்பலில் பிரயாணம் செய்வோர் அலை கடலில் தாம் செல்லும் கப்பல் மூழ்கிவிடுமோ என்று அஞ்சின் ஹையுல் கய்யூம் என்று திரும்பத் திரும்ப ஓதின் கப்பலுக்கும் அவர்களுக்கும் பாதுகாப்பு ஏற்படும்.*

## வெற்றி கிடைக்க

பத்ருப் போரின்போது பல தடவை அண்ணல் அவர்களைப் பார்க்க அலீ (ரலி) அவர்கள் வந்த பொழுது அவர்கள் சுஜூதில் கிடந்த வண்ணம் இதனையே மடக்கி மடக்கி ஓதிக் கொண்டிருந்தனர்.

## சுக வாழ்வும் மாண்பும் பெற

இதனை தனிமையில் ஓதிவரின் சுக வாழ்வும் மாண்பும் கிடைக்கும்.

## பிறரின் தேவையற்றிருக்க

இதனை எழுதித் தம்முடன் வைத்துக் கொள்ள வேண்டும்.

## சோம்பல் அகல

பொழுது உதயமாகும்வரை இதனை ஓதிவரின் சோம்பல் நீங்கும்.

## துன்பம் நேர்ந்தக்கால் இறைகாவல் பெற

ஏதேனும் துன்பம் நேர்ந்தக்கால் பெருமானார் (ஸல்) அவர்கள் 'யா ஹய்யு யா கைய்யூம் பிரஹ்மத்திக அஸ்தஃகீது' (என்றும் உயிரோடுள்ளவனே! என்றும் நிலையானவனே! உன்னுடைய பேரருள் வேண்டி இறைஞ்சுகின்றேன்) என்று திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருப்பர்.

## பிறரின் மனத்தில் ஒருவன் தகுதி பெற

ஒருவன் இரவில் உணவருந்தும் சமயம் இதனை மடக்கி மடக்கி அதிகம் ஓதினால் பிறரின் மனத்தில் இவனுடைய தகுதி உயரும்.

## பிறரை அடக்கி ஆளும் தகுதி பெற

இதனை ஸஹர் நேரத்தில் அதிகமதிகம் ஓதிவர வேண்டும்.

## வயிற்று வலி அகல

'அல்லாஹு லா இலாஹ இல்லாஹுவல் ஹையுல் கையூம்' என்பதை 11 தடவை தண்ணீரில் ஓதி ஊதி அருந்த வேண்டும்.

## நீண்ட நாள் வாழ

*நீண்டநாள் வாழ விரும்புவோர் இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

## இரண விரிவும், வளமும், பிறரின் நட்பும், எதிரிகளின் மீது வெற்றியும், உளத் தெளிவும் பெற

*இத்துடன் ஹையு என்பதையும் சேர்த்து 'யா ஹையு யாகையூம்' என்று வைகறையில் ஃபஜ்ரு நேரம் முதல் பொழுது உதயமாகும் வரை எவருடனும் பேசாமல் வழக்க மாக ஓதிவர வேண்டும்.*

## தீமை அணுகாதிருக்க, எல்லா எண்ணங்களும் நிறைவேற

*ஒருவன் வித்ரு தொழுகைக்குப் பின் இந்த இஸ்முகளை 1001 தடவை வழக்கமாக ஓதிவர வேண்டும்.*

## நாட்டம் நிறைவேற

*பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம், யா ஹையு யா கையூமு யா கதீமு யா ஃபர்து யா வித்ரு யா அஹது யா ஸமது என்று ஒருவன் நூறு தடவை ஓதி, பின்னர் இறைவனிடம் தன் நாட்டத்தை எடுத்துரைத்து இறைஞ்சின் அது நிறைவேற்றப்படும். இது சோதிக்கப்பட்டதாகும்.*

*இதே போன்று,*

*'யா அல்லாஹு யா ரப்பு யா ரஹ்மானு யா ஹையு யா கையூம் பிக அஸ்தயீஃது யா அல்லாஹு யா அல்லாஹு' என்று நூறு தடவை ஒருவன் ஓதி, தன் நாட்டத்தை இறைவனி டம் எடுத்துரைத்து இறைஞ்சின் அது இறைவனருளால் நிறைவேறும்.*

## ஒரு நாளைக்கு அதிகமான தடவை மலம் கழிக்க நேரிடுவதைத் தடுக்க, வயிற்றுப் போக்கு நீங்க

*ஒரு காகிதத்தில் முதல் நாளில் பிஸ்மில்லாஹ் என்று மட்டும் எழுத வேண்டும்; இரண்டாவது நாளில் பிஸ்மில்லா ஹிர் ரஹ்மானிர் ரஹீம். அலிஃப் லாம் மீம் அல்லாஹு*

லா இலாஹ இல்லாஹு வல் ஹையுல் கையூம் என்று எழுதித் தஃவீஸ் செய்து வயிற்றில் அணிந்து கொள்ள வேண்டும்.

## தாய்ப்பால் சுரக்க

'ஹுவல் ஹையுல் கையூம்' என்று முந்நூறு தடவை ஓதி மார்பில் ஊத வேண்டும்.

## ஒருவனின் வாணாள் முடிவு அழகாக

*ஹகீம் திர்மிதி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.*

*நான் இறைவனைக் கனவில் ஓராயிரம் தடவை கண்டேன். ஒவ்வொரு தடவையும் நான் இறைவனிடம் என் முடிவு அழகாக இருக்க வேண்டுமென்று இறைஞ்சினேன். அப்பொழுது இறைவன்,*

*''யா ஹையு யா கையூமு வயா பதீஅஸ் ஸமாவாத்தி வல்அர்ள அஸ் அலுக்க அன்யுஹ்யகல்பீ பிநூரி மஃரிஃபத்தில் அபதன் ஸர்மதா யா அல்லாஹ், யா அல்லாஹ், யா அல்லாஹ்'' என்று 40 அல்லது 41 தடவை வைகறைத் தொழுகைக்கு முன்பும் பின்பும் ஓதி வருமாறு பணித்தான்!''*

## வாஜித் *(எல்லாம் அறிந்தவன்)*

الْوَاجِدُ

*(ஜமாலி 14)*

## உள்ளம் ஒளிர

தன் உள்ளம் ஒளிர விரும்புபவன் இதனை ஒவ்வொரு பிடி உணவிலும் ஓதி ஊதி உண்ண வேண்டும்.

## செல்வம் பெருக

இதனை தனிமையில் அமர்ந்து அதிகமதிகம் ஓதிவந்தால் செல்வம் பெருகும்.

## துன்பத்தைத் தாங்கும் இதயம் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் எத்துன்பத்தையும் தாங்கும் இதயத்தைப் பெறுவார்.

## பிறரை வசப்படுத்த

*ஒருவன் இதனைத் தண்ணீரில் ஓதி ஊதித் தான் விரும்பும் நபரைக் குடிக்கச் செய்யின் அவர் இவன் மீது அளவற்ற அன்பு செலுத்துவார்.*

## காணாமற் போன பொருளை மீண்டும் பெற

*இதனை அதிகமதிகமாக ஓத வேண்டும்.*

**மாஜித்** *(தலைமைத்தனம் உள்ளவன்)* اَلْمَاجِدُ

*(ஜலாலி 48)*

## உள்ளம் உறுதியுற ஒளி பெற

*உண்ணும் ஒவ்வொரு பிடியிலும் இதனை ஓதி ஊதி உண்ணின் உள்ளம் உறுதியுறும்; ஒளிபெறும்.*

## பிறரின் அன்பைப் பெற, மதிப்புப் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

## செல்வம் அதிகரிக்க

*இதனை அதிகமதிகமாக ஓதிவரின் செல்வம் அதிகரிக்கும்.*

## நோய் நீங்கப் பெற

*இதனைத் தண்ணீரில் பத்துத் தடவை ஓதி ஊதி நோயாளிக்குக் கொடுப்பின் அவன் நோய் நீங்கப் பெறுவான்.*

## மார்பு பெரிதாக

*சிறிய மார்பை பெற்றுள்ள பெண்கள் இதனை ஆயிரம் தடவை ஓதிக் கையில் ஊதி மார்பில் தடவி வரவேண்டும்.*

## உருவத் தொழும்பர் தீமை செய்யாதிருக்க

*ஒரு முஸ்லிம் இதனை உருவத் தொழும்பர் பின்னால் ஓதி ஊதினால் அவரால் அந்த முஸ்லிமுக்கு யாதொரு தீங்கும் செய்ய இயலாது போய்விடும்.*

## இறைஞான இரகசியங்களை அறிய

இதனை மன ஒருமையுடன் தம்மை மறந்த நிலையில் ஓதி வருபவரின் இதயத்தில் அல்லாஹ் ஞானாந்த இரகசியங் களை வெளியாக்குவான்.

**வாஹித்** *(தனித்தவன்)*

*(ஜலாலி 19)* اَلْوَاحِدُ

## உளத் துணிவு பெற

பயம் ஏற்படுங்கால் இதனை அதிகமதிகமாக ஓதினால் உளத்துணிவு ஏற்படும். இதனைத் தினம் ஆயிரம் தடவை ஓதி வந்தால் படைப்பினங்களைப் பற்றிய பயம் உள்ளத்தை விட்டு நீங்கி விடும்.

## பயம், கவலை ஆகியவை நீங்கவும், விரோதிகள் உண்மை தோழர்களாகவும்

ஒருவனுக்கு அரசாங்க பயம், கவலை ஆகியவை ஏற்பட் டால் இதனை ளுஹர் தொழுகைக்குப் பின் ஐநூறு தடவை பின்வருமாறு ஓதின் அவனுக்கு அக்கவலையும் அச்சமும் அகன்று விடும். அவனுடைய பரம விரோதிகளும் அவனு டைய உண்மைத் தோழர்களாகி விடுவர் என்று ஸுஹ்ரவர்தி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளனர்.

''யா வாஹிதுல் பாக்கீ அவ்வலு குல்லி **ஷைஇன்** வ ஆகிரஹு''

இது இறைஞ்சுதல் கொள்ளப்படும் இஸ்முல் அஃலம். இது இத்ரீஸ் (அலை) ஓதி வந்ததாகும்.

ஒருவர் அல்லாஹும்ம இன்னீ அஸ் அலுக்க பிஸ்மிக்கல் லாஹில் வாஹிதில் அஹதில் ஃபர்திஸ் ஸமதில்லதீ லம் யலிது வலம் யூலத் வலம்யகுல்லஹு குஃப்வன் அஹது என்று இறைஞ்சினார். அதனைச் செவியுற்ற அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''எதைக் கொண்டு இறைஞ்சினால் இறை வன் நிறைவேற்றித் தருவானோ, எதைக் கொண்டு கேட்டால் இறைவன் பதில் கூறுவானோ, அந்த இஸ்முல் அஃலத்தைக் கொண்டு இவர் இறைஞ்சினார்'' என்று கூறினார்கள்.

## குழந்தை பிறக்க

குழந்தை இல்லாதவர் இதனை எழுதித் தம்முடன் வைத்துக் கொளின் அவருக்கு நல்ல குணமுள்ள குழந்தை பிறக்கும்.

## ஆண் குழந்தை பிறக்க

தமக்கு ஆண் குழந்தை பிறக்க வேண்டுமென்று விரும்பு பவர் அல்வாஹிதுல் அஹத் என்று எழுதித் தம்முடன் வைத்துக் கொளின் இன்ஷா அல்லாஹ் அவர் ஆண் குழந்தை யைப் பெறுவார்.

## இறை அண்மை எய்தப் பெற

இதனை நாள்தோறும் வழக்கமாக 1001 தடவை ஓதிவர வேண்டும்.

## விரைவில் பாடம் வர

''ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் ''ஆமன்துபில் லாஹி வாஹிதுல் ஹக்கி லாஷரீக்கலஹு'' என்று ஓதிவரின் விரைவில் பாடம் வந்துவிடும்'' என்று புர்ஹானுத்தீன் அலவி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்; குர்ஆனை மனனம் செய் வோர் ஓதவேண்டிய இஸ்மு இது.

## உலக ஆசை நீங்க, பிறரைப் பற்றிய அச்சம் நீங்க

இதனை 1000 தடவை ஓத வேண்டும்.

**அஹத்** *(ஒருவன்)*

*(ஜலாலி 13)*

اَلْاَحَدُ

## துன்பம்; துயரம் அகல

இதனை ஆயிரம் தடவை ஓதின் துன்பம், துயரம் ஆகியவை நீங்கும். அல்லாஹ்வின் உதவி அவனுக்குக் கிடைக்கும்.

## செல்லும் அலுவலில் வெற்றி காண

வீட்டை விட்டுப் புறப்படும்போது இதனைப் பதி னொரு தடவை ஓதிக் கொண்டு செல்லின் நாடிச் செல்லும் அலுவலில் வெற்றி ஏற்படும்.

## எதிர்பாரா வண்ணம் இரணம் கிடைக்க.

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

**ஆட்சியாளர்களின் நட்பைப் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

**நற்குழந்தை பிறக்க**

*குழந்தை இல்லாதவன் இதனை எழுதி அணிந்து கொளின் நற்குழந்தை பிறக்கும்.*

**பாம்பு கடி விஷம் இறங்க**

*'யா வாஹிது யா அஹது' என்று 101 தடவை ஓதி கடிவாயில் ஊத வேண்டும்.*

**உலக ஆசை, பயம் அகல**

*'அல்வாஹிதுல் அஹது' என்று ஒருவன் நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.*

**தனிமையில் பயம் அகல**

*தனிமையில் இருப்பவன் இதனை அதிகமதிகமாக ஓதின் அவன் பயம் நீங்கப் பெறுவான்.*

**ஒருவனில் நின்றும் அற்புதங்கள் வெளிப்பட**

*ஒருவன் கல்வத்தில் உளூவுடன் அமர்ந்து இதனை ஆயிரம் தடவை வழக்கமாக ஓதி வருவானாயின் அவனுடைய ஈமானுக்குத் தக்க வண்ணம் அவனில் நின்றும் அற்புதங்கள் (கராமாத்துக்கள்) வெளிப்படும்.*

**வானவர்களைக் காண**

*இதனை ஆயிரம் தடவை ஓதி வரவேண்டும்.*

**ஸமத்** *(தேவையற்றவன்)*

*(ஜலாலி 134)*

الصَّمَدُ

**சித்தீக்குகளின் தகுதி பெற**

*ஒருவன் வைகறை வேளையில் இதனை 114 தடவை ஓதிவரின் சித்தீக்குகளின் தகுதியை எய்தப் பெறுவான்.*

**அநியாயக்காரனின் துன்பத்திலிருந்து விடுதலை பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதிவரின் இறையருளால் அநியாயக்காரனின் துன்பத்திலிருந்து விடுதலை கிடைக்கும்.*

## இறை அண்மையை எய்தப் பெற

*இதனை நாள்தோறும் 131 தடவை ஓதி வரவேண்டும் என ஷம்ஸுல் மஆரிஃப் என்ற நூலின் ஆசிரியர் கூறுகிறார்.*

## உணவுக் கவலை, பசிக் கவலை அகல

இதனை ஒருவன் நாளொன்றுக்கு நாற்பது தடவை வீதம் ஓதிவரின் அவனுக்கு உணவு பற்றிய கவலை இல்லாமல் போய்விடும்.

## பிறரின் தேவையற்றவனாக

இதனை உளூவோடு அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## அகமிய ரகசியங்களை அறிய

ஒருவன் ஸஹர் நேரத்தில் ஸஜ்தாவில் விழுந்து இதனை 115 தடவை ஓதின் அவன் அகமிய இரகசியங்களை அறிவான்.

## நீண்ட வயதும், இரண அதிகரிப்பும், மக்களின் அன்பும், பசியில் குறைவும் பெற

இதனை தனியாக அமர்ந்து அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## நாட்டம் நிறைவேற

இதனை எழுதிக் கையில் அணிந்து கொள்ள வேண்டும்.

## சொல்வதின்படி நடக்க

ஒருவன் இதனை இரவில் நெடுநேரம் சென்ற பின்போ வைகறையிலோ ஸஜ்தாவில் விழுந்து 115 தடவை ஓதின் அவன் தான் சொல்வதின்படி நடக்கும் ஆற்றலைப் பெறுவான்.

## எதிரியின் பிடியில் அகப்படாமலிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவனை அல்லாஹ் அவனுடைய எதிரியின் பிடியில் அகப்படாது காத்தருள் புரிவான்.

## இரணம் அதிகப்பட

ஒருவன் வைகறைத் தொழுகைக்குப்பின் 100 தடவை 'அல்லாஹுஸ் ஸமத்' என்று வழக்கமாக ஓதிவரின் அவனுடைய இரணம் விரிவாகும். இதனை ஓதுவதற்கு முன்பு 11

தடவை ஸலவாத்தும் ஓதியதற்குப் பின்னர் 11 தடவை ஸலவாத்தும் ஓதிக் கொள்ள வேண்டும்.

### அதிகாரிகளின் அநியாயத்தை விட்டும் காக்கப் பெற

இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.

### யானைப் பசி அடங்க

ஒருவன் அதிகமான பசியால் அவதியுறின் இதனை 300 தடவை ஓதி உணவில் ஊதி அருந்திவர நலன் ஏற்படும்.

### காதிர் *(வல்லோன்)*

*(ஜலாலி 305)* اَلْقَادِرُ

### ஆற்றல் பெற

இரண்டு ரகஅத் நஃபில் தொழுதபின் இதனை 100 தடவை ஓதின் ஆற்றல் பெருகும்.

### சாந்தி ஏற்பட, வேலை இலகுவாக

இதனை 41 தடவை ஓதினால் மனக்கவலை நீங்கும். வேலை இலகுவாக முடியும்.

### பகைவரை முறியடிக்க; வழக்கில் வெற்றி பெற

உளூவுடன் இதனை அதிகமாக ஓதின் பகைவர் முறியடிக்கப் பெறுவர். வழக்கில் வெற்றி கிடைக்கும். ஒலுச் செய்யும் பொழுது இதனை ஓதி உறுப்புக்களைக் கழுவின் இத்தகு பலன் கிடைக்கும் என்றும் வேறொரு நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### துன்பம் நீங்கப் பெற

ஒருவன் துயருற்ற காலை இதனை 41 தடவை ஓதின் அல்லாஹ் அவனுடைய துயரம் போக்கியருள்வான்.

### விரோதிகளின் பிடியில் அகப்படாதிருக்க

ஒருவன் உளூச் செய்யும் பொழுதோ தன் உடலைக் கழுவும் பொழுதோ இதனை ஓதின் அவனின் விரோதியின் பிடியில் அகப்படாது இறைவன் காத்தருள் புரிவான். அவன் தன் விரோதியை வெற்றி கொள்வான்.

## சகல ஆபத்துக்களிலிருந்தும் காக்கப் பெற

*ஒருவன் இதனை எழுதித் தன்னுடன் வைத்துக் கொள்ள வேண்டும்.*

**முக்ததிர்** *(உண்டு பண்ணுபவன்)*

*(ஜலாலி 734)* اَلْمُقْتَدِرُ

## நாட்டங்கள் நிறைவேற

*உறங்கி விழித்ததும் ஒருவன் இதனை 120 தடவை ஓதின் அவனுடைய நாட்டங்கள் நிறைவேறும். அவனின் எல்லா அலுவல்களும் இலகுவாக முடிவுறும்.*

## நாள் முழுவதும் இறைகாவல் பெற

*மேலும அந்நாள் முழுவதும் அவன் இறைவனின் பாதுகாவல் பெற்றிருப்பான்.*

## பகைவர்கள் ஒழிய

*இதனைத் தினம் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.*

## மதிப்பும் செல்வமும் பெற

*இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் அவன் மதிப்பும் செல்வமும் ஒருங்கே வாய்க்கப் பெறுவான்.*

## மறதி அகல

*இதனை நாள்தோறும் வைகறையில் நூறு தடவை ஓதிவரின் நினைவாற்றல் ஏற்படும்.*

**முகத்திம்** *(முற்படுத்துவோன்)*

*(ஜலாலி 104)* اَلْمُقَدِّمُ

## அபாயம் ஏற்படாதிருக்க

*அஞ்சி வீட்டில் ஒதுங்கிக் கிடப்போர் இதனை அதிகமாக ஓதின் அவர்களுக்கு எவ்வகையிலும் அபாயம் ஏற்படாது.*

## விவாதத்தில் வெற்றி காண

*ஒரு விவாதத்தில் ஈடுபடுமுன் இதனை அதிகமாக ஓதிக் கொளின் விவாதத்தில் அவன் வெற்றி பெறுவான்.*

## பகைவர்களை அடக்க

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

### செல்வாக்கு ஏற்பட

இதனை எழுதிக் கையில் தஃவீஸாக அணிந்து கொள்ள வேண்டும்.

### நஃப்ஸைக் கட்டுப்படுத்த

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்

### தனிமைப் பயம் அகல

வீட்டில் தனிமையில் இருக்க பயப்படின் இதனை அதிகமதிகமாக ஓதின் அப்பயம் நீங்கும்.

### போரில் வெற்றி காண

போர் முனையில் இதனை அதிகமதிகமாக ஓதிப்போர் புரிந்தால் இறையருளால் வெற்றி பெறுவான்.

### அல்லாஹ்வுடைய நல்லடியானாக

இதனை எப்பொழுதும் ஓதிவருபவன் அல்லாஹ்வின் பயபக்தியுள்ள நல்லடியானாவான்.

**முஅக்கிர்** *(பிற்படுத்துபவன்)* اَلْمُؤَخِّرُ

*(ஜமாலி 846)*

### தீமையிலிருந்து நீங்க, நப்ஃஸைக் கட்டுப்படுத்த

இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் அவன் தீய செயலிலிருந்து நீங்கப் பெறுவான். அவனுடைய நஃப்ஸ் அவனுக்குக் கட்டுப்படும்.

### நாட்டம் நிறைவேற

இதனை நாள்தோறும் நூறு தடவை ஓதிவந்து தன் நாட்டம் நிறைவேற இறைவனிடம் இறைஞ்சின் அது இறையருளால் நிறைவேறும்.

### இறையண்மையை எய்தப் பெற

இதனை நாள்தோறும் நூறு தடவை ஓதி வருபவன் இறையண்மையை எய்தப் பெறுவான்.

### வாழ்வு அமைதியாக முடிவுற

இதனை நாளொன்றுக்கு 100 தடவை ஓதிவர வேண்டும்.

## துன்பம் நீங்க

*இதனை நாள்தோறும் 21 தடவை ஓத வேண்டும்.*

## ஆபத்து நீங்க

*ஆபத்து வேலைகளில் முகத்திம் முஅக்கிர் என்று ஓதினால் ஆபத்து நீங்கும்.*

**அவ்வல்** *(முதல்வன்)*

*(ஜலாலி 37)*

اَلْاَوَّلُ

## விரும்பும் இடம் சென்றடைய

*பயணி ஒருவன் ஜும்ஆவுக்குப் பின் இதனை 1000 தடவை ஓதின் அவன் தான் செல்லவிருக்கும் இடத்தை நலமே சென்றடைவான். தான் சந்திக்க விரும்பியவரையும் சந்திப்பான்.*

## தன்னால் அதிகம் நன்மைகள் ஏற்பட

*இதனை அதிகமதிகமாக ஓதவேண்டும்.*

## நற்குழந்தை பெற

*குழந்தை இல்லாதார் இதனைப் படுக்கைக்குச் செல்லு முன் முந்நூறு தடவை வீதம் நாற்பது நாட்கள் ஓதிவரின் அவர்களுக்கு நற்குழந்தை பிறக்கும். ஆண் குழந்தை பிறக்கும்.*

## மக்களை கவர

*மக்களைக் கவர விரும்புவோன் இதனை அதிகமதிக மாக ஓதிவர வேண்டும்.*

## துன்பம் நீங்க

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

## செல்வனாக

*இதனை நாற்பது வெள்ளிக்கிழமை இரவுகள் ஆயிரம் தடவை வீதம் ஓதி வரவேண்டும்.*

## மனைவி, மக்கள் தன்னுடன் வந்து சேர

*மனைவி மக்களை விட்டுப் பிரிந்து தனியாக வாழும் ஒருவன் இதனை ஒவ்வொரு வெள்ளி இரவும் ஆயிரம்*

*தடவை வீதம் பல வெள்ளி இரவுகள் தொடர்ந்து ஓதியபின் அவர்கள் ஒன்று சேர அல்லாஹ் விரைவில் வழி வகுப்பான்.*

### துவக்கும் அலுவல் இனிதே நிறைவுறவும் அதில் வளம் ஏற்படவும்

*வீடு கட்டவோ, தொழில் துவக்கவோ வேறு எந்த அலுவலை ஆரம்பிக்கவோ செய்யும்பொழுது இதனை அதிக மதிகமாக ஓதத் துவங்கின் அவை பிறர் மெச்சத்தக்க வகையில் நிறைவு பெறும். வளம் கொழித்துக் குலுங்கும்.*

### எதிரிகள் பணிய

*இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.*

### அறிவு கூர்மையாக

*இதனை எழுதிக் கரைத்துக் குடிக்க வேண்டும்.*

### போரில் வெற்றி பெற

*இதனை அதிகமதிகம் ஓதவேண்டும்.*

**ஆகிர்** *(இறுதியானவன்)* اَلْآخِرُ

*(ஜலாலி 801)*

### வாழ்வுடைய முடிவு நலமாக

இறப்பை எதிர் நோக்கிச் சென்று கொண்டிருக்கும் அதிக வணக்கம் செய்ய இயலா முதியவர்கள் இதனை நாள்தோறும் நூறு தடவை ஓதின் அல்லது எழுதித் தம்முடன் வைத்துக் கொளின் அவர்களின் வாழ்நாள் நலமாக முடிவுறும்.

### செல்லுமிடங்களில் சிறப்படைய

இதனை ஓதிக் கொண்டு ஓர் அலுவலின் பொருட்டு ஓரிடத்திற்குச் செல்லின் அங்கு அவன் சிறப்பும் மதிப்பும் பெறுவான்.

### அச்சம் நீங்க

ஒருவன் இதனை அதிகமதிகம் ஓதின் அச்சம் நீங்கப் பெறுவான்.

### அல்லாஹ் அல்லாதவரின் மோகம் நீங்க

இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.

**எல்லாப் பாவங்களுக்கும் பிராயச்சித்தமாக**

*இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவரின் அவனின் எல்லாப் பாவங்களுக்கும் பிராயச்சித்தமாகிவிடும்.*

**லாஹிர்** *(வெளியே வியாபித்துள்ளவன்)* اَلظَّاهِرُ

*(ஜலாலி 1106)*

*கண்ணொளி பெற*

*கண்ணொளி மங்கியவர்கள் இதனை இஷ்ராக் தொழுகைக்குப்பின் 500 தடவை ஓதின் கண்கள் ஒளி எய்தப் பெறுவர்.*

**மக்கள் அன்பு செலுத்த**

*ஒருவன் கண்களுக்கு சுர்மா போடும் பொழுது இதனை பதினொரு தடவை ஓதிக்கொளின் மக்கள் அவன் மீது அன்பு செலுத்துவர்.*

**இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட**

*ஒருவன் இவ்விதம் ஓதியபின் இறைஞ்சின் அவனுடைய இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்படும்.*

**மறைவான ஆன்மீக விஷயங்களை அறிய**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**புயல், மழை ஆகியவற்றின் தீமைகளிலிருந்து காவல் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**வீடு காக்கப் பெற**

*இதனை வீட்டுச் சுவரில் எழுதி வைப்பின் அது துன்பம், துயரம், அபாயம், விபத்து ஆகியவற்றிலிருந்து இறையருளால் காக்கப் பெறும்.*

**பாத்தின்** *(உள்ளே வியாபித்துள்ளனவன்)* اَلْبَاطِنُ

*(ஜமாலி) (ஜலாலி 62)*

**இறைஞான இரகசியங்களை அறிய,**
**இறை அன்பு கொள்ள**

*இதை நாள்தோறும் 33 தடவை ஓதிவரும் ஒருவனுக்கு இறைவன் பல இரகசியங்களை வெளிப்படுத்துவான். இறை*

வன் மீது அவன் அன்பு கொள்ளும் மனோ நிலையை அடைவான்.

## அலுவல் நிறைவுற

ஒருவன் இதனை ஓதிக் கொண்டு ஓர் இடத்திற்குச் சென்று அங்கு அமர்ந்து இதனை அதிகமதிகமாக மனத்திற்குள் ஓதிக் கொண்டிருந்தால் அந்த இடத்தின் அதிபரோ அல்லது அங்குள்ள அதிகாரியோ தாமே முன் வந்து அலுவலை இனிதே முடித்துக் கொடுப்பார்.

## தேவைகள் நிறைவேற

இரண்டு ரக்அத் நஃபில் தொழுகை தொழுது ''ஹுவல் அவ்வலு வல் ஆகிறு, வல் வாஹிரு, வல் பாத்தினு வஹுவ அலாகுல்லி ஷைஇன் கதீர்'' என்று அதிகமாக ஓதின் அவனுடைய எல்லாத் தேவைகளும் நிறைவேறும்.

### ஈமான் வலுவடைய

இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.

### மக்களைக் கவர

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவர் பிறரை ஏறிட்டுப் பார்த்தவுடனே அவர்கள் அவருக்கு வசியமாகி விடுவார்கள்.

**வாலீ** *(நிர்வகிப்பவன்)*

*(ஜமாலி 47)* اَلْوَالِى

## இடி, மின்னல் பயம் அகல

இடி, மின்னல் பற்றி அஞ்சி நடுங்கிக் கொண்டிருப்பவர் இதனை நாள்தோறும் ஓதிவரின் அந்த அச்சம் நீங்கப்பெறுவர்.

## வீட்டைப் பாதுகாக்க; தொத்து நோய் அணுகாதிருக்க

ஒருவர் தன் வீட்டை எல்லாவிதமான ஆபத்துகளிலிருந்தும் காக்கவிரும்பின் இதனை 400 தடவை ஓதவேண்டும். ஓதித் தண்ணீரில் ஊதி வீட்டின் நாலா பக்கங்களிலும் தெளிக்க வேண்டும்.

## வீட்டில் பீடை அகல

இதனை ஆயிரம் தடவை ஓதி ஒரு காலிப் பாத்திரத்தில் ஊதி அதில் தண்ணீரை ஊற்றி அதனைப் பீடை பிடித்த

*வீட்டின் சுவர்களில் தெளிப்பின் அவ்வீட்டைப் பிடித்தபீடை நீங்கும்.*

**ஆபத்துகளிலிருந்து தப்ப**

*ஒருவன் இதனை அதிகமாக ஓதிவரின் திடீர் ஆபத்துகளி லிருந்து இறைவன் அவனைக் காத்தருள் புரிவான்.*

**மக்களிடையே செல்வாக்கு பெற**

*இதனை அதிகமாக ஓதி வரவேண்டும்.*

**மனிதர்களை வசப்படுத்த**

ஒருவன் இதனைப் பதினொரு தடவை ஓதினால், தான் விரும்பும் மனிதரை வசப்படுத்தி விடலாம்.

**தாழ்வு வராமல் இருக்க**

*உயர் பதவியிலுள்ளவர்கள் இதனை வழக்கமாக அதிக மாக ஓதி வந்தால் அவர்களுக்குத் தாழ்வு வராது.*

**முதஆலி** *(உயர்ந்தவன்)*

*(ஜமாலி 551)* اَلْمُتَعَالِ

**மாதவிடாய் வேதனை நீங்க**

*மாதவிடாய் காரணமாக உடலில் வேதனையுற்ற பெண் கள் இதனை அதிகமாக ஓதின் நலன் பெறுவர்.*

**எண்ணம் நிறைவேற**

*இதனை அதிகமதிகமாக ஓதினால் எண்ணிய எண்ணங் கள் இலகுவாய் முடிவுறும்.*

**இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட**

ஒருவன் ஞாயிறு இரவு குளித்துத் தூய்மையான உடை அணிந்து இதனை அதிகமதிகமாக ஓதி விண்ணை நோக்கிய வண்ணம் துஆ இறைஞ்சின் இறைவன் அவனுடைய இறைஞ்சுதலை ஏற்று நிறைவேற்றித் தருவான்.

**எல்லா அலுவல்களிலும் உயர்வும் மேன்மையும் பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**துவக்கும் அலுவல் துரிதமாக நிறைவேற**

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதிவந்தால் அவன் துவங்கும் அலுவல் விரைவில் இனிதே நிறைவுபெறும்.

### துன்பம் நீங்க

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

### பெண்கள் எப்பொழுதும் இளமைப் பொலிவுடன் இருக்க

மாதவிடாயின் போது இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

### சகல ஆபத்துகளிலிருந்தும் காக்கப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

**பர்ரு** *(அருளாளன்)*

اَلْبَرُّ

*(ஜலாலி 202)*

### ஆபத்து நிகழாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

### குழந்தை நற்பண்பு பெற, பாதுகாவல் பெற

குழந்தை பிறந்தபின் இதனை ஏழு தடவை ஓதிக் குழந்தை மீது ஊதின் அது நற்பலன்களை எய்தப் பெறும். அது வயதெய்தும் வரை இறைகாவல் பெறும்.

### குழந்தை பாதுகாவல் பெற

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

### குழந்தை இறக்காமலிருக்க; பொருள்களைப் பாதுகாக்க

பிறக்கும் குழந்தைகளையெல்லாம் இறக்க கொடுக்கும் தாய்மார்கள் இதனை ஏழு தடவை ஓதிக் குழந்தை மீது ஊதி 'அல்லாஹ்வே இதனை உன்னிடம் அமானிதம் வைத்தேன்' என்று கூறி அல்லாஹ்விடம் அதனை ஒப்படைத்து விடின் அல்லாஹ் அதனை இறவாது காத்தருள் புரிவான். இவ்வாறே பொருள்களுக்கும் செய்யலாம்.

### பாவமன்னிப்புப் பெற

கூடாவொழுக்கத்தில் ஈடுபட்டோன், இதனை அதிகமதிகம் ஓதி இறைவனிடம் பாவமன்னிப்புக்கோரின் அவன் பாவம் பொறுத்தருளப் பெறுவான். அத்திய வழக்கங்களும் அவனை விட்டு அகன்று விடும்.

## தாம் நாடியவரைத் தமக்கு வழிப்படச் செய்ய

*இதனை 36 தடவை தாம் நாடியவரின் பெயரையும் சேர்த்து ஓத வேண்டும்.*

## மக்களிடம் கண்ணியம் பெற

*இதனை அதிகமதிகம் ஓதிவர வேண்டும்.*

## புயல், மழையினால் தீங்கு ஏற்படாதிருக்க

*புயல் மழையின் போது அச்சம் ஏற்படின் இதனை அதிகமதிகமாக ஓதின் இறைகாவல் ஏற்படும்.*

## வறுமை அகல

*வறுமையில் உழல்பவன் இதனை வழக்கமாக அதிகமதிகமாக ஓதிவந்தால் அவன் வறுமை நீங்கி வளவாழ்வு எய்தப் பெறுவான்.*

## நேர்வழி பெற

*மதுவருந்துதல், விபச்சாரம், முதலான, மார்க்கத்திற்கு விரோதமான செயல்களில் ஈடுபட்டுள்ளவர்கள் இதனை அதிகமதிகமாக ஓதிவந்தால் அல்லது நாள்தோறும் ஏழு தடவை ஓதிவந்தால் அவர்களை அல்லாஹ் நேர்வழியில் ஆக்குவான்.*

**தவ்வாப்** *(மிகவும் மன்னிப்பவன்)* اَلتَّوَّابُ

*(ஜமாலி 409)*

## இறை மன்னிப்புப் பெற

*ஒருவன் இதனை நண்பகல் (லுஹர்) தொழுகைக்குப் பின் 360 தடவை ஓதி இறைஞ்சினால் இறைவன் அவனுடைய பாவங்களை மன்னிக்கப் போதுமானவன். சுப்ஹு (வைகறைத்) தொழுகைக்குப் பின்பும் இவ்வாறு செய்யலாம்.*

## நஃப்ஸ் கட்டுப்பட

*ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும். அவன் நேர்வழி பெற்று அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு அடிபணிந்து நடப்பதில் இன்பம் காண்பான்.*

## வேலை இலகுவாக

*ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதினால் அவனுடைய அலுவல்கள் இலகுவாகும்.*

**குடிப்பழக்கம் அகல**

*இதனை எழுதி மழைத் தண்ணீரில் கரைத்துக் குடிக்கக் கொடுக்க வேண்டும்.*

**செல்வனாக**

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**நற்செயல்கள் புரியும் வாய்ப்பைப் பெற**

*இதனை எழுதித் தம்முடன் வைத்துக் கொள்ள வேண் டும்.*

**அநியாயக்காரர்களிடமிருந்து மீட்சி பெற**

*இதனை பத்துத் தடவை ஓதின் அநியாயக்காரனிடமி ருந்து மீட்சி பெறலாம்.*

**வாணிபத்தில் முடை நீங்கி வளம் ஏற்பட**

*'யாதவ்வாபு யா ஃகனாபிரு யா ஹஸீபு யாவகீலு யாகா ஃபீ யா ரஸ்ஸாக்கு யா ஸலாமு யா முஃமினு யா ஸரீஉ.'*

*என்பதை வழக்கமாக ஒவ்வொரு வேளைத் தொழுகைக் குப் பின்பும் ஒருவன் ஓதி வந்தால் அவனுடைய வாணிபத் தில் ஏற்பட்டமுடை அறவே நீங்கி வளம் கொழிக்கத் துவங்கிவிடும்.*

**முன்இம்** *(நலன் நல்குபவன்)*

*(ஜமாலி 200)*

**நலன் மிகப் பெற**

*இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதிவரின் அவன் நலன் மிகப் பெறுவான்.*

**செல்வனாக**

*இதனை அதிகமதிகமாக ஓதி வருபவன் செல்வனாவான்.*

**எதிரியும் நண்பனாக**

*ஒருவன் தன்னுடைய எதிரியும் நண்பனாக விரும்பின் இதனை மூன்று ஜும்ஆ நாட்கள் அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**அலுவல் இலகுவாகவும் வெற்றிகரமாகவும் முடிய**

இதனை பிறை பிறந்து முதல் வியாழக்கிழமை ஓதத் துவங்கி நாற்பது நாட்கள் தொடர்ச்சியாக ஓதிவர வேண்டும்.

ஒவ்வொரு நாளும் 211 தடவை ஓதவேண்டும். இதனை ஓதுமுன் பதினொரு தடவை ஸலவாத்தும் ஓதியபின் பதினொரு தடவை ஸலவாத்தும், ஓதிக் கொள்ள வேண்டும்.

**முன்தகிம்** *(தண்டிப்பவன்)*

*(ஜலாலி 630)* ٱلْمُنْتَقِمُ

## எதிரியை வெற்றி கொள்ள

*தன் எதிரியை வெற்றி கொள்ள விரும்புவோன் இதனை அதிகமாக ஓதிவர வேண்டும். மூன்று ஜுமுஆ இரவுகள் ஓதின் அதற்குள் எதிரி சரணாகதியடைந்து விடுவான்.*

## எண்ணம் நிறைவேற

*ஒருவன் இதனை நள்ளிரவில் அதிகமாக ஓதின் அவன் எண்ணிய எண்ணங்களை இறைவன் நிறைவேற்றியருள் வான்.*

## கப்ரின் வேதனையிலிருந்து காவல் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**அஃபுவ்வு** *(மன்னிப்பவன்)*

*(ஜலாலி 156)* ٱلْعَفُوُّ

## இறைவனின் திருப்தி பெற, எல்லோருடைய நட்பையும் பெற, கேள்வி கணக்கின்றி சுவனம் புக

*இதனை அதிகமாக ஓதும் பாவியை இறைவன் மன்னிப்பதுடன் அவன் மீது திருப்தியும் அடைவான். எல்லோருக்கும் அவனை நண்பனாக்குவான். கேள்வி கணக்கின்றி அவனைச் சுவனம் புக செய்வான்.*

## பிறரின் அச்சம், துயரம், ஆபத்து ஆகியவை அகல

*இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.*

**ரவூஃப்** *(இரக்கமானவன்)*

*(ஜமாலி 286)* ٱلرَّءُوفُ

## நீதி வெற்றியடைய, ஒருவனுக்குப் பரிந்துரைத்து வெற்றி பெற

*இதனை பதினைந்து தடவை ஓதி நீதிபதியிடம் சென்று அநீதி செய்யப்பட்டவனுக்காகப் பரிந்துரைப்பின் அவன்*

விடுதலை செய்யப்படுவான். ஒருவனுக்காகப் பரிந்துரைக்கு முன் இதனை ஏழு தடவை ஓதிக் கொண்டு செல்லின் அந்தப் பரிந்துரை வெற்றிபெறும்.

## படைப்புகள் இரக்கம் காட்ட; அன்பு செலுத்த

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதின் அவன் மீது படைப்புகள் இரக்கம் காட்டும். அன்பு செலுத்தும்.

## ஒருவரின் நேசத்தைப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## தன் கோபம் தணிய, பிறர் கோபம் தணிக்க

ஒருவன் சலவாத்துடன் இதனைப் பத்துத் தடவை ஓதின் அவன் பிறர் மீது கொண்டுள்ள கோபம் தணியும். அவன்மீது பிறர் கொண்டிருக்கும் கோபமும் தணியும். அவர்கள் அவனை நேசிப்பார்கள்.

## அடக்கு முறையிலிருந்து விடுதலை பெற

இதனை அதிகமதிகம் ஓதிவர வேண்டும்.

## பரிந்துரை ஏற்றுக் கொள்ளப்பட.

தீயோனிடம் சிக்கிக் கொண்ட ஒருவனை விடுவிக்க நாடி இதனை பத்துத் தடவை ஓதிக் கொண்டு சென்று பரிந்துரைப்பின் அது ஏற்றுக் கொள்ளப்படும்.

**மாலிக்குல் முல்க்** *(மன்னர் மன்னன்)* مٰلِكُ الْمُلْكِ

*(ஜமாலி 212)*

## செல்வம் பெருக, நாட்டம் நிறைவேற

இதனை தொடர்ந்து ஓதிவரின் வறுமை நீங்கிச் செல்வம் பெருகும், அவனின் நாட்டங்கள் அனைத்தும் நிறைவேறும்.

## கர்வம் அணுகாதிருக்க

இதனை ஓதி வருபவன் கர்வம் அணுகாது காக்கப் பெறுவான்.

## அநியாயக்காரர் பணிய

இதனை எழுதி வைத்துக் கொள்ள வேண்டும்.

## அரசர்களை வெற்றி கொள்ள

இதனை அதிகமதிகமாக ஓதிவர வேண்டும்.

## மூல நோய் நீங்க

'யாமாலிக்' என்று ஒரு நாளைக்கு 700 தடவை வீதம் 41 நாட்கள் தொடர்ச்சியாக ஓதிவர வேண்டும்.

## துல் ஜலாலி வல் இக்ராம் ذُوالْجَلَالِ وَالْاِكْرَامِ

*(கண்ணியமும், கருணையும் உள்ளவன்)*

*(ஜமாலி 1094)*

## வெறுக்கத்தக்க செயல் நற்செயலாக மாற; கடின அலுவல் இலகுவாக

ஒருவன் வெறுக்கும் செயல் அவன் முன் வருங்கால் இதனை முந்நூறு தடவை ஓதின் அதனை அவனுக்கு நன்மை பயக்கும் நற்செயலாக இறைவன் மாற்றி விடுவான். கடின மான அலுவலை இலகுவாக ஆக்கி விடுவான்.

## கண்ணியமும் தகுதியும் செல்வமும் பெற

இதனை ஒருவன் அதிகமாக ஓதிவரின் கண்ணியமும், தகுதியும் எய்தப் பெறுவான். இதுவே இஸ்முல் அஃலம் என்று சிலர் கூறுகின்றார்கள்.

## இறைஞ்சுதல் ஏற்றுக் கொள்ளப்பட

இதனை அதிகமதிகமாக ஓதிவிட்டு இறைஞ்ச வேண் டும்.

## பிறரின் தேவையற்றவனாக

ஒருவன் இதனை அதிகமதிகமாக ஓதின அல்லாஹ் அவனைப் பிறரிடம் தேவையற்றவனாக்கி விடுவான்.

## பாடம் மறக்காமலிருக்க

ஒரு பாடத்தை ஓதுமுன் 'அல்லாஹும்ம ஃப்தஹ் அலைனா ஹிக்மதக வன்ஷுர் அலைனா ரஹ்மதக யாதல் ஜலாலி வல் இக்ராம்' என்று ஓதிக் கொளின் அப்பாடம் மனத்தில் நன்கு பதியும்.

### பொருள்கள் பாதுகாக்கப் பெற

*இதனை வியாழன் காலையில் எழுதிப் பொருள் வைக்கும் பெட்டியில் வைக்க வேண்டும்.*

### நோய் அகல

*யாதல் ஜலாலி வல் இக்ராம் பீ யதிஹில் கைரு இன்னக அலா குல்லி ஷைஇன் கதீர்' என்று நூறு தடவை தண்ணீரில் ஓதிஊதி நோயாளனுக்கு குடிக்கக் கொடுப்பின் அவன் நலன் பெறுவான்.*

**ரப்பு** *(போஷித்துப் பரிபாலிப்பவன்)*

### குடும்பம் பாதுகாக்கப் பெற

*தன் குடும்பத்தை விட்டுப் பிரியும் ஒருவன் இதனை ஓதித் தன் இல்லத்தின் நாற்புறமும் ஊதிவிட்டுப் புறப்படின் அவனுடைய குடும்பத்ினருக்கு யாதொரு துன்பமும் ஏற்படாது.*

**முக்ஸித்** *(நீதியாளன்)* اَلْمُقْسِطُ

*(ஜலாலி 209)*

### ஷைத்தானின் ஊசாட்டம் நீங்க

*ஷைத்தானின் ஊசாட்டத்தால் அவதியுறுவோர் இதனை நாள்தோறும் ஓதிவரின் ஷைத்தானின் ஊசாட்டம் ஒழிந்துவிடும். இதனை முந்நூறு தடவை ஓதித் தண்ணீரில் ஊதி அருந்திடினும் நலன் ஏற்படும்.*

### குழந்தை அழுவதை நிறுத்த

*இதனை எழுதிக் குழந்தையின் கழுத்தில் அணிவிக்க வேண்டும்.*

### நாட்டங்கள் நிறைவேற

*இதனை எழுநூறு தடவை ஓதி இறைவனிடம் இறைஞ்ச வேண்டும்.*

### நியாயமான தேவை நிறைவேற

*ஒருவன் இதனை எழுநூறு தடவை ஓதி இறைஞ்சின் அல்லாஹ் அவனுடைய நியாயமான தேவைகளை நிறைவேற்றித் தருவான்.*

**தொழில் செழிக்க**

இதனை எழுதிக் கடையில் வைக்க வேண்டும்.

**விளைச்சல் அதிகமாக**

இதனை எழுதித் தோட்டம், வயல் ஆகியவற்றில் வைக்க வேண்டும்.

**ஜாமிஉ** (ஒருங்கு சேர்ப்போன்)

(*ஜலாலி 114*) اَلْجَامِعُ

**நாட்டம் நிறைவேற**

இதனை தொடர்ந்து ஓதிவரின் நாட்டங்கள் நிறைவேறும்.

**பிரிந்த நண்பர் ஒன்று சேர**

மேலும் பிரிந்த நண்பர்கள் ஒன்று சேர்வார்கள்.

**இறைநேசர்களின் சகவாசத்தை எய்தப் பெற**

'ரப்பனா இன்னக ஜாமிஉன் நாஸ் லியவ்மின் லாரைப ஃபீஹி இன்னல்லாஹ லா துஹ்லிஃபுல் மீஆத்' என்று அதிகமாக ஓதி வரவேண்டும் என காஜா குத்புத்தீன் பக்தியார் காக்கி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

**பிரிந்தவர் ஒன்று சேர**

ளுஹா வேளையில் குளித்து வானத்தை நோக்கிய வண்ணம் இதனைப் பத்துத் தடவை ஓதி விரல்களால் எண்ணி விரல்களை மூடிக்கொள்ள வேண்டும். பின்னர் இரண்டு கைகளையும் திறந்து முகத்தில் தடவ, பிரிந்தவர் விரைவில் ஒன்று சேர்வர். ஒருவன் தன் குடும்பத்தை விட்டுப் பிரிந்திருப்பின் இறைவன் அவர்களை ஒன்று சேர்க்க வழி செய்வான்.

**சுற்றத்தாரிடையே ஒற்றுமை ஏற்பட**

இவ்வாறே செய்ய வேண்டும்.

**நேர்மையான அன்பைப் பெற**

குறிப்பிட்ட நபரை எண்ணிக் கொண்டு இதனை ஒருவன் அதிகமதிகமாக ஓதின் அவர்கள் இருவரிடையே அன்பு அதிகமாகும்.

## வானவர்களின் நற்பண்புகளை எய்தப் பெற

*இதனை ஒரு லட்சம் தடவை ஓதியவன் வானவர்களின் நற்பண்புகளை எய்தப் பெறுவான்.*

## ஓடிவிட்ட ஊழியர் வர

*இதனை வானத்தின் கீழ் நின்றுகொண்டு 11 தடவை ஓதவேண்டும்.*

## இருவரிடையே சமாதானம் ஏற்பட

*இதனை எழுதி இருளில் வைத்துவிட வேண்டும்.*

## காணாமற்போன பொருள் கிடைக்க

*அல்லாஹும்ம யாஜாமி அன்னாஸி லியௌமின் லாரைப ஃபீஹி இஜ்மஃ லாழ்ழத்தீ*

*இறைவனே! மனிதர்களைச் சந்தேகமில்லா ஒரு நாளில் ஒன்று சேர்ப்பவனே! என்னுடைய காணாமற் போன பொருளை என்னிடம் சேரச் செய்வாயாக!*

*இந்த துஆவை ஓதின் காணாமற்போன பொருள் கிடைக்கும்.*

## அனைத்து நலன்களையும் ஒருமித்து பெற

*ஒருவன் ஓரிடத்தில் தனியாக அமர்ந்து ஒரே தடவையில் இதனை 70,000 தடவை ஓதி முடித்தால் அவன் அனைத்து நலன்களையும் ஒருமித்து எய்தப் பெறுவான்.*

**கனிய்யு** *(செல்வம் தேவையற்றவன்)*

*(ஜலாலி 1060)*

اَلْغَنِيُّ

## சோதனை அகல

*இதனைச் சோதனை வேளையில் அதிகமதிகமாக ஓதின் சோதனை நீங்கும்.*

## உடல்நோய், மன நோய், துன்பம் ஆகியவை அகல

*இதனை அதிகமதிகமாக ஓதி உடலில் ஊதிக் கொள்ள வேண்டும்.*

## வளவாழ்வு எய்தப் பெற

*இதனை நாள்தோறும் ஆயிரம் தடவை ஓதிவர வேண்டும்.*

## பேராசை அகல

பேராசை அதிகமாக உள்ளவன் தன் கையைத் தன் உறுப்புக்கள் ஒவ்வொன்றின் மீதும் வைத்து இதனை அதிகம திகமாக ஓதின் இறைவன் அவனுடைய பேராசையை நீக்கி அவனுக்கு அமைதியை நல்குவான்.

## இறையன்மையை எய்தப் பெற

இதனை ஜும்ஆ இரவில் நூறு தடவை ஓதிவர வேண்டும்.

## அலுவல்களில் 'பரக்கத்' எய்தப் பெற

ஒருவன் இதனை நாள்தோறும் எழுபது தடவை ஓதிவரின் அவனுடைய அலுவல்கள் அனைத்தும் 'பரக்கத்'தாக இருக்கும். அவனுடைய பொருள்களிலும் விருத்தி ஏற்படும்.

## இரணம் பெருக

பிறை பிறந்த முதல் வியாழக்கிழமையிலிருந்து "யாகனிய்யு யா முஃனி" என்று இஷாத் தொழுகைக்குப் பின் 242 தடவை வீதம் நாற்பது நாட்கள் தொடர்ந்து ஓதிவர வேண்டும். ஓது முன்பும் ஓதிய பின்பும் பதினொரு தடவைகள் ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டும்.

**முஃனி** *(செல்வனாக்குவோன்)*

*(ஜமாலி 1100)* اَلْمُغْنِيْ

## செல்வனாக

ஒருவன் இதனை நாள்தோறும் 1000 தடவை ஓதிவரின் அவன் இறையருளால் செல்வனாவான்.

## விரைவில் இந்திரியம் வெளியாகாதிருக்க, மனைவி அதிகமாக நேசிக்க

இதனை எழுபது தடவை ஓதிவிட்டு மனைவியை மருவின் விரைவில் இந்திரியம் வெளியாகாது. மனைவி அவனை அதிகமாக நேசிப்பாள்.

## உலக செல்வங்களையும் ஆன்மீகச் செல்வங்களையும் பெற

ஒருவன் வைகறைத் தொழுகைக்கோ இரவுத் தொழுகைக்கோ பின்னர் ஸலவாத்து 11 தடவையும் சூரத்து முஸம்மிலும் ஓதியபின் இதனை 1111 தடவை ஓதின் அவன் உலகச் செல்வங்களையும் ஆன்மீகச் செல்வங்களையும் எய்தப் பெறுவான்.

## பிறரின் தேவையற்றவனாக

ஒருவன் ஒரு ஜும்ஆவுக்கு ஆயிரம் தடவை வீதம் பத்து ஜும் ஆக்களுக்கு இதனைத் தொடர்ந்து ஓதி வருவானாயின் அவன் பிறரின் தேவையற்றவனாகி விடுவான்.

## மனநிறைவு பெற

ஒருவன் இதனை 1100 தடவை ஓதுவானாயின் அவன் தனக்கு இறைவனளித்ததைக் கொண்டு மனநிறைவு எய்தி வாழ்வான். இதனை ஓதும் முன்பும் ஓதிய பின்பும் 11 தடவை ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டும்.

## முஃத்தீ (கொடுப்பவன்)

## பிறர் தேவையற்றிருக்க

ஒருவன் இறைவனிடம் இறைஞ்சுங்கால் 'யா முஃதிஸ் ஸலாயிலீன்' என்று ஓதின் அவன் பிறர் தேவையற்றவனாகி விடுவான்.

## விரைவில் செல்வனாக

ஒருவன் ஜும்ஆ தொழுது முடிந்ததும் அடுத்த கணமே எவருடனும் பேசாது அப்பக்கம் இப்பக்கம் திரும்பிப் பாராது மனமொன்றி 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் அல்முஃத்தீ ஹுவல்லாஹ்' என்று எழுபது தடவை ஓதிவரின் அவன் விரைவில் செல்வனாவான். ஓதுவதற்கு முன் மூன்று தடவை ஸலவாத்தும், ஓதிய பின் மூன்று தடவை ஸலவாத்தும் ஓதிக் கொள்ள வேண்டும். இதற்கு மாறாகச் செய்யின் பலனளிக்காது.

**மானிஃ**(*தடுப்பவன்*)

(*ஜமாலி 261*) اَلْمَانِعُ

## கணவனுக்கும் மனைவிக்கும் பிணக்கு ஏற்படாதிருக்க

*கணவனுக்கும் மனைவிக்கும் பிணக்கு ஏற்பட்டால் அவர்களில் எவரேனும் ஒருவர் தூங்கும் நேரத்தில் இதனை அதிகமாக ஓதின் அவர்களிடையே இணக்கம் ஏற்பட்டுவிடும். அடிக்கடி அவர்களிடையே பிணக்கு ஏற்படின் இதனை இரவில் ஓதி வந்தால் அவர்களிடையே ஒற்றுமை ஏற்படும்.*

## தீமைகளிலிருந்து காவல் பெற, காம இச்சைகளிலிருந்து காவல் பெற

*இதனை அதிகமதிகமாக ஓதவேண்டும்.*

## இருவரிடையே சமாதானம் ஏற்பட

*இதனை தினமும் நூறு தடவை ஓத வேண்டும்.*

## நாட்டங்கள் நிறைவேற

*இதனை அதிகமதிகமாக ஓதிவரின் நாட்டங்கள் நிறைவேறும்.*

## வீட்டில் ஆபத்து நேராதிருக்க

*இதனை எழுதிச் சுவரில் மாட்டவேண்டும்.*

## தூக்கம் வராதிருக்க

*தூக்கம் வரும்பொழுது இதனை எழுபது தடவை ஓதினால் தூக்கம் வராது.*

**ளார்ரு** (*தீயோர்களைத் துன்புத்துவோன் நாடியவர்களுக்கு நன்மை செய்பவன்*) (*ஜலாலி 1001*) اَلضَّآرُّ

## ஊரின் தன்மை அறிய

***ஓர் ஊரில் குடிபுக எண்ணுபவன் அங்குத் தான் குடிபுகுவது தனக்கு நலன் பயக்குமா, தீமை பயக்குமா என்பதை அறிய பிறை 13, 14, 15 ஆகிய மூன்று நாட்களிலும் நோன்பு நோற்று ஒவ்வொரு நாளும் இதனை நூறு தடவை ஓதின் அவனுக்கு அதுபற்றிய விளக்கம் ஏற்படும்.***

## வசிக்க வீடு பெற

வசிக்க வீடு இல்லாதார் இதனை ஜும்ஆ தொழுகைக் குப் பின் முந்நூறு தடவை வழக்கமாக ஓதிவரின் அவருக்கு வசதி ஏற்படும்.

## நீர், நெருப்பு, மோசடி ஆகியவற்றிலிருந்து காவல் பெற

இதனை நாளொன்றுக்கு நூறு தடவை வீதம் ஓதி வர வேண்டும்.

## இறையண்மையைப் பெற

இதனை வெள்ளி இரவு நூறு தடவை வீதம் ஓதி வர வேண்டும்.

## பிறரால் துன்பம் ஏற்படாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதி வர வேண்டும்.

## துன்பம் அகல

இதனை வெள்ளி இரவு நூறு தடவை ஓதிவர வேண்டும்.

## மேலான 'மகாமை' எய்தப் பெற

இதனை ஒவ்வொரு இரவும் நூறு தடவை ஓதிவர வேண்டும்.

## பிரயாணத்தில் தீமை நிகழாதிருக்க

இதனை அதிகமதிகமாக ஓதிக் கொள்ள வேண்டும்.

## தன் நிலை குலையாதிருக்க

ஒருவன் தன் நிலை குலையாது மதிப்புடனும் மரியாதை யுடனும் வாழ் இதனை வெள்ளி இரவு நூறு தடவை ஓதவேண்டும்.

## சகல அபாயங்களிலிருந்தும் பாதுகாப்புப் பெற

ஒருவன் இதனை வெள்ளி இரவு நூறு தடவை ஓதிக்கொ ளின் எல்லாவிதமான அபாயஙகளிலிருந்தும் பாதுகாப்புப் பெறுவதுடன் அல்லாஹ்வுடைய நெருக்கத்தையும் பெறு வான்.

## ஷைத்தான்களிலிருந்து காவல் பெற

இதனை அதிகமதிகமாக ஓதின் ஷைத்தான்களால் யாதொரு துன்பமும் ஏற்படாது.

**நாஃபிஃ** *(நற்பலன் நல்குவோன்)*

*(ஜமாலி - 201)*

النَّافِعُ

**பயணி காவல் பெற**

*கப்பல் விமானங்களில் பயணம் செய்வோர் பயணம் துவங்கியதும் இதனை நாற்பது தடவை ஓதிக்கொளின் அவர்கள் இறைகாவல் பெறுவர்.*

**நோய் அகல**

*இதனை நோயாளர் மீது ஓதி ஊதவேண்டும்.*

**துவங்கும் வேலை நன்மையாய் நடக்க**

*எந்த வேலையையும் துவங்கும் பொழுது இதனை 41 தடவை ஓதின் அவ்வேலை நன்முறையில் நடைபெறும்.*

**வாணிபத்திலும் விவசாயத்திலும் வெற்றி பெற**

*இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.*

**நற்குழந்தை பெற; இல்லாள் அதிகமாக நேசிக்க**

*இதனை அதிகமதிகமாக ஓதி மனைவியை மருவின் நற்குழந்தை பிறக்கும். மனைவி அவனை அதிகமாக நேசிப்பாள்.*

**செய்யும் அலுவல் அனைத்திலும் நற்பலன் பெற**

*ஒருவன் இதனை அதிகமதிகம் ஓதி வந்தால் அவன் செய்யும் அலுவல்கள் அனைத்திலும் நலனும் பலனும் ஏற்படும்.*

**நூர்** *(பேரொளிமயமானவன்)*

*(ஜமாலி - 256)*

اَلنُّوْرُ

**இறைஞான இரகசியங்களை அறிவதற்கு**

*இறைஞான இரகசியங்களை அறிய விரும்புவோர் வெள்ளி இரவு சூரா பாத்திஹாவை ஓதி இதனை 1001-தடவை ஓதின் அவர்களின் உள்ளத்தில் அவை பளிச்சிடும்.*

**கண் புகைச்சல் அகல, பார்வை தெளிவு பெற**

*ஒவ்வொரு ஃபர்ளான தொழுகைக்குப் பின்பு மூன்று தடவை ஸலவாத் ஓதி இதனைப் பதினொரு தடவை ஓதி*

பின்னர் மூன்று தடவை ஸலவாத் ஓதி வலது கை கலிமா விரலில் ஊதிக் கண்களில் தடவி வர நலன் ஏற்படும்.

## உள்ளம் வெளிச்சமுற

சூரா நூரை ஏழு தடவை ஓதியபின் இதனை ஆயிரம் தடவை ஓத வேண்டும்.

## வயிற்று வலி, வயிற்றுக் கோளாறு அகல

இதனை ஐந்து தடவை எழுதிக் கழுத்தில் அணிந்து கொள்ள வேண்டும்.

## நோய் அகல

''நூருன் நாஃபிஃ'' என்று ஓதி நோயாளர் மீது ஊத வேண்டும்.

## பலபல அற்புதங்களைக் காண

இத்துடன் நாஃபிஃ என்பதையும் சேர்த்து 'யா நாஃபிஃ யா நூர்''என்று ஏழாயிரம் தடவை ஒருவன் ஓதினால் அவன் அகத்திலும் புறத்திலும் மறைவிலும் வெளியிலும் பல அதிசயங்களைக் காணலாம். ஆனால் இம்முயற்சியில் ஈடுபடு முன் குருவிடம் இஜாஸத் (அனுமதி) பெற்றுக் கொள்ள வேண்டும்.

## ஹாதீ *(வழி காட்டுபவன்)*

*(ஜலாலி - 20)*

اَلْهَادِى

## நுட்பமான செய்திகளை அறிய

விண்ணை நோக்கிக் கைகளை ஏந்தி இதனை அதிகமாக ஓதி, பின் அக்கைகளைத் தன் கண்களுக்குக் கீழே தடவி மீண்டும் அவ்விதமே கைகளை ஏந்தி ஓதி அக்கைகளைத் தன் முகத்தில் தடவிக் கொள்ளும் ஒருவனுக்கு பல நுட்ப மான செய்திகள் அறிய வரும். மெய்ஞ்ஞானியாக ஆவான்.

## பயணத்தில் வழி தவறிப்போனால்

''யாஹாதீ இஹ்தீ'' என்று ஓதினால் வழி தெரிய வரும்.

## நேர்வழியைப் பெற; தலைமைப் பொறுப்பை அடைய

ஒருவன் ஹாதீ என்ற இஸ்மை நாள்தோறும் நானூறு தடவை வழக்கமாக ஓதிவரின் அல்லது எழுதி தஃவீஸாக அணிந்து கொண்டால் அவன் அனைத்து அலுவல்களிலும் நேர்வழியை இறைவனால் காட்டப்பெறுவான். அவனுக்கு

*பிறரை வழி நடத்தி செல்லும் தலைமைப் பதவியும் கிடைக்கும்.*

**பதீஃ** *(மூலமானவன்)* اَلْبَدِيْعُ

*(ஜலாலி - 86)*

## ஒரு செயல் நற்செயலாக

*ஒரு முக்கியமான அலுவல் ஒருவனை முன்னோக்கி இருக்குங்காலை "அவன் யாபதீஅஸ் ஸமாவாத்தி வல் அர்லி' என்று எழுபது தடவை ஓதின் இறையருளால் அது அவனுக்கு நன்மை பயக்கும் நற்செயலாக ஆகிவிடும்.*

## துன்பம் துயரம் அகல

*இதனை ஆயிரம் தடவை ஓத வேண்டும்.*

## பொருள்கள் பாதுகாக்கப் பெற

*இதனை எழுதி பொருள் வைக்கும் பெட்டியில் வைக்க வேண்டும்.*

## கனவின் மூலம் செய்திகளை அறிய

*எதைப் பற்றியேனும் கனவின் மூலம் அறிய விரும்புபவன் 'உளூ'வுடன் கிப்லாவை முன்னோக்கி இருந்து இதனை உறக்கம் வரும்வரை ஓதிக் கொண்டிருப்பின் கனவின் மூலம் அவன் பலசெயல்களை விளங்கிக் கொள்வான்.*

## அற்புதமான இஸ்முகளைப் பெற

*இதனை ஒவ்வோர் இரவும் 602 தடவை ஓதி வர வேண்டும்.*

## எல்லா நாட்டங்களும் நிறைவேற

*ஒருவன் ஏழு நாட்களில் 70,000 தடவை யா பதீஃ என்று ஓதினால் அவனுடைய எல்லா நாட்டங்களும் இறையருளால் நிறைவேறும்.*

## நாட்டம் நிறைவேற

*ஒருவன் இஷாவுக்குப்பின், 'யாபதீஃ அல் அஜாயிபி பில் கைரி யா பதீஃ' (நன்மையுடன் அற்புதங்களைப் புதுமையாகப் படைப்பவனே! புதுமையாகப் படைப்பவனே!!) என்று*

*1200-தடவை 12-நாட்கள் ஓதின் எந்த நோக்கத்திற்கு அவன் இதனை ஓதினானோ அந்நோக்கம் அவன் ஓதி முடிப்பதற்குள் நிறைவேறும். இது அனுபவபூர்வமானதாகும்.*

## பிறரை வசியப்படுத்த

*ஒருவரைச் சந்திக்கச் செல்லுமுன் மேற்கண்ட வண்ணம் 500-தடவை ஓத வேண்டும். ஓதுவதற்கு முன்பு பத்து தடவை ஸலவாத்தும், ஓதிய பின்பு பத்து தடவை ஸலவாத்தும் ஓதிக்கொள்ள வேண்டும்.*

## கடினவேலை இலகுவாக நிறைவு பெற

*கடினமான வேலையை மேற்கொண்டவன் அதனை முற்றும் முடிக்க வழியறியாது திகைக்கும் பொழுது இதனை 70,000 தடவை ஓதின் அவன் அதனை இலகுவாக முடித்து வாகை சூட அல்லாஹ் வழி வகுப்பான்.*

## பிரச்சனைகள் தீர

*இதனை இரவில் நூறு தடவை ஓதவேண்டும்.*

**வாரிஸ்** *(அனந்தரம் பெறுவோன்)* الْوَارِثُ

*(ஜமாலி - 707)*

## இம்மை மறுமைத் துன்பம் அகல

*பொழுது புலரும் முன் இதனை ஒருவன் நூறு தடவை ஓதிவரின் அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் துன்பங்கள் ஏற்படா. அவனுடைய இறுதி நன்மையாக முடிவுறும்.*

## வெயில் தீமை செய்யாதிருக்க

*வெயிலில் நடப்போர் இதனை நூறு தடவை ஓதிக்கொளின் அவர்களுக்கு வெயிலால் தீமை ஏற்படாது.*

## தடுமாற்றம், நிலை குலைவு ஆகியவற்றிலிருந்து காவல் பெற

*ஒருவன் மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையே இதனை ஆயிரம் தடவை ஓதின் தடுமாற்றம், நிலைகுலைவு ஆகியவற்றிலிருந்து காவல் பெறுவான்.*

## வேளாண்மையில் தீங்கு ஏற்படாதிருக்க; முழுப் பயனும் பெற

புதன்கிழமை விதை விதைத்து 'சுப்ஹானல் பாஇஃதில் வாரிஃதி சுப்ஹானல் வாரிஃதில் பாஇஃதி என்று மூன்று தடவை ஓதின் இறையருளால் பயிர்கள் காக்கப் பெற்று முழுப்பயனும் தரும்.

## அனைத்து வேலைகளும் நிறைவுற

தான் மேற்கொண்ட அனைத்து வேலைகளும் நலமாக நிறைவுற இதனை அதிகமதிகமாக ஓதி வர வேண்டும்.

## பரக்கத் ஏற்பட

இதனை அதிகமதிகம் ஓதி வரவேண்டும்.

## சமமானவர்களிடம் மேலானவனாக இருக்க

இதனை அதிகமாக ஓதி வருபவன் தன் சகாக்களிடையே சிறந்து விளங்குவான்.

## பயிற் நற்பலன் நல்க

புதன்கிழமை அன்று 'சுப்ஹானல்லாஹில் பாயிதுல்வாரிஸ்' என்று நூறு தடவை ஓதிய வண்ணம் விதைகளைத் தூவின் அவை நன்கு வளர்ந்து நற்பலன் அளிக்கும்.

## நெருக்கடி அகல

இதனை மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையே ஆயிரம் தடவை ஓதி வரவேண்டும்.

## குழந்தைப் பெற

குழந்தை இல்லாதவர்கள் இதனை அதிகமதிகமாக ஓதின் அவர்களுக்கு மகப்பேறு உண்டாகும்.

**ரஷீது** *(நேரிய வழியைக் காட்டுபவன்)* اَلرَّشِيْدُ

*(ஜமாலி - 514)*

## உறுதி பெற

எதிலும் உறுதியுடன் செயலாற்றும் ஆற்றல் குறைவாக உள்ளோர் இதனை மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையே ஆயிரம் தடவை ஓதினால் அவ்வுறுதியை எய்தப் பெறுவார்.

## தொழிலில் சிக்கல், துன்பம் அகல

தொழிலில் சிக்கல், துன்பம் நேர்ந்த காலை இதனை உறங்கும் முன் ஆயிரம் தடவை ஓதிக் கொளின் அவை இறையருளால் நீங்கிவிடும். கனவின் மூலமாவது உதிப்பின் மூலமாவது சிக்கல் தீர வழிகாட்டப்படும்.

## காணாமற்போன பொருள் கிடைக்க

இதனை மஃரிபுக்கும் இஷாவுக்கும் இடையே ஆயிரம் தடவை ஓத வேண்டும்.

## ஆண் குழந்தை பிறக்க

மனைவியை மருவு முன் இதனை அதிகம் ஓதிக்கொள்ள வேண்டும்.

## துன்பம் அகல

இதனை அதிகமதிகமாக ஓதி வரவேண்டும்.

## குடிப்பழக்கம் அகல

இதனை நாற்பது நாட்கள் எழுதிக் கரைத்துக் குடிக்கச் செய்ய வேண்டும்.

## வாணிபம் வளர, தொடர்ந்து துலங்க

ஒருவன் இதனை நாள்தோறும் ஓதிவரின் அவனின் துன்பங்கள் நீங்கி வாணிபம் வளர்ந்தோங்கும். தொட்டது துலங்கும்.

## தானும் நேர்வழியில் செல்லவும் பிறரை நேர்வழியில் செலுத்தவும்

இதனை அதிகமதிகமாக ஓதிவருபவன் நேர்வழியில் செல்லவும் பிறரை நேர் வழியில் செலுத்தவும் செய்வான்.

**ஸபூர்** (அதிகமாக பொறுமையுள்ளவன்)
(ஜலாலி-298) الصَّبُوْرُ

## வேதனை, துன்பம் அகல

வேதனையோ துன்பமோ ஏற்பட்ட காலை இதனை 33-தடவை ஓதின் அவை நீங்கிவிடும்.

## அச்சம் நீங்கி, மனம் அமைதி பெற

இதனை 1020 தடவை ஓதவேண்டும்.

## பிறர் அவதூறு பேசாதிருக்க

ஒருவன் இதனைப் பொழுது புலர்வதற்கு முன் நூறு தடவை ஓதி வர வேண்டும்.

## சென்ற இடமெல்லாம் சிறப்புப் பெற

இதனை அதிகமதிகமாக ஓதி வருபவன் சென்றவிட மெல்லாம் சிறப்புப் பெறுவான்.

## அபாயம் ஏற்படாமல் இருக்க

இதனை ஒருவன் நாள்தோறும் பொழுது புலர்வதற்கு முன் நூறு தடவை வீதம் வழக்கமாக ஓதி வந்தால் திடீரென ஏற்படும் ஆபத்துகள் அவனை வந்தடையா.

## அதிகாரியின் அன்பைப் பெற

இதனை மாலையிலோ நள்ளிரவிலோ அதிகமாக ஓதி வர வேண்டும்.

## காரியங்கள் கைகூட

இதனை நாள்தோறும் 298 தடவை ஓதிவர வேண்டும்.

## காணாமற்போன பொருள் வரவும்
## காணாமற்போன குழந்தை வரவும்

இதனை ஓதுவதுடன் எழுதி வைத்துக் கொள்ளவும் வேண்டும்.

## பொறுமையும் அமைதியும் ஏற்பட

இதனை அதிகமதிகமாக ஓதி வர வேண்டும்.

## கருச்சிதைவு ஏற்படாமல் காக்க

கருவுற்ற பெண்ணின் உயரத்தின் அளவு சிவப்பு நூலை எடுத்து 'அஸ்ஸபூரு லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' என்று ஒரு தடவை ஓதி அதில் ஒரு முடிச்சுப் போட வேண்டும். இவ்வாறு மொத்தம் ஏழு தடவை ஓதி ஏழு முடிச்சுகள் போட்டு அந்த நூலைக் கருவுற்றவளின் இடுப்பில் அணிவிக்க வேண்டும்.

**பாக்கீ**(*ஜலாலி - 130*) الْبَاقِي

## பகைமை அகல

*இறைவனின் திருப்பெயர்களில் பாக்கீ (நிலையாக இருப்பவன்) என்பதும் ஒன்று எனக் கூறப்படுகிறது. இதனை ஒருவன் சனிக்கிழமைதோறும் 300-தடவை ஓதிவரின் பகைவர்கள் கைவசப்படுவர்.*

## அதிக நன்மை ஏற்பட

*இதனை வெள்ளி இரவில் அதிகம் ஓதவேண்டும்.*

## தீங்கு, நஷ்டங்களிலிருந்து பாதுகாப்புப் பெற

*வெள்ளி இரவு இதனை ஆயிரம் தடவை ஓதின் ஒருவன் தீங்கு, நஷ்டம் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்புப் பெறுவான். அவனுடைய எல்லா நற்செயல்களும் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.*

## பொருள்கள் பாதுகாக்கப் பெற

*இதனை எழுதிப் பொருள் உள்ள இடத்தில் வைக்க வேண்டும்.*

## கவலை. துக்கம் அகல

*இதனை ஆயிரம் தடவை ஓதவேண்டும்.*

## ஒருவனின் தகுதிக்கோ பதவிக்கோ தாழ்வு ஏற்படாதிருக்க

*ஒருவன் தான் வகிக்கும் பதவிக்கோ தகுதிக்கோ தாழ்வு ஏற்படாமல் இருக்கவும் அவனுடைய அலுவல்கள் அனைத்தும் பிறரால் (மேல் அதிகாரிகளால்) ஏற்றுக் கொள்ளப்படவும் விரும்பின் ஒவ்வொரு வேளைத் தொழுகைக்குப் பின்பும் இதனை ஆயிரம் தடவை ஓதி வரவேண்டும்.*

## வணக்கங்கள் ஏற்றுக் கொள்ளப்பட

*இதனை ஒவ்வோர் இரவிலும் 100 விடுத்தம் வீதம் ஓதி வரவேண்டும்.*

## ஆலிமுல் கொய்பி

இறைவனின் திருப்பெயர்களில் ஆலிமுல் கொய்பி (மறைவானவற்றை மிக அறிந்தவன்) என்பது ஒன்றெனக் கூறப்படுகிறது. இதனை ஒருவன் அதிகமதிகம் ஓதிவரின் மறைவானவற்றை அறிந்து பேசும் இயல்பையும், பிறரின் இதயங்களில் உள்ளதை விளங்கிக் கொள்ளும் இயல்பையும் உலகில் நிகழக் கூடியவற்றை முன்னரே அறிந்து எடுத்துரைக்கும் ஆற்றலையும் அவனுக்கு இறைவன் நல்குவான்.

## கஷ்ஃபு ஏற்பட

இதனை ஐவேளைத் தொழுகைக்குப் பின்னால் நூறு விடுத்தம் வீதம் ஓதிவரவேண்டும்.

## அன்றைய எல்லாத் துன்பங்களிலிருந்தும் காவல் பெற

ஒருவன் நாள்தோறும் சூரியன் உதயமாவதற்கு முன் இதனை ஓதின் அவன் அன்றைய எல்லாத் துன்பங்களிலிருந்தும் பாதுகாப்புப் பெறுவான்.

## எதிரிகள், பொறாமைக்காரர்களின் நாவடங்கவும்

இவ்வாறே ஓதி வரவேண்டும்.

## ஸத்தார்

அல்லாஹ்வின் திருப்பெயர்களில் ஸத்தார் என்பதும் ஒன்றாகும். இதன் பொருள் அடியார்களின் குற்றம் குறைகளை மறைக்கிறவன் என்பதாகும்.

## தவறுகள், குற்றம் குறைகள் பிறர் கண்களில் தென்படாதிருக்க

ஒருவன் தவறோ, குற்றமோ செய்துவிடின் அதற்காக வருந்தி இறைவனிடம் மன்னிப்புக் கோரி இந்த இஸ்மை அதிகமதிகமாக ஓதி வந்தால் இறைவன் அதனைப் பிறர் கண்களிலிருந்து மறைத்து அவனைக் காத்தருள் புரிவான்.

## ஜமீல்

அல்லாஹ்வின் திருப் பெயர்களில் ஜமீல் என்பதும் ஒன்றாகும். இதன் பொருள் அழகானவன் என்பதாகும்.

## ஒருவன் உடல் அழகும் தன் எல்லா அலுவல்களும் அழகாகவும் அமையப் பெற

ஒருவன் அழகாகவும் அதே பொழுதில் அவனுடைய அலுவல்கள் அனைத்தும் அழகாகவும் அமையப் பெற இதனை அதிகமாக ஓதி வர வேண்டும்.

## ஸரீஉ *(துரிதப்படுத்துபவன்)*

'ஸரீஉல் ஹிஸாப்' (கேள்விக் கணக்குகளைக் துரிதப்ப டுத்துபவன்) என்று இறைவன் தன்னைத் திருமறையில் கூறுகிறான்.

## இறைஞ்சுதல் ஏற்றுக்கொள்ளப்பட

ஒருவன் ஸரீஉ என்று இஸ்மைத் தன் இரண்டு கைகளி லும் எழுதி இரண்டு ரக்அத் நஃபில் தொழ வேண்டும். ஒவ்வொரு ரக்அத்திலும் சூரா ஃபாத்திஹாவுக்குப் பின் சூரா இக்லாஸை ஓதித் தொழ வேண்டும். அதன்பின்,

'யாஸரீஉ அல்க்கிஸ்ஸகீனத்த வல்வ (க்) கார ஃபீ குலூபி அஹ்லி ஹாதிஹித் தார்' என்று நூறு தடவை ஓதி துஆ இறைஞ்சின் அது இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.

## ஹன்னான், மன்னான், சுல்தான்

இவை அல்லாஹ்வின் திருப்பெயர்கள்.

## நாட்டம் நிறைவேற

ஒருவன் தன் நாட்டம் நிறைவேற விரும்பின் 'பிஸ்மில் லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், யா ஹன்னானு யா மன்னானு யா சுல்தானு யா பதீ அஸ்ஸமாவாத்தி வல் அர்ளி யா தல்ஜலாலி வல் இக்ராமி பிரஹ்மத்திக யா அர்ஹமர் ராஹி மீன்' என்று ஒரு காகிதத்தில் எழுதிக் கடலில் போட வேண்டும். இவ்வாறு ஏழு நாட்கள் தொடர்ந்து செய்ய அவனின் நாட்டங்கள் இறையருளால் நிறைவேறும்.

## காஃபீ, கனிய்யு, ஃபத்தாஹு, ரஸ்ஸாக்கு

இவை அனைத்தும் அல்லாஹ்வின் திருப்பெயர்களாகும். இவற்றில் காஃபீ என்பதன் பொருள் போதுமானவன் என்பதாகும்.

## ஒன்றை எய்தப் பெற

ஒருவன் ஒன்றை விரும்பி இவற்றை ஓதி வருவானாயின் அது எத்திசையிலிருந்து கிடைக்கும் என்பதை அவன் உள்ளுணர்வால் அறிய வருவதோடு அதனை அவன் கிடைக்கவும் பெறுவான்.

## சிறிது பெரிதாக

இவற்றை உணவின் மீது ஊதி உண்பின் அதில் 'பரக்கத்' ஏற்படும்.

## உணவில் 'பரக்கத்' ஏற்பட

இவற்றை உணவின் மீது ஊதி உண்பின் அதில் 'பரக்கத்' ஏற்படும்.

## உயர் பதவி எய்தப் பெற

ஒரு பதவியிலுள்ளவர் அதைவிட உயர் பதவியை அடைய விரும்பி இவற்றை அதிகமாக ஓதிவரின் அவர் எவ்விதச் சிரமுமின்றி அப்பதவியை அடையப் பெறுவார்.

## புதூஹ்

இறைவனின் திருப்பெயர்களில் புதூஹ் என்பதும் ஒன்று.

## பிறர் அன்பு செலுத்த

இதனை ஒரு தடவை இனிப்புப் பண்டத்தில் எழுதி ஒருவருக்குக் கொடுப்பின் அதனைக் கொடுத்தவர் மீது அதனை உண்டவர் பெரிதும் அன்பு செலுத்துவார்.

ஒரு கத்தியில் ''புதூஹ்'' என்று எழுதி அக்கத்தியால் ஓர் இனிப்பு பண்டத்தை வெட்டி அப்பண்டத்தை ஒருவருக் குத் தின்னக் கொடுத்தால் அவர் அதனைத் தந்தவர்மீது அன்பு செலுத்துவார்.

யா புதூஹ் என்று இரண்டாயிரம் தடவை ஓதி இனிப்புப் பண்டத்தில் ஊதி ஒருவருக்குக் கொடுப்பின் அதனைக் கொடுத்தவர் மீது அதனை உண்டவர் பெரிதும் அன்பு செலுத்துவார். அதனை ஓதுவதற்கு முன்பு பத்துத் தடவையும் ஓதியதற்கு பின்பு பத்து தடவையும் ஸலவாத் ஓதிக் கொள்ள வேண்டும்.

## சுப்ஹான்

அல்லாஹ்வின் திருப்பெயர்களில் சுப்ஹான் என்பதும் ஒன்றாகும். இதன் பொருள் தூயவன் என்பதாகும்.

## பரக்கத் ஏற்பட

ஒருவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து என் கை ''பரக்கத்'' இல்லாமல் இருக்கிறது என்று கூறி முறையிட் டார். அப்பொழுது அண்ணல் நபி(ஸல்) அவர்கள் ''கிழக்கு வெளுக்கும்நேரம் தொடுத்து வைகறைத் தொழுகைக்கான நேரம் வரையில் நூறு தடவை சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அளீம் அஸ்தஃபிருல்லாஹ்'' என்று வழக்கமாக ஓதிவாரும். உலகமும் உலகாயதப் பொருள்களும் உம் தாளடியில் தாழ்மையுடன் வந்து சேரும்'' என்று திருவுளமானார்கள் என்று நாஃபிஃ(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## கடன் நீங்கப் பெற, இரணம் விரிவாக

ஒருவன் வைகறையில் கிழக்கு வெளுக்குமுன் இரண்டு 'ரக்அத்' நஃபில் தொழுகை தொழ வேண்டும். ஒவ்வொரு ரக்அத்திலும் சூரா பாத்திஹாவுக்குப் பின் ஆயத்துல் குர்ஸி மூன்று தடவையும் சூரா காஃபிரூன் பத்துத் தடவையும் சூரா இக்லாஸ் பத்துத் தடவையும் ஓதித் தொழுதபின் 'சுப்ஹானல்

லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில்அளீம் அஸ்தஃபி ருல்லாஹ்'' என்று நூறு தடவை ஓதின் அவனுடைய இர ணத்தை அல்லாஹ் விரிவாக்கி வைப்பதுடன் அவனுடைய கடனையும் நிவர்த்தி பண்ணுவான், இது சோதிக்கப்பட்டதா கும்.

## பாவம் பொறுக்கப்பட

ஒருவன் காலையிலும் மாலையிலும் நூறு தடவை 'சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி' என்று ஓதிவரின் அவனு டைய பாவங்கள் கடல் நுரை அளவு இருந்த போதினும் பொறுக்கப்படும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

★ ★ ★

# பொருள் அட்டவணை

## அ

## ஆ



## இ

ஈ



உ

ஊ



எ

கா



கி



கீ



கு

கை



கொ



கோ



கௌ



ச



சா



சி

## சீ



## சு



## சூ



## செ

### சொ



### சோ



### ஞா



### த

### தா



### தி

### தூ



### தே


300. 309. 371. 397

### தொ

தோ



ந

### பா

மா



மி



மீ

### வா

## வி

### வீ



### வெ



### வே

ஐ



ஜி



ஷ



ஈ



ஹா